


# சீலிநோக்கில் நாலாயிரம்

பேராசிரியர்
டாக்டர் ந. சுப்புரெட்டியார்

# சிலநோக்கில் நாலாயிரம்




THIS BOOK IS

PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

UNDER THEIR SCHEME

"AID TO PUBLISH RELIGIOUS BOOKS".

பேராசிரியர்

டாக்டர் ந. சுப்புரெட்டியார்

# சிலநோக்கில் நாலாயிரம்

(ஆசிரியரின் 67-வது அகவை நினைவு வெளியீடு)




பேராசிரியர்

**டாக்டர் ந. சுப்புரெட்டியார்**

எம்.ஏ, பி.எஸ்சி., எல்.டி., பிஎச்.டி.,
தமிழ்ப்பேராசிரியர்—துறைத்தலைவர் (ஓய்வு)
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி

" முத்தமிழ்ப்பண்ணை "
வைரி செட்டிப்பாளையம்-621012
திருச்சி மாவட்டம்.

விற்பனை உரிமை :

**பாரி நிலையம்**
184. பிராட்வே · சென்னை · 600108

முதற் பதிப்பு : சூன், 1983



விலை : ரூ. 26-50

SILA NOKKIL NAALAAYIRAM
Selvan Vasudevan publication

Maruthy Press, 173, Peters Road, Madras-600 014.

முத்தர்

உயர்திரு பு. ரா. புருடோத்தம நாயுடு அவர்கட்கு

## அன்புப் படையல்

முத்தர்கள் பராவும் சீர்த்திசால் திருவாய்
மொழியெனும் பாற்கடல் நடுவண்
வித்தகம் பெருகுந் தண்ணருள் உளத்தை
மேவுநஞ் சேடனாய் மாற்றிப்
பத்திகொள் கவிதா யோகத்தைப் புரிந்து
பாரகத் தொளியினை வளர்க்கும்
சித்தனெம் புருடோத் தமநம்பி பதத்தில்
திருவினைப் பெறுகஇந் நூலே.

# அணிந்துரை

நீதிபதி ஆர். செங்கோட்டுவேலன்
(சென்னை உயர்நீதி மன்றம்)

உயிரும் உடலும் உடலாக ஓங்கித்
தயிர் வெண்ணெய் தாரணியோடு உண்டான்—பயிரில்
களைபோல் அசுரரைக் காய்ந்தான்தன் கையில்
வளைபோல்எம் ஆசிரியர் வாக்கு.[1]

—வேதாந்த தேசிகர்.

எம்பெருமான் ஆன்மாக்கள் உய்வுபெற வேண்டும் என்பதற்காக உலகைப் படைத்தான். அவ்வுலகத்துள் உயிர் களுக்கு இன்பத்தை வழங்கியும் துன்பத்தைக் கொடுத்தும் பக்குவப்படுத்துகிறான். இறைவன் திருவுள்ளத்தைப் புரிந்து கொள்ளாதவர் பலபடப் பேசுவர். இந்த நுட்பத்தைத் தெரிந்து நம்மாழ்வார்,

காட்டிநீ கரந்து உமிழும்
நிலம்நீர்தீ விசும்புகால்
ஈட்டிநீ வைத்து அமைத்த
இமையோர்வாழ் தனிமுட்டைக்
கோட்டையினில் கழித்து என்னை
உன்கொழும்சோதி உயரத்துக்
கூட்டு அரிய திருவடிக்கண்
எஞ்ஞான்று கூட்டுதியே?

—திருவாய் 4.9:8

என்று திருவாய்மலர்ந்தருளுகின்றார். "பெருமானே, இந்த உலகமே முட்டையாக உள்ளது. நான் அதனுள் சிறை வைக்க

---

1. தே.பி. 5 (அம்ருதாஞ்சனி—5).

பெற்றுள்ளேன். நீ உன் கருணை என்கின்ற சிறகால் என்னை அடைகாக்கின்றாய். ஆனால் நான் இன்னும் பக்குவம் அடையவில்லையா? எனக்கு எப்போது விடுதலை தருகின்றாய்?'' என்று கேட்கிறார். இவ்வாறு கேட்ட நம் மாழ்வாரின் அவயவங்களாக இருப்பவர்கள் மற்றைய ஆழ் வார்கள். இவ்ஆழ்வார்கள் எல்லோரும் எம்பெருமானைப் பல நோக்கில் கண்டு அநுபவித்தார்கள். முதல் ஆழ்வார்கள் மூவரும் பரத்துவத்தில் மண்டிக் கிடந்தனர். பெரியாழ்வார் கிருஷ்ணாவதாரத்தில் (விபவம்) தன்னைக் கரைத்தார். திருமழிசையாழ்வார் அந்தர்யாமித்துவத்தில் அல்லும் பகலும் ஒட்டி உறவாடி உயர்நலம் பெற்றார். திருமங்கை மன்னன் அர்ச்சாவதாரத்தில் கொண்ட காதல் தமிழ் உலகத்தையே அமுதமாக்கிற்று. நம்மாழ்வார் எல்லாநிலை எம்பெருமான் களிடமும் ஆழங்கால்பட்டு உபய விபூதிக்கும் ஒளி வழங்கினார். ஆழ்வார்கள் நோக்குகள் யாவையும் எடுத்துக் கூறின் உலகமே ஏடாக இருக்கவேண்டும்; கடலே மையாக இருக்க வேண்டும்; அதை எழுதுபவன் பரம்பொருளாக இருக்க வேண்டும். ஆனாலும் அருங்கலைக்கோன் பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் சிலவற்றை உள்ளங்கை நெல்லிக்கனியாக்கி நமக்கு வழங்கியுள்ளார்.

பத்தொன்பது கட்டுரைகள் அடங்கிய சில நோக்கில் நாலாயிரம் என்ற இந்த நூலில் பேராசிரியர் ரெட்டியார், முதலில் கலங்கரை விளக்கமான திருவரங்கத்தை நம் மனக் கண்முன் நிறுத்துகின்றார். திருவரங்கத்தில் எம்பெருமான் பிரணவ விமானத்தில் எழுந்தருளியுள்ளான். இதனைப் பேராசிரியர் எளிமையாகத் தெரிவிக்கும் திறம் போற்றுதற் குரியது. 'அமலனாதிபிரான்' பிரபந்தத்திற்கு விளக்கம் தருவதன்மூலம் பெரிய தத்துவத்தை நமக்கு எளிமையாகத் தெரிவிக்கின்றார்.

> ''பாதாதி கேச மாலையாகத் திருவரங்கப் பெரு மானைப் பாடியுள்ள இதில் பிரணவத்தின் அகரம்,

உகரம், மகரம் என்ற மூன்று திருவெழுத்துகளுள் முதல் எழுத்தாகிய அகரத்தை முதற்பாசுரத்தின் முதலிலும், இரண்டாம் எழுத்தாகிய உகரத்தை இரண்டாம் பாசுரத்தின் முதலிலும், மூன்றாம் எழுத்தாகிய மகரத்தை மூன்றாம் பாசுரத்தின் முதலிலும் முறையே அமைத்துள்ள சிறப்பு ஈண்டுக் கருதத்தக்கது'' (பக். 17).

இவற்றைப் பயிலும் நமக்குப் பிரணவத்தைப்பற்றித் தெரிந்து கொள்ளும் ஆர்வம் உண்டாகும். இந்த ஆர்வத்தை 'அகப் பொருள் தத்துவம்' என்ற கட்டுரையில் தலைக்கட்டுகிறார் பேராசிரியர் ரெட்டியார்.

"மேலும், இவற்றுள் 'பிரணவம்' பிரிந்திருக்கும் நிலையில் 'அ' 'உ' 'ம்' என்ற மூன்று எழுத்துகளைக் கொண்டது. இம் மூன்று எழுத்துகளும் இருக்கு, யஜுர், சாமம் என்ற மூன்று வேதங்களின் உயிர் நிலையான எழுத்துகளாகும். இந்த மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாய் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். அகாரம் பகவானையும் அதில் ஏறி மறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தையும் (அடிமைத் தன்மையையும்), உகாரம் அந்த அடிமைத் தன்மையின் அநந்யார்ஹத்துவத்தையும் (மற்றவருக்கில்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தலையும்) மகாரம் ஞானவானாகிய சீவான்மாவையும் தெரிவிக்கின்றன'' (பக். 200).

வைணவ தத்துவம் இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்தில் நிலவி வந்த தத்துவமாகும். திருமுருகாற்றுப் படை, பரிபாடல் முதலான நூல்களை நோக்கின் இது புலனாகும். இவ்வுலகில் உள்ளவை ஒரு பொருளா, இரு பொருளா, அல்லது முப்பொருளா என்று 'ஆய்வுப் போராட்டம்' நிகழ்ந்தவண்ணம் உள்ளது. ஆனால், தமிழ் மக்கள் முப்பொருளை நம்புபவர்கள். சிவஞானச் செல்வராகிய ஸ்ரீலஸ்ரீ குருஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் சிவபோக சாகர அநுபூதியில்,

என்னை அறிவென்றான் என்அறிவின் ஆநந்தந்
தன்னைச் சிவமென்றான், சந்ததமும்—என்னை உன்னிப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான்; இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்

என்று தொகையிட்டுக் காட்டுவர். இப்பாடலில் அறிவு, அதன்வழிவரும் ஆநந்தம், இவற்றை மறைக்கும் பாசம் ஆகிய முப்பொருள் நுவலப்பெற்றிருப்பதைக் காணலாம். வேதாந்த தேசிகரும்,

முத்திக்கு அருள்சூட மூன்றைத் தெளிமுன்னம்
இத்திக்கால் ஏற்கும் இதம்.

—தே.பி. 3

என்று அம்ருத ரஞ்சனியில் கோடிட்டுக் காட்டுவதையும் காணலாம்.

முத்திக்குக் காரணம் எம்பெருமான் அருளே. அதைப் பெறுவதற்கு முதலில் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற தத்துவம் மூன்றையும் நன்கு அறிய வேண்டும். இப்பெரிய தத்துவத்தைப் பேராசிரியர் ரெட்டியார் எளிமையாக விளக்கியுள்ளமை போற்றற்குரியது.

"வைணவ சமயத்தின்படி இறைவனை அடைவதில் இச்சையுடையவனான சேதநனுக்கு (முமுட்சுவுக்கு) மோட்சம் பெறுங்காலத்தில் மூன்று தத்துவங்களைப் பற்றிய அறிவு உண்டாக வேண்டியது இன்றியமையாதது இம்மூன்று தத்துவங்களும் சித்து, அசித்து, ஈசுவரன் என்று வழங்கப்பெறுவன. சித்து என்பது, உயிர்களின் தொகுதி. அசித்து என்பது, மக்கள் விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது; பிரகிருதியை மூலப்பகுதி என்பர். ஈசுவரன் என்பது, இறைவன். இவை மூன்றும் தத்துவத் திரயம் (திரயம் - மூன்று) என்ற பெயரால் வழங்கிவருகின்றன" (பக். 21).

வைணவத்தில் ஆசாரியர்கள் நீண்ட நாளாகச் சீடர் களுக்கு அன்றி மற்றவர்களுக்குத் தெரிவிக்காத தத்துவம் ஒன்று உண்டு. அது 'தர்மபூத ஞானம்' என்று கூறப் பெறும். பேராசிரியர் ரெட்டியார் குடத்திலிருந்த அவ் விளக்கைக் குன்றிலிட்டு நம்முடைய அறிவை விரிவு படுத்தியுள்ளார்.

"ஞானத்திற்கு இடமான ஆன்மா சித்து என வழங்கப்பெறுகின்றது. இஃது அன்ன மயம், பிராண மயம், மனோமயங்கட்கு அப்பாலாயிருப்பது. தேகம், இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் இவற்றிற்கு வேறு பட்டது. அறிகின்ற தலைவனும், அறிவும், அறியப்பெறும் பொருளும் தானாகவே இருப்பது. அணுவின் அளவினையுடைய இந்த ஆன்மா ஆனந்த வடிவத்தைக் கொண்டது; என்றும் நிலைபெற்றிருப்பது. இது கண் முதலிய இந்திரியங்கட்குத் தோற்றாது. மனத் தாலும் இதனை நினைக்க முடியாது. இதனைப் பகுதிக ளாகப் பிரிக்கவும் முடியாது. அவயவமும் அற்றது. வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. அறிவுமயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கும் இருப்பிடமானது. இந்த அறிவு 'தர்மபூத ஞானம்' என வழங்கப்பெறும். ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது; அவனால் தரிக்கப்பெற்று அவனுக்கு அடிமையாக இருப்பது........"இரத்தினங் கள், கதிரவன், விளக்கு ஆகிய ஒளியுள்ள பொருள்கள் ஓரிடத்திலிருப்பினும் அவற்றின் ஒளி எங்கும் ஒக்கப் பரவுவது போல, ஆன்மாவும் இதயத்தில் மாத்திரம் இருப்பினும், அதனுடைய 'தர்மபூத ஞானம்' உடல் முழுவதும் பரவுவதனால் உடலின் எப்பகுதியில் உண்டாகும் இன்ப துன்பங்களையும் அஃது அநுபவிக்கத் தடை இல்லை" (பக். 21—22).

வைணவ சமயத்தின் அடிப்படைக் கருத்து விசிட்ட அத்வைதமாகும். உலகமும் ஆன்மாக்களும் எம்பெருமானுக்கு

உடம்பாகும் என்பதுதான் அத் தத்துவம். இதனை வேதாந்த தேசிகர் ஸ்ரீமத் ரகஸ்யத் திரய சாரத்தில் (திரயம் - மூன்று) உள்ள பிரதான பிரதிதந்திரஅதி காரத்தில் நன்கு விளக்கியுள்ளார். ஆனால் அதனைக் புரிந்து கொள்வது கடினம். அதனைப் பேராசிரியர் ரெட்டியார் மிக எளிதில் புரியவைக்கின்றார்.

"மேலும் சரீரத்தின் எல்லாச் செயல்களும் சரீரியின் நினைவினடியாக உண்டாவது போலவே, ஈசுவரனுக்குச் சரீரபூதமான இவ்வான்மாவினுடைய எல்லாச் செயல் களும் சரீரியான பரமான்மாவினுடைய நினைவினடி யாகவே உண்டாகும். வீடு, நிலம், பிள்ளை, மனைவி, தனம், தான்யம், தோட்டம் முதலியவை உடையவ னுடைய (ஆண்டானுடைய)ச் செயல்களுக்காகவே நிலைபெற்றிருக்கும். ஆனால், அவை அவனை யொழியவும் தனித்து வேறாகவும் நிலைபெற்றிருக்கும். ஆயினும் ஈசுவரனுக்கு அடிமையாகவுள்ள (சேஷமாக வுள்ள) ஆன்மா, ஆன்மாவை விட்டுப் பிரிந்திராத உடலைப்போல் சேஷியான (ஆண்டான்) ஈசுவரனை யொழியவும் தான் வேறாகக் காணப்படுதல் இல்லை இந்த முறையில் ஒவ்வொரு ஆன்மாவும் ஈசுவரனின் உடலாக இருக்கும்" (பக். 22—23)

'ஓம் நமோ நாராயணாய!' என்னும் மூலமந்திரம் பரந்த பொருள் அடங்கியது. நம்மாழ்வார்,

> அறிகிலேன் தன்னுள் அனைத்துலகம் நிற்க
> நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்
> —திருவாய். 9.6:4

என்று திருவாய் மலர்ந்தருளினார். இக்கருத்தை மிக எளிமையாக்குகிறான் கவிச்சக்கரவர்த்தி கம்பன்,

> தன்னுளே உலகங்கள் எவையும் தந்துஅவை
> தன்னுளே நின்றுதான் அவற்றுள் தங்குவான்

(இரணியன் வதை—59) என்று விளக்குவான். இப்பெரிய தத்துவத்தைப் பேராசிரியர் ரெட்டியார்,

"'தன்னுள் அனைத்துலகம் நிற்க' என்றது வியாபகத் தன்மையை. 'தானும் அவற்றுள் நிற்கும் பிரான்' என்பது அந்தர்யாமியாம் நிலைமையை. இங்ஙனம் இறைவன் பொருள்களினுள் மறைந்துறைவது எதுபோல் எனின், 'உடல்மிசை உயிர்எனக் கரந்துளன்'—உடலினுள் உயிர் எவ்வாறு உளதோ அவ்வாறு அவ்வுயிர் உட்பட எல்லாப் பொருள்களினுள்ளும் இறைவன் உள்ளான்" (பக். 33).

"உயிர், அணு அளவினதாய் உடம்பினுள் ஓரிடத்தி லிருந்து, தன் ஞானத்தால் (தர்மபூத ஞானத்தால்) உடல் முழுதும் வியாபித்து இவ்வுடலைப்பற்றிய நிகழ்ச்சி களை உணத்துகின்றது. இறைவன் அஞ்ஞனமின்றி ஒவ்வொரு பொருளுள்ளும் தன் சொரூபத்தோடு வியாபித்துள்ளான். அன்றியும், உடலினுள் உயிர் இருப்பதற்கும், உடல், உயிர் ஆகிய இரண்டினுள் இறைவன் இருப்பதற்கும் மற்றொரு வேறுபாடும் உண்டு. உயிர் உடலினுள் இருக்கும்போது, அவ்வுடலுக்குரிய வளர்ச்சி தேய்வுகள் (விகாரங்கள்) உயிருக்கு உண்டாவ தில்லை. ஆனால், அவ்வுடலைப் பற்றிய இன்ப துன்ப உணர்ச்சிகள், அறிவின் சுருக்கம், பெருக்கம் ஆகியவை உயிருக்கு உண்டு" (பக். 34)

உலகத்திற்கு இறைவன் மூன்று காரணமாக உள்ளான் என்பது வைணவ சித்தாந்தம். இதன் அடிப்படையை உணராமல் சிலர் ஏலாத குற்றம் கூறினர். பேராசிரியர் ரெட்டியார்,

"உயிரல்லாத உலகப் பொருள் அனைத்திற்கும் மூலப்பகுதியே (பிரகிருதி) காரணமாகும். ஒரு பொருள் உண்டாவதற்கு மூன்று காரணங்கள் கூறுவதுண்டு.

மண்குடமாக வனையப்பெறுமிடத்து மண் முதற் காரணம்; அதாவது காரியமாக மாறுவது. அக்குடத்தை வனைபவன் நிமித்த காரணம். அவன் குடத்தை வனைவதற்குக் கருவியாகவுள்ள சக்கரம் முதலியவை துணைக் காரணம். உலகத் தோற்றத்திற்கு இறைவன் மூன்று காரணங்களாகவும் உள்ளான் என்பது வைணவ சமயக் கொள்கையாகும். சித்தும் அசித்தும் சூக்குமமாக (நுண்மையாக) இருக்கும் நிலையில்—அஃதாவது உலக உற்பத்திற்கு முன்னர்—அவற்றுக்குள் இறைவன் அந்தர்யாமியாக நிற்கும் நிலையே இறைவன் உலகிற்கு முதற்காரணம் என்றும், நுண்ணிய நிலையில் இருக்கும் சித்து அசித்துகளை வெளிப்படுத்தி உலகப் படைப்பு செய்வோம் என்று எண்ணுகின்ற நிலையே இறைவன் உலகிற்கு நிமித்த காரணம் என்றும், இறைவனுடைய ஞானம், சக்தி முதலியவையே துணைக் காரணம் என்றும் ஆக இம் முறையில் இறைவன் உலகப் படைப்பிற்கு மூன்று காரணங்களுமாகவும் உள்ளான் என்று மெய்ப்பொருளியலார் முடிவு செய்துள்ளனர்" (பக் 38—39).

என்று தெளிவாக விளக்குவர்.

இந்நூலைப் பயிலும் நாம் திவ்வியப் பிரபந்தத்தைச்சுவைக் கின்றோம். இறைமையை உணர்கின்றோம். வைணவத் தின் அடிப்படைத் தத்துவத்தைப் புரிந்துகொள்ளுகின்றோம். அகப்பொருள் தத்துவத்தின் அடிப்படையிலும் (தோழி, தாய், மகள் பாசுரங்கள் மூலம்) இத்தத்துவம் விளக்கப்படும் அருமைப்பாட்டிலும் தெளிவு பெறுகின்றோம். பேராசிரியர் ரெட்டியார் பல அறிவியல் துறைகளில் வல்லவராதலால் கருத்துகளை விளக்கும் முறையில் இவர்தம் அறிவியல் பயிற்சி முறை இவருக்குப் பல்லாற்றானும் கைகொடுத்து உதவுவதை இறைவனின் அந்தர்யாமித்துவத்தை உணர்வதுபோல் உணர்ந்து மகிழ்கின்றோம்.

இத்தொகுப்பு நூலின் உரைநடை மிகத் தெளிவாகவும் ஆழமாகவும் உள்ளது. பெரும் பொருளை எளியமுறையில் சுவைபட விளக்குவதாக அமைந்துள்ளது.

சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை ஆழமுடைத் தாதல்
முறையின் வைப்பே உலகம் மலையாமை
விழுமியது பயத்தல் விளங்கு உதாரணத்து
ஆகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே

என்னும் நன்னூல் நூற்பாவிற்கு (நூற்—13) இந்நூல் இலக்கியமாக அமைகின்றது என்று சொல்லிவைக்கலாம். காவிரி தீரத்திலிருந்து வந்த பேராசிரியர் ரெட்டியார் படைத்த இந்த நூல் காவிரிப் பதினெட்டாம் பெருக்கெனப் பெருகுவதாகுக! பேராசிரியர் ரெட்டியாரின் மொழித் தொண்டும் முதல்வனுக்குச் செய்யும் சமயத் தொண்டும் பல்லாற்றானும் சிறப்பதாகுக என வாழ்த்துகின்றேன்.

ஜூன் 5, 1983. **செங்கோட்டு வேலன்**

ஸ்ரீ:
மாறன் மலரடி வாழ்க.

# முகவுரை

## டாக்டர் V. வரதாச்சாரியார்

[ஃபிரெஞ்சு ஆராய்ச்சிக் கழகம், புதுச்சேரி]

'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்பது பன்னிரு ஆழ்வார்கள் அருளிச்செய்த பாசுரங்களைக் கொண்டது. நாதமுனிகளால் தொகுக்கப்பெற்று அடைவுபடுத்தி வெளியிடப்பெற்றது. இது தென்னாட்டில் வைணப் பெரு மக்களால் போற்றப்படும் சிறந்த பக்திப் பனுவல். தமிழ் மக்கள் அனைவருக்கும் பொதுவுடைமையாகக் கொள்ளுதற் குரிய பெருந்தகுதி வாய்ந்தது. பக்திப் பாசுரங்கள் என்ற நூல் வகையில் இதனைப் போன்ற பெருமையுடைய நூல்கள் இலக்கிய உலகில் மிகச் சிலவற்றைத்தான் கருதமுடிகின்றன.

பிறவியிலேயே இவ்வுலக வாழ்வில் பற்றற்றவர்களாய் இறைவன்பால் மிக்க பக்தியுடையவர்களாய் வாழ்ந்தவர்கள் ஆழ்வார்கள். இவர்களில் பெரும்பாலோருடைய பிறப்பும் வாழ்க்கையும் சரியாகத் தெரியவில்லை. இவர்கள் எங்குக் கல்வி கற்றனர்? அக் கல்வி எவ்வாறு இருந்தது? எந்த ஆசானிடம் இவர்கள் கல்வி பயின்றார்கள்? என்பன போன்ற வினாக்களுக்குப் பதிலே கிடைக்காது. இவர்கள் இயற்றிய நூல்களிலுள்ள பாசுரங்களின் எண்ணிக்கை 4000. இவற்றில் வடமொழி நூல்களிலுள்ள தத்துவ விசாரங்களின் முடிவுகள் யாவும் மிக்க எளிதான நடையில் இயற்றப்பெற்று இடம் பெற்றுள்ளன. வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய வற்றில் குறிக்கப்பெற்றிருக்கும் தத்துவ விசாரங்கள்,

இவர்கள் வடமொழி பயின்றார்கள் என்பதற்குச் சிறிதேனும் ஆதாரமில்லாமல், தமிழ் மொழியிலேயே பாசுரங்களை இயற்றிய இவ்வாழ்வார்கட்கு எவ்விதம் புலப்பட்டன? ஆராய்ச்சி செய்தாலும் இவற்றிற்கு விடை கிடைக்காது என்ற உறுதியுடன் வைணவ சமயாசாரியர்கள் இவ்வாழ்வார்களை எம்பெருமானுடைய திருவாழி, திருச்சங்கு போன்ற அணி ஆயுதங்கள் முதலியவற்றின் அவதாரமாகக் கருதுகின்றனர்.

பக்தி ஒன்றிலேயே திளைத்தெழுந்த இந்த ஆழ்வார்கள் உலகத்தையும் உலகத்தோரையும் மறந்து விடவில்லை. ஆகையால் ஆங்காங்குப் பிறருக்கு உபதேசமாகச் சில பாசுரங்களையும் அருளிச் செய்துள்ளனர். இவ்வுபதேசமும் மனித வாழ்க்கை, அதனில் காணப்பெறும் ஏற்றத் தாழ்வுகள், பொறாமை முதலிய தீக்குணங்கள், இவற்றால் அவதியுற்றிற்கும் மக்களின் துயர்கள் போன்றவற்றைப் பாசுரங்கள்மூலம் விரிவாகக் காண்பித்து 'இறைவனையும் இறைவனடியார்களையும் பணிந்து வணங்கி வாழ்க்கையை வகுத்துக்கொள்ளுங்கள்' என்று அறிவுரை பகர்வனவாகச் சில பாசுரங்களை அமைத்துள்ளனர்.

'சிலநோக்கில் நாலாயிரம்' என்னும் இந்த நூல் 19 ஆய்வுக் கட்டுரைகளைக் கொண்டது. இவற்றுள் பல பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்களால் பல்வேறு சமயங்களில், பல்வேறு சந்தர்ப்பங்களில் எழுதப்பெற்று வெளிவந்தவை; சில தனிப்பட்டவையாக எழுதப்பெற்று வெளிவராதவை. சிறப்பு மலர்களில் வெளிவந்தவை 12; கருத்தரங்கில் படிக்கப்பெற்றது *(19)* ஒன்று; சொற்பொழிவுகளாக அமைந்தவை *(11, 13)* இரண்டு; வானொலியில் ஒலிபரப்பப்பெற்றது *(9)* ஒன்று; தனிப்பட்டவையாக எழுதப் பெற்றவை *(14,16,13)* மூன்று. சில கட்டுரைகளில் எழுதப்பெற்ற கருத்துகளே வேறு பல கட்டுரைகளிலும் காணப்பெறுகின்றன. வெவ்வேறு காலங்களில் எழுதப் பெற்றவையாதலால் இங்ஙனம் அமைதல் இயல்பு. இவற்றை

நீக்கி வெளியிட்டால் கட்டுரைகளின் வடிவமும் ஒருமைப் பாடும் சிதைந்துவிடும் என்று கருதியே ஆசிரியர் நீக்காமல் வெளியிட்டுள்ளார் போலும்!

'ஆழ்வார்கள் காட்டும் சமயநெறி' (2) என்ற கட்டுரையில் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற தத்துவத் திரயம், இறைவனுடைய பரம், வியூகம் போன்ற ஐந்து நிலைகள், மூன்று மந்திரங்கள், இறைவனை அடையும் வழிகள் என்பவை ஆழ்வார்களுடைய பாசுரங்களைக் கொண்டே நன்றாக விளக்கம் பெறுகின்றன. ஆழ்வார்களின் கடவுட் கொள்கை' (3) என்ற கட்டுரையில் கடவுள் தத்துவம் மிக விரிவாக விளக்கப்பெற்றுள்ளது. வைணவம் (5) என்ற கட்டுரையில்தத்துவம், இதம், புருஷார்த்தம் என்ற பிரிவுகளில் தத்துவங்கள் விளக்கம் அடைகின்றன. பரமபதம் எவ்விதம் இருக்கும்? அதனை அடைவதற்குரிய வழியாகிய அர்ச்சிராதி மார்க்கத்தின் தன்மை 'நலம் அந்தம் இல்லதோர் நாடு' (4) என்றதில் இடம் பெறுகின்றன. இங்கு ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் அவற்றைப் பின்பற்றிய வேதாந்த தேசிகரின் 'பரமபத சோபானம்' என்ற தமிழ்ப் பிரபந்தமும் விளக்கம் பெறுகின்றன.

கட்டுரை—1, கட்டுரை—10 என்ற இரண்டு கட்டுரைகளில் முறையே திருவரங்கமும், திருவேங்கடமும் ஆழ்வார்களின் பாசுரங்களின்மூலம் நன்கு விவரிக்கப்பெற்றுள்ளன. இத் திருப்பதிகளில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களின் மேன்மை, அப்பெருமான்களிடம் ஆழ்வார்களின் ஈடுபாடு முதலியன நன்கு விளக்கப்பட்டுள்ளன. அர்ச்சாவதாரத்தில் திளைத்தவர்கள் ஆழ்வார்கள் என்பதற்குச் சான்றுகளாக இவ்விரு திருப்பதிகளும் இங்கு இடம் பெற்றுள்ளன. தத்துவ ஆராய்ச்சி செய்து வைணவ நெறியை விளக்கிய திருமழிசை யாழ்வாரின் நோக்கங்கள் 6-வது கட்டுரையிலும், பிறவியிலேயே பழுத்த ஞானத்தை அடைந்த மாறனுடைய பெருமை 9-வது கட்டுரையிலும் சிறந்த முறையில் விளக்கம் அடைகின்றன.

மனத்தில் எழும் சிந்தனைகள், அவற்றை வெளிக்காட்டும் சொற்கள் என்ற இருபடிகள் கவிதையில் உள்ளன. மானிடர் யாவரும் முதலில் கல்வி பயின்று, கவிதை இயற்றும் நோக்கத்துடன் செய்யுள், நாடகம் இவைகளை இயற்றிக் காலம் செல்லச் செல்ல, மனத்தின்கண் தோற்றம் பெறும் சிந்தனைகட்குத் தக்க முறையில் சொற்களால் வடிவம் அளிக்கின்றனர். இச்சொல்லுருவம் எண்ணங்களுக்குத் தக்க சொற்களைத் தேடி அமைதல் வேண்டும். சொற்றொடருடன் கூடிய கவிதை எண்ணங்களை உள்ளபடியே காட்டுகின்றன என்று சொல்லுவதற்கில்லை. முயற்சியால் இயற்றப்படும் இவற்றில் சொல்நயந்தான் முக்கியத்துவத்தைப் பெறுகிறது. ஆனால் இறைவன்மீது பக்தி மேலிட்டுக் கசிந்துருகும்போது அவனுடைய அருளால் சொற்களை வாரி வழங்கும் அவன் அடியார்களிடம் எண்ணங்கள் தக்க இடம் பெறுகின்றன. இவர்கள் உலகினரிடம் நெருங்கிப் பழகாவிடினும், இவர்களுடைய போக்கு மன அமைதியின்மை, குடும்ப வாழ்க்கை முதலியவைகளை நன்கு அறிந்தவர்கள் என்பது இவர்தம் அருளிச் செயல்களால் நமக்கு நன்கு புலனாகின்றது. இது 'கவிதையால் கடவுள் வழிபாடு' *(8)* என்ற கட்டுரையில் விளக்கம் பெறுகின்றது.

'பாசுரங்களில் உருக்காட்சிகள்' *(11)* என்ற கட்டுரையில் கட்புல, செவிப்புலங்கள் போன்ற காட்சிகளால் ஆழ்வார்கள் எவ்விதம் மானிடர்க்கு இறைவனுடைய மேன்மையைக் காட்டுகின்றனர் என்பதை நன்கு விளக்குகின்றார் பேராசிரியர் ரெட்டியார். கவிதையை நன்கு ஆராய்ந்து தக்க முடிவுகளை நன்கு விளக்கும் திறன், உளவியலை நன்கு பயின்று அவற்றின் நுணுக்கங்களைத் தக்கவாறு பொருத்திக் காட்டும் திறன் பேராசிரியரின் கைவந்த கலையாகும். இக்கட்டுரை திறனாய்வாளருக்குப் புதிய போக்கில் வழிகாட்டும் என்பதற்கு ஐயம் இல்லை. பேராசிரியர் ரெட்டியாரைப் போன்ற ஒருசிலரே இவ்விதம் ஆராய்ச்சி செய்ய முடியும். ஆழ்வார்களிடம் உள்ளத்தைப் பறிகொடுத்

துள்ள இவரைத் தவிர வேறு எவரும் இவ்விதம் செயற்பட வில்லை என்று கொள்ளலாம்.

அகப்பொருள் ஆராய்ச்சி ஆசிரியரின் சொந்தமான சொத்து. 'அகத்திணைக் கொள்கைகள்', 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' என்ற இவர்தம் நூல்களே இதற்குத் தக்க சான்றுகள். *12, 13*-வது கட்டுரைகள் அகப்பொருள் நுட்பங்கள். பக்தியாகப் பரிணமிக்கும்பொழுது எவ்வளவு உயர் நிலையை அடைகின்றன என்பதை நன்கு விளக்கு கின்றன. வெறிவிலக்கு, மடலேறுதல், உடன்போக்கு போன்ற துறைகளை ஆழ்வார்களின் அருளிச் செயல் களினின்றும் சங்க நூல்களினின்றும் மேற்கோள்களை எடுத்துக் காட்டி விளக்கும்போது பாசுரங்களின் மேன்மையும் பெருமையும் பன்மடங்கு உயர்ந்து காட்டுகின்றன. 'பாசுரங்களில் தூது' (*14*) என்ற கட்டுரையில் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற இறைவனின் ஐந்து நிலைகட்கும் ஆழ்வார் நாயகிமார் சில பறவைகளைத் தூது அனுப்பும் நுட்பத்தையும் அத்தூதில் அமைந்துள்ள சமய தத்துவத்தையும் அற்புதமாகக் காட்டுகின்றார் பேராசிரியர் ரெட்டியார்.

'ஆழ்வார்களின் சமுதாயக் கண்ணோட்டம்' (*18*) என்ற கட்டுரையில் மிக்க சுவையுள்ள பொருள்கள் விசாரிக்கப் பெற்றுள்ளன. பாவை நோன்பைக் குறித்து மூன்று சான்றுகள் காட்டப் பெற்றிருப்பது பேராசிரியர் ரெட்டியாரின் ஆய்வுத் திறனை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. 'பிரபந்தங்களின் தொகையும் பாசுரங்களின் தொகையும் (*15*) என்ற கட்டுரை தக்க சான்றுகளுடனும் தடை விடைகளுடனும் 'தொகை களை' அறுதியிடும் திறன் எவர் மனத்தையும் கவர்வதாக அமைந்துள்ளது. கட்டுரைகள்—7, 19 முறையே திருக் குறளை ஆழ்வார்கள் கையாண்டுள்ள நுட்பம், திருக்குறளில் வைணவ சமயக் கருத்துகள் இடம் பெற்றுள்ளமை ஆகியவை தெளிவாக விளக்கம் பெறுகின்றன. கட்டுரை—17 ஆழ்வார் பாசுரங்களில் கம்பன் ஈடுபட்டுள்ளமையையும், பாசுரங்

களின் தாக்கத்தால் கம்பன் படைத்த காவியம் புது மெருகுடன் பொலிவதையும் சான்றுகளுடன் விளக்குகின்றார் ஆசிரியர்.

பேராசிரியர் டாக்டர் ரெட்டியர் பல துறைகளை முயன்று படித்து அவற்றில் திறன்களை வளர்த்துக் கொண்டவர். அவர் நாலாயிரத்தைப் பிஎச். டி. பட்டத் திற்கு ஆய்ந்ததும், அதற்கு ஐந்தாண்டுகள் நான் வழிகாட்டி யாக அமைந்ததும் ஏழுமலையானின் திருவருளே. இவர்தம் விடாமுயற்சி, நூல்களில் ஆழங்கால்படும் முறை, முதுமைக் காலத்தும் சதா 'துருதுரு' வென்றிருக்கும் இளமைத்துடுக்கு, எடுத்ததைத் திறமையாகக் கொண்டுசெலுத்தும் போக்கு— இவற்றில் நான் லயித்துப் போனேன். இவரைப்போல் உழைப்பவர்களைக் காண்பது அரிது. ஆராய்ச்சி மாணாக்கர் கட்கு இவர் நல்ல வழி காட்டி; இவர்தம்நற்பண்புகள் யாவும் அவர்களைத் தொற்றுபோல் பற்றும் பான்மையவை.

சைவசமயத்தைச் சார்ந்தவராயினும், டாக்டர் ரெட்டியார் தன் பிஎச். டி. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் மிக்க ஈடுபாட்டைக் காட்டியதைக் கண்டு வியந்து போனேன். வைணவ ஆசிரியப் பெருமக்களின் பனுவல்களில் திளைத்து அவற்றிலுள்ள முத்துகளை ஆழ்ந்தெடுத்துக் காட்டியுள்ளார் தம் பிஎச். டி. ஆங்கில ஆய்வுக் கட்டுரையில். அதுபோக, இந்தக் கட்டுரைத் தொகுப்பின் சிறப்பான அம்சங்கள்: சர்ச்சைக்குரிய பொருள் களை நன்கு ஆய்ந்த பிறகு தமக்கு ஒவ்வாத முடிவுகளைக் கடுமையாகத் தாக்காமல் தம் சொல்நயத்தால் விலக்கித் தம் முடிவை ஆணித்தரமாக வெளியிடுவது; கூடியவரையில் தம் முடிவுகட்குச் சான்றுகளைத் தேடி அமைப்பது; மற்றைய நூல்களில் இவர் கையாண்டிருக்கும் உவமைகட்கு இந் நூலில் இடந்தரவில்லையாயினும் உவமைகளால் புரியாத கருத்து களையும் புரிய வைக்கும் திறன் ஆகியவை குறிப் பிடத் தக்கவை. வைணவ சமயத்தில் சிறப்பாகக் கையாளப் பெறும் சொற்களையே பயன்படுத்தி வைணவர்கட்கும் தம்

கருத்துகளைக் தெரிவிப்பதில் இவர் நிகரற்றவர். ஆழ்வார் களின் ஏற்றம் ஒரு பக்கம், வைணவ சமயத்தின் மேன்மை மற்றொரு பக்கம் என்ற நோக்கத்துடன் எழுதப்பெற்ற இந் நூல் வைணவருக்கேயன்றி, எல்லோருக்குமே பயன்படும் என்பதை வற்புறுத்துகின்றேன். இவ்விதமே இவர் மேன் மேலும் வைணவத் தொண்டு புரிய 'வேங்கடத்து மேவிய கலியுக வரதன்' திருவருள் பாலிக்கவேண்டுமென்று அவன் இணைத் தாமரையடிகளைப் பணிந்து வாழ்த்துகின்றேன்.

பாண்டிச்சேரி
*23-5-1983*

V. வரதாச்சாரி

# நூல் முகம்

மறைப்பாற் கடலைத் திருநாவின்
மந்தரத் தாற்கடைந்து
துறைப்பாற் படுத்தித் தமிழாயி
ரத்தின் சுவையமிர்தம்
கறைப்பாம் பணைப்பள்ளி யான்அன்பர்
ஈட்டங்க ளித்திருந்த
நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு
நிழல்இல் லையே![1]

—*பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்*

என் முன்வினைப் பயனாலும் எம் குலத்துள்ளோர் செய்த நல்வினைப் பயனாலும் 17 ஆண்டுகள் திருப்பதியில் தமிழ்ப் பணி புரியும் வாய்ப்பு அளித்தான் ஏழுமலையான். 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டல்'ல்லவா? திருப்பதியில் அவனருளால் சில உருப்படியான பணிகளை நிறைவேற்ற முடிந்தது. அங்குள்ள தமிழ்த்துறையின் வரலாறு, ஒருவகையில் என் வாழ்க்கை வரலாற்றின் ஒரு முக்கிய பகுதியாக அமையும். என் இதயத் தேரை இயக்கும் நீலமேனி நெடியோனின் அருள் இருக்கு மாயின் 'நினைவு அலைகள்' என்ற தலைப்பில் ஒரு நூல்

---

1. திருவரங். கலம். காப்பு.—2.

விரைவில் வெளி வரும். அப்போது என் திருப்பதி வாழ்க்கை யைப்பற்றிய குறிப்பு அதில் கணிசமான இடத்தைப் பெறும்.

வைணவர்களின் மறையாகத் திகழ்வது நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம். 'பதின்மர்செந்தமிழ்'[2] என்று முத்தமிழ்க் கவிஞர் வீரராகவ முதலியார் இதனைப் பாராட்டியுள்ளார். இடச் சூழ்நிலையும், துன்பத்தால் துவக்குண்ட மனநிலையும் டாக்டர் (பிஎச். டி.) பட்டத்திற்கு 'பதின்மர் செந்தமிழை' ஆய்வுப் பொருளாக எடுத்தும் கொள்ளும்படிச் செய்தன. 'என் திருவடியில் பணியாற்றும் நீ என்னையே ஆய்வாயாக' என்ற இறைவன் கட்டளையே என்னை இத்தலைப்பைத் தேர்ந் தெடுக்குமாறு செய்தது என்றுதான் சொல்ல வேண்டும். இதற்காகத்தான் ஏழுமலையான் பிஎச். டி. பதிவைக் கிடைக்க முடியாமல் செய்து 24 ஆண்டுகள் நீட்டித்து வைத் தான் போலும் என்று இப்போது என்னை நினைக்கச் செய் கின்றது.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில்—'பதின்மர் செந் தமிழில்'—ஆழங்கால்பட்டிருந்த காலத்தில் (1964 - முதல் இன்றுவரை) தமிழகத்திலிருந்து பல அன்பர்களின் மணிவிழா மலர்கட்கும் பல சிறப்பு மலர்கட்கும் கட்டுரைகள் வழங்கு மாறு அழைப்புகள் வந்தன. பெரும்பாலும் அவற்றிற்கு எழுதிய கட்டுரைகளையும் அவ்வப்போது திருமலை—திருப் பதி தேவஸ்தானம் பதிப்பிக்கும் 'சப்தகிரி' என்ற இதழில் வெளிவந்த கட்டுரைகளையும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலேயே அமைத்தேன். சென்னை வந்தபிறகு ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தில் திங்களுக்கு ஒன்றாக ஓராண்டுக் காலம் நாலாயிரத்திலேயே பன்னிரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினேன். இவற்றில் இரண்டு சொற்பொழிவுகள் கட்டுரை வடிவம் பெற்று 19 கட்டுரைகள் அடங்கிய இந்தத் தொகுப்பில் இடம் பெறுகின்றன. 'பிள்ளைகட்குத் திருநாமம்

---

2. திருவேங்,கலம்,—24,

சூட்டுதல்' என்ற கட்டுரை இத்தகைய நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொண்டிருந்தபோது என் சிந்தனையில் எழுந்த எண்ணத்தின் வடிவமாகும். ஒவ்வொரு கட்டுரையும் அவை எழுதிய காலத்தின் என் மன நிலையைக் காட்டும். மனிதன் வாழ்க்கையில் நேரிடும் பல்வேறு நிகழ்ச்சிகளின் தாக்கத்தினால் புடம் போடப்பெற்றுப் பக்குவப்படுகின்றானல்லவா? இந்தக் 'கட்டுரை விருந்தில்' கூறியது கூறல் இருப்பின் அஃது அந்தந்த கட்டுரையின் அங்கமாக அமைந்திருப்பதால் அக் குற்றம் இந் நூலைச் சாராது. விளக்கம் கருதியே அவற்றை நீக்கி முறைப் படுத்தவில்லை. அப்படி முயன்றால் கட்டுரையின் வடிவம் சிதைந்துவிடும் என்று அஞ்சி அப் பணியில் இறங்கவில்லை. கட்டுரைகள் நூல் வடிவம் பெறும்போது பல்வேறு மன நிலையிலுள்ள அன்பர்களாலும் இலக்கியம்—பக்திச் சுவைஞர்களாலும் மிகவும் விரும்பி ஏற்கப்பெறும் என்பது என் திடமான நம்பிக்கை.

சமய நூல்களையும் பக்தி நூல்களையும் வெளியிடுவதற்கு வறுமையையே அணிகலனாகக் கொண்டு செம்மையான வாழ்க்கையை நடத்தும் நூலாசிரியர்க்கு மானியம் வழங்கிவருகின்றது திருமலை—திருப்பதி தேவஸ்தானம். அத்திட்டத்தில் இந்நூலும் அந்த மானியத்தைப் பெற்று வெளிவருகின்றது. மானியம் வழங்கிய அந்த நிறுவனத்திற்கு என் அன்பு கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டு உதவிய இராயப்பேட்டை மாருதி அச்சகத்தினருக்கும், நூலை அழகுறக் கட்டமைத்துக் கற்போர் கரங்களில் தவழச் செய்த பாலாஜி பைண்டிங் வொர்க்ஸ் அவர்கட்கும் என் அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

சென்னை உயர்நீதி மன்றத்தின் நீதிபதியாகப் பணியாற்றும் ஜஸ்டிஸ் ஆர். செங்கோட்டு வேலன் அவர்களை அவர் நீதிபதியான தொடக்கம்முதல் நன்கு அறிவேன். வேலூரில் (சேலம்) பிறந்து பல்வேறு இடங்களில் கல்வி

பெற்றுக் கோவையில் வழக்குரைஞராக இருந்து பெரும் புகழ் பெற்றவர்; சட்ட நுணுக்கங்களை நன்கு அறிந்தவர். கோவையில் வக்கீல் தொழில் புரியுங்கால் பல இலக்கியக் கழகங்களில் பங்கு கொண்டு இலக்கிய ஆர்வலராகத் திகழ்ந் தவர்; இன்றும் திகழ்பவர். இவர்தம் திறமையையும் அடக் கத்தையும் புகழையும் கண்ட அரசு இவரை நேரடியாக உயர் நீதி மன்ற நீதிபதியாகத் தேர்ந்தெடுத்தது. 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற வள்ளுவர் வாக்கிற்கு இலக்கிய மாகத் திகழும் இப் பெருமகனாரின் அணிந்துரை இந் நூலுக்குப் பெருமை தருகின்றது. பக்திக்குப் பாத்திரமான வரின் அணிந்துரை உண்மையிலேயே நூலினை அணிசெய் கின்றது. அணிந்துரை அருளிய அன்பருக்கு என் இதயம் நிரம்பிய நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

இந் நூலுக்கு முகவுரை எழுதிய டாக்டர் வி. வரதாச்சாரியார் அவர்கள் பல்லாண்டுகள் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் வடமொழித்துறை யில் துணைப்பேராசிரியராகப் (Reader) பணியாற்றி ஓய்வு பெற்றபிறகு புதுச்சேரி ஃரெஞ்சு ஆய்வுக்கழகத்தில் வடமொழி ஆய்வாளராகப் பணியாற்றுபவர். வடமொழிக் கடல்; கற்றவர்க்கினியர்; புலமையை அடக்கத்திற்காக்கியவர். திருப்பதியில் யான் பிஎச்.டி.க்கு ஆயுங்கால் ஐந்து ஆண்டுகள் எனக்கு 'வழி காட்டியாக' (Guide) இருந்தவர். அக்காலத் தில் (*1964—69*) நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிடைத்தது; அதன் பின்னரும் நெருக்கம் குறையாது இருந்து வருகின்றது. 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற பொன் மொழிக்கு இலக்கியமாகத் திகழ்பவர். இத்தகைய பெரியார் இந்நூலுக்கு 'முகவுரை' அருளியமைக்கு என் இதயங்கனிந்த நன்றியினைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

உயர் திரு B. R. புருடோத்தம நாயடு அவர்களை அறியாத தமிழர்கள், தமிழ்—வைணவர்கள் இரார். பல்லாண்டுகள் திருவையாறு அரசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் அதன் பின்னர் சென்னைப் பல்கலைக்

கழகத்தின் தமிழ்த்துறையில் பல்லாண்டுகள் துணைத்தமிழ்ப் பேராசிரியராகவும் பணியாற்றித் தமிழ்க் கடலாகவும், வைணவ விளக்காகவும் திகழ்ந்தவர். 'ஈட்டின் தமிழாக்கத் திற்காகவே' நியமிக்கப்பெற்று அச்சீரிய பணியை அற்புதமாக நிறைவேற்றி நம் அருமை இராஜாஜி அவர்களின் பாராட்டு தலைப் பெற்றவர். இவரை 'வைணவத் திலகம்' என்பினும் அது மிகையன்று; மாலவனையும் மாறனையும் மனத்தில் குடியேற்றி வாழ்ந்தவர். இவர் திருவையாற்றில் பணியாற்றிய பொழுது *(1940—60)* நான் துறையூரில் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியனாகவும் *(1941—50)* பின்னர்க் காரைக் குடியில் தமிழ்ப்பேராசிரியனாகவும் *(1950—60)* பணியாற்றி னேன்; *(1943—45)* இல் யான் தமிழ் வித்துவான் தேர்வுக்குப் படித்தபோது பல திங்களில் வார இறுதி விடுமுறை நாட்களில் திருவையாறு சென்று சேனாவரையத்தில் தெளிவு பெற்றேன். இவர் பாடம் பயிற்றும் சீரிய முறையை நேரில் அநுபவித்தேன். இத்தகைய ஒரு நல்லாசிரியரைக் காண்டல் அரிது. யான் திருப்பதிக்குச் சென்ற பிறகு சென்னை வரும் போதெல்லாம் பன்மொழிப் புலவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் இல்லத்தில் அடிக்கடிச் சந்தித்து உரையாடுவ துண்டு. இவ்வுரையாடலில் இலக்கண—இலக்கிய ஒளி, சமய ஒளி இவற்றை 'மின்வெட்டுபோல்' பெற்று அநுபவித்த துண்டு. 'ஈட்டின் தமிழாக்கம்' ''ஆசாரிய ஹிருதய விளக்கம்' 'ஸ்ரீவசன பூஷண விளக்கம்'—இவர்தம் புலமைக்கு எடுத்துக் காட்டுகள். இவற்றையெல்லாம் நினைவுகூரும் வகையில் இந்நூலை முத்தரான இப் பெரியாருக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். வைகுந்தத்தில் முத்தர்களுள் ஒருவராகத் திகழும் இப் பெரியாரின் ஆசியால் என் தமிழ்ப் பற்றும் அறிவியல் பற்றும் சமயப்பற்றும் மேலும் மேலும் வளர்ந்து தெளிவு பெறும் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந் நூலை வெளியிடுவதற்கு என் இதயத்தேரை நடத்தி ஒல்லும் வகையெல்லாம் தமிழ்ப்பணி, அறிவியல் பணி, சமயப்

பணி ஆற்றுவதற்கு நல்ல உடல் நலத்தையும் மனவளத்தையும் நல்கி வரும் 'குன்றம் ஏந்திக் குளிர் மழைகாத்த' எம்பெருமான் ஏழுமலையப்பனை மனம், மொழி, மெய்களால் வணங்கி வாழ்த்துகின்றேன்.

நின்றவண் கீர்த்தியும் நீள்புன
லும்,நிறை வேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்த நாடும்
குலவிய பாற்கடலும்
உன்றனக் கெத்தனை இன்பந்
தரும்உன் இணைமலர்த்தாள்
என்றனக் கும்அது, இராம
நுச! இவை யீந்தருளே.[3]

—திருவரங்கத்தமுதனார்

'வேங்கடம்'
சென்னை-600 040
15-6-1983

ந. சுப்புரெட்டியார்

3. இராமா. நூற்.—76

# உள்ளுறை

# 1. ஆழ்வார்கள் கண்ட திருவரங்கம் *

"காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையைப் பொருநைநதி—என
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு."[1]

என்பது தமிழ்நாட்டின் வளத்தைக் காட்டும் பாரதியாரின் சொல்லோவியம். தமிழகத்தை வளப்பமுறச்செய்து அணி செய்யும் ஆறுகளுள் தலைசிறந்தது காவிரி. இந்த ஆற்றங் கரையில் இயற்கை வளத்துடன் அறிவு வளத்திற்கும் பேர்போன தலங்கள் இடம் பெற்றுள்ளன. காவிரி பாயும் இடம் தமிழகத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு கருவூல மாக இருந்ததுபோல், அறிவு வளர்ச்சிக்கும் சமய வளர்ச்சிக் கும் பெரிய ஒரு கருவூலமாகத் திகழ்ந்தது என்பதை வரலாறு காட்டுகின்றது.

தமிழ்நாட்டில் பக்தி இயக்கம் தோன்றிய காலத்திலும் அதற்குச் சற்றுப் பின்னரும் வைணவத்தின் வளர்ப்புப் பண்ணைகளாகத் திகழ்ந்த பெருந்தலங்கள் திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம், காஞ்சிபுரம் என்பவை யாகும். இவற்றுள் 'பெரிய கோயில்' என வழங்கப்பெறும்

---

* திருமலை - திருப்பதி தேவஸ்தானம் 'சப்தகிரி' இதழில் வெளிவந்தது.

1. பாரதியார் கவிதைகள்—செந்தமிழ் நாடு 3.

திருவரங்கம் தனிப்பெறும் புகழிற்கு உரிய தலமாகும். இது திருச்சிராப்பள்ளிக்கு வடக்கே இரண்டரைக் கல் தொலைவில் உள்ளது. ஆற்றிடைக்குறையாகிய இந்த அரங்கம் நீர்வளமும் நிலவளமும் ஒருங்கே பொருந்திச் சோலைகள் சூழ்ந்து விளங்குகின்றது. இதன் வளத்தை,

''முருகனுறை குறிஞ்சித்தேன் முல்லை பாய
முல்லைநிலத் தயிர்பால்நெய் மருதத்தோட
மருதநிலக் கொழும்பாகு நெய்தல் தேங்க
வருபுனல்கா விரி சூழ்ந்த வளம்''[2]

என்று வருணித்திடுவர் திவ்விய கவி பிள்ளைப்பெருமாள் அய்யங்கார். இந்த அரங்கநாதனைக் காவிரியும் அதன் கிளையாறாகிய கொள்ளிடமும் மாலையிட்டுச் செல்வதுபோல் அமைந்துள்ளன.

''திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணி''[3]

இந்நகரில் அரவணைப் பள்ளியில் அறிதுயில் கொண்டுள்ளதாகக் குலசேகரப் பெருமாள் காண்கின்றார்.

பக்தி வளத்திற்குப் பேர்போன இத் தலம் 'பூலோக வைகுந்தம்' என்று போற்றிப் புகழப்பெறுகின்றது. ஆழ்வார்கள் பாடிய திருப்பதிகளுள் இதுவே முதன்மையானதாக மதிக்கப் பெறுகின்றது. வடநாட்டினரும் தென்னாட்டினரும் இதனை இந்தியாவின் புனிதத் தலங்களுள் மிக்க புகழ் பெற்றதாகக் கருதுகின்றனர்.

''தென்நாடும் வடநாடும் தொழநின்ற
திருவரங்கத் திருப்பதி.''[4]

---

2. சீரங்கநாயகர் ஊசல்—29.
3. பெரு. திரு.—1:1
4. பெரியா. திரு.—4. 9 : 11

என்பது பெரியாழ்வாரின் திருவாக்கு. இத்தகைய திருப்பதியில் உள்ள அரங்கநாதனது சயனத் திருக்கோலத்தைச் சிலப்பதிகாரம்,

> "நீல மேகம் நெடும்பொற் குன்றத்துப்
> பால்விரிந் தகலாது படிந்தது போல
> ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
> பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
> விரிதிரைக் காவிரி வியன்பெரு துருத்தித்
> திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்."[5]

[திறல் - வலிமை. பாயற்பள்ளி - பாம்புப் படுக்கை. துருத்தி - ஆற்றிடைக்குறை, தீவு.]

என்று காட்டுகின்றது. நீலமேகம் பொன்மலையின்மீது படிந்து கிடப்பதுபோல, ஆயிரம் பணமுடிகளோடு கூடிய பாம்பணையின்மீது அலை கொழிக்கும் காவிரி யாற்றுக் கிடையே இலக்குமி மார்பனாய் அரங்கநகர் அப்பன் பள்ளி கொண்டுள்ள காட்சியை இளங்கோ நமக்குக் காட்டுகின்றார். இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த திருவரங்கம்,

> "பக்தர்களும் பகவர்களும் பழமொழிவாய்
> முனிவர்களும் பரந்த நாடும்
> சித்தர்களும் தொழுது இறைஞ்சத்
> திசைவிளக்காய்."[6]

நின்று திகழும் காட்சியைப் பெரியாழ்வார் நமக்குக் காட்டுவர்.

இந்த ஞானப்பேரூரில் கிடந்த கோலத்துடன் திகழும் பெருமானைப் பத்து ஆழ்வார்கள் பாடிப் பரவியுள்ளனர். முதலாழ்வார்கள் மூவரும், திருமழிசை பிரான், 'பாண்

---

5. சிலப். காடுகாண் வரிகள் (35 - 40).
6. பெரியா. திரு.—4, 9:6

பெருமாள்' என வழங்கும் திருப்பாணர், தொண்டரடிப் பொடிகள், கோழிக்கோன் குலசேகரர், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஆழ்வார்கள் பாடியுள்ளனர். இந்தப் பதின்மருடன் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாளை யும் மதுரகவிகளையும் சேர்த்து ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். ஆண்டாளும் அரங்கநாதனைப் பாடியுள்ளாள்.[7] மதுரகவியாழ்வார் மட்டிலும் தமது குருவாகிய நம்மாழ் வாரை மட்டிலுமே பாடியுள்ளார். இப் பாடல்களும் நாலாயிரத்தில் இடம் பெற்றுள்ளன. இந்த ஆழ்வார்கள் பன்னிருவரும் தமிழ்நாட்டில் வைணவ சமயத்திற்குப் புத்துயிர் அளித்தவர்கள். இவர்கள் எம்பெருமானது மங்கள குணங்களாகிய அமுத வெள்ளத்தில் ஈடுபட்டு ஆழ்ந்திருந்த மையால் 'ஆழ்வார்கள்' எனப் பெயர் பெற்றனர் என்பது ஈண்டு அறியத்தக்கது.

முதலாழ்வார்களில் ஒருவரான பொய்கையாழ்வார் திரு வரங்கத்தைப் பெரும் பக்தியுடன் குறிப்பிடுவர்.

> "ஒன்றும் மறந்தறியேன் ஓதநீர் வண்ணனைநான்
> இன்று மறப்பனோ, ஏழைகாள்? அன்று
> கருஅரங்கத் துள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
> திருவரங்கம் மேயான் திசை."[8]

> [ஓதநீர் - கடல் நீர். ஏழைகாள் - அறிவிலிகளே. கருஅரங்கம் - கருப்பம். மேயான் - மேவிய பெருமாள்.]

என்பது இவரது பாடல். இறைவன் தம்முடைய கருவுலக வாழ்விலேயே தன்னைப் பக்தனாக்கி விட்டான் என்று கருது

---

7. திருவரங்கத்தைப் பற்றியும் அங்குக் கோயில் கொண் டுள்ள அரங்கநகர் அப்பனைப்பற்றியும் 245 பாடல்கள் நாலாயிரத்தில் காணப்பெறுகின்றன. சோழநாட்டுத் திருப்பதிகள்—பகுதி 1. பக்கம். 5 காண்க.
8. முதல் திரு.—6.

கின்றார் இவ்வாழ்வார். இளமையிலேயே ஏற்பட்ட பக்தி இவரை அவ்வளவு தன்னம்பிக்கைக் கொள்ளுமாறு செய்துவிட்டது. அதனால்தான், 'அரங்கநாதன் பள்ளி கொண்டுள்ள அத்திசை நோக்கிக் கைதொழுதேன்; கண்டேன்' என்று பாடி வழுத்துகின்றார்.

திருவரங்கத்தின் சிறப்பு வரலாற்றுக் காலத்தையும் கடந்து நிற்கின்றது என்பதை இத் திருப்பதி குறித்து வழங்கும் புராணக் கதைகளால் அறியலாகும். ஒருசமயம் இமயமலைச் சாரலில் கங்கை, யமுனை, சரசுவதி முதலிய நதிகள் தெய்வ கன்னிகையர் வடிவங்கொண்டு விளையாடிக்கொண்டிருந்த னர். அவ்வமயம், வானவீதியில் சென்றுகொண்டிருந்த கந்தருவன் ஒருவன் இவர்கள் இருந்த திசைநோக்கி தொழுது அகன்றனன். யாரை வணங்கினான் அவன் என்பது குறித்து அந்த நதிக் கன்னிகையர் தமக்குள் பூசலிடத் தொடங்கினர். ஒவ்வொருவரும் தன்னைத்தான் அவன் தொழுது சென்றதாக வாதாடினர். ஓடியாடி விளையாடிய விளையாட்டு இப்படிப் பூசலில் முடியவே, சில நதிக்கன்னி கையர் அலுப்பும் சலிப்புமாக, 'இஃது என்ன தொல்லே? நம்முடைய கடமைகளே ஆற்றுவோம்' என்று சொல்லிக் கொண்டு மக்களின் விடாயையும், பயிர்ப்பச்சைகளின் தாகத்தையும், பூமகளின் தாபத்தையும் தீர்க்கப் போய் விட்டனர்.

கங்கையும் காவிரியும் மட்டிலும் இறுதிவரை வாதாடிக் கொண்டிருந்தனர். சொற்போருக்கு முடிவு காணாததால், இந்த இரு நதி நங்கையரும் திருமாலிடம் சென்று முறை யிட்டுத் தமது வழக்கினைத் தீர்க்குமாறு வேண்டினர். உடனே பெருமாள் புன்முறுவலுடன் கங்கையை நோக்கி, 'உன் உரிமையை எங்ஙனம் நிலை நாட்டுகின்றாய்?' என்று வினவினார். கங்கை இறைவன் திருவடியைத் தொட்டு 'இங்கிருந்துதான் தோன்றினேன் நான்' என்று கூற, பகவானும் அதனை ஒப்புக்கொண்டு, கங்கையின் சார்பாகத் தீர்ப்புக் கூறினார். காவிரிக்குச் சினம் வந்துவிட்டது.

கங்கையிற் புனிதமாய காவிரி என்று என்றாவது ஒருநாள் புகழ் அடையவேண்டும் என்று உறுதிகொண்டு ஒருமையுள்ளத்துடன் அவள் தவம் கிடந்தாள். காவிரியின் தவம் அன்பு நெறியில் செல்லும் தொண்டர்கட்கு மகிழ்ச்சி அளித்தது. தொண்டர் நாதனாகிய திருமாலும் அவளுடைய தவத்தைப் பாராட்டி, 'நான் இங்கே வந்து சயனித்துக்கொள்ளப் போகிறேன். அப்போது நீ எனக்கு மாலையாக அமையும் பேறு பேறுவாய். நீ கங்கைக்கும் மேம்பட்டவள் என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பாடப் போகின்றார்' என்று வரம் அளித்தாராம்.

நாளடைவில் காவிரியிடையே ஒரு தீவு தோன்றியது. அந்தத் தீவில் அரங்கநாதனோடு கூடிய விமானமும் தோன்றியது. ஆற்றின் நடுவிலுள்ள இந்த அரங்கம் இயற்கை வளத்தாலும் இறையருளாலும் அரிய பொலிவுடன் திகழ்ந்தது. தொண்டரடிப் பொடியாழ்வார் இதனை,

"கங்கையிற் புனிதம் ஆய
காவிரி நடுவு பாட்டுப்
பொங்குநீர் பரந்து பாயும்
பூமபொழில் அரங்கம்."[9]

[பாட்டு - ஏழன் உருபு. பொழில் - சோலை.]

என்று பாராட்டுவர். அரங்க விமானத்தினுள்ளே மூலவரான அரங்கநாதன் ஆயிரந்தலைகட்கு அறிகுறியான ஐந்து தலைகளுடன் கூடிய அரவணையின்மீது பள்ளிகொண்டுள்ளான். இந்தச் சயனத் திருக்கோலத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார்,

"குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித்
தென்திசை இலங்கை நோக்கிக்

9. திருமாலை—23.

கடல்நிறக் கடவுள் எந்தை
அரவணைத் துயிலுமா கண்டு
உடல்எனக்கு உருகு மாலோ
என்செய்கேன் உலகத் தீரே.''[10]

[குடதிசை - மேற்குத் திக்கு. குணதிசை - கிழக்குத் திக்கு. பின்பு - முதுகு. அரவணை - பாம்புப் படுக்கை.]

என்று அநுபவித்துப் பாடுவர். "மேலைத் திக்கு—உபய விபூதிக்கும் தலைமை வகித்தலைத் தெரிவிக்குமாறு தான் புனைந்துள்ள திருவபிடேகத்தையுடைய திருமுடியை வைப்பதனாலும், கீழைத் திக்கு—எல்லா உலகங்களும் உய்யும்படி சரணமடைவதற்குரிய தனது திருவடிகளை நீட்டுவதனாலும், வடக்குத் திக்கு—முரட்டு சமஸ்கிருதம் நடையாடுவதாகி ஆழ்வார்களின் செவிக்கினிய ஈரச்சொல் நடையாடாத தேசமாகையாலே அத் திக்கிலுள்ளாரும் ஈடேறுவதற்கு ஏற்படவேண்டிய பின்னழகை யெல்லாம் காட்டுவதனாலும், தெற்குத்திக்கு—தனது அந்தரங்க பக்தனான வீடணனுக்காகத் தனது திருக் கண்களை வைத்து அன்போடு நோக்குவதனாலும் என இவ்வாறு நான்கு திக்குகளும் பயன் படும் என்க''.[11] என விளக்குவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள். சேதநர்க்கு (உயிர்கட்கு)த் தன்மீது அன்பை யுண்டாக்குமாறு எம்பெருமான் தான் பள்ளி கொள்வதற்காகவே திக்குகளைப் படைத்தான் என்பது இப் பாசுரத்தால் பெறப்படும் சிறப்புப் பொருளாகும்.

திருவரங்க விமானம் பகவானால் நான்முகனுக்கு அளிக்கப்பெற்றதென்றும், அதுவே சூரியகுலத்தைச் சார்ந்த இட்சுவாகு மன்னனுக்கு நான்முகனால் வழங்கப்பெற்றதென்றும் புராணம் கூறுகின்றது. இட்சுவாகு காலம் முதல்

10. திருமாலை—19.
11. ஷை—19 திவ்யார்த்த தீபிகை (உரை காண்க).

அவன் வழித்தோன்றலாகிய இராமன் காலம் வரையில் அஃது அயோத்தி அரசர்களின் குலதனமாகக் கருதப் பெற்றது. இந்தக் குலதனம், இராமனால் வீடணனுக்கு அளிக்கப்பெற்றது. இராமனது திருமுடிசூட்டு விழாவிற்குப் பிறகு அயோத்தியிலிருந்து இலங்கைக்குத் திருவரங்க விமானத்துடன் திரும்பிய வீடணன் காவிரி தீரத்தைக் கடந்து செல்லும்போது காவிரியாற்றுக்கிடையே அரங்கமாக இருந்த தீவினைக் கண்ணுற்றதும், அந்த அழகிற்கு உள்ளத்தைப் பறிகொடுத்து அங்கேயே விமானத்தை வைத்து அன்றைய வழிபாட்டை நடத்தினான். அப்பொழுது தர்மவர்மன் என்ற சோழமன்னனும் சில முனிவர்களும் அங்குவந்து, அரங்கநாதனை வணங்கினதாகப் புராணம் கூறுகின்றது. வீடணன் இலங்கைக்குச் செல்ல விடைபெற்று விமானத்தை எடுத்துச்செல்ல முயல்கையில், அவனால் அவ் விமானத்தை அசைக்கவும் முடியவில்லை. அரங்கநாதன் வீடணனிடம் தான் காவிரிக்கு அளித்திருந்த வரத்தைப் பற்றிய வரலாற்றை வெளியிட்டு, "அந்த வாக்கை நிறை வேற்ற உன்மூலம் இங்கு வந்து சேர்ந்தோம்; இனி நாம் இவ் விடத்தை விட்டு அசையப் போவதில்லை; உன்னுடைய தென்திசை இலங்கை நோக்கி இப்படியே சயனித்துக் கொண்டிருப்போம்'' என்று உரைத்தனன். இங்ஙனம் புராண வரலாறும் ஆழ்வார் கூறும் சயனத் திருக்கோலத்தை அரண் செய்கின்றது.

திருவரங்கத்தில் அரங்கநாதன் பள்ளிகொண்டது எதற் காக என்பதைக் குலசேகரப் பெருமான்,

"வன்பெருவா னகம்உய்ய அமரர் உய்ய
மண்உய்ய மண்உலகில் மனிசர் உய்ய
துன்பம்மிகு துயர்அகல அயர்வுஒன்று இல்லாச்
சுகம்வளர அகம்மகிழும் தொண்டர் வாழ."[12]

12. பெரு. திரு.—1:10.

[வானகம் - சுவர்க்கம். மண் - பூவுலகம்; அமரர் - தேவர். துயர் - பாவம். அயர்வு - துக்கம்]

என்று விளக்குவர். இதற்காகத்தான் அரங்கப் பெருமான் தென்திசை நோக்கிப் பள்ளிகொண்டுள்ளார் என்பது இவரது கொள்கை. இத்தகைய பெருமானது சந்நிதியில் 'அடியார்தங்கள் இன்பமிகு பெருங்குழுவில்' தானும் ஒருவராக இருக்க வேண்டுமென்று துடித்து நிற்கின்றார் இவ்வாழ்வார்.

பெரியாழ்வார் தாய் நிலையிலிருந்துகொண்டு மகள் நிலையைப் பேசுகின்றார்.

> "ஒருமகள் தன்னை உடையேன்
> உலகம் நிறைந்த புகழால்
> திருமகள் போல வளர்த்தேன்."[13]

என்பது ஆழ்வாரின் தாய்ப்பாசுரம். இதற்கும் ஆண்டாள் காதலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. ஆண்டாள் திருவரங்கத்துச் செல்வன்மீது ஆராக் காதல் உறுகின்றாள். அப் பெருமான் அவளுக்கு,

> "என்அரங்கத்து இன்னமுதர்
> குழல்அழகர் வாய்அழகர்
> கண்அழகர் கொப்பூழில்
> எழுகமலப் பூஅழகர்."[14]

எனக் காட்சி அளிக்கின்றார். அழகிய மணவாளர்மீது தான் கொண்ட காதலின் உரத்தை, உறுதியை,

> "மானிடவர்க்கு என்று பேச்சுப் படில்
> வாழகில்லேன் கண்டாய்."[15]

---

13. பெரியாழ். திரு.—3. 8:4
14. நாச். திரு.—11:2
15. நாச். திரு.—1:5

என்று புலப்படுத்துகின்றாள்; இறுதியில் அரங்கனையே கணவனாகவும் அடைகின்றாள். இச் சூடிக்கொடுத்த சுடர்க் கொடியைப் போலவே குலசேகரர் புதல்வி சேரர்குல வல்லி யும், நந்த சோழன் மகள் கமலவல்லியும், பின்னாளில் தில்லி பாதுஷாவின் மகள் துலுக்க நாச்சியாரும் அழகிய மணவாளனாகிய அரங்கநாதனையே காதலித்துப் பேறு பெற்றனர் என்பதை வைணவ உலகம் நன்கு அறியும்.

இறைவன்மீது பக்திக் காதலுள்ளவர்கள், தங்களைக் காதலிமார்களாகப் பாவித்துக்கொண்டு பக்தி செய்து பாடும் வழக்கத்தை ஆழ்வார்களின் பக்திப் பூங்காவில் காணலாம். இதனை நாயக - நாயகி பாவனை என்று வழங்குவர்.[16] கம்ப நாடனும்,

"கண்ணில் காண்பரேல்
ஆடவர் பெண்ணினை அவாவும் தோளினாய்."[17]

என்று முற்றும் துறந்த முனிவர் விசுவாமித்திரரே இராமனது பேரழகில் ஈடுபட்டுப் பேசுவதாக வருணித்துள்ளான். புரு டோத்தமனாகிய அழகனது பேராண்மைக்குமுன் உலக முழுவதும் பெண்தன்மையுடையதே என்பது வைணவரது கொள்கை. தம் நிலைமாறிப் பெண்நிலை பெற்றுப் பேசும் ஆழ்வார்கள் காதலியாகப் பேசுவதோடு தோழியாகவும் தாயாகவும் பேசுவதுண்டு. திருமங்கையாழ்வார் தாயார் நிலையில் இருந்து இவ்வாறு பேசுவர்:

---

16. இத்துறையில் ஆழ்வார்கள் வெற்றி கண்டதற்கு சங்க இலக்கிய அகத்துறைப் பாடல்களும், அவற்றின் தத்து வத்தை விளக்கும் தொல்காப்பியமும் அவர்கட்குப் பெரிதும் கைகொடுத்து உதவி உள்ளன.

17. கம்ப. தாடகை வதை—41. ஒப்பிடுக. பிராட்டியின் அழகில் ஈடுபட்ட சூர்ப்பணகை 'பெண் பிறந்தேனுக் கென்றால் என் படும் பிறர்க்கு என்றாள்' (சூர்ப்ப. 60).

"தாதுஆடு வனமாலை தாரானோ?
என்றென்றே தளர்ந்தாள் காண்மின்;
யாதானும் ஒன்றுரைக்கில் எம்பெருமான்
திருவரங்கம் என்னும்; பூமேல்
மாதாளன் குடமாடி மதுசூதன்
மன்னவர்க்காய் முன்னம் சென்ற
தூதாளன் என்மகளைச் செய்தனகள்
எங்ஙனம்நான் சொல்லு கேனே?"[18]

"சிறிதுகூட ஓய்வில்லாமல் கலகலவென்று எதையேனும் பேசிக்கொண்டிருக்கும் என் மகள் இப்போது பேச்சு ஓய்ந்திருக்கின்றாள். 'அவர் மார்பில் அணிந்த வனமாலை என் மார்பில் கொணர்ந்து புரட்டீரே' என்று சொல்லமாட்டாதவளாய் 'வனமாலை தாரானோ?' என்று மட்டிலும் சொல்லிக்கொண்டு தளர்கின்றாள். 'நங்காய், இப்படிப்பட்ட தளர்ச்சி உனக்குத் தகாது' என்று நாம் இதமாக ஏதாவது சொல்லத் தொடங்கினால் நம் சொற்கள் தன் காதில் விழவொண்ணாதபடி காதை மூடிக்கொண்டு 'திருவரங்கம், பெரிய கோயில்' என்று மிடற்றொலி செய்கின்றாள். இங்ஙனம் செய்தவன் சாதாரணமானவனா? தாமரைப் பூவின்மீது வாழ்ந்துகொண்டிருந்த பிராட்டி 'இது நெருப்பு' என்று அந்த மலரைவிட்டுத் தன்மார்பில் வந்து சேரும்படி அபகரித்துக்கொண்டவன். அங்ஙனம் பெற்ற ஒருத்தி போதாது என்று ஆயர்பாடிப் பெண்களையெல்லாம் குடக்கூத்தில் தோற்பித்து அவர்களை வசப்படுத்திக்கொண்டவன். பஞ்சவர்க்குத் தூது சென்றவன். அடியவர்களின் பகைவர்கள் யாவரையும் பொடிபடுத்திவிடும் வீரன். இங்ஙனம் தன் மேன்மையும் நீர்மையுமான தனது பண்புகளையெல்லாம் காட்டி என் மகளை இப் பாடு படுத்துகின்றான். இதை எப்படிச் சொல்லுவேன்?" என்பதாகத் தாய் பேசுகின்றாள்.

---

18. பெரி. திரு.—5, 5 ; 6

இதே தாய் இன்னும் பேசுகின்றாள் :

"வார்ஆளும் இளங்கொங்கை வண்ணம்வேறு
ஆயினவாறு எண்ணாள்; எண்ணில்
பேர்ஆளன் பேர்அல்லால் பேசாள்;இப்
பெண்பெற்றேன் என்செய்கேன் நான்?"[19]

இதில் தன் பெண் பசலை நிறங்கொள்ளுகைக்கு வருந்துகின்றாள். பசலையோ நீர்ப்பாசி போன்றது. தண்ணீரில் நாம் கை வைத்தோமாகில் கைப்பட்டவிடங்களில் பாசி நீங்கும்; கையை அகற்றிவிட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும். அங்ஙனமே காதலர் கைபடும் இடங்களில் பசலை நிறம் நீங்கும் (இயற்கையான அழகிய நிறமே இருக்கும்). அணைத்த கையை நெகிழ்த்தலால் அப் பசலை நிறம் படரும். "என் மகளுக்கு அறிவு அடியோடு தொலைந்தது. வீணாக ஆசை வைத்ததனால் மனநோய் காரணமாக கொங்கை நிறம் வேறு பட்டதே என்று அறிய மாட்டுகின்றிலள். இவளுக்கு இவ்வுலகைப்பற்றின சிந்தையும் தன்னைப்பற்றிய சிந்தையும் கழிந்தனவேயன்றி, எம்பெருமானுடைய திருநாமங்கள் இவள் வாயில் வந்த வண்ணம் உள்ளன. இத்தகைய பெண்ணைப் பெற்ற நான் என்செய்வேன்?" என்று வருந்துகின்றாள். 'இப்பெண் பெற்றேன்...நான்' என்பதற்கு இரண்டு பொருள் கூறுவர் பிரதிவாதி பயங்கரம். 'இப்படி என் சொற்கேளாத அடங்காப் பெண்ணைப் பெற்றேனே! இவளை இழந்து அநியாயமாகக் கெட்டேனே! என் செய்வேன்?' என்று பிறர் நினைக்க வேண்டும். 'என்னைப்போல் பெண்பெற்றார் உண்டா? இவ்வளவு சிறிய பருவத்தில் இறையன்புகொண்டு பக்தியில் ஆழங்கால் படும்படியான பேறு வாய்த்த பெண்ணை பெற்ற நான் என்ன நோன்பு நோற்றேனோ?' என்ற மகிழ்ச்சியும் தொனிக்கும்.

---

19. பெரி. திரு 5. 5:7

இவ்வாழ்வார் தன்னைக் காதலியாக வைத்துப் பேசும் பாசுரங்கள் திருநெடுந்தாண்டகத்தில் உள்ளன. பரகால நாயகி பேசுகின்றாள் :

"மின் இலங்கு திருவுருவும் பெரிய தோளும்
கரிமுனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும்
தன்அலர்ந்த நறுந்துழாய் மலரின் கீழே
தாழ்ந்துஇலங்கு மகரம்சேர் குழையும்காட்டி;
என்நலனும என்நிறையும் என்சிந் தையும்
என்வளையும் கொண்(டு) என்னை ஆளும் கொண்டு;
பொன்அலர்ந்த நறுஞ்செருந்திப் பொழிலி னூடே
புனல்அரங்கம் ஊர்என்று போயி னாரே."[20]

[திருஉரு - திருமேனி. கரி - யானை (குவலயா பீடம்). மகரம் - குண்டலம். நலன் - அழகு. நிறை - அடக்கம். சிந்தை - நெஞ்சம். நறுஞ் செருந்தி - மணம் மிக்க சுரபுன்னை.]

"'புள் ஊரும் கள்வன்' தன்பக்கலிலுள்ள அனைத்தையும் எனக்குக்காட்டி என் பக்கலிலுள்ள எல்லாவற்றையும் கொள்ளை கொண்டு போயினாரே" என்று பேசுகின்றாள். "ஒருவருடைய வீட்டில் கொள்ளையடிக்கப் போன கள்வன் அவருடைய எல்லாச் சொத்துகளையும் பறித்து அவற்றை அவ் வீட்டுக்குடையவரது தலையிலேயே வைத்துச் சுமக்கச்செய்து கொண்டு போமாப் போலே இருக்கின்றது என்னை அடிமையாக்கிக் கொண்ட நிலை!" என்கின்றாள்.

நம்மாழ்வாரும் திருவரங்கத்தைப்பற்றித் தாயார் பாசுரங்களாகப் பதினொரு பாசுரங்களைத் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். ஒரு பாசுரத்தைக் காண்போம் :

---

20. திருநெடுந்.—25.

"கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்;
கண்ணநீர் கைகளால் இறைக்கும்;
சங்குசக் கரங்கள்! என்றுகை கூப்பும்;
தாமரைககண்! என்று தளரும்;
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்(டு) என்னும்?
இருநிலம் கைதுழா இருக்கும்
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறத் தென்செய்கின் றாயே."[21]

[கங்குல் - இரவு. துயில் - உறக்கம்.]

நீரைவிட்டுப் பிரிந்த மீன் துன்புறுவதைப்போல இவள் துன்புறுவாள் என்பதை அறிந்திருந்தும் இங்ஙனே இவளைப் பிரிந்திருத்தல் தகுதியோ என்ற தொனிப்பொருள் இதில் தோன்றுகின்றது. மேற்கூறிய பாசுரங்களிலெல்லாம் உயிர் (சீவான்மா) இறைவனை (பரமான்மாவை) நாடி நிற்கும் தத்துவம் பேசப்பெறுகின்றது.

ஆழ்வார்கள் யாவரும் திருமால் அவதாரங்களில், குறிப்பாக இராம - கிருஷ்ணாவதாரங்களில் அதிக பக்திகொண்டு அநுபவித்துப் பாசுரங்களை அருளியுள்ளார்கள். பெரியாழ்வாருக்கு விஷ்ணுபக்தி என்றாலே கிருஷ்ணபக்திதான். கிருஷ்ணபக்தியே விஷ்ணுபக்தியாகி வைணவம் ஆயிற்று என்று கூறுவதுண்டு.

"மாயோன் மேய
காடுறை உலகமும்."[22]

என்ற தொல்காப்பிய நூற்பா அடியில் கண்ணனை முதலில் வைத்துக் கூறுவதிலிருந்து கிருஷ்ணபக்திக்குத் தமிழ் நாட்டார் அளித்திருந்த முதலிடத்தை ஊகித்துக்கொள்ளலாம். இக் கண்ணன் கதைகளில் தமிழ்நாட்டிற்கே உரிய சில

21. திருவாய். 7. 2:1
21. தொல். பொருள். அகத்—நூற்பா 5.

வரலாறுகளும், வரலாற்று வேற்றுமைகளும் இங்கு வழங்கி வந்தன. அஃதாவது, கண்ணனைக் குறித்துப் பாரதம், விஷ்ணுபுராணம் முதலான இதிகாச புராணங்களில் சான்று பெறாத சில கதைகளும் அதிகக் கதைகளும் தமிழ் மக்களிடையே வழங்கிவந்தன.

கண்ணன் குழலோசை எங்கும் கேட்கின்றது. இயற்கையில் கண்ணன் இசைமயமாய் இருக்கின்றான். நதியும் கடலும் செய்யும் முழக்கங்களும், வண்டும் குயிலும் பாடும் பாட்டுகளும் ஆகியவை யாவும் புல்லாங்குழலின் எதிரொலிகளே என்பது தத்துவம். இவற்றுடன் வேதாந்தத்தின் பனிமூடிய கொடுமுடிகளும், சித்தாந்தத்தின் அன்புக் கடலோடு பல்வேறு தனிக் கடல்களும் புல்லாங்குழல் ஓசையில் விதையிலடங்கிய ஆலமரம் போல் அடங்கியுள்ளன என்பது கிருஷ்ண பக்தர்களின் கொள்கை. அழகுக் கடவுளின் முழுமைநிறைந்த அவதாரம் என்று கண்ணனைப் போற்றுகின்ற பெரியாழ்வார்,

"குன்றாடு கொழுமுகில்போல்
குவளைகள்போல் குரைகடல்போல்
நின்றாடு கணமயில்போல்
நிறமுடைய நெடுமால்."[23]

[கொழுமுகில் - நீர் நிறைந்த மேகம். குவளை - நீலோற்பலம். குரை - ஒலிக்கும். கணமயில் - மயில் கூட்டம்.]

என்றவாறு அப்பெருமானை இயற்கை எங்கும் காண்கின்றார்; விண்ணிலும் மண்ணிலும் காண்கின்றார்; காட்டிலும் நாட்டிலும் காண்கின்றார்; குன்றிலும் கடலிலும் காண்கின்றார்; பூவும் மயிலிலும் காண்கிறார்; இத்தகைய இயற்கையழகு நிறைந்த ஊர்தான் திருவரங்கம் என்பது இவரது கொள்கை.

23. பெரியாழ். திரு. 4. 8:9

"குன்றூடு பொழில்நுழைந்து
கொடிஇடையார் முலைஅணவி
மன்றூடு தென்றல் உலாம்
மயில் அரங்கம் என்பதுவே."[24]

[பொழில் - சோலை. கொடிஇடையார் - கொடி போன்ற இடையையுடைய மகளிர். அணவி - படர்ந்து.]

என்ற அடிகளில் இக்கொள்கை வெளிப்படுவதைக் காண லாம் :

சைவ சமயத்தைச் சார்ந்த நந்தனாருக்கு முக்தியளித்த சிதம்பரத்தைப் போலவே, திருவரங்கம் திருப்பாணாழ் வாருக்கு முக்தி அளித்தது. இருவரும் தாழ்த்தப்பெற்ற குலத்தைச் சார்ந்தவர்கள். யாழையே தெய்வமாகப் போற்றி வந்த பாணர் குலவிளக்காகிய திருப்பாணாழ்வார் அந்த இசையாகவும் இசையின் பயனாகவும் இருக்கும் தெய்வத்தை திருவரங்கப்பெருமானாகக் கண்டார். இசைப்புலமையுடன் இயற்றமிழ்ப் புலமையும் உடைய இவர் அமலனாதி பிரான் என்ற பத்தே பாடல்களைக் கொண்ட சிறு பிரபந்தத்தை இயற்றியுள்ளார்.

"அண்டர்கோன் அணி அரங்கன்
என் அமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக்
காணாவே."[25]

என்ற பாசுரப் பகுதி அரங்கநகர் அப்பன்மீது இவ்வாழ்வார் கொண்டுள்ள ஆராக்காதலை வெளியிடுக்கின்றது. இச் சிறு பிரபந்தத்தில் இவரது வாக்கு நான்மறையின் செம்

24. பெரியாழ். திரு.— 4. 8:9.
25. அமலனாதி பிரான்.—10.

பொருளைச் செந்தமிழால் வெளிவிடுவதாகக் கருதுவர் வைணவ பக்தர்கள்[26]. வேதாந்த தேசிகரும்,

"பாண்பெருமாள் அருள் செய்த
பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று
பரவு கின்றோம்."[27]

என்று உரைத்துப் போயினர். பாதாதிகேச மாலையாகத் திருவரங்கப்பெருமானைப் பாடியுள்ள இதில் பிரணவத்தின் அகரம், உகரம், மகரம் என்ற மூன்று திருவெழுத்துகளுள் முதல் எழுத்தாகிய அகரத்தை முதற் பாசுரத்தின் முதலிலும், இரண்டாம் எழுத்தாகிய உகரத்தை இரண்டாம் பாசுரத்தின் முதலிலும், மூன்றாம் எழுத்தாகிய மகரத்தை மூன்றாம் பாசுரத்தின் முதலிலும் முறையே அமைந்துள்ள சிறப்பு ஈண்டு கருதத் தக்கது. இப் பாசுரங்கள் பத்தும் அன்பாகிய அமுதம் நிரம்பிய பொற்குடங்களாய் விளங்குகின்றன.

வைணவ சமயத்திற்குப் புத்துயிர் அளித்த இராமாநுசரே திருவரங்கக் கோயிலின் நடைமுறைகளை வகுத்தனர் என்று சொல்லப்பெறுகின்றது. இப் பெரியார் பல்லாண்டுகள் வாழ்ந்து வைணவத்தை நாடறியச் செய்தார். சித்தாந் தங்களை நிறுவியவர்களான மத்வர் முதலான ஆச்சார்யர் களும் இந்நகர் போந்து அரங்கனை வழிபட்டுப் பெரும் பேறு பெற்றனர். கிருஷ்ண சைதன்யர், துளசிதாசர் முதலிய வட நாட்டுப் பக்தமணிகளும் அழகிய மணவாளனை வணங்கி அருள் பெற்றனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இசைக் கலைக்குப் புத்துயிர் அளித்த தியாகய்யர் முதலானவர்கள் பல கீர்த்தனங்களால் திருவரங்கத்தைப் போற்றியுள்ளனர்.

---

26. இராமாநுச நூற்.—11.
27. தே.பி.—132.
சில.—2

"அரவணை விரும்பி அறிதுயில் அமர்ந்த
அணிதிரு அரங்கர் மணிதிகழ் முகுந்தர்
அழகிய மணவாளர்"[28]

என்று திவ்வியகவி போற்றியுள்ள திருவரங்கப்பெருமானது திருக்கோயில் வரலாற்றுக் காலத்திலிருந்து நாளிதுவரை வாடாத சிறப்புடன் திருமால் பக்தியின் வளர்ப்பும் பண்ணை யாகத் திகழ்ந்து வந்துள்ளது என்று சொல்லலாம்.

எல்லா ஆழ்வார்களுமே திருவரங்கத்தையும் 'அரவணை யிற் பள்ளிகொள்ளும் மணிவண்ணன் அம்மான்' எம்பெரு மானையும் அநுபவித்தனர். வைணவசீலராகிய வேதாந்த தேசிகரும் திருவரங்கத்தைப்பற்றி மிக அருமையாகப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

ஆராத அருளமுதம் பொழிந்த கோயில்;
அம்புயத்தோன் அயோத்திமன்னர்க்கு அளித்த கோயில்;
தோலாத தனிவீரன் தொழுத கோயில்;
துணையான வீடணற்குத் துணையாம் கோயில்;
சேராத பயன்எல்லாம் சேர்க்கும் கோயில்;
செழுமறையின் முதல்எழுத்துச் சேர்ந்த கோயில்;
தீராத வினையனைத்தும் தீர்க்குங் கோயில்;
திருவரங்கம் எனத்திகழும் கோயில் தானே.[29]

என்ற அவருடைய பாடல் திருவரங்கத்தை நமது மனக்கண் முன் கொண்டுவந்து நிறுத்துகின்றது. 'ஆழ்வார்கள் கண்ட திருவரங்கம் இதுதான்!' என்று சுட்டியுரைக்கும் பாவனை யையும் நாம் உணர்கின்றோம்.

"நாளும் பெரிய பெருமாள்
அரங்கர் நகைமுகமும்

28. திருவரங். கலம்.—7.
29. தே.பி.—81.

பகவானது இச்சையாலே வந்தவை. இவை ஆதிஅம் சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த''[31] வையாதலின், பிறப்பு இறப்பு அற்றவனான இறைவனது தன்மைகளைக் கொண்டவை. ஆகவே, இவை முமுட்சுக்களுக்கு உபாசிக்கத் தக்கவை. ஆவேச அவதாரம் ஒரு செயல் நிமித்தம் ஆன் மாக்களிடத்து ஆவேசித்ததாகும். அது ஸ்வரூப ஆவேசம், சக்தி ஆவேசம் என்று இரு வகையில் பரசுராம, பலராம அவதாரங்களும், இரண்டாவது வகையில் நான்முகன், சிவன், அக்னி, வியாசன், குபேரன் முதலான ஆன்மாக்களில் சக்தியை அதிஷ்டிப்பித்து நிற்கின்ற அவதாரங்களும் அடங்கும். இவை முமுட்சுக்களுக்கு உபாசிக்கத் தகாதவை. ஆனால், போகத் தில் இச்சையுடைய புபூட்சுக்களுக்கு உபாசிக்கத் தக்கனவே. இன்னும் பல கருத்துகள் அவதார இரகஸ்யங்களாகவே உள்ளன. இவ்வவதாரங்கள் யாவும் சேதனர்கள் உய்யும் பொருட்டு ஈசுவரனின் இச்சை காரணமாக ஏற்பட்டவை. ஆகவே, நம்மாழ்வார் இறைவனைக் குறிப்பிடுமிடத்து, பிறப்பு இல் பல் பிறவிப் பெருமான்''[32] என்றும், திருமங்கை யாழ்வார் "பிறப்பிலி''[33] என்றும் பேசுவர். இந்த அவதாரங் களின் பலன் அடைந்தாரைக் காக்கை, அவர்களின் விரோதி களைப் போக்குகை, வைதிக தர்மத்தை நிலை நிறுத்துகை ஆகியவையாகும்.[34].

இந்த அவதாரங்கள் யாவும் ஆழ்வார் பாசுரங்களில் குறிப்பிடப் பெறுகின்றன. இவற்றுள் இராம, கிருஷ்ண அவ தாரங்கள் அதிகமாகவும், வாமனம், நரசிம்மம், வராகம் முதலியவை அவற்றுக்கு அடுத்துக் குறைவாகவும் குறிப்பிடப் பெற்றுள்ளன. முன்னவை மக்களிடையே தோன்றி அதிகக் கால அளவு பழகினமையே இதற்குக் காரணமாகக் கொள்ள

31. ஷை—3. 5:5.
32. ஷை—2. 9:5.
33. பெரி. திரு.—3. 7:8.
34. ப. கீ.—4:8.

லாம். இதன் காரணமாக இறைவனின் மங்கள குணங்களை மக்கள் அநுபவிப்பதற்கு வாய்ப்புகள் மிக்கு இருந்தன. ஆகவே, ஆழ்வார்களும் அவற்றில் அதிகமாக ஈடுபட்டுப் பேசுகின்றனர்.

அந்தர்யாமித்துவம்: சேதனர்களின் உள்ளே புக்கிருந்து எல்லாச் செயல்கட்கும் தான் ஏவுபவனாக இருப்பதோ டன்றி, அவர்கட்குத் தியான ருசி[35] பிறந்தபோது தியானத் திற்கு உரியவனாதற்காகவும், அவர்களைக் காப்பதற்காக வும், அழகே வடிவெடுத்தாற் போன்ற மங்களகரமான திரு மேனியுடன் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்ற வனாய், பெரிய பிராட்டியாரோடு கட்டை விரல் அளவாக ஒவ்வொருவர் இதய கமலத்துக்குள்ளே எழுந்தருளியிருக்கும் இருப்பே இந் நிலையாகும். இந்நிலையை ஆழ்வார்,

"யான்ஒட்டி என்னுள்
இருத்துவன் என்றிலன்
தான்ஒட்டி வந்துஎன்
தனிநெஞ்சை வஞ்சித்து
ஊன்ஒட்டி நின்றுஎன்
உயிரில் கலந்து"[36]

என்றும்,

"யாது அவங்களும் சேர்கொடேன் என்று
என்னுள் புகுந்திருந்து
தீதுஅவம் கெடுக்கும் அமுதம்"[37]

என்றும்,

---

35. ருசி—பாவச் செயல்களையோ புண்ணியச் செயல் களையோ அறிந்தே செய்வதற்குக் காரணமாயுள்ள சுவை.
36. திருவாய்—1. 7:7.
37. ஷை—2. 7:1.

"வெள்ளைச் சுரிசங்கோடு ஆழிஏந்தி
தாமரைக் கண்ணன்என் நெஞ்சினூடே
புள்ளைக் கடாகின்ற ஆற்றைக்
காணீர்"[38]

என்றும் தம் பாசுரங்களில் குறிப்பிடுவர். இவற்றிற்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்தாற்போல்,

கல்லும் கனைகடலும்
வைகுந்த வான்நாடும்
புல்லென்று ஒழிந்தனகொல்
ஏபாவம் வெல்ல
நெடியான் நிறங்கரியான்
உள்புகுந்து நீங்கான்
அடியேனது உள்ளத்து அகம்[39]

*[கனைகடல் - ஒலிக்கும் கடல் (இங்கு திருப்பாற் கடல்); புல் என்று - அற்பமானதாக; ஏபாவம் - ஐயோ பாவம்]*

என்று பின்னும் பேசுவர்.

அர்ச்சாவதாரம் : அர்ச்சாவதாரம் என்பது,

"தருமருகந்தது எவ்வுருவம்
அவ்வுருவம்"[40]

என்ற பொய்கையார் பாசுரப்படி அன்பர்கள் எதைத் தனக்குத் திருமேனியாகக் கொள்கின்றனரோ அதனையே இறைவன் தனக்கு வடிவமாகக் கொண்டுள்ள நிலையாகும். இந்நிலையில் இறைவன் இன்ன இடத்தில் இன்ன காலத்தில் இன்னாரிடத்தில் தோன்றி சந்நிதி பண்ணவேண்டும் என் கின்ற நியமமில்லாதபடி தான் விரும்பிய எந்த இடத்திலும், எந்தக் காலத்திலும் எவரிடத்திலும் தோன்றிச்சந்நிதிபண்ணி

38. ஷை 7. 3: 1.
39. பெரிய திருவந்.—68.
40. முதல் திருவந்.—44.

நீராட்டம், தளிகை, இருப்பு முதலிய எல்லாச் செயல்களை உடையவனாகக் கொண்டு திவ்விய தேசங்களிலும், அன்பர்களின் திருமாளிகைகளிலும், எழுந்தருளியிருப்பான். உலகியலில் மண்டியிருப்போருக்குத் தன் பக்கல் ருசி உண்டாக்குதலும், ருசி பிறந்த பிறகு தன்னைத் துதிப்பவர்களுடைய கண்ணுக்கும் நெஞ்சுக்கும் இனிதாம்படி போக்கியத்திற்கு இடமாயிருத்தலும், தன்னை உபாயமாகப் பற்றும் அளவில் எல்லா உலகினரும் உபாயமாகப் பற்றுதற்குத் தகுதியாயிருத்தலும் பரமபதத்தில் போய் அநுபவிக்க வேண்டாமல்,

"அண்டர்கோன் அணிஅரங்கன்
என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக்
காணாவே"[41]

என்று திருப்பாணாழ்வார் அநுபவித்தவாறு அநுபவிக்கத் தக்கதாக இருத்தலும் இந்த அர்ச்சாவதாரத்தில் முற்றுப் பெற்றிருக்கும்.

எல்லா ஆழ்வார்களும் இந்த அவதாரத்தில்தான் அதிகமாக ஈடுபட்டுப் பேசுவர். சுருங்கக் கூறினால் நாலாயிரத்தின் பாசுரங்கள் யாவும் இந்த அவதாரத்தைப் பற்றியனவே. திரு அரங்கத்தில் அழகிய மணவாளனின் திருவுருவத்தில் ஈடுபட்ட தொண்டரடிப்பொடிகள்,

"இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்"[42]

என்று கூறிப் போந்தார். பக்திசாரர் என வழங்கப் பெறும் திருமழிசையாழ்வார் திருக்குடந்தை ஆராவமுதனிடம் ஓர் உரையாடலையே நிகழ்த்துகின்றார். எம்பெருமானின் சயனத் திருக்கோலத்தில் ஈடுபட்டு,

---

41. அமலனாதி பிரான்—10.
42. திருமாலை - 2;

"நடந்த கால்கள் நொந்தவோ?
நடுங்க ஞாலம் ஏனமாய்
இடந்த மெய் குலுங்கவோ?
விலங்கு மால் வரைச்சுரம்
கடந்த கால் பரந்தகா
விரிக் கரைக் குடந்தையுள்
கிடந்தவாறு எழுந்து இருந்து
பேசு; வாழி"[43]

[ஞாலம் - பூமி; ஏனம் - பன்றி; மெய் - உடல்; விலங்கு தடையாகவுள்ள; மால்வரை - பெரிய மலை; சுரம் - பாலை நிலம்; குடந்தை - கும்பகோணம்]

என்று சயனித்திருப்பதற்குக் காரணம் வினவுகின்றார். இவரது பக்திப்பெருக்கில் திளைத்த எம்பெருமானும் இவருக்கு மறுமொழி தருவான்போல் எழுந்திருக்க முயல, அந்த அழகில் "சிறுமாமனிசரின்"[44] கண் எச்சில் படும் என்று அஞ்சிய ஆழ்வார் உடனே "வாழி, கேசனே!" என்று கூற பெருமாளும் தலையைத் தூக்கியபடியே இருந்து அவருக்குச் சேவை சாதித்தாராம். அந்நிலையிலேயே இன்றும் சேவை சாதித்து வருகின்றார். திருக்குறுங்குடி நம்பியின் பேரழகைக் கண்டு பராங்குச நாயகி, பரகால நாயகி இவர்களின் நெஞ்சு பறிபோனதை அவ்வவ்வாழ்வாரின் பதிகம் நன்கு விளக்கு கின்றது. இந்த அவதாரத்தை மங்களா சாசனம் செய்வ தற்காகவே அவதரித்த திருமங்கையாழ்வார் நூற்றெட்டு திவ்விய தேசங்களில் வடக்கே வதரியிலிருந்து தெற்கே திருக்குறுங்குடி வரையிலுள்ள எண்பத்தாறு திவ்விய தேசங் களில் சேவை சாதிக்கும் எம்பெருமான்களின்மீது பாடி யுள்ளார்.

இறுவாய் : இக்கூறியவற்றால் ஆழ்வார்கள் வணங்கும் கடவுள் நாராயணனே என்பதும், அவர்கள் "மறந்தும் புறந்

43. திருச்சந்தம்—61.
44. திருவாய்—8.10:3.

தொழா மாந்தர்''[46] என்பதுவும், ''மற்றும் ஓர் தெய்வம் உளது என்று இருப்பாரொடு உற்றிலர்''[47] என்பதுவும், அவர்கள் வணங்கும் நாராயணன் ஐந்து நிலைகளில் இருந்துகொண்டு சேதநர்களை உய்விப்பான் என்பதுவும் இந்த ஐந்து நிலைகளில் ஆழ்வார்கள் இறைவனைப் பாடி யிருந்தாலும், அர்ச்சையில்தான் அவர்கள் அதிகமாக ஈடு பட்டிருந்தனர் என்பதுவும், அவர்களது ஈடுபாட்டிற்கு 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' என்னும் தமிழ் மறை சான்றாக நிற்கின்றது என்பதுவும் நாம் அறியக்கிடக்கின்றன.

---

45. ஷை 5·5; பெரி 9·5.
46. நான் திருவந்.—68.
47. பெரி திரு.—8. 10:3; ஒப்பிடுக: திருச்சந்த—89, திருவாய். 8. 4:3.

## 4. நலம் அந்தம் இல்லதோர் நாடு*

**ஆழ்வார்கள் கூறும் வீடு :** வீடு ஒரு தனியுலகம் என்பது வைணவசமயக் கோட்பாடு. இவ்வுலகம் துன்பங்கட்கு அந்தமில்லாமல் இருப்பதுபோல வீட்டுலகம் இன்பங்கட்கு அந்தமில்லாதிருப்பது. நம்மாழ்வார் இதனை,

> "புலனைந்து மேயும்
> பொறியைந்தும் நீங்கி
> நலமந்தம் இல்லதோர்
> நாடு புகுவீர்"[1]

என்று குறிப்பிட்டு அவ்வுலகத்திற்குச் செல்லுமாறு ஆற்றுப் படுத்துகின்றார். இங்கு 'நலம் அந்தம் இல்லதோர் நாடு' என்பதில் 'அந்தம் இல்லது' என்பதை நலம், நாடு என்ற இரண்டிற்கும் சேர்த்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அந்தம் இல்லதோர் நாடு - அழிவில்லாத ஒப்பற்ற நாடு. நலம் அந்தம் இல்லதோர் நாடு - அழிவில்லாத இன்பத்தை யுடைய நாடு. நாடும் அழிவில்லாதது; அதனையடைந்தார்க்கு உண்டாகும் இன்பமும் அழிவில்லாதது என்பது அறியத் தக்கது. "அந்தமில் இன்பத்து அழிவில் வீடு"[2] என்பர் பரிமேலழகர். இதனையே ஆழ்வாரும் "வைகுந்தம்"[3]

---

*காஞ்சி தேசிக கைங்கரிய சபை மலரில் (1970) வெளி வந்தது.

1. திருவாய், 2. 8;4.
2. குறள்—பரி. உரை. அறத்துப்பால் உரைப்பாயிரம்.
3. திருவாய்—2. 2:11; 2. 5:11; 4. 4:11; 4. 7:11.

"இலங்குவான்",[4] "பொன் உலகு"[5] என்று பலபடியாகக் குறிப்பிடுவர்.

இந்த உடலை விட்டுப் பிரியும் ஆன்மா கதிரவன் மண்டலத்தைப் பிளந்துகொண்டு அவ்வழியே சென்று பரமபதம் என்னும் நாட்டை அடைவதாகவும், அங்கே ஆராவமுதத்தை அநுபவிப்பதாகவும், அவ்விடத்தை விட்டு ஒரு நாளும் திரும்பி வருவதில்லையாகவும், அதுவே வைகுந்தம் என்பதாகவும் திருமங்கையாழ்வார் குறிப்பிடுவர்.

> ''தேர்ஆர் நிறைகதிரோன்
> மண்டலத்தைக் கீண்டுபுக்கு
> ஆரா அமுதம்
> அங்குஎய்தி அதினின்றும்
> வாராது ஒழிவது
> ஒன்று உண்டே[6]''

என்ற அவரது திருவாக்கால் இஃது அறியப்பெறும். மேலும் அவர்,

> "மன்னும் கடுங்கதிரோன்
> மண்டலத்தின் நன்னடுவுள்
> அன்னதோர் இல்லியின்
> ஊடுபோய் வீடென்னும்
> தொல்நெறிக்கண் சென்றாரைச்
> சொல்லுமின்கள்''[7]
>
> [இல்லி - துவாரம்]

என்ற பெரிய திருமடலிலும் வற்புறுத்துவர். திருமழிசையாழ்வாரும்,

---

4. ஷை—3. 8:11.
5. ஷை—6. 7:11.
6. சிறிய திருமடல்—கண் 7, 8.
7. பெரிய திருமடல்—கண்ணி 16, 17.

"சண்ட மண்ட லத்தி னூடு
சென்று வீடு பெற்றுமேல்
கண்டு வீடு இலாத காதல்
இன்பம் நாளும் எய்துவீர்"[8]

[சண்டமண்டலம் - சூரிய மண்டலம்]

என்று கூறுவர்.

"இருள்அகற்றும் எரிகதிரோன் மண்டலத்தூடு
ஏற்றிவைத்து ஏணி வாங்கி
அருள்கொடுத்திட்டு அடியவரை ஆட்கொள்வான்"[9]

என்று இவ்வீட்டுலகைக் காட்டுவர் பெரியாழ்வார். வீட்டுலகைப்பற்றிய ஆழ்வார்களின் கருத்துகள் யாவும் உபநிடக் கருத்துகளுடனும் வைணவ ஆகமங்களின் கருத்துகளுடனும் ஒத்துள்ளமை கருதத்தக்கது. ஆன்மா வீட்டுலகம் செல்லும் நெறியை வைணவ சமயம் 'அர்ச்சிராதி மார்க்கம்' என்று குறிப்பிடும்.

**வேதாந்த தேசிகரின் விளக்கம் :** ஆழ்வார் பிரபந்தங்களிலும் உபநிடதங்களிலும் ஆழங்கால் பட்ட வேதாந்த தேசிகர் இதனைத் தெளிவாக விளக்குவர். மோட்சத்தை அடையும் ஆன்மா, இவ்வுடலை விட்டு வெளியேறி சூக்கும உடலுடன் செல்லுங்கால் அக்னி, சுக்கிலபட்ச தேவதை, உத்தராயண தேவதை, (வர்ஷ) மழைத் தேவதை, வாயு தேவதை, கதிரவன், திங்கள், மின்னலின் தேவதை, வருணன், இந்திரன், பிரசாபதி என்ற தேவர்கள் வழிகாட்டி நடத்திச் செல்லுங்கால் தான் மேற்கொண்ட வினையின் பலனாகவும், கடைப்பிடித்த வழியின் மகிமையாலும் சில இன்பங்களைப் பெற்று இறுதியில் வைகுந்தத்தை அடையும். அங்கு ஆன்மா இடைவிடாது இறையநுபவத்தைப் பெற்று அதிலேயே

8. திருச்சந்த—67.
9. பெரியாழ். திரு—4. 9:3.

மண்டிக்கிடக்கும்.[10] திருநாட்டிற்குச் செல்லும் ஆன்மாவுக்கு நடைபெறும் பணிவிடைகளைச் "சூழ்விசும்பு"[11] என்னும் திருவாய் மொழியில் நம்மாழ்வார் பரக்கப் பேசுவது காண்க. இங்ஙனம் ஆழ்வார்கள் குறிப்பிடும் திருநாட்டிற்குச் செல்லும் வழிப்படிகளை தூப்புல் புலவர் வகுத்துக் காட்டுவர். அதனை ஈண்டுக் காண்போம்.

**மடைப்பள்ளி வந்த மணம் :** இந்த உலகத்தில் மிக்க உயரத்திவமைந்த இடத்தை அடைவதற்குப் படிகளை அமைத்து அவற்றின் வழியாக ஏறிச் செல்வதை நாம் அறிவோம். அறிவியல் வளர்ந்துள்ள இக்காலத்தில் மின் வரிசையால் இயங்கும் சாதனத்தின்மூலம் விரைவாக மேலேறுகின்றோம். அங்ஙனமே பரமபதம் என்னும் வீட்டு உலகினை அடைவதற்குரிய ஒன்பது நிலைகளைப் படிகளாகக் கற்பித்து விளக்குவர் வேதாந்த தேசிகர். அவர் கூறும் படிகள் : (1) தத்துவங்கள் முதலியவற்றை வகுத்து அறிதல்; (2) மனம் தளர்தல்; (3) உலக இன்பத்தில் ஆசை அறுதல்; (4) தம் தீவினைகளின் மிகுதியால் இனி வரக்கிடக்கும் நரக அநுபவம் முதலிய இடர்கட்கு அஞ்சுதல்; (5) எம்பெருமான் வீடு பேற்றினை அருள்வதற்குக் காரணமான வழியைக் கடைப்பிடித்தல்; (6) இவ்வுடலினின்றும் ஆன்மா வெளியேறுதல்; (7) அர்ச்சிராதி மார்க்கத்தில் செல்லுதல்; (8) வைகுந்தம் என்னும் திவ்விய உலகினை அடைதல்; (9) அங்கு எல்லாம் வல்ல இறைவனைக் கண்ணாரக் கண்டு களித்து அநுபவித்து அந்தப் பேரின்பத்திலேயே மூழ்கிக் கிடத்தல். இந்தத் தத்துவங்கள் யாவும் இடைப்பிள்ளையாகி வந்த எம்பெருமானால் உரைக்கப் பெற்றவையேயாகும். இவற்றின் கருத்தை எம்பெருமானார் (இராமாநுசர்) தமது மாபாடியத்தில் தெளிவாக்கியுள்ளார். இவற்றையெல்லாம் இராமாநுசருடைய திருமடைப்பள்ளி

10. தே. பி.—67, 68.
11. திருவாய். 10. 9.

யில் அந்தரங்கத் தொண்டு செய்து எல்லாப் பொருள்களை யும் ஐயம் திரிபறப் பெற்றவர் கடாம்பி யாச்சான். அவர் வழியாக வந்தது இவண் கூறப்பெறும் சம்பிரதாயவழி. எனவே,

> "மடைப்பள்ளி வந்த மணம் எங்கள்
> வார்த்தையுள் மன்னியதே"[12]

என்று உள் குழைந்து பணிவன்புடன் உரைப்பர் தூப்புல் புலவர். திருவரங்கத்தில் எம்பெருமானாரின் திருமடைப் பள்ளியில் அடிமைத் தொழில் செய்தமையால் கடாம்பி யாச்சான் 'மடைப்பள்ளி யாச்சான்' என்ற திருநாமத்தாலும் வழங்கப்பெறுவர்.

வானேறும் வழிப்படிகள் : இனி, பரமபதம் செல்வதற்கு தேசிகர் கூறும் "வானேறும் வழிப்படிகளை" ஒவ்வொன் றாகக் காண்போம்.

முதற்படி : விவேகம் என்பது, தத்துவங்களைப்பற்றி விபரீத ஞானத்தைப் பெற்று கொடிய வினைகளை மேன் மேலும் செய்து அஞ்ஞானமாகிய இருளில் மூழ்கிப் புலன்களால் துய்க்கப்பெறும் இன்பம் ஒன்றையே குறிக் கோளாகக்கொண்டு இவ்வுலக வாழ்வாம் பெருஞ்சேற்றில் மூழ்கிக்கிடக்கும் சீவான்மா வேத வேதாந்தங்களின் உபதேசத் தால் விவேகத்தைப் பெறுகின்றது. இதனால் சீவான்மா சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்று தத்துவங்களின் வேற்றுமைகளைப்பற்றிய தெளிவான அறிவைப் பெறு கின்றது. மேலும், அது சீவான்மா பரமான்மா தொடர்பை அறிகின்றது; தான் அடிமை என்பதையும், இறைவன் ஆண்டான் என்பதையும், இறைவனுடைய இன்பத் திற்காகவே தான் நிலை பெற்றிருப்பதையும் உணர்கின்றது. இதனைத் தேசிகர்,

---

12. தே. பி.—133.

"அருவுருவா னவையனைத்தும் அறிவா ரேனும்
அருங்கலைகள் கற்றுரைக்க வல்லா ரேனும்
தருமவழி அழியாமல் காப்பா ரேனும்
தனி மறையின் தாற்பரியம் தருவா ரேனும்
இருவினையின் ஒழுக்கத்தால் ஏவல் ஓராது
இங்கேநாம் சிறையிருந்த ஈனம் தீர்க்கும்
திருமகளார் பிரியாத தேவன் திண்ணம்
தேறாதார் திண்படியில் ஏறா தாரே"[13]

[தாற்பரியம் - கருத்து]

என்று கூறுவர். எம்பெருமானாகிய இலக்குமி நாராயணனது சொரூபம், சுபாவம் முதலியவற்றை அறியாவிடின் வீட்டுலகம் செல்லும் படியில் ஏறமுடியாது.

இரண்டாவது படி : சீவர்கள் இதுகாறும் தம் வாணாளை வீணாளாகக் கழித்தமைக்கு வருந்துதலாகும். எம்பெருமான் சாத்திரங்கள் வாயிலாக இட்ட கட்டளையை அஞ்ஞானத்தால் மீறி நடப்பவர்கள் கொடிய நரகத்தை அநுபவிப்பதை ஆராய்ந்து பார்த்து இதுகாறும் தாமும் இவ்வுலக வாழ்க்கையில் உழன்றமையை நினைத்து வெறுத்து கழிந்த நிலைமைக்கு வெட்கமுறுவர்; பின் வேதாங்கங்களில் கூறியுள்ள வழியைக் கடைப்பிடிக்க விரைவர். எடுத்துக் காட்டாகத் திருமங்கை யாழ்வார்,

"மறந்தேன் உன்னைமுன்னம்; மறந்த
மதிஇல் மனத்தால்
இறந்தேன் எத்தனையும்; அதனால்
இடும்பைக் குழியில்
இறந்தே எய்த்து ஒழிந்தேன்"[14]

[இறந்தேன் - மிகவும் கெட்டேன்; இடும்பை - துன்பம்; எய்த்து - இளைத்து.]

---

13. ஷை—135.
14. பெரி. திரு.—6. 2:2.

என்று தன் நிலைக்கு வருந்திக் கூறுவதைக் காண்க. இவ்வுலக இன்பத்தின் சிறுமையைத் தேசிகர்,

"வான்பட்ட மன்னிருளின் மங்கும் ஆறும்
மறித்துஒருகால் எனையூழி சென்றால் அன்றுஓர்
ஊன்பட்ட உடல்ஆழி வினையொழுக்கில்
ஒருகரையும் காணாதே ஒழுகும் ஆறும்
தேன்பட்ட விடம்போலத் தித்திக் கின்ற
சிறுபயனே உறுபயன் என்று அருந்தும் ஆறும்
தான்பட்ட படியிந்நேர் தானே கண்டு
தளர்ந்திடுமேல் வளர்ந்திடுமே தக்கஆறே"[15]

[வான் - மூலப்பிரகிருதி; மன்இருள் - வலிய தமஸ்; ஊழி - யுகம்; அன்று - படைப்புக்காலம்; வினை ஆழி ஒழுக்கு - கர்மங்களாகிய கடல் வெள்ளம்; உறுபயன் - தக்க பயன்; அருந்தும் - அநுபவிக்கும்; ஆறு - உபாயம், வழி]

என்று குறிப்பிடுவர். தன் நிலையைத் தானே ஆராய்ந்து பார்த்து மனம் தளர்ந்தால், தக்க வழியைக் கடைப்பிடிக்க நேரிடும்.

உலக வாழ்க்கையிலுள்ள ஆசையை அறுத்தல் மூன்றாவது படியாகும். இந்தக் கரும பூமியில் மிகச் சிறந்தவராக நாம் மதிக்கும் பலர் துய்க்கும் பலன் முழுவதும் இன்பமாகவே இருப்பதில்லை; அதன் நடுவில் துன்பமும் கலந்தே காணப் பெறுகின்றது. இதனை ஆராய்ந்து பார்ப்போருக்கு இந்த உலக வாழ்வில் வெறுப்புத் தட்டும். திருமங்கையாழ்வார் ஒரு தடவைக்கு ஒன்பது தடவையாக,

"வேண்டேன் மனைவாழ்க்கையை
விண்ணவர் மேயவனே"[16]

என்று மனம் வெறுத்துக் கூறுவதைக் காண்க.

---

15. தே.பி.—137.
16. பெரி. திரு—6. 1:1 முதல் 9முடிய ஒப்பிடுக: ஷ—11. 8.

"தந்திரங்கள் அளவிலராய்த் தனத்தான் மிக்க
தாம்வேந்தர் தொழவையம் ஆண்டார் மாண்டார்;
சந்திரனும் சூரியனும் வீயும் காலம்
தாரகையின் வடமும்அற்றுத் தனிவான் ஆளும்
இந்திரனும் ஏறுஉயர்த்த ஈசன் தானும்
ஈரிரண்டு முகத்தானும் இல்லா அந்நாள்
நம்திருமால் நிலைகாட்டார் நாகம் எல்லாம்
நரகுஎன்று நற்பதமே நாடு வாரே"[17]

[தந்திரங்கள் - சேனைகள்; தார் - மாலை; தாரகை- நட்சத்திரம்; வடம் - வரிசை; ஏறு - இடபம்; ஈரிரண்டு முகத்தான் - நான்முகன்; நாகம் - உலகம்; நல்பதம் - வைகுந்தம்]

என்று தேசிகர் சுவர்க்கமும் நரகத்தை யொத்தது என்று கூறு வதைக் காண்க. மகாப் பிரளயத்திற்குப் பிறகு அழியாமல் நிற்பது பரமபதம் ஒன்றே யாகும். அறிஞர்கள் இந்த உண்மையை உணர்ந்து இவ்வுலக இன்பத்தை வெறுத் தொதுக்குவர்; அதன்மேலுள்ள ஆசையை வேருடன் களைய முற்படுவர்.

சீவர்கள் வினைப்பயனுக்கு அஞ்சுதல் நான்காவது படி யாகும். இவ்வுலகப் பற்றிலிருந்து விடுபடுவதற்குச் சாதன மான தர்மங்கள் "நிவ்ருத்தி தர்மங்கள் (நீக்கத் தன்மைகள்) எனப்படும். இவற்றை மேற்கொள்வோர் முமுட்சுகளுடன் கலந்து பரிமாறி தீய வழிகளினின்றும் விலகுவர். இங்ஙனம் விலகி நல்வழியில் ஈடுபடுவதைத் தேசிகர்,

"வந்தனபோல் வருவனவும் அனந்தம் ஆகி
மாளாத துயர்தருவல் வினைநெ ருப்புக்கு
இந்தனமாய் எண்ணிறந்த காலம் எல்லாம்
இன்னமும்இம் பவக்குழிக்கே இழியா வண்ணம்

17. தே.பி.—139.

வெந்ததொரு குழவியைநல் குமரன் ஆக்கும்
வெறித்துளவ வித்தகனார் விதியே கொண்டார்
பந்தனமாம் அவையனைத்தும் மாறு கைக்குப்
பழமறையின் பரமநெறி பயிலு வாரே''.[18]

[அனந்தம் - அளவிறந்தவை; இந்தனம் -விறகு; பவம் - சம்சாரம்; இழியா - விழுந்து துன்புறாமல்; வெறி - மணம்; விதி - உபாயம் (பக்தி, பிரபத்தி) பந்தனம் - பிணிக்கும்; பாறுகை - அழிதல்; பயிலுவார் - ஈடுபடுவர்]

என்று குறிப்பிடுவர். வினைகளாகி நெருப்பு சேதநர்களை விறகாகக்கொண்டு சம்சாரமாகிய படுகுழியில் எரித்துக் கொண்டிருப்பதைக் காணும் கூர்த்த மதியினர், இந் நிலைக்கு அஞ்சி பக்தி, பிரபத்தி ஆகியவற்றுள் ஒன்றில் ஈடுபடுவர் என்பதை ஈங்குக் குறிப்பிட்டவாறு காண்க.

கருக்குழியில் வதிதல் முதலிய சம்சாரத் துக்கங்களை ஒழிக்கக் கருதும் அடியார்கள் பகவதநுபவம் வளர்ந்துவரக் கூடிய பக்தி யோகத்தைக் கடைப்பிடிப்பர். அதற்கு ஆற்றல் அற்றவர்கள் எம்பெருமானுடைய திருவடிகளில் சரணா கதியை மேற்கொள்வர். இங்ஙனம் உபாயத்தைச் செய்து முடித்த பின்னர் எம்பெருமான் தமக்கு நன்மைகளைச் செய் வான் என்று நம்பி அவன் கருணையை நோக்கி நிற்பது ஐந்தாவது படியாகும். பிரபத்தியால் சகல பாவங்களும் நீங்குவதைத் தேசிகர்,

---

18. ஷை —14. [பாரதப் போரில் துரோணரின் மகன் அசுவத் தாமன் ஏவிய அபாண்டவாத்திரத்தால் உத் தரையின் கருப்பத்தில் வெந்து கரியாகிய குழந் தையைக் கண்ணன் பரீட்சித்து என்னும் அழகிய அரசகுமரனாக்கிய வரலாறு மூன்றாம் அடியில் குறிக்கப்பெற்றது.]

"முன்செய்த வினைத்திரளின் முளைத்தது அன்றி
முற்றுள்ள முதல்அரிந்து முளைத்த கூற்றில்
தன்செய்த திருவருளால் இசைவு பார்த்துத்
தழல்சேர்ந்த தூலமெனத் தானே தீர்த்துப்
பின்செய்த வினையில்நினைவு ஒன்றாது ஒன்றும்
பிழைபொறுத்து வேறுளது விரகால் மாற்றும்
என்செய்ய தாமரைக்கண் பெருமான் எண்ணம்
எண்ணாதார் எட்டுஇரண்டும் எண்ணா தாரே"[19]

[வினைத்திரள் - பாபக் கூட்டம்; முளைத்தது - பலன் கொடுக்கத் தொடங்கியது; முளைத்த கூறு - பலன் கொடுக்கத் தொடங்கிய பகுதி; திருவருள் - கருணை; இசைவு - அங்கீகாரம்; தழல் - நெருப்பு; தூலம் - பஞ்சு; பின் செய்த- பிரபத்திக்குப் பின் செய்த; நினைவு ஒன்றாது - தெரியாமல்; பிழை - பாபம்; எட்டு - திரு மந்திரம்; இரண்டு - துவயம், சரம சுலோகம்.]

என்று கூறுவர். நம்முடைய வினைகள் சஞ்சிதம், பிராரப்தம் என்று இருவகைப்படும். பின் ஒருகாலத்தில் பலன் கொடுப்பதற்காகத் தனியாகக் குவிந்து கிடப்பது சஞ்சிதம் என்று வழங்கப்பெறும். பலன் கொடுக்கத் தொடங்கிய பகுதி பிராரப்தம் என்று பேசப்பெறும். பக்தியோகம் சஞ்சித கருமங்களைமட்டிலும்போக்கும். பிரபத்தி சஞ்சிதத்தைப் போக்குவதுடன், பிராரப்தத்தில் இவ்வுடல் உள்ளவரையில் பலனை அநுபவிக்கவேண்டிய கருமங்களைத் தவிர, எஞ்சியுள்ளவற்றையும் அனல் பஞ்சை எரிப்பது போல் நீக்குகின்றது; பிரபத்திக்குப் பிறகு அறியாமல் செய்யும் பாவங்களை இவனிடம் சேராதபடி நீக்கிவிடுகிறது; மனப்பூர்வமாகச் செய்ய நேர்ந்த பாவங்களையும் பிராயச்சித்தாதிகளைக்கொண்டு ஒழித்துவிடுகின்றது. இங்ஙனம் திருவருள் புரியும் எம்பெருமானின் குளிர்ந்த திருவுள்ளப் போக்கை அறியாதவர்கள் மூன்று மந்திரங்களையும் அறியாதவர்களாவர்.

---

19. ஷி—143.

உறையினுள் கிடக்கும் வாள் ஆற்றலற்றுத் தன் செயலை நிறைவேற்ற முடியாதிருப்பதுபோல் சீவான்மாவும் வினையினால் வந்த இந்த உடலினுள் இருக்கும் வரையிலும் தனக்கு இயல்பாகவுள்ள ஞானம் சுருங்கப்பெற்றுத் தனக்குரிய இறையடிமையைச் செய்ய ஆற்றலின்றிக் கிடக்கும். உபாயத்தைக் கடைப்பிடித்த சீவான்மாவுக்கு எம்பெருமான் வீடுபேறு அளிக்கத் திருவுள்ளங் கொண்டு, இவ்வுடலாகிய சிறையினின்றும் அவ்வான்மாவை வெளியேற்றுகின்றான்.

> "சரணமாகும் தனதுதாள் அடைந்
> தார்க்கு எலாம்;
> மரணமானால் வைகுந்தம்
> கொடுக்கும் பிரான்"[21]

என்று நம்மாழ்வார் கூறுவது காண்க. மரணம் ஏற்படுங்கால் சீவனுடைய செவி, வாய், கண், மூக்கு, உடல் ஆகிய ஞானேந்திரியங்களையும்; வாய், கை, கால், பாயு, உபத்தம் ஆகிய கர்மேந்திரியங்களையும் மனத்துடன் சேர்க்கின்றான். பிறகு அந்த மனத்தைப் பிராணவாயுவில் ஒன்று கூட்டுகின்றான். அதன் பின்னர் அந்தப் பிராணவாயுவை சீவான்மாவிடத்துச் சேர்க்கின்றான். இந்த நிலையைப் பெற்ற சீவான்மாவை ஐந்து பூதங்களுடன் கூட்டுகின்றான். இதன் பிறகு இதனால் சீவான்மாவுக்கு உண்டான களைப்பு நீங்குமாறு அதனைத் தன்னோடு அணைத்துக்கொள்கின்றான். பிறகு பதினொரு துவாரம் உள்ளதாய்[22] இதுகாறும் சீவனுக்குத் துன்பத்தைத் தந்து நின்ற உடலாகிய சிறையினின்றும் அர்ச்சிராதி மார்க்கத்திற்கு முன்வாயிலாகிய பிரம்மரந்திரத்தின் வழியாய் (தலையில் உச்சியிலுள்ளது) சீவான்மாவை வெளியேற்று

---

20. ஷை—144.
21. திருவாய்.—9. 10:5.
22. கண் 2, காது 2, மூக்கு 2, வாய் 1 மலவாய் 1, சிறு நீர் வாய் 1, கொப்பூழ் 1, உச்சித்துவாரம் (பிரம்மரந்திரம்) 1.

கின்றான்,[23] இங்ஙனம் சீவான்மா உடலினின்றும் வெளி யேறுவதே ஆறாவது படியாகும்.

அர்ச்சிராதி மார்க்கத்தில் சீவான்மா செல்லுதல் ஏழாவது படியாகும். சீவனுடைய உடல் ஐந்து பூதங்களாலாகியது. அவனது முதுகின் மேற்புறத்தில் தூண் போன்ற மூன்று எலும்புகள் ஒன்றுகூடி நிற்கின்றன. அவற்றுக்கு 'திரிஸ் தூணம்' எனப் பெயர் வழங்கும். மரண காலத்தில் ஈசுவரன் அவற்றைக் கடைந்து அங்கிருந்து ஐந்து பூதங்களின் சூக்கும மான கூறினை எடுத்து அதில் சீவனைச் சேர்க்கின்றான். இங்ஙனம் கடைதலே 'திரிஸ்தூண க்ஷேபம்' எனப்படும். இவ்வாறு கடையுங்கால் சீவனுக்கு உண்டாகும் வேதனை யைப் போக்குவதற்காக அந்தச் சீவனை ஈசுவரன் தன்மீது அணைத்துக் கொள்ளுகின்றான். அதன் பின்னர் வீடு பேற்றிற்கு உரியவனான சீவன் தூல உடலினின்றும் புறப் பட்டதும் இவனை அங்கியம் கடவுள் முதலான தேவதைகள் எதிர் சென்று வரவேற்று வழி நடத்திச் சென்று தத்தம் எல்லை வரையில் கொண்டு போய் விடுவர். இங்ஙனம் பிரகிருதி மண்டலத்தைக் கடந்து சென்றவர்கள் பின்னர் சம் சாரமாகிய நரகத்தில் துன்புறார். வழியில் தேவதைகளால் செய்யப்பெறும் பணிவிடைகளால் சம்சாரத்தில் அநுபவித்த துன்பங்கள் நீங்கி மகிழ்ச்சி அடைகின்றான் சீவன். "வானேறும் வழிகண்டோம் மகிழ்ந் திட்டோமே"[23] என்று குறிப்பர் தூப்புல் ஆசாரியர்.

எட்டாவது படி சீவர்கள் வைகுந்தத்தை அடைதல் ஆகும். சீவர்கள் அர்ச்சிராதி கதியால் சென்று விரஜை என்ற நதியைக் கடந்து வைகுந்தத்தை அடைவர். இதனைத் தேசிகர்,

"பண்டையிடு வினையாற்றில் படிந்து பாரம்
காணாதே யொழுகியநரம் பாக்கி யத்தால்

23. தே. பி.—145.
24. ஷ—147.

வண்டமரும் மலர்மாதர் மின்னாய மன்ன
வைசயந்தி மணிவில்லாய் விளங்க வான்சேர்
கொண்டல்அருள் மழைபொழிய வந்தது ஒப்பாம்
குளிர்ந்துதெளிந்து அமுதாய விரசை யாற்றைக
கண்டணுகிக் கருத்தாலே கடந்து மீளாக்
கரைகண்டோர்''[25]

*[பண்டை - அநாதியான; பாரம் - கரை; வண்ட மரும் மலர்மாதர் - இலக்குமி;]*

என்று குறிப்பிடுவர். இப் பாசுரத்தில் பரமபதத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை வானத்திலுள்ள முகிலாக வும், பிராட்டியை மின்னலாகவும், பன்னிற மலர்களால் ஆன வைசயக்தி என்னும் வனமாலையைப் பன்னிறத்துடன் தோன்றும் வானவில்லாகவும், எம்பெருமானது கருணை வெள்ளத்தை மழைநீர்த் தாரையாகவும், விரசைநதியை அதனால் பெருகிய அமுதமயமாகிய ஆறாகவும் வருணிக்கப் பெற்றுள்ள கற்பனை நயம் அநுபவிக்கத் தக்கது.

வைகுந்தத்தில் சீவர்கள் எம்பெருமானைக் கண்ணாரக் கண்டுகளித்து, அநுபவித்து அந்த ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிக்கிடத்தல் ஒன்பதாவது படியாகும். அந்தப் பேரின்பம் "தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகித் தித்திக்கும்''[26]. அங்கு,

"கண்கள் சிவந்து பெரியவாய்
வாயும் சிவந்து கனிந்துஉள்ளே
வெண்பல் இலகு சுடர்இலகு
விலகு மகர குண்டலத்தன்
கொண்டல் வண்ணன், சுடர்முடியன்
நான்கு தோளன் குனிசார்ங்கன்
ஒண்சங்(கு) கதைவாள் ஆழியான்''[27]

---

25. ஷை—149.
26. திருவாய்.—8. 8:4.
27. ஷை—8.8:1.

என்ற திவ்விய மங்களவிக்கிரகத்துடன் "அகலகில்லேன் இறையும்"[28] என்றிருக்கும் பெரிய பிராட்டி, பூமிப் பிராட்டி, நீளா தேவி இவர்களுடன் எழுந்தருளியிருக்கும் வைகுந்த நாதனை நித்தியர் முக்தர்களுடன் சேர்ந்து சாம கானத்தையும் ஆழ்வார் பாசுரங்களையும் பாடி அவனை எந்நாளும் சீவர்கள் அநுபவிப்பர். இதனை வேதாந்தம் 'பரிபூரண பிரம்மாநுபவம்' என்று குறிக்கும். இந்தப் பேரின்ப நிலையை நமது அநுபவத்தால் கூறும் எந்த உவமையாலும் சரியாக விளக்கியுரைத்தல் இயலாது.

பரமபதத்தில் சீவன் நிலை : முத்திநிலையில் சீவான்மாவுக்கு பசி, நீர் வேட்கை முதலியன இல்லை. பாவம், முதுமை, துன்பம், இறப்பு முதலியவை அதனை நெருங்கா. முக்தி அடைந்த சீவனின் நிலையை ஆறு உவமைகளால் விளக்குவர் தேசிகர்[29]. இராகு என்னும் பாம்பு பற்றி விட்ட பிறகு கதிரவனின் ஒளி அதிகமாகும். அழுக்கடைந்து நின்ற தரளம் தூய்மை செய்யப்பெற்றபிறகு தன் இயல்பான ஒளியுடன் ஒளிர்கின்றது. கடலில் சென்ற கலம் திசை தப்பிச் சென்று கரை சேர்ந்தவுடன் அதிலுள்ள பயணிகள் அடையும் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. காட்டுத் தீயில் சிக்கித் தவித்து நிற்கும் மதகரி தெய்விகமாய் தீ அணைந்தால் அதினின்றும் வெளியேறியவுடன் அஃது அடையும் மகிழ்ச்சி கூறுந்தரம் அன்று. மடலூரும் தலைவன், தலைவியர் தம் விருப்பம் நிறைவேறப்பெற்றதும் பெருமிதம் கொள்வர். ஓர் அரசன் தன் பிழையால் சிறிது காலம் ஒரு சிறையில் இருக்கப்பெற்றுப் பின்பு பிழையற்றவன் எனத் தீர்ந்து சிறை நீங்கி மீண்டும் தனது அரசுடைமையைப் பெற்றால் அவன் ஆனந்தக் கடலில் மூழ்கி நிற்பான். அங்ஙனமே, இதுகாறும் ஆன்மாவின் உண்மையான சொரூபத்தை அறியாமல் செய்து மறைத்து வந்த பிரகிருதியின் உறவு

28. திவ்.—6.10:10.
29. தே. பி.—151.

நீங்கப்பெற்றது ஆன்மா வைகுந்தத்தில் எம்பெருமானுடன் கலந்து அவனுக்கு அடிமை செய்து ஆனந்தத்தை அநுபவிக்கின்றது.

''தொண்டே செய்துஎன்றும்
தொழுது வழியொழுக
பண்டே பரமன்
பணித்த பணிவகையே''[30]

என்று செம்மாந்து நிற்கின்றது.

30. திரு—10. 4:5.
சில.—6

## 5. வைணவம்*

திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு பல உயரிய கொள்கைகள் அடங்கிய ஒரு பரந்த சமயமே வைணவ சமயம் ஆகும். இச் சமயத்தின் கொள்கைகளை 1) தத்துவம், 2) இதம், 3) புருஷார்த்தம் என்று சுருக்கமாகக் கூறலாம். இவற்றை ஈண்டுச் சற்று விளக்குவோம்.

### 1. தத்துவம்

தத்துவங்கள் மூன்று. அவை : சித்து, அசித்து, ஈசுவரன் என்று வழங்கப் பெறுவன. சித்து என்பது, உயிர்களின் தொகுதி, அசித்து என்பது, மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது; இதை மூலப் பிரகிருதி என்றும் வழங்குவர். ஈசுவரன் என்பவன், இறைவன். இவை மூன்றும் ''தத்துவ த்திரயம்'' (திரயம் - மூன்று) என்ற பெயரால் வழங்கி வருகின்றன.

சித்து : ஞானத்திற்கு இடமான ஆன்மா அல்லது உயிர் சித்து என வழங்கப்பெறுகின்றது. இஃது அன்னமயம், பிராணமயம், மனோமயங்கட்கு அப்பாலாயிருப்பது. தேகம், இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் இவற்றிற்கு வேறு பட்டது. அறிகின்ற தலைவனும், அறிவும், அறியப்பெறும்

---

* காரைக்குடித் தமிழ்ச்சங்க மலரில் (1973) வெளி வந்தது.

பொருளும் தானாகவே இருப்பது. அணுவின் அளவினை உடைய இந்த ஆன்மா, ஆனந்த வடிவத்தைக்கொண்டது; என்றும் நிலைபெற்றிருப்பது. இது கண் முதலிய இந்திரியங் கட்குத் தோற்றாது; மனத்தாலும் இதனை நினைக்க முடியாது. இதனைப் பகுதிகளாகவும் பிரிக்க முடியாது; அவயவமும் அற்றது. வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. அறிவுமயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கும் இருப்பிடமானது. இந்த அறிவு 'தர்மபூத ஞானம்' என வழங்கப்பெறும். இதனால் ஆன்மா 'தர்மி பூத ஞானம்' என வேறொரு பெயராலும் வழங்கப் பெறும். இந்த சீவான்மா தனக்கு எப்பொழுதும் தோன்றிக் கொண்டேயிருக்கும். தன்னை 'நான்' என்று அறியும் பொழுது தர்மபூத ஞானம் உதவவேண்டும் என்பதில்லை. ஆனால், சீவான்மா தன்னைத்தவிர வேறு எந்தப் பொருளை யும், தன் தர்மபூத ஞானத்தால் மட்டிலுமே அறிய முடியும். தன் சொருபத்தைத் தர்மபூத ஞானத்தைக் கொண்டும் அறியலாம். ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது; அவனால் தரிக்கப்பெற்று, அவனுக்கு அடிமையாகவே இருப்பது.

**சித்தின் வகை :** சீவான்மாக்கள் எண்ணற்றவர். இவர் களின் தொகுதி பத்தர் (தளைப்பட்டிருப்பவர்), முக்தர், நித்தியர் என்னும் வேற்றுமையால் மூவகைப்பட்டிருக்கும். இவர்களுள் பத்தர் என்பவர் 'மூலமும் நடுவும் ஈறும் இல்ல தோர் மும்மைத் தாய காலமும் கணக்கும் நீத்த காரணனின்' மாயையால் மறைக்கப்பெற்ற சொரூபத்தையுடையவர்கள்; அநாதி அஞ்ஞானத்தால் தேடிய புண்ணிய பாவங்களால் சூழப்பெற்றவர்கள்; இவர்கள் அவரவர்களுடைய வினைக்குத் தக்கவாறு மாறிமாறித் தேவ, மனித, விலங்கு, தாவர வடி வங்களைப் பெற்றுத் துக்க பரம்பரைகளை அநுபவிக்கும் சம் சாரிகளாவர். முக்தர் என்பவர், இவ்வுலகத் தளைகள் கழிந்து பரமபதத்தில் பகவதாநுபவ கைங்கரிய போகரான வர்கள் ஆவர். நித்தியர் என்பவர், ஒருநாளும் சம்சார சம்பந்த உணர்வு இல்லாத அனந்தன், சேனை முதலியார்

(விஷ்வக்சேனர்), பெரிய திருவடி தொடக்கமானவர்க ளாவர்.

அசித்து : அசித்து என்பது, அறிவில்லாத பொருள். இது விகாரத்திற்கு இடமானது. அஃதாவது முன்னைய நிலையை விட்டு வேறு நிலைகளை அடைவதாகின்ற வேறுபாட்டிற்கு இடமாய் இருக்கும். இந்த அசித்து இராஜஸ தாமஸங்கள் கலவாத சுத்த சத்துவம் என்றும், இராஜஸ தாமஸங்கள் கலந்த மிச்ரதத்துவம் என்றும், சத்துவம் முதலிய குணங் களற்ற சத்துவசூனியம் என்றும் மூன்று வகைப்படும்.

சுத்த சத்துவம் : இது ஆதல், அழிதல் இல்லாதது; ஞானத் தையும் ஆனந்தத்தையும் உண்டாக்கக் கடவது. இறைவன் அநுபவத்தின் பொருட்டே உண்டான இச்சையாலே நித்திய விபூதியில் (பரமபதத்தில்) விமானம், கோபுரம், மண்டபம், உப்பரிக்கை முதலிய வடிவுடன் தோற்றக் கடவது. இது வைகுந்தத்திலிருந்து மேலே எல்லையின்றி எங்கும் பரவி நிற்கும். நெருப்பு, கதிரவன் முதலிய ஒளியுள்ள பொருள்களும் மின்மினிக்கு ஒப்பாம்படி அளவிறந்த ஒளிவடிவினது. இது நித்தியர், முக்தர், ஈசுவரன் இவர்களாலும் அளவிடுதற்கு அரியது; கண நேரத்திற்குக் கண நேரம் முன்பில்லாத வியப் பினை உண்டாக்க வல்லதாக இருக்கும். நித்தியர், முக்தர், ஈசுவரன் இவர்கள் ஞானத்தால் தன்னை அறியவொண்ணாத படி ஒளிவிட்டுத் திகழும். ஆனால், சம்சாரிகட்கு அங்ஙனம் தோற்றாது.

மிச்ர தத்துவம் : இதில் சாத்துவிகம், இராஜஸம், தாமஸம் ஆகிய மூன்றும் கூடி கர்மவான்களகிய சம்சாரி சேதந ருடைய ஞான ஆனந்தங்கட்கு மறைவை உண்டாக்கும்; அதுவல்லாததனை அதுவாக நினைக்கும் விபரீத அறிவினை யும் விளைவிக்கும். இஃது உற்பத்தி விநாசமில்லாதது. இஃது ஈசுவரனுடைய உலகப் படைப்பு முதலியவற்றிற்கு விளை யாட்டுக் கருவியாக இருந்து, ஏற்றத் தாழ்வு உள்ள இடம், அவை இல்லாத இடம் என்ற இடவேறுபாட்டாலும், அழிக்

குங்காலம் படைப்புக்காலம் ஆகிய இரண்டு வகையான கால வேறுபாட்டாலும், சூக்கும விகாரங்களையும் தூலமான விகாரங்களையும் உண்டாக்கக் கடவது. இந்த மிச்ரதத்துவம் பிரகிருதி, அவித்யை, மாயை என்ற பெயர்களாலும் வழங்கப் பெறும்.

இந்த மிச்ர தத்துவம் இருபத்து நான்கு வடிவங்களாக இருக்கும். அஃதாவது சேதநரைப் பூரிக்கும்படிச் செய்யும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய புலன்கள் ஐந்தும்; மெய், வாய், கண், செவி, மூக்கு ஆகிய பொறி ஐந்தும்; வாக்கு, கால், கை, வாய், உபத்தம் ஆகிய கருமேந்திரியங்கள் ஐந்தும்; மண், நீர், எரி, கால், ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்தும்; இங்குள்ள இந்த ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப் பிரகிருதி ஒன்றும்; மகத்(மான்) தத்துவம் ஒன்றும்; அகங் கார தத்துவம் ஒன்றும்; மனம் ஒன்றும் என இருபத்து நான்காம். அசித்தின் இந்த இருபத்து நான்கு தத்துவங் களையும் கலந்துதான் ஈசுவரன் தானாகவும், நான்முகன் மூலமாகவும் இந்த அகிலத்தைப் படைக்கின்றான்.

சத்துவ சூனியம்: கால தத்துவம் என்றும் இது வழங்க பெறும். இஃது எங்கும் பரந்து நிற்கும் ஒரே திரவியம். இதில் சத்துவம் முதலிய பிரகிருதியின் மூன்று குணங்களும் இல்லை. எதிர், நிகழ், கழிவு முதலிய விவகாரங்களுக்கு இதுவே காரணம் ஆகும். நிமிடம், விநாடி, நாழிகை முதல் பரார்த்தம் வரையிலுள்ள பகுதிகளெல்லாம் இதனுடை யனவே. இஃது ஈசுவரப் படைப்பின் பரிணாமங்களுக்குக் காரணமாய், தோற்றம் ஈறு அற்றதாய், அவனுடைய படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய விளையாட்டிற்குக் கருவி யாய் அவனுக்கு உடலாகத் திகழும். வைகுந்தத்தில் முன் பின் என்ற அளவிற்குக் காலம் உளதேயாயினும், அதன் சம்பந்த மின்றி அனைத்தும் எம்பெருமானது சங்கற்பத்தால் மட் டிலும் நடப்பனவாகும்.

மேற்கூறிய சுத்த சத்துவம், மிச்ர தத்துவம், ஆகிய அசித்தின் இரண்டு பகுதிகளும் ஈசுவரனுக்கும், நித்தியர்,

முக்தர், பத்தர் என்று மூன்று வித ஆன்மாக்களுக்கும் போக்கியமாயும், போகத்திற்கு உபகரணமாயும், போகத்தை அநுபவிக்கத் தக்க இடங்களாயும் இருக்கும்.

ஈசுவரன் : சீமந் நாராயணனே சர்வேசுவரன். இவன் எப்பொழுதும் மாறுபடாத் தன்மையுடையவன். சத்தியம், ஞானம், ஆனந்தம், அனந்தம் இவற்றின் சொரூபமாக இருப் பவன். இடத்தாலும் காலத்தாலும் அளவிடப் பெறாதவன். மூன்றுவித சேதந அசேதந பரிணாம ரூபமான வேறு பாட்டின் குறைகள் தட்டாதவன். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்குவித பலன்களையும் உயிர்கட்குத் தந்து அவற்றின் புகலிடமாக இருப்பவன். தன் சொரூபத்தாலும் திருமேனியாலும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் முதலிய மங்கள குணக் கூட்டங்களால் அலங்கரிக்கப்பெற்றவன். அவ னிடம் இக்குணங்கள் ஆதல் அழிதல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இவற்றைத் தவிர, வாத்சல்யம், சௌசீல்யம், சௌலப்பியம் முதலிய எண்ணற்ற குணங்களை யும் கொண்டவன்.

இந்த உலகினைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய வற்றின் காரணபூதன். அனைத்திற்கும் ஆதாரமானவன்; அனைத்தையும் அடக்கி ஆள்பவன்; அனைத்தினுடைய பலனையும் அநுபவிப்பவன். தன்னை அடைந்தவருடைய எல்லா வினைகளையும் போக்குபவன். சகல வேதங்களாலும் போற்றப்பெறுபவன். சகல கர்மங்களாலும் தானே ஆராதிக்கப் பெற்றுப் பலன்களைத் தருபவன். நான்முகன் முதலிய சகல தேவர்களையும் படைப்பவன். அவர்கள் அனைவரும் இவன் கட்டளைக்கு அஞ்சி நடப்பவர்களே. இந்த லீலாவிபூதியில் உயிர்கள் தத்தம் வினைகட்கேற்ப உடல்களை அடைவதற்கும், பிறகு அவை வீடுபேறு அடை வதற்கும் இவனே காரணன். இவன் விரும்பிப் பெற முடி யாதது ஒன்றும் இல்லை.

நித்திய விபூதியாகிய பரமபதத்தில் இவனுக்கெனத் தனியான திருமேனி உண்டு. அது ஈடும் எடுப்பும் அற்ற பேரொளியினை உடையது. பேரழகு வாய்ந்து கண்டாரை ஈர்ப்பது; யோகியரின் தியானத்திற்கு ஏற்றது. அந்த உருவத்துடன் பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார், நீளாதேவி ஆகியோருக்கு நாயகனாக இருப்பவன்.

ஐந்து நிலைகள் : எம்பெருமானின் திருமேனி பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என ஐந்து நிலையில் இருக்கும். பரம் என்பது, வைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் பர வாசுதேவனுடைய உருவம். வியூகம் என்பது: வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தன் என்ற உருவங்கள். விபவம் என்பது, எண்ணற்ற அவதார மூர்த்திகள். அந்தர்யாமி என்பது, எல்லோருடைய இதய கமலத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை. அர்ச்சை என்பது, திவ்விய தேசங்களில் திருமேனி கொண்டு எழுந்தருளியுள்ள நிலையும், மற்றும் பக்தர்களின் வேண்டுகோளின்படி அவரவர் விருப்பத்திற்கேற்றவாறு திருமேனி கொண்டு நிற்கும் நிலையும்.

பெரிய பிராட்டியாகிய இலக்குமியும் ஈசுவர தத்துவத்தில் சேர்ந்தவள். பிராட்டியும் எம்பெருமானைப்போல் எங்கும் நிறைந்து நிற்பவள்; எம்பெருமானைப்போல் நமக்கு உபாயமாகவும் பலனாகவும் இருப்பவள். உலகில் புத்திரனுக்கு நன்மையைச் செய்யும் பெற்றோரைப்போல் எம்பெருமானும் எம்பெருமாட்டியும் நமது நன்மையை நாடித் தங்களுக்குள் சில கடமைகளைத் தமது சங்கற்பத்தால் வகுத்துக்கொண்டுள்ளனர். பிரபத்தியைப் பின்பற்றுவோர் முதலில் பிராட்டியைப் புருஷகாரமாகத் (தகவுரை கூறுபவளாகக்) கொண்டு எம்பெருமானைச் சரணமடைய வேண்டும் என்பது நடைமுறை.

## 2. இதம்

மோட்சத்திற்குச் சாதனமாக அநுட்டிக்கப்பெறும் வழியே 'இதம்' என்பது. வைணவர்கள் கடைப்பிடிக்கும் இரண்டு வழிகள் பக்தி நெறியும், பிரபக்தி நெறியுமாகும்.

பத்திநெறி : இதில் பல படிகள் உண்டு. இதனை மோட்சம் பெறும் வரையில் அநுட்டித்துக் கொண்டே இருத்தல் வேண்டும். பலன் பெற நெடுங்காலம் கழியவேண்டும். அங்கங்களுடன் அனுட்டிக்கும் முறை மிகக் கடினமானது. இக்காலத்தில் பக்தி நெறியை அனுட்டிப்பதற்கு அதிகாரிகளே இலர் என்றுகூடக் கூறலாம். நாதமுனிகள் போன்ற யோகியரே இதற்கு அதிகாரிகளாவர்.

பிரபத்தி நெறி : எல்லோரும் எளிதாக அநுட்டிக்கக் கூடியது. சுக்கிரீவன், வீடணன், காகம் போன்றார் இந்நெறியைக் கடைப்பிடித்தே உய்ந்தவர்கள். இதனைச் 'சரணாகதி தத்துவம்' என்றும் வழங்குவர்.

## 3. புருஷார்த்தம்

வீடுபேறு அடைவதே 'புருஷார்த்தம்' என்று வழங்கப் பெறுவது. புருஷன் - ஆன்மா, அர்த்தம் - பொருள்; அஃதாவது, ஆன்மா அடைய வேண்டிய பொருள். உடலினின்று தனிநாடி வழியே வெளியேறி வரும் ஆன்மாவை அக்நி தேவதை, பகலின் தேவதை, சுக்லபட்ச தேவதை, உத்தராயண தேவதை, மழை தேவதை, சூரியன், சந்திரன், மின்னல் தேவதை, வருணன், இந்திரன், நான்முகன் ஆகிய இவர்கள் வரவேற்று தக்க உபசாரங்கள் செய்து தத்தம் எல்லைகளைக் கடத்தி வழி நடத்திவிடுவர். இதுவே 'அர்ச்சிராதி கதி' என்பது. அர்ச்சிராதி கதி முடிந்த பிறகு ஆன்மா வைகுண்டத்தை நெருங்கும். அங்குச் செல்வதற்காக அதுகாறும் நிறுத்தி வைக்கப்பெற்ற சூக்கும உடல் கழற்றி விடப்பெறும். பிறகு அங்குள்ள விரஜை நதியைத் தன்

சங்கற்பத்தால் தாண்டும். உடனே எம்பெருமான் கருணையால் ஆன்மாவுக்குச் சுத்த சத்துவமான உடல் கிடைக்கும். அந்த உடலுடன் 'ஐரம்மதீயம்' என்னும் திவ்விய தடாகத்தைக் கடந்து 'சோமச வனம்' என்னும் அரசமரத்தை அடையும். அங்கு 500 அப்சரப் பெண்கள் பல்வேறு உபசாரப் பொருள்களைக் கொண்டு வரவேற்பு செய்வர். பிறகு ஆன்மாவுக்கு பிரம்மாலங்காரம் செய்வித்து, சுத்த சத்துவமான மணம், சுவை, தேஜஸ் ஊட்டப்பெறும். அதன் பிறகு அங்குள்ள பல நித்திய சூரிகள் எதிர்கொண்டழைப்பர். அங்கிருந்து திவ்விய கோபுரத்திற்குச் செல்ல அங்குக் காவல் புரிந்து நிற்கும் இந்திரன், பிரஜாபதி என்னும் துவாரபாலகர்கள் நெருங்குவர்; அங்குள்ள நித்திய சூரிகளும் மாமுனிவர்களும் தம்முடைய இடத்திற்கு எழுந்தருளவேண்டும் என்று வேண்டி ஆன்மாவின் திருவடிகளைத் திவ்விய தீர்த்தத்தால் கழுவுவர்; இங்கும் பல மகளிர் உபசரிப்பர். பின் ஆன்மா சுத்த தத்துவமான உடலுடன் ஆனந்தமயமான திவ்விய மண்டபத்தில் புகுந்து பகவத் குணங்களைப் பேசியநுபவிக்கும் நித்திய சூரிகளும் முக்தர்களும் அடங்கிய குழுவைக் கண்டு களிக்கும். அந்தக் குழுவில் ஆசாரியர்கள் இவ்வான்மாவைக் கண்டு தம்முடைய முயற்சி பலித்ததெனப் பெருமிதம் கொண்டு நிற்பர். ஆன்மாவும் தன் நன்றியைக் காட்டி வணங்கி நிற்கும்.

அந்தத் திவ்விய மண்டபத்தில்தான் சீமந் நாராயணன் அனந்தன்மீது தன் தேவிமார் மூவருடன் எழுந்தருளியிருப்பான். அந்த எம்பெருமானைக் கண்ணாரக் கண்டு அவனது இரத்தினப் படிகளில் ஏறித் திவ்விய தம்பதிகளுடன் கலந்து பேசி மகிழும். அதன் பின்னர் அவன் திருவடிகளின் கீழ் அனந்தன், கருடன், சேனை முதலியார் முதலிய நித்திய சூரிகளின் குழுவில் புகுந்து கலந்து எல்லாவிடத்திலும் எல்லா நிலைமைகளிலும், எல்லாவித கைங்கரிய சித்தியும் பெற்றுப் பேரின்பக்கடலுள் மூழ்கி நிற்கும். அங்கிருந்து ஒரு போதும் திரும்புதல் இல்லை. ஆன்மா தன் விருப்பப்படி

நடப்பதும் பகவத் கைங்கரியத்தில் அடங்கியதே. தன் இச்சையுடன் பிரகிருதி மண்டலத்திற்கு வந்து சென்றாலும் ஆன்மாவுக்கு பகவதநுபவ ரசத்திற்கு இடையூறு ஒன்றும் இல்லை. இத்தகைய பகவநுபவமே 'பரிபூர்ண பிரம்மாநுபவம்' எனப்படும். இதுவே 'பரம புருஷார்த்தம்' என்பது.

## 6. திருமழிசையாழ்வார் திருநெறி*

திருமாலை முதற் கடவுளாகக் கொண்ட சமயமே திருமால் திருநெறி என்பது. இஃது இன்றைய வழக்கில் 'வைணவம்' என்ற பெயரால் வழங்கிவருகின்றது. 'விஷ்ணு' என்பதற்கு எங்கும் நிறைந்தது என்பது பொருள். எனவே, ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் நிறைந்து அதனைக் காத்துக்கொண்டுள்ள பொருளுக்கே 'விஷ்ணு' என்கின்ற திருநாமம் இட்டு வழங்கினர் நம் பண்டையோர். விஷ்ணுவை முதற் கடவுளாகக் கொண்டவர்கள் வைணவர்கள். வைணவர்களின் சமய குரவர்கள் 'ஆழ்வார்கள்' என வழங்கப்பெறுவர்; இவர்கள் பன்னிருவர். இறையநுபவத்தில் ஆழங்கால்பட்டு நிற்பதால் இவர்கள் 'ஆழ்வார்கள்' என்று வழங்கப்பெற்றனர். ஆழ்வார்களின் தலைவர் நம்மாழ்வார். அவர் கொண்ட நெறியையே ஏனையவர்களும் கொண்டனர். பக்தி சாரர் என்று வழங்கப்பெற்றும் திருமழிசையாழ்வார் ஆழ்வார்களுள் ஒருவராதலின் அவர் கொண்ட நெறியும் 'வைணவ நெறியே'யாகும். எனவே, வைணவ நெறியை விளக்குவது 'திருமழிசையாழ்வாரின் திருநெறியை' விளக்குவதாகும். இக் கட்டுரையில் அவருடைய அருளிச் செயல்களாகிய 'திருச்சந்த விருத்தம்', 'நான்முகன் திருவந்தாதி' என்ற இரு பிரபந்தங்களின் துணை கொண்டு அந் நெறி விளக்கப் பெறுகின்றது. இந்த ஆழ்வார் பல சமயங்களில் புகுந்து ஒவ்வொன்றிலும் ஆழங்கால்பட்டும்

* தெய்வப் பேரவை மலரில் வெளிவந்தது.

அதிலுள்ள ஒரு சில குறைபாடுகளைக் கண்டு வேறொரு சமயத்தைத் தழுவியும் வாழ்ந்தவர். இறுதியில் திருமால் திருநெறியே சிறந்ததெனத் தேறியவர். இவரைத் திருத்திப் பணி கொண்டவர் பேயாழ்வார் என்பவர்.

முழுமுதற் கடவுள்: வைணவ தத்துவங்கள் மூன்று. அவை: சித்து, அசித்து, ஈசுவரன் என்பவை. சித்து என்பது சீவான்மாவைக் குறிப்பது. அசித்து என்பதில் உயிரற்ற பொருள்கள் அனைத்தும் அடங்கும். ஈசுவரன் என்பவன் இறைவன். ஈண்டு இறைவனது இயல்பும், அவனை அடையும் வழிகளும் விளக்கப்பெறும்.

திருமால் நெறியில் சீமந் நாராயணனே முழுமுதற் கடவுள். இவன் எப்பொழுதும் மாறுபடாத தன்மையுடையவன்; ஞானவடிவானவன்; இங்குதான் உள்ளான் என்று தேயத்தால் அளவிட்டுக் கூற முடியாதவன்; இப்பொழுதுதான் உள்ளான் என்று காலத்தாலும் கணிக்க முடியாதவன்; இன்ன பொருளில்தான் உள்ளான் என்று பொருளாலும் எல்லையிட்டுப் பேச முடியாதவன். சித்து, அசித்து ஆகிய இரண்டும் இவனுடைய உடலாய்த் திகழும். இதனை ஆழ்வார்,

> "நீயே உலகெல்லாம்; நின்னருளே நிற்பனவும்;
> நீயே தவத்தேவ தேவனும்; நீயே
> எரிசுடரும் மால்வரையும் எண்திசையும் அண்டத்து
> இருசுடரும் ஆய இவை"[1]

[எரி சுடர் - நெருப்பு. வரை - மலை. இரு சுடர் - சூரியன், சந்திரன்]

என்று விளக்குவர். இவனே முழு முதற் கடவுள் என்பதை,

---

1. நான். திருவந்.—20.

"தேருங்கால் தேவன் ஒருவனே என்றுரைப்பர்;
ஆரும் அறியார் அவன் பெருமை—ஓரும்
பொருள்முடிவும் இத்தனையே எத்தவம் செய்தார்க்கும்
அருள் முடியது ஆழியான் பால்"[2]

[தேருங்கால் - ஆராயுமிடத்து; தேவன் - பர தெய்வம்; ஓரும் - ஆராயப்பெறும்; முடிவது - முடிவில் பலனை அளிப்பது. ஆழியான் - சக்கரத்தையுடையவன்.]

என்ற பாசுரத்தால் புலப்படுத்துவர். இந்தப் பிரபந்தம் முழுவதிலும், திருச்சந்த விருத்தத்திலும் அவனுடைய பரத்துவத்தை நன்கு விளக்கி இறுதியாக,

"இனிஅறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்;
இனிஅறிந்தேன் எம்பெருமான்! உன்னை இனி அறிந்தேன்;
காரணன்நீ; கற்பவைநீ; கற்றவைநீ; நல்கிரிசை
நாரணன்நீ; நன்குஅறிந்தேன் நான்"[3]

[ஈசன் - சிவன்; நான்முகன் - பிரம்மா; நல்கிரிசை - நற்செயல்.]

என்ற பாசுரத்தால் இதனை நிலைநாட்டித் தலைக்கட்டுவர்.

இந்த இறைவனின் திருமேனி பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்று ஐந்து வகை யாகப் பேசப்பெறும். வைகுந்தத்தில் எழுந்தருளி யிருக்கும் இருப்பே பரத்துவம் என்பது. வியூகம் என்பது, வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்ற நான்கு நிலைகள். அவதாரங்கள் விபவம் என வழங்கப்பெறும். எல்லோருடைய இதய கமலத்தில் எழுந்தருளியிருக்கும் இருப்பே அந்தர்யாமித்துவம் ஆகும். திவ்விய தேசங்களில்

2. ஷெ—2.
3. ஷெ—96.

திருமேனி கொண்டு எழுந்தருளியிருக்கும் நிலையும், அடியார் களின் வேண்டுகோளின்படி அவரவர் விருப்பத்திற்கேற்ற வாறு திருமேனி கொண்டு நிற்கும் நிலையும் அர்ச்சாவதாரம் என்று வழங்கப்பெறும். எல்லா நிலைகளிலும் பெரிய பிராட்டியாராகிய இலக்குமி இறைவனை விட்டு ஒருக்கணமும் பிரிவதில்லை. ஆகவே, அவள் ஈசுவர தத்துவத்தில் சேர்ந்தவள் ஆகின்றாள் (தென்கலை சம்பிரதாயப்படி).

திருமழிசையாழ்வார் இந்த இறைவனையே முழுமுதற் கடவுளாக வழிபடுவர். இதனை,

"என்றும் மறந்தறியேன் என்நெஞ்சத் தேவைத்து
நின்றும் இருந்தும் நெடுமாலை—என்றும்
திருஇருந்த மார்பன் சிரீதரனுக்(கு) ஆளாய்
கருஇருந்த நாள்முதலாக் காப்பு"[4]

[நெடுமால் - நாராயணன்; திரு - இலக்குமி; சிரீதரன் - திருமால்; ஆளாய் - ஆட்பட்டவனாய்.]

என்ற பாசுரத்தால் அறியலாம். இன்னொரு பாசுரத்திலும்,

"நான் உன்னை அன்றிஇலேன் கண்டாய் நராணனே!
நீ என்னை அன்றி இலை"[5]

என்று இக் கருத்தையே மீண்டும் வற்புறுத்துவதைக் காண லாம். இந்த இறைவனை அடைதலையே 'வீடுபேறு' என்று வழங்குவர் வைணவப் பெருமக்கள். வைணவ தத்துவப்படி இறைவனே தன்னை அடைவதற்கு வழி யாகவும் அமைவான்; பலனாகவும் இருக்கின்றான். இதனை,

—"வீடுஆக்கும்
மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருந்தான் விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாரா யணன்"[6]

4. ஷை—92.
5. ஷை—7.
6. ஷை—13.

[வீடு - மோட்சம்; மெய்ப்பொருள் - உண்மையான வழி.]

என்ற பாசுரப் பகுதியால் தெளியலாம். பலன் 'புருஷார்த்தம்' என்று வழங்கப்பெறும்.

இறைவனை அடையும் வழிகள் : இறைவனை அடையும் வழி 'இதம்' என்று வழங்கப்பெறும். வீடுபேற்றிற்குச் சாதனமாக அநுஷ்டிக்கப்பெறும் வழி என்பது இதன் பொருள். இந்த வழி இருவகையாக அநுட்டிக்கப்பெறும்.

பக்தியோகம் : இது பலவகைப்படும். வீடு பேறு எய்தும்வரை இதனை அநுஷ்டித்துக்கொண்டே இருத்தல் வேண்டும். பலன்பெற நெடுங்காலம் கழிய வேண்டும். திருமழிசையாழ்வார் 'பக்தி சாரர்' என்ற பெயருக்கேற்ப பக்தியே வடிவெடுத்த பரமயோகி.

"தொழில்எனக்குத் தொல்லையில் தன்நாமம் ஏத்த
பொழுதுஎனக்கு மற்றுஅதுவே போதும்"[7]

[தொல்லை மால் - புராணனான எம்பெருமான்]

என்றும்,

"வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது"[8]

என்றும் கூறியிருத்தலால் இதனை நன்கு அறியலாம். இந்த ஆழ்வார் கொண்டிருந்த பக்தியின் உறைப்பினை,

"வெற்புஎன்று வேங்கடம் பாடினேன்; வீடுஆக்கி
நிற்கின்றேன்; நின்று நினைக்கின்றேன்; — கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வரையில் பட்டிருந்தேன் காண்"[9]

---

7. ஷை—85.
8. ஷை—63.
9. ஷை—40.

[வெற்பு - மலை; வீடு - வீடுபேறு; நூல் - மறைகள்; நூலாட்டி - நூலாளன் துணைவி; கேள்வன் - கணவன்; கால் வலை - திருவடி வலை.]

என்ற பாசுரத்தால் நன்கு அறியலாம். என்றும் பக்தியையே நாடி நின்றவர் இந்த ஆழ்வார் என்பதை,

"பெறற்கரிய; நின்னபாத
பக்தியான பாசனம்
பெறற்கரிய மாயனே
எனக்கு நல்க வேண்டுமே"[10]

[நின்ன - உன்னுடைய; பாதம் - திருவடி; பாசனம் - மரக்கலம்.]

என்ற பாசுரப் பகுதியால் தெளியலாம். திருவடியை நாடி நிற்கும் பக்தியாகிய மரக்கலத்தைத் தந்தருள வேண்டும் என்று வேண்டுகின்றார் ஆழ்வார். அதுவே பிறவிப் பெருங் கடல் நீந்துவதற்கேற்ற புணையாகும் என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை. அவன் தாளை வணங்குவதற்கு அவன் அருளவேண்டும் என்பதை நன்கு உணர்ந்தவர் ஆழ்வார். எனவே,

"பரந்தசிந்தை ஒன்றிநின்று
நின்னபாத பங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக
நீநினைக்க வேண்டுமே"[11]

[பாதபங்கயம் - திருவடித் தாமரை; நிரந்தரம் - இடைவிடாமல்.]

என்று வேண்டுவர் ஆழ்வார். இக் கருத்தினையே,

---

10. திருச்.விருத்.—101.
11. ஷை—101.

"கிடந்து இருந்து நின்றியங்கு
போதும்நின்ன பொற்கழல்
தொடர்ந்துவீள் விலாததோர்
தொடர்ச்சிநல்க வேண்டுமே"[12]

[பொன்கழல் - அழகிய திருவடி; வீள்வு - நீக்கம்]

என்று இன்னொரு பாசுரப் பகுதியில் வற்புறுத்துவதைக் காணலாம்.

பிரபத்தி : இதனைச் சரணாகதி என்றும் வழங்குவர். பத்தியோகத்தை அநுட்டிக்க இயலாதவர்கள் இந்த வழியை மேற்கொள்ளுவர். இதுவே ஆழ்வார்கள் அனைவரும் மேற் கொண்ட வழி. நம்மாழ்வார் திருவேங்கடமுடையானைச் சரண் புகுந்ததாக அமைந்த திருவாய் மொழியை[13] அனை வரும் நன்கு அறிவர்.

"எல்லார்க்கும் எளிதான ஏற்றத் தாலும்
இனிஉரைக்கை மிகையான இரக்கத் தாலும்
சொல்லார்க்கும் அளவாலும் அமைத லாலும்
துணிவு அரியதாய்த் துணைதுறக்கும் சுகரத் தாலும்
கல்லார்க்கும் கற்றார்சொல் கவர்த லாலும்
கண்ணன்உரை முடிசூடி முடித்த லாலும்
நல்லார்க்கும் தீயார்க்கும் இதுவே நன்றாம்
நாரணற்கே அடைக்கலமாய் நணுகு வீரே"[14]

[ஏற்றம் - பெருமை; உரைக்கை - உச்சரிக்கை; சொல் - பிரபத்திவாக்கியம்; ஆர்க்கும் அளவு - பூர்ணமாய் உச்சரிக்கப்படுதல்; துணிவு - மகா விசுவாசம்; சுகரம் - சௌகர்யம்; கவர்தல் - பலனைக் கொண்டிருத்தல்; நணுகுவீர் - அடைவீர்.]

---

12. ஷை—104.
13. திருவாய்.—6-10.
14. தே. பி.—200.
சில.—7

என்ற பாசுரத்தால் வேதாந்த தேசிகரும் இதன் சிறப்பையும் அநுட்டிக்கும் எளிமையையும் எடுத்துரைப்பர்.

திருமழிசையார் பிரபத்தி முறையையும் அநுட்டித்தவர் என்பதை,

"அடைக்கலம் புகுந்தஎன்னை
'அஞ்சல்' என்ன வேண்டுமே"[15]

[அடைக்கலம் - சரணுகதி; அஞ்சல் - பயப்படாதே]

என்ற பாசுரப் பகுதியால் அறியலாம். மேலும் இதனை,

"புனித! நின்
இலங்குபாதம் அன்றிமற்றோர்
பற்றிலேன் எம் ஈசனே"[16]

[புனித - பரிசுத்தனே; இலங்குபாதம் - ஒளிமிக்க திருவடிகள்; பற்று - பிடி]

என்ற பாசுரப் பகுதியாலும் வற்புறுத்துவர். நான்முகன் திருவந்தாதியிலும் "ஏன்றேன் அடிமை; இழிந்தேன் பிறப்பு இடும்பை"[17] என்றும், "கிளர்ஒளி என் கேசவனே கேடு இன்றி, ஆள்வாய்க்கு அடியேன் நான் ஆள்"[18] என்றும் இதனை மேலும் வற்புறுத்துவதைக் காண்க.

இறுதியாக ஒன்று கூறி இக் கட்டுரையைத் தலைக்கட்டு வேன். இந்த ஆழ்வாரின் இதயம் எம்பெருமானுடைய திருவடி இணைகளையே எல்லாக் காலங்களிலும் அணைந்து அவற்றிலேயே பிடிபட்டும் போயிற்று. ஆழ்வாரே இதனை,

15. திருச். சந்த.—92.
16. ஷை—90.
17. நான்; திருவந்.—95.
18. ஷை—59.

"சொல்லினும் தொழிற்கணும்
தொடக்கறாத அன்பினும்
அல்லுநன் பகலினோடு
ஆனமாலை காலையும்
அல்லிநாள் மலர்க்கிழத்தி
நாத!பாத போதினைப்
புல்லியுள்ளம் வீள்வு இலாது
பூண்டுமீண்ட தில்லையே"[19]

[சொல் - வாக்கு; தொழில் - செயல்; அல் - இரவு; அன்பு - மனத்தைக் காட்டுவது; அல்லி - கொடி; போது - திருவடி மலர்; வீள்வு - பிரிவு]

என்ற பாசுரத்தில் வெளியிடுவர். அடுத்த இரண்டு பாசுரங்களில் தன் ஆன்மா எம்பெருமானுடைய திருவடித் தாமரையில் வண்டாகப் படிந்து அவனுடைய விபூதிகள் எல்லாவற்றிலும் பரந்து நிற்பதாகப் பகர்வர். பின்னும் தன் ஆன்மா அவனுடைய மன்னுசோதியில் கலந்து வினைகள் யாவும் வேருடன் களையப் பெற்று வீடு பெற்றதாக வற்புறுத்திக் கூறுவர். எனவே, சீமந் நாராயணனே முழு முதல் கடவுள் என்பதும், அவனைப் பக்தி, பிரபத்தி ஆகிய இரண்டு வழிகளாலும் அடையலாம் என்பதும் திருமழிசையாழ்வார் கண்ட திருநெறியாகும்.

19. திருச். சந்த.—118.

## 7. திருவள்ளுவரும் ஆழ்வார்களும்*

நான்மறையின் மெய்ப்பொருளை நான்முகத்தோன் வள்ளுவராக நின்று முப்பொருளாகத் தந்துரைத்ததாகக் கூறுவர் உக்கிரப் பெருவழுதியார்.[1] வியாசர் வேதங்களை நான்காக வகுத்ததுபோலவே, நாதமுனிகள் ஆழ்வார் பன்னிருவரின் அருளிச் செயல்களைத் தொகுத்து முதலாயிரம், பெரிய திருமொழி, திருவாய்மொழி, இயற்பா என நான்காக வகுத்து "நாலாயிர திவ்வியப் பிரபந்தம்" ஆக்கினார் என்பதை நாம் அறிவோம். இங்ஙனம், 'தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்'[2] உரைக்கப் பெற்ற திருக்குறளின் கருத்துகளை வள்ளுவர்க்குப் பின்னர் வந்த கவிஞர்கள் தம் நூல்களில் பொதிந்து போற்றினர். அங்ஙனமே, 'மயர்வற மதிநலம்'[3] அருளப்பெற்ற ஆழ்வார் களும் தம் பாசுரங்களில் வள்ளுவனாரின் ஒரு சில கருத்து களைப் பெய்து வைத்துள்ளனர். ஆழ்வார்கட்குப் பின்னர்த் தோன்றிய பரிமேலழகர் திருக்குறளுக்குத் தாம் எழுதிய உரையில் ஆழ்வார் பாசுரங்களில், சிறப்பாக நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரங்களில், சிலவற்றை இலக்கியக் கருத்துகளுக்கும் சமயக் கருத்துகளுக்கும், இலக்கணக் குறிப்பு

---

* சேலம் தமிழ்ச்சங்கம் சிறப்புமலரில் *(1969)* வெளி வந்தது.

1. திருவள்ளுவமாலை—4.
2. ,, —7.
3. திருவாய் 1.1:1

களுக்கும் மேற்கோள்களாக எடுத்துக் காட்டி[4] வான்புகழ் வள்ளுவரையும் ஆண்டவனிடம் ஆழங்கால்பட்ட ஆழ்வார் களையும் போற்றினார்.

இங்ஙனம் எப்பாவலரும் உடன்படத் தக்க முறையில் மொழிந்த முப்பால் மொழிகளை[5] திருமாலடியார்களாகிய ஆழ்வார்கள் தாம் அருளியுள்ள பாசுரங்களில் இறைவன் தன்மையை விளக்க வேண்டுமிடத்திலும், அவனை அநுபவித்த நிலையைப் புலப்படுத்துமிடத்திலும், இறைவனைத் தவிர, தமக்கு வேறு புகலிடம் இல்லையென்று வலியுறுத்துமிடத் திலும், எம்பெருமான் தம் பெருங்கருணைத் திறத்தால் சதா நாம் உய்வதற்குரிய செயல்களை ஆற்றிக்கொண்டுள்ளான் என்பதைக் காட்டும் இடத்திலும், வீடு என்பதை ஒரு தனி நிலமாக விரித்துரைக்கும் இடத்திலும் திருக்குறட் கருத்து களை மேற்கொண்டுள்ளதை ஈண்டுக் காட்டுவோம்.

இறைவன் தன்மை: திருவள்ளுவர் இறைவனை "ஆதிபகவன்"[6] என்று குறிப்பர். 'முதற் கடவுள்' என்பது இதன் பொருள். 'பகவன்' என்பதை 'பகவாந்' என்ற வடமொழியின் விகாரமாகக் கொண்டால் நிறைந்த மகிமை, தைரியம், கீர்த்தி, ஐசுவரியம், ஞானம், வைராக்கியம் என்ற ஆறு குணங்களையும் உடையவன் என்று பொருள் கொள்ள லாம். நம்மாழ்வாரும் "அந்தமில் ஆதியம் பகவன்"[7] என்று அருளிச் செய்திருத்தல் காண்க. வள்ளுவர் முழுமுதலை "வாலறிவன்"[8] என்று குறிப்பிடுவர். உண்மையான அறி

---

4. குறள்—349இன் உரையில் திருமாய். 1.2;5 பாசுரமும், குறள்—370இன் உரையில் திருவாய். 2.8:10; 8.8:6 என்ற பாசுரங்களும், அரசனுக்கு 'இறைவன்' என்று பெயர் கூறப்பெறுவதை விளக்குமிடத்தில் திருவாய் 4.4:8 பாசுரமும் ஆளப்பெற்றுள்ளமை காண்க.
5. திருவள்ளுவமாலை—9.
6. குறள்—1,
7. திருவாய், 1.3:5.
8. குறள்—2.

வினை யுடையவன் என்பது இதன் பொருள். நம்மாழ்வாரும் "அடலாழி கொண்ட அறிவன்"[9] என்று அருளியுள்ளார். "மலர்மிசை ஏகினான்"[10] என்பதில் "மலர் என்பது இதய கமலத்தைக் குறித்தது. அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேரும் கடவுளைக் குறிக்கின்றது இச்சொற்றொடர். சடகோபரும்,

"மனன் அகம் மலம்அற
மலர்மிசை எழுதரும்
மனன்உணர் அளவுஇலன்"[11]

என்று அருளிச் செய்துள்ளமை காண்க. "வேண்டுதல் வேண்டாமை இலான்"[12] என்ற கடவுளைக் குறிக்கும் வள்ளுவரின் தொடர் நம்மாழ்வாரின்,

"கொள்கை கொளாமை இலாதான்
எள்கல் இராகம் இலாதான்"[13]

என்ற பாசுரப்பகுதியுடன் ஒப்பு நோக்கத்தக்கது. 'குணம் பார்த்துக் கொள்ளுகையும், குணமின்மையைப் பார்த்து கைவிடுகையும் இல்லாதவன்; கைவிடுகைக்குக் காரணமான வெறுப்பும் கைகொள்ளுகைக்குக் காரணமான விருப்பும் இல்லாதவன்' என்பது இதன் பொருள். வள்ளுவரின் "இறைவன் பொருள் சேர் புகழ்"[14] என்பதிலுள்ள 'இறைவன்' என்ற சொல்லும் "இருந்தான் என் உள்ளத்து இறைவன்"[15] என்ற பாசுரப் பகுதியிலுள்ள 'இறைவன்' என்ற சொல்லும் ஒன்றாக உள்ளது. "பொறிவாயில்

---

9. திருவாய்.
10. குறள்—3
11. திருவாய் 1.1:2
12. குறள்—4
13. திருவாய்—1.6:5
14. குறள்—5
15. பெரி.திரு.—11.3:2.

ஐந்தவித்தான்"[16] என்ற குறட்பகுதியிலுள்ள 'ஐந்தவித்தான்' என்பது 'ஐந்து அவாவினையும் ஒழித்தவன், அஃதாவது ஐந்து பொறிகட்கும் தலைவன்' என்று இறைவனைக் குறிக்கின்றது, "இருடீகேசன்"[17] என்பது திருமாலின் திருநாமங்களுள் ஒன்று. இருடீகேசன்—ஹ்ருஷீக ஈசன்; ஹ்ருஷீகம் என்பது இந்திரியங்கட்குப் பெயர்; அவற்றிற்குத் தலைவன் என்பது பொருள். "தனக்குவமை இல்லாதான்"[18] என்ற கடவுளை குறிப்பிடும் சொற்றொடர் "ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா"[19] "தன்னொப்பார் இல் அப்பன்"[20] என்ற திருவாய்மொழிச் சொற்றொடர்களுடன் பொருளில் ஒத்துள்ளன. ஒப்பில்லாதவன் என்பதால், உயர்வில்லாதவன் என்பதும் பெறப்படும். "அறவாழி அந்தணன்"[21] என்பது 'தருமம் நிரம்பியவன்' என்பது பொருள். இச்சொற்றொடர் "அறவனை ஆழிப்படை அந்தணனை"[22] என்ற ஆழ்வார் சொற்றொடருடன் ஒப்பு நோத்தக்கது. 'தரும உருவத்தை யுடையவனும் சக்கரப் படை ஏந்தியவனும்' என்பது இதன் பொருள். திருவள்ளுவர் இறைவனை "எண்குணத்தான்"[23] என்று குறிப்பிடுவர். பரிமேலழகர் சைவாகமத்தில் கூறப் பெற்றுள்ள தன்வயத்தனாதல் முதலிய எண்குணங்களை இதற்குப் பொருளாகக் கொள்வர்.[24] வைணவ நூல்களுள் கூறப்பெற்றுள்ள வாத்சல்யம், சுவாமித்வம், சௌசீல்யம், சௌலப்பியம், ஞானம், சக்தி, பிராப்தி (வியாபகத்துவம்), பூர்த்தி என்ற எட்டுக் குணங்களையும் கொள்ளத் தடை

---

16. குறள்—6
17. திருவாய்—2.7:9,10.
18. குறள்—7.
19. திருவாய்—2.3:2
20. திருவாய்—6.3:9.
21. குறள்—8.
22. திருவாய்—1.7:1.
23. குறள்—9.
24. குறள்—9 இன் உரை காண்க.

யொன்றும் இல்லை. மேலும் இறுதிக் குறளின் "இறைவன் அடி சேராதார்"[25] என்ற தொடரிலுள்ள 'இறைவன்' என்ற சொல், எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாய்த் தங்கு கின்றவன் என்ற பொருளைத் தருகின்றது. இறுத்தல் - தங்குதல். இக்கருத்து "எங்கும் உளன் கண்ணன்"[26], "உடல் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்"[27] என்ற ஆழ்வாரின் வாக்குகளிலும் வந்துள்ளமை கண்டு மகிழ்க.

இறையநுபவம் : ஆழ்வார்கள் இறைவனை அநுபவிக்கும் பல முறைகளில் தலைசிறந்தது அவர்கள் தாமான தன்மையை விட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசி அவன்மீது ஆழங் கால்படுவது ஆகும். இப்படி அநுபவிக்கும் திறத்திலும் அவ்வநுபவம், தாய் பேசுவது போலவும், தலைமகள் சொல் வதுபோலவும், தோழி பகர்வது போலவும் வடிவு கொள்ளும். அப்போது ஆழ்வார்கட்குத் தம் ஆண்மைப் பெயர் நீங்கி பெண்மைப் பெயர் வழங்கப்பெறும். பராங்குசர் (நம்மாழ்வார்) பராங்குசநாயகி என்றும், திருமங்கை மன்னன் பரகால நாயகி என்றும் வழங்கப்பெறுவர். இந் நிலையிலும் அவர்களிடம் வள்ளுவர் கருத்துகள் வெளிப் படுவதைக் காணலாம்.

எம்பெருமான் பராங்குசநாயகிக்குக் காதல் விளை வித்ததை,

> "ஊரவர் கவ்வை எருஇட்டு
> அன்னைசொல் நீர்மடுத்து
> ஈரநெல் வித்தி முளைத்த
> நெஞ்சப் பெருஞ்செய்யுள்
> பேரமர் காதல் கடல்
> புரைய விளைவித்த

---

25. ஷ—10.
26. திருவாய்.—2, 8:9.
27. ,, 1. 1:7.

கரரமர் மேனிநம் கண்ணன்
தோழீ கடியனே.''[28]

[கவ்வை - பழிச்சொல்; பெருஞ்செய் - பெரியவயல்;
ஈரநெல் - அன்பாகிய நெல்; பேர் அமர் காதல் -
பெரியதாய் அமர்ந்த பக்தி]

என்ற பாசுரத்தில் காணலாம். ஒரு வயலில் பயிர் செழிப்புற்றோங்கி வளர வேண்டுமாயின் முதலில் நல்ல எரு இடல் வேண்டும்; அதன் பிறகு தண்ணீர் பாய்ச்ச வேண்டும்; பின்னர் நெல் விதைக்க வேண்டும். இத்தனைச் செயல்கட்குப் பின்னர் அது செழிப்பான பயிராய் வளர்ந்து விளங்கும். அதுபோல இங்கு ஆழ்வாருடைய நெஞ்சாகிய பெரிய வயலுள் காதலாகிய பயிர் நன்கு வளர்வதற்குப் "பக்தியுழவனாகிய''[29] எம்பெருமான் ஆற்றும் செயல்கள் உருவகப் படுத்தப்பெற்றுள்ளன. ஆழ்வார் நாயகி பகவத் காதல் கொண்ட நாள் தொட்டு ஊரார் பழி சொல்லத் தொடங்கினர். அந்தப் பழியையே காதலுக்கு எருவாக இட்டவன் எம்பெருமான். ஊரார் பழி சொல்லாதிருப்பின் ஒருகால் ஆழ்வார் நாயகி பக்தியை விட்டிருப்பள் போலும். ஈண்டு,

"கவ்வையால் கவ்விது காமம் அதுஇன்றேல்
தவ்வெனும் தன்மை இழந்து''[30]

[கவ்விது - அலர்ந்தது; தவ்வென்னும் - சுருங்கும்]

என்ற குறளின் கருத்து ஒருபுடை ஒப்பு நோக்கலாகும். ஊரவர் பழிச்சொல்லைக் கொண்டே இவளுடைய பகவத் காதலை அறிந்து அறிவுரை சொல்லத் தொடங்கினாள் இவளுடைய தாய். அந்த அறிவுரையே நீர் பாய்ச்சினது போலாயிற்று. எருவைப் புலத்திற்கு ஒரு சமயம்தான் இடுவர்;

---

28. திருவாய். 5. 3:4.
29. நான். திருவந்—23.
30. குறள் - 1144

ஆனால் நீர் மாறாமல் பாய்ச்சப்பெறுதல் வேண்டும். இதனால் ஊரார் ஏதோ ஒரு சமயம் பழிசொல்லினர் என்பதும், இல்லத்தில் உடனிருக்கும் அன்னை எப்போதும் 'இதோபதேசம்' பொழிந்துகொண்டே இருப்பள் என்பதும் பெறப்படும். இத்தகைய பண்பட்ட உள்ளமாகிய பெரிய வயலில் எம்பெருமான் அன்பாகிய நெல்லை விதைத்தான். 'பெருஞ்செய்' என்பதில் பெருமையை விட்டுச் சிறப்பித்ததை "ஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே புடைபடுத்தி நித்ய விபூதியோடு பாதிப் பரப்புடையதாம்படி பெருக்கினானா யிற்று"[31] என்று கூறுவர் நம்பிள்ளை. என்னதான் எரு இட்டு நீர் பாய்ச்சினாலும் மேல் மழை பெய்தல் இல்லையாகில் அப்பயிர் தலை குளிர்ந்திராதன்றோ? ஆகவே, அவன் (பகவான்) தன் காளமேகத் திருவுருவைக் காட்டிக் காட்டி இக் காதலை வளர்த்துக்கொண்டு போனான் என்பதை 'விளைவித்த காரமர் மேனி (நம் கண்ணன்)' என்ற தொடர் விளக்குகின்றது. இந்த அரிய பாசுரத்தில்,

> "ஊரவர் கவ்வை எருவாக அன்னைசொல்
> நீராக நீளும்இந் நோய்"[32]

என்ற வள்ளுவரின் குறள் பதிந்திருப்பதைக் கண்டு மகிழ்க. மேலும் 'ஊரவர் கவ்வை' என்ற தொடர் மேற்குறிப்பிட்ட திருவாய் மொழிப் பாசுரத்திற்கு முன்னுள்ள மூன்று பாசுரங் களில்[33] வந்துள்ளமையும் நோக்கத் தக்கது.

**நாராயணனே சரணம் :** குலசேகராழ்வார் நாராயணனை யன்றித் தமக்கு வேறு சரணமில்லாமையைப் பல எடுத்துக்

---

31. பகவத் விஷயம் பகுதி 5:5; 3:4 வியாக்கியானம் காண்க; ஸம்ச்லேஷம் - கலவி; விச்லேஷம் - பிரிவு; நித்ய விபூதி - பரமபதம்,
32. குறள்—1147:
33. திருவாய்—5. 3 : 1, 2, 3.

காட்டுகள் மூலம் திருவித்துவக் கோட்டம்மான் முன்னிலை யில் விண்ணப்பம் செய்கின்றார்;

"மீன்நோக்கும் நீள்வயல்சூழ்
வித்துவக்கோட்டு அம்மாஎன்
பால்நோக்கா யாகிலும்உன்
பற்றுஅல்லால் பற்றிலேன்
தான்நோக்காது எத்துயரம்
செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழும்
குடிபோன்று இருந்தேனே"[34]

*[நோக்கும் - ஆசையோடு பார்க்கும்; நீள் - விசால மான; தார்வேந்தன் - மாலையை யணிந்துள்ள அரசன்; கோல் - செங்கோல்]*

இப்பா சுரத்தில் எம்பெருமானை அரசன் நிலையிலும் தம்மைக் குடிகளின் நிலையிலும் வைத்துக் கூறுகின்றார் ஆழ்வார். இதனால் பரமான்மாவுக்கும் சீவான்மாவுக்கும் உள்ள உறவு அரசனுக்கும் குடிகளுக்கும் உள்ள உறவு போன்றது என்பதனை விளக்குகின்றார். அஃதாவது, இரட்சிய - இரட்சக பாவனையில் கூறப்பெற்றுள்ளது; இறைவன் காப்பவனாக வும் குடிமகன் காக்கப்பெறுபவனாகவும் உள்ளான் என்பது பெறப்படுகின்றது. "வித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமானே! அடியேன்மீது நீ அருள் நோக்கம் செய்யா தொழியினும், உன்னைச் சரணமாகப் பற்றுதலை விட்டு வேறொருவரைச் சரணம் புகேன். குடிகளைப் பாதுகாப்பதற் கென்று ஏற்பட்ட மாலையணிந்துள்ள மன்னன் அதற்கேற்ற வாறு குடிகளைக் கவனித்துப் பாதுகாவாமல் எப்படிப்பட்ட துன்பங்களைச் செய்தாலும், அவனது செங்கோலை நோக்கியேவாழும் குடிகளை ஒத்துள்ளேன்" என்று ஆழ்வார் கூறுவதில்,

---

34. பெரு. திரு—5:3.

"வான்நோக்கி வாழும் உலகுஎல்லாம் மன்னவன்
கோன்நோக்கி வாழும் குடி"[35]

என்ற குறள் அமைந்துள்ளதைக் காண்க. உலகெல்லாம் வானத்தை நோக்கி வாழ்தலை,

"எத்தனையும் வான்மறந்த
காலத்தும் பைங்கூழ்கள்
மைந்தெழுந்த மாமுகிலே
பார்த்திருக்கும்"[36]

*[பைங்கூழ்கள் - பசுமைதாங்கிய பயிர்கள்; மைத்து - கருநிறம் கொண்டு; முகில் - மேகம்]*

என்று கூறி, தாம் அநுபவிக்கும் துன்பங்களை இறைவன் களையானாகிலும் தம் மனத்தை அவனிடத்திலேயே செலுத்துவதாகக் கூறுகின்றார். காளமேகத்தின் நிலையில் எம்பெருமானையும் பயிரின் நிலையில் தம்மையும் வைத்துக் கூறி உலகத்தின் உயிர்கட்கெல்லாம் உயிர் போன்ற அடிப்படை பரமான்மாவே என்ற உண்மையைப் புலப்படுத்துகின்றார் ஆழ்வார்.

இறைவனின் பெருங்கருணை : நாம் அறிந்த நிலையிலும் அறியாத நிலையிலும் எம்பெருமான் நாம் உய்வதற்குரிய செயல்களை ஆற்றிக் கொண்டேயுள்ளான் என்று கூறுவர் திருமழிசையாழ்வார்.

"வித்தும் இடவேண்டும்
கொல்லோ விடைஅடர்த்த
பத்தி யுழவன்
பழம்புனத்து—மொய்த்தெழுந்த

35. குறள்—542.
36. பெரு. திரு—5:3.

காா்மேகம் அன்ன
　　கருமால் திருமேனி
நீர்வானம் காட்டும்
　　நிகழ்ந்து"[37]

[விடை - காளை; பத்தி உழவன் - (இங்கு இறைவன்; பழம் புனம் - (இங்கு)சம்சாரம்]

என்ற பாசுரத்தில் இக் கருத்து வந்துள்ளது. வைகுந்தத்தில் எம்பெருமான் நித்தியர்களோடும் முத்தர்களோடும் கூடியிருக்கும் இருப்பில் மகிழ்ச்சி கொள்வான் இலன். பல பிள்ளைகளைப் பெற்ற ஒரு தந்தை தன் ஒரு மகன் மட்டிலும் தொலைநாட்டில் இருக்க, மற்ற எல்லா மக்களுடன் கூடி வாழ்ந்தாலும் அதனால் மகிழ்ச்சிக் கொள்ளாமல் தொலை நாட்டிலுள்ள தன் மகனது பிரிவையே எண்ணிக் கவல்வது போன்று எம்பெருமானும் நமக்குப் புலன்களைத் தந்தருளி அவற்றைக்கொண்டு நாம் செயலாற்றும் திறன்களையும் நமக்கு நல்கியுள்ளான். தான் நம்மிடம் நேரில்வரின் நாம் அகந்தை மிக்கு அவனை விரட்டி விடுவோம் என்று எண்ணி ஒருவர் கண்ணுக்கும் தோன்றாது உறங்குகின்ற குழந்தையைத் தாய் முதுகில் அணைத்துக் கொண்டு கிடக்குமாப்போலே எம்பெருமானும் நம்மை விடமாட்டாமல் அந்தர்யாமியாக இருந்து நம்மைத் தொடர்ந்துகொண்டே இருப்பன். நாம் தீச்செயல்களை மேற்கொள்ளுங்கால் நம்மை அவற்றினின்றும் திருப்ப முடியாது அநுமதிப்பான். ஆயினும், விழிப்பாக இருந்து நாம் புரியும் தீச் செயல்களுள் ஏதாவது ஒன்று நற்செயல் என்று பெயரிடக் கூடியதாயிருக்குமோ என்று கவனித்து அதனைக் கண்டு உடனே நம்மை அணுகி வந்து உய்விப்பான் என்பது சமய நூல்கள் கூறும் உண்மையாகும்.

எனவே, உலகப் படைப்பையும் நமது பிறப்பையும் உற்று நோக்கினால், அவன் புரியும் செயலைப் பார்த்துக்

37. நான். திருவந்—23.

கொண்டிருப்பது தவிர நாம் யாதொரு முயற்சியும் மேற் கொள்ள வேண்டாதபடியாக இருக்கும். தரிசு திருத்தின புதிய நிலத்தில் உதிர்ந்த தானியமே முளைத்து வளர்த்து தலைக்கட்டுமாப்போலே அறியாது செய்த நற்செயல்கள் (அஜ்ஞாத ஸுக்ருதங்கள்) நம்மிடத்தில் தாமாக விளையும் படியாகவன்றோ பத்தியுழவன் என்று வழங்கப்பெறும் ஈசுவரன் அநாதி சம்சாரத்தைத் திருத்தி வாழவைப்பது? இப்படிப்பட்ட பத்தியுழவன் பழம்புனத்தில் (சம்சாரத்தில்) நாம் உபாயத்தைக் கடைப்பிடிக்க வேண்டுவதில்லை என்று பெற வைப்பர் ஆழ்வார்; ஆழ்வார் எம்பெருமானுக்கு 'பத்தியுழவன்' என்ற திருநாமம் இட்டு மகிழ்கின்றார். தம் மேல் நமக்கு பக்தியுண்டாக வேண்டும் என்று இறைவனே வேளாண்மை நடத்துகின்றான். படைப்பு, அவதாரங்கள் மூலம் இதனை நிறைவேற்றுகின்றான்.

எம்பெருமானுடைய வேளாண்மை பலித்து நாம் பரம பதம் சென்று நித்தியாநுபவம் பண்ணுவதென்பது விரை வில் நடைபெறக் கூடியதன்று. அதற்குக் காலதாமதம் ஏற்படும். அது வரையில் நாம் காலத்தை எங்ஙனம் கழிப்பது? போலி கண்டு பொழுது போக்கலாம். நீர் கொண்டெழுந்த மேகம் நமக்கெதிரே நின்று காளமேகம் போன்ற கரிய திரு மாலினது திருமேனியைக் காட்டி நிற்கும். இங்ஙனம் காணும் போலிகளைக் கண்டு இறைவனைக் காண்பதாகவே எண்ணிப் பொழுது போக்கலாம் என்பது ஆழ்வாரது குறிப்பு. இந்த பாசுரத்தில்,

> "வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
> மிச்சில் மிசைவால் புலம்"[38]

[மிச்சில் - மீதியுள்ளவை; மிசைவான் - உண்பான்]

என்ற குறள் பெயப்பெற்றிருத்தல் கண்டு மகிழத் தக்கது.

---

38. குறள்—85.

வீடுபற்றிய கருத்து : வீடுபேற்றினைப் பற்றி வள்ளுவர் தனியாக பால், இயல்கள் வகுத்துக் கூறவில்லையாயினும் வீடுபற்றிய கருத்து அவரது குறள்களில் மிளிர்கின்றது. வீடு ஒரு தனி உலகம் என்பது தமிழ் நாட்டின் பழம் கொள்கையாகக் கருதலாம். வீட்டினை "அந்த மில் இன்பத்து அழிவில் வீடு"[39] என்று சிறப்பிப்பர் பரிமேலழகர். திருவள்ளுவரும்,

> "மலர்மிசை ஏகினான் மாண்அடி சேர்ந்தார்
> நிலமிசை நீடுவாழ் வார்"[40]

என்ற குறளில் வீட்டை (மோட்சத்தை) 'நிலம்' என்றார். இக்கருத்தையே அவர் "வரன் என்னும் வைப்பு"[41] - 'எல்லா உலகத்திலும் மேம்பட்ட வீட்டுலகம்'; "வானோர்க்கு உயர்ந்த உலகம்"[42] —'தேவர்களாலும் அடைய முடியாத வீட்டுலகம்'; "வானம்"[43]—'வீட்டுலகம்' என்று மேலும் விளக்குவர். இறுதியில் கூறப்பெற்ற வானம் மெய்யுணர்வு பெற்றவர் அடையும் இடமாகக் கூறப்பெற்றமையால் இங்கு 'வானம்' என்பது வீட்டுலகத்தைக் குறித்தது. தமிழ்நாட்டின் இப்பழங்கொள்கையையே ஆழ்வார்களும் மேற்கொண்டனர் எனக் கருத இடம் உண்டு. வீடு ஒரு தனி உலகம் என்பதை நம்மாழ்வார் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். அவரது,

> "புலன்ஐந்து மேயும்
> பொறிஐந்தும் நீங்கி
> நலன்அந்தம் இல்லது ஓர்
> நாடு புகுவீர்"[44]

---

39. அறத்துப்பால்—உரைப்பாயிரம்.
40. ஷ—3.
41. ஷ—24.
42. ஷ—346.
43. ஷ—353.
44. திருவாய்—2.8:4.

என்ற பாசுரப் பகுதியில் நலம் அந்தம் இல்லது ஓர் நாடு என்றது காண்க. இதில் 'அந்தம் இல்லது' என்பதை நலம், நாடு என்ற இரண்டிற்கும் சேர்த்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அந்தம் இல்லதோர் நாடு—அழிவில்லாத ஒப்பற்ற நாடு; நலம் அந்தம் இல்லதோர் நாடு—அழிவில்லாத இன்பத்தையுடைய நாடு. நலம் - இன்பம். நாடும் அழிவில்லாதது; அதனை அடைந்தார்க்கு உண்டாகும் இன்பமும் அழிவில்லாதது. மேலும் அவர் வீட்டினை "வைகுந்தம்"[45], "இலங்குவான்"[46], "பொன் உலகு"[47] என்றெல்லாம் குறிப்பிட்டுள்ளமையையும் காண்க.

வள்ளுவர் குறிப்பிட்ட 'வானம்' மெய்யுணர்வு பெற்றவர் அடையும் இடமாகக் கூறப் பெற்றமையால் இங்கு 'வானம்' என்பது வீட்டுலகத்தைக் குறித்தது. "வையத்தின் வானம் நணியது உடைத்து"[48] என்பதால் அவர்கட்கு இவ்வுலகத்தை விட வீட்டுலகம் அண்மையில் இருப்பதாகத் தோன்றும். இதனையே ஆழ்வாரும்,

> "பொன்னுலகு ஆளீரோ"
> புவனிமுழுதும் ஆளீரோ"[49]

என்பதனால் மெய்யுணர்வு பெற்றோர்க்கு இவ்வுலகத்ினும் வீடு அணித்தாகத் தோன்றும் என்ற குறிப்பினை வெளி யிட்டுள்ளமையைக் காண்க.

இறுவாய் :

> "வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து
> வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"[50]

---

45. திருவாய் 2. 1:11; 2.5:11; 4.4:11; 4.7:11; 10:11 முதலியவை.
46. ஷை—3.8:11.
47. ஷை—6.7:11
48. குறள்—353.
49. ஷை—6.8:1
50. தே. கீ; செந்தமிழ்நாடு—7.

என்று வள்ளுவரைச் சிறப்பித்தார் புதுமை கவிஞர் பாரதியார். இன்று வள்ளுவரின் திருக்குறள் பலமொழிகளில் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளது; பெயர்க்கப் பெற்றும் வருகின்றது. இனி வருங்காலத்தில் உலக மொழிகள் எல்லாவற்றிலும் தோன்றும் கவிதை இலக்கியத்திலும் வேறு பல இலக்கியங்களிலும் வள்ளுவரின் கருத்துகள் பெயப்பெறும் என்பது உறுதி.



## 8. கவிதையால் கடவுள் வழிபாடு*

பாட்டால் பரமனைப் பாடுவதையே பண்பும் பயனு மாகக் கொண்டு, பக்தி மூலம் அவனைக் காண்பதையே குறிக் கோளாகக் கருதி அடிமை செய்ய விழைந்தவர்கள் 'மயர்வற மதிநலம் அருளப்பெற' ஆழ்வார்கள் ஆவர். "சுடர்ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை"[1], "இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்"[2]. "சொல்மாலை ஏத்தித் தொழுதேன்'[3], "வாசகத்தால் ஏத்தினேன்"[4], "...... மாதவனை சொல்மாலை எப்பொழுதும் சூட்டு"[5], "சழக்கு நாக் கொடு புன்கவிசொன்னேன்"[6], "கலி கன்றி செஞ் சொலால் எடுத்த தெய்வ நல்மாலை"[7], "முகில் வண்ணன் அடிமேல் சொன்ன சொல்மாலை"[8] என்ற ஆழ்வார்களின் திருவாக்குகளாலேயே இதனை அறியலாம். இந்த ஆழ்வார் களுள் தலைசிறந்தவர் நம்மாழ்வார்; ஏனைய ஆழ்வார்கட்

*புதுவை R. தேசிகன் பிள்ளை மணிவிழாச் சிறப்பு மலரில் (1970) வெளிவந்தது.

1. முதல். திருவந்—1.
2. இரண். திருவந்—74.
3. ஷை—85.
4. பெரி. திருவந்—45.
5. ஷை—65.
6. பெரியாழ். திரு.—5.1:2.
7. பெரி. திரு—1.1:10.
8. திருவாய்—7.2:11.

கெல்லாம் தலைவராகக் கருதப்பெறுபவர். வைணவ தத்துவங்களைச் சிறப்பாக வெளியிடுவன இவ்வாழ்வாரின் பாசுரங்களே என்பது ஓரளவு முற்றும் கற்றுணர்ந்த மூதறிஞர்களின் கருத்தாகும்.

கருவிலே திருவுடைய நம்மாழ்வார் பிறக்கும்பொழுதே பக்தியும் அவருடன் கூடப் பிறந்தது. இறைவனைக் "கரு அரங்கத்துள் கிடந்து கை தொழுதவர்"[9] அவர்.

"நெடுங்காலமும் கண்ணன் நீள்மலர்ப்
பாதம் பரவிப்பெற்ற
தொடுங்கால் ஒசியும் இடையிளமான்"[10]

என்பதால் பராங்குச நாயகி (நம்மாழ்வார்) இறையருளால் அரிதாகப் பிறந்தவள்; செல்வமாக வளர்க்கப்பெற்றவள். அறிவு தோன்றுதற்குரியதல்லாத மிக்க இளம் பருவத்திலேயே இவ்வாழ்வார் இறைவன்பால் பேரன்பு கொண்டவர் என்பதை,

"அறியாக் காலத்துள்ளே
அடிமைக்கண் அன்புசெய்வித்து
அறியா மாமாயத்து
அடியேனை வைத்தாயால்"[11]

என்ற இவரது திருவாக்காலேயே அறியலாம். இவருடைய ஞானக்கண்ணுக்குப் புலனான இறைவன் இவருக்குத் "தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்திப்ப"[12] அவனை இடைவிடாது நினைப்பதனால் உண்டான தெவிட்டாத பேரின்பம் அப்பொழுதைக் கப்பொழுது புதிய புதிய ஆரா அமுதம் உண்டாற்போன்று பெருகி வளர்வதாயிற்று. அவ்வின்ப உணர்ச்சி உள்ளடங்காத நிலையில் எண்ணம் புகுந்து தித்திக்கும் அமு

9. முதல். திருவந்.—6.
10. திருவிருத்.—37.
11. திருவாய்—2.3:3.
12. ஷை—4.3:10.

தாகிய எம்பெருமானைப்பற்றிப் பாட்டால் பனுவல்கள் இயற்றத் தொடங்கினர்.

> "கண்டுகொண்டு என்கண்இணை
> ஆரக் களித்து
> பண்டை வினையாயின
> பற்றோடு அறுத்து
> தொண்டர்க்கு அமுதுஉண்ணச்
> சொல்மாலைகள் சொன்னேன்
> அண்டத்து அமரர்
> பெருமான் அடியேனே"[13]

என்பது அவர் திருவாக்கு. இங்கு ஆழ்வார் 'கண்டுகொண்டு என்கண் இணை ஆரக் களித்ததெல்லாம்' தம் ஞானக் கண்ணால் கண்டவையே யாகும். அக்களிப்பே, அந்த எக்களிப்பே, சொல்மாலைகள் வடிவம் பெற்றது. இவரது பாடல்களில் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மலர்; ஒவ்வொரு திருப்பாசுரமும் ஒவ்வொரு மாலை. அச்சொல்லின் பொருள், அம்மலரின் நறுமணம், நறுந்தேன் ஆகும். "சொல் லெனும் பூம்போது தோன்றிப், பொருளென்னும் நல்லிருந் தீந்தாது நாறுதலால்"[14] என்ற கவி மரபினையும் காண்க.

ஆழ்வார் இறைவனிடத்துக் கொண்ட ஆராத காதலே[15] இப்பாசுரங்கள் தோன்றுவதற்கு முதற் காரணம் ஆகும். அவாவின் தன்மை யாது? விரும்பிய பொருளை அநுபவித்து முடியாதது அவாவாகும். ஒரு பொருளைத் தொடர்ந்து அநுபவிக்க அநுபவிக்க அவா பெருகுவதல்லாது முடிவு அடைவதில்லை. பிற காரணங்களால் அவ்வநுபவத்திற்கு இடையூறு நிகழ்வதால் ஒரு வேளை அவ்வவா தணியுமே யன்றி, அநுபவித்தலால் அது முடிவு எய்தாது.

---

13. ஷை—9.4:9.
14. பத்துப்பாட்டு - மதுரைக்காஞ்சி - இறுதி வெண்பா.
15. இதனை 'அவா' என்பர் ஆழ்வார். "காண்பான் அவாவுவன்" (திருவிருத்.—84) காண்க.

அநுபவிக்க அநுபவிக்க விறகு மேன்மேலும் இடப்பெற்ற நெருப்புப்போல அந்த அவா பெருகுவதல்லது தணியாது என்பர் வள்ளுவப் பெருந்தகை[16]. அதன் தன்மையை அப்பெருமான் "ஆரா இயற்கை அவா"[17] என்று விளக்கு வார். ஆழ்வாரின் அவா முழுவதும் இறைவன்பாலே செல்லுவதாயிற்று. இதனை அவரே 'ஆராத காதல் குருகூர்ச் சடகோபன்''[18] என்று குறிப்பிடுவர். அவரது இந்த இயல்பினை அவரது பிற பாசுரங்களாலும் ஒருவாறு அறியலாம். ஞானக் கண்ணால் கண்ட இறைவனை ஊனக் கண்ணாலும் காண விழைந்து கண்ணீர் பெருக நெஞ்சம் நெக்குருகிப் பன்முறைக் கூவிக் கூவி அவனை அழைக்கின்றார் ஆழ்வார். அவன் காட்சி தரவில்லை.

> "கூவிக்கூவி நெஞ்சுருகிக் கண்பனி
> சோர நின்றால்
> பாவிநீ என்றுஒன்று சொல்லாய்
> பாவியேன் காணவந்தே"[19]

என்று அங்கலாய்க்கின்றார். "நீ அன்புடன் காட்சி அளிக்க விரும்பாவிடினும், என் கண் முன்னே தோன்றி உன் விருப்பமின்மையை, 'நீ பாவி; அதனால் நினக்குக் காட்சி தருதல் இயலாது' என்று கூறுக" என்கின்றார். இறைவன் வெறுப்புடன் கூறுவதும் விருப்புடன் உரைப்பதும் ஆழ்வாருக்கு ஒன்றேயாம். அவனைக் காண்டலும் அவன் சொற் கேட்டலுமே ஆழ்வாரின் ஆசையாகும். மேலும்,

> "சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்
> இறப்பில் எய்துக, எய்தற்க; யானும்

---

16. குறள்—343 (உரை)
17. ஷை—370
18. திருவாய்.—2.1:11
19. ஷை 4.7;3. இப்பாசுரத்தின் கருத்தினை 1199ஆம் குறளின் கருத்துடன் ஒப்பிடுக.

பிறப்பில் பல்பிற விப்பெரு மானை,
மறப்பு ஒன்று இன்றி, என்றும் மகிழ்வேனே."[20]

என்ற பாசுரத்தால் இறைவனை நினைந்து மகிழ்வதே தம்' விருப்பம் என்பதையும், அவன் தரும் பேற்றினைத் தாம் கருதவில்லை என்பதையும் புலப்படுத்துவர்.

இங்ஙனம் ஆழ்வாரால் பாடப்பெற்ற சொல் மாலைகளால் இரண்டு பயன்கள் விளைவனவாயின. ஒன்று, ஆழ்வாரின் "பண்டை வினையாயின பற்றோடு ஒழிந்தன."[21] இஃது உடன் விளைந்த பயன்; தானாக ஒழிந்த பயன். அதுவும் அவனது அருளால் ஏற்பட்ட பயன். இதனை ஆழ்வாரே, "கேசவன் எம்பெருமானைப், பாட்டுஆய பலபாடி பழவினைகள் பற்று அறுத்து"[22] என்று பின்னும் கூறுவதனாலும் அறியலாம். மற்றொரு பயன், அச்சொல் மாலைகள் அடியார்கள் செவியால் நுகரும் அமுதமாயின.

"கண்ட ஆற்றால் தனதே உலகுஎன
நின்றான் தன்னை
வண்டமிழ் நூற்க நோற்றேன்
அடியார்க்கு இன்பமாரியே."[23]

என்பது ஆழ்வார் திருவாக்கு. அடியார்கள் ஆழ்வாரின் சொல்மாலைகளாகிய பாசுரங்களைப் பாடிப் பாடி, பகவதநுபவம் பெற்று, அப்பாசுரங்களின் பொருளை எண்ணி எண்ணி அமுதம் உண்டாற்போல் இன்புற்று மகிழ்வர். இவ்வாழ்வார் பாசுரங்களை நம்போலியர் கற்றாலும் அவை நம் உள்ளத்தில் இன்பவெள்ளப் பெருக்கெடுத்து

20. திரு—2.9:5
21. திரு—9.4;9
22. திரு—10.6:2
23. திரு—4.5:10

ஓடச் செய்வதால் கம்பர் பெருமான் திருவாய்மொழியை ''ஆராவமுதக் கவியாயிரம்''[24] என்று சிறப்பித்துப் போற்று வாராயினர்.

இத் திருப்பாசுரங்கள் யாவற்றையும் ஆழ்வார் தம் ஆற்றலால் செய்ததாக எண்ணி தன்முனைப்புக் கொள்ள வில்லை. எல்லாம் ''மயர்வற மதிநலம் அருளின''[25] இறை யருளால் தம்மைக் கருவியாகக் கொண்டு நிகழ்ந்தன என்பதே ஆழ்வாருடைய நினைவாக உள்ளது.

> "என் நெஞ்சத்து உள்ளிருந்து இங்கு
> இருந்தமிழ்நூல் இவைமொழிந்து
> வல்நெஞ்சத்து இரணியனை
> மார்வுஇடந்த வாட்டாற்றான்''[26]

என்றும்,

> "பண்ணார் பாடல் இன்கவிகள்
> யானாய்த் தன்னைத் தான்பாடி
> 'தென்னா' என்னும் என்அம்மான்.''[27]

என்றும் ஆழ்வாரே தம் திருவாக்கால் கூறுதலால் இதனை அறியலாம். திருவாய்மொழியில் ஒரு பதிகம் முழு வதிலுமே[28] இக்கருத்தினைப் பன்னிப் பன்னி உரைக் கின்றார் ஆழ்வார்.

> ''ஆம் முதல்வன் இவன் என்று தன்தேற்றி, என்
> நாமுதல் வந்துபுகுந்து, நல்இன்கவி

---

24. சடகோப. அந்த.—45
25. திருவாய்.—1.1:1.
26. ஷ்டி—10.6:4
27. ஷ்டி—10.7:5
28. ஷ்டி—7.9.

தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என்
வாய்முதல் அப்பனை''[29]

என்றும்,

''என் சொல்லால் யான்சொன்ன
இன்கவி என்பித்துத்
தன்சொல்லால் தான்தன்னைக்
கீர்த்தித்த மாயன்''[30]

என்றும் கூறுவது காண்க. ''என்னால் தன்னை வன்கவி பாடும் வைகுந்த நாதனே''[31] என்று மீண்டும் இக்கருத்தினையே வலியுறுத்துவர். இறைவனைப்பற்றி மெய்யுணர்வு பெற்ற பெரியோர் யாவரும், எச் செயலும் இறைவன் திருவுளப்படியே நிகழ்கின்றது என்பதாகவே எண்ணுவர். இங்ஙனம் இறைவன் தனக்கு அளித்த பெரும் பேற்றுக்குக் கைம்மாறாகத் தன் உயிரையே அவ்விறைவனுக்குக் காணிக்கையாக்கும் ஆழ்வார் ''அதுவும் மற்று ஆங்கவன் தன்னது''[32] என்று கூறி, அவ்வான்மாவும் அவனுடையதே என்று வலியுறுத்தி, இம்மையிலும் மறுமையிலும் அவனுக்குச் செய்யக்கூடிய கைம்மாறு ஒன்றுமே இல்லை என்பதை ''எதுவும் ஒன்றும் இல்லை செய்வது இங்கும் அங்கே''[33] என்று கூறி அமைவர்.

இங்ஙனம் 'மயர்வற மதிநலம் அருளப்பெற்ற' ஆழ்வார்கள் நமக்கு அளித்துள்ள சொல்மாலைகள் யாவும் என்றும் வாடாத, பக்தி என்ற நறுமணம் மிக்க மாலைகளாகும். அவர்களுடைய திருவாய்களினின்றும் வெளிப்படும் பாசுரங்கள் கல் நெஞ்சத்தையும் கரைத்து இறைவனை நமக்குக் காட்டுபவை.

---

29. ஷை—7.9:3
30. ஷை—7.9:2
31. ஷை—7.9:6
32. ஷை—7.9:10
33. ஷை—7.9:10

"பாட்டினால் உன்னை என்
நெஞ்சத்து இருந்தமை
காட்டினாய்[34]"

என்று திருமங்கை மன்னன் கூறுவதைக் காண்க. எனவே, 'நிறைமொழி மாந்தராம் ஆழ்வார்களின் ஆணையிற்கிளந்த மறைமொழிகளாம்' சொல்மாலைகளைக் கொண்டு இறைவனை வழிபட்டு 'சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து அந்தமில்' பேரின்பத்தை அடைவோமாக. ஆன்மநேய ஒருமைப்பாட்டினை விளைக்க வல்ல அந்தப் பெருவழியில் நாம் நெறிப்பட ஒழுகுவோமாக. அதன் காரணமாக,

"புலன்ஐந்தும் மேயும்
பொறிஐந்தும் நீங்கி
நலம் அந்தம் இல்லதுஓர்
நாடு"[35]

புகுவோமாக. ஆழ்வார்கள் வாழ்க! அவர்தம் அருளிச் செயல்கள் வாழ்க!! வாழ்க உலகெலாம்!!!

---

34. பெரி. திரு.—8.10:9.
35. திருவாய்.—2.8:4,

## 9. ஞானம் கனிந்த மாறன்

திருமால் திருவருளால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் ஆழ்வார் பெருமக்கள். எம்பெருமான் திருக் குணங்களில் ஆழங்கால் பட்டமையால் இவர்கள் 'ஆழ்வார் கள்' என்ற பெயர் பெற்றனர். ஆழ்வார்கள் பன்னிருவர். இவர்களுள் ஒருவர் நம்மாழ்வார். நம்மாழ்வாருக்குப் பெற்றோர் இட்டபெயர் 'சடகோபன்' என்பது. 'மாறன்' என்ற மற்றொரு பெயரும் இவருக்கு உண்டு. சடகோபன் ஏனைய ஆழ்வார்களிலும் சிறப்புற்று 'நம்மவர்' என்று போற்றத்தக்க பெருமை வாய்ந்து 'நம்மாழ்வார்' என்ற திருநாமத்தால் வழங்கப் பெற்றார். ஆழ்வார்களின் தலைவராகவும் கருதப்பெறுகின்றார்.

சடகோபன் திருமாலிடத்து வழிவழியாக அன்பு பூண்டொழுகும் நற்குடியிற் பிறந்த பெரியார். இவருடைய தந்தையார் வேளாளர் மரபைச் சார்ந்த காரியார் என்பவர். 'ஆழ்வார் திருநகரி' என்று இப்போது வழங்கிவரும் திருக்குருகூரைச் சேர்ந்தவர். இவருடைய திருத்தாயார் நாகர்கோவிலுக்கு அருகிலுள்ள திருவண்பரிசாரம் என்னும் திருப்பதியிலுள்ள திருவாழ்மார்பர் என்ற திருப்பெயரைக் கொண்டவரின் திருமகளாகிய உடைய நங்கையார் என்பவர். பெற்றோர்க்கு நீண்ட நாள் மக்கட்பேறு இல்லாமையால்

---

*சென்னை வானொலியில் 'இலக்கியப் பேருரை' தொடரில் 3-9-70 இரவு 9-30க்கு ஒலிபரப்பானது.

திருக்குறுங்குடி எம்பெருமானை வேண்டி அப்பெருமான் திருவருளால் அவர்கட்குப் புதல்வராகப் பிறந்தவர் சடகோபர். இவர் பிறந்த நாள் வைகாசித் திங்கள் விசாக நட்சத்திரம்.

இங்ஙனம் அரிதாகப் பெற்றெடுத்த குறிப்பு இவர் இயற்றியருளிய திருவிருத்தப் பாசுரப் பகுதியால் புலனாகின்றது.

"நெடுங்கா லமும்கண்ணன் நீள்மலர்ப்
பாதம் பரவிப்பெற்ற
தொடுங்கா லொசியும் இடையிள
மான்சென்ற சூழ்கடமே."[1]

என்பதில் இக்குறிப்பைக் காணலாம். இது தலைவி தலைவனுடன் செல்லுதலாகிய 'உடன் போக்கு' என்ற துறையில் அமைந்த பாசுரமாகும்; இரங்கல் துறையைச் சார்ந்தது. நம்மாழ்வார் ஒரு தலைவியின் மனநிலையை அடைந்து, அதே நிலையில் தலைவி தலைவனுடன் சென்றமைக்குத் தாய் வருந்துவதாக அருளிய பாசுரமாகும் இது. தாய் தன் மகளைப் பெற்ற அருமைப்பாட்டைக் கூறு முகத்தால் நம்மாழ்வாருடைய அவதாரச் சிறப்பு குறிப்பாக வெளியிடப்பெற்றுள்ளதைப் பாசுரப் பகுதியில் காணலாம். உடைய நங்கையார் திருமால் திருவடிகளை வணங்கி, அவர் அருளால் நம்மாழ்வாரைப் பெற்றார் என்ற குறிப்பு இதில் கிடைக்கின்றது. நம்மாழ்வாராகிய தலைவி "நல்கூர்ந்தார் செல்வமகள்" என்றாற் போல, அரிதாகப் பெற்றுச் செல்வமாக வளர்க்கப் பெற்றவள்; மிக்க மென்மைத் தன்மையுடையவள்; மிக்க இளமைப் பருவமுடையவள் என்ற இத் தன்மையெல்லாம் நம்மாழ்வாருடைய சிறப்பியல்புகளைக் குறிப்பால் உணர்த்துவன எனக் கொள்ளலாம்.

---

1. திருவிருத்.—37

சடகோபர் பிறந்தநாள் தொட்டுப் பாலுண்ணுதல் முதலிய மக்கள் இயல்பு ஒன்றுமின்றி இருந்தனர். அது கண்ட பெற்றோர் மனங்கவன்று குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாளில் 'மாறன்' என்ற திருப்பெயர் இட்டு திருக்குருகூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள பொலிந்து நின்ற பிரான் திருமுன்பு அக் குழந்தையை விட்டனர். அந்த அருமைக் குழவி திருக்கோயிலிலுள்ள ஒரு புளியமரத்தின் அடியில் சென்று அமர்ந்தது. நம்மாழ்வார் எழுந்தருளியிருந் தனால் அப்புளியமரத்தைப் பின்னுள்ளோர் 'திருப்புளி ஆழ்வார்' என்ற திருப் பெயரால் சிறப்பாக வழங்க லாயினர்.

திருப்புளியாழ்வாரின் திருஅடியில் அமர்ந்த நம்மாழ் வாராகிய குழந்தை பதினாறு ஆண்டு வரையில் கண் விழித்துப் பார்த்தல், பேசுதல் முதலியன ஒன்றுமின்றி இறைவனை நினைந்து அமர்ந்திருத்தது. அதனுடைய உண்மை நிலையை அறியாத பெற்றோர் மிகவும் வருந்தி இருந்தனர். இந்நிலையில் மற்றொரு நிகழ்ச்சி நிகழ்வ தாயிற்று.

திருநகரிக்கு மூன்று கல் தொலைவிலுள்ளது திருக் கோளூர் என்ற திவ்யதேசம். நம்மாழ்வார் அவதரித்த சில ஆண்டுகட்கு முன்பே அத்திருத்தலத்தில் பிறந்தவர் மதுரகவிகள் என்ற அந்தணப் பெரியார். வடமொழி தென்ய மொழி நூல்களையும் சாத்திரங்களையும் கற்றுத் துறை போய வித்தகர் இவர். திருத்தலப் பயணத்தை மேற் கொண்ட இவர் அயோத்தி முதலிய திருப்பதிகளில் உள்ள இறைவனை வணங்கிப் பின்னர் கங்கைக்கரையில் தங்கியிருந்த வர் ஒரு நாள் இரவில் வெளியே வந்தபொழுது தெற்குத் திசையில் ஒரு பேரொளியைக் கண்டு வியப்பெய்தினார். மறுநாள் இரவிலும் அவ்வாறே அப்பேரொளி தோன்ற லாயிற்று. 'தென் திசையில் ஏதோ ஓர் அதிசய நிகழ்ச்சி உள்ளது; அதனைச் சென்று காண்டல் வேண்டும்?' என்று எண்ணிய மதுரகவிகள் தெற்கு நோக்கிப் பயணமானார்.

அன்று முதல் பகலில் உறங்குவதும் இரவில் அப்பேரொளியை நோக்கியவண்ணம் வழி நடப்பது மாகப் பல நாள் நடந்து திருக்குருகூரை அடைந்தார். அவ்வூரை அடைந்ததும் அவ்வொளி காணப் பெறவில்லை. அவ்வூரிலுள்ளாரிடம் 'இவ்வூரில் யாதேனும் அதிசய நிகழ்ச்சி உண்டோ?' என்று வினவி, அவர்கள் கூறியபடி திருப்புளியாழ்வாரின் அடியில் எழுந்தருளியிருந்த நம்மாழ்வாரைக் கண்டார்.

நம்மாழ்வார் கண்விழித்துப் பார்த்தல், பேசுதல் முதலிய செயலொன்றுமின்றி மௌனமாக இருத்தலைக் கண்டவர் அவருடைய நிலைய ஆராய்ந்தறிய எண்ணினார். உடனே ஒரு சிறு கல்லை எடுத்து அவர் முன் இட்டு ஒலி உண்டாக்கினார். அவ்வொலி கேட்ட நம்மாழ்வார் கண்விழித்துப் பார்த்தார். ஒன்றும் பேசவில்லை. பின்னர் மதுரகவிகள் அவருடன் பேசியறிய எண்ணிச் "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வின வினார். அதற்கு நம்மாழ்வார் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று மறுமொழி கூறினார்.

'செத்தது' என்பது உடலைக் குறிக்கின்றது. உடல் மூலப்பகுதியின் விகாரமாக உள்ளது; அறிவற்றது. அதனால் அதனைச் 'செத்தது' என்றார். 'சிறியது' என்பது உயிர்; ஆன்மா. அஃது அணுவடிவினதாக உள்ளது. அஃது உடம்பு முழுவதும் தன் ஞானத்தால் வியாபித்து, உடம்பு முழுவதிலும் நடைபெறும் நிகழ்ச்சிகளை அறிகின்றது; அதனால் அதனைச் 'சிறியது' என்றார். 'பிறத்தல்' என்பது உயிர் தன் வினைகளுக்கேற்ப உடம்பை அடைதல். 'எத்தைத் தின்று எங்கே கிடக்கும்' என்பது, அவ்வாறு உடம்பைப் பெற்ற உயிர் எதனை அநுபவித்து எங்கே இருக்கும் என்ற பொருளையுடையது. 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்பது, உடம்பை அடைந்த உயிர் தன் வினைப் பயனை அநுபவித்துக் கொண்டு அவ்வுடம்பிலேயே இருக்கும் என்ற பொருளை உடையது. உயிர் அவ்வப் பிறப்பிற்குரிய வினை

முடித்து ஒயும் வரை அவ்வவ்வுடம்பிலிருக்கும் என்பது இதன் கருத்தாகும்.

ஆழ்வார் கூறிய விடையைக் கேட்ட மதுரகவிகள் மிகவும் மகிழ்ச்சி அடைந்து ஆழ்வாரையே ஆசாரியனாகக் கருதி, அவரை வணங்கி அவரிடத்தே தங்கிவிட்டார். அங்ஙனம் இருந்த மதுரகவிகளுக்கு நம்மாழ்வார் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற வைணவ தத்துவம் மூன்றின் இயல்பு களை எல்லாம் விரிவாக உபதேசித்தருளினார். மற்றும் அறிய வேண்டிய உண்மைகள் யாவற்றையும் எடுத்துரைத் தார்.

இவ்வாறு உலகியலைச் சிறிதும் நினையாமல் இறைவன் சிந்தனையிலேயே ஆழங்கால்பட்டிருந்த ஆழ்வார் அவ் வனை நினைத்தலால் உண்டான பெருமகிழ்ச்சியினால் அவனைப்பற்றிக் கவி பாடத் தொடங்கினார். இங்ஙனம் பாடியருளிய அக்கவிகளே திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு பிரபந்தங்களாக வழங்குகின்றன. இவற்றுள் திருவிருத்தம், இருக்கு வேத சாரமாகவும், திருவாசிரியம் யஜுர்வேத சார மாகவும், பெரிய திருவந்தாதி அதர்வணவேத சாரமாகவும், திருவாய்மொழி சாமவேத சாரமாகவும் அமைந்துள்ளன என்பது அறிஞர் கொள்கையாகும். இந்த நான்கு பிரபந்தங்களும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. இந்த நான்கு பிரபந்தங்களைப்பற்றி ஒரு சிறிது அறிந்து கொள்வோம்.

நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு பிரபந்தங்களுள் திருவிருத்தமே முதற்பிரபந்தமாகும். வட மொழியிலுள்ள 'வ்ருத்தம்' என்னும் சொல் தமிழில் விருத்தம் எனத் திரிந்தது. பல பொருள்களையுடைய இச் சொல் இங்கே 'செய்தி, என்னும் பொருள் கொண்டது. முதற் பாசுரத்தில் "இந் நின்ற நீர்மை இனியாம் உறாமை—அடியேன் செய்யும் விண்ணப்பம்—மெய்ந்நின்று கேட்டருளாய்'' என்று தம்

முடைய செய்தியைக் கூறுவதாகவே தொடங்கும் அருமைப்பாட்டினை நோக்கியே பூர்வாசாரியர்கள் இதற்குத் 'திருவிருத்தம்' என்று திருநாமம் சூட்டினர் போலும்! அன்றியும், இப்பிரபந்தத்தில் பெரும்பாலும் ஆழ்வார் தம்மைப் பிராட்டியார் நிலையில் வைத்துத் தமது விருத்தத் தைக் கூறுகின்றாராதலால் திருவிருத்தம் என்பதற்கு—திரு மகளின் நிகழ்ச்சியைக் கூறும் நூல் என்றும் பொருளாகலாம் என்றும் சிலர் கொள்வர்.

இப் பிரபந்தத்தின் பாசுரங்கள் அகப் பொருள் இலக் கணத் துறைவகைகள் அமையப்பெற்றுள்ளன. 'அந்யாப தேசம்' என்னும் வெளிப்படைப்.பொருளும், 'ஸ்வாபதேசம்' என்னும் உள்ளுறைப் பொருளும் தம் அகத்தே கொண்டவை இவை. சொற்செறிவு, பொருட் பொலிவு, ஆழ்ந்த கருத்து, தொனிப் பொருள், கற்பனை அலங்காரம் முதலிய சிறப்பு களால் ஒப்புயர்வின்றி விளங்கும் இவை தம்மைக் கற்பார்க்குப் பிறவித் துயரறுத்து அந்தமில் பேரின்பம் அளிக்கவல்லவை. எம்பெருமானை அகப் பொருள் நெறியால் அநுபவிக்கும் திறத்திற்கு வழி காட்டியாகத் திகழ்கின்றன. ஒரு பாசுரத்தில் ஆழங்கால் படுவோம்.

"திங்களம் பிள்ளை புலம்பத்தன்
செங்கோல் அரசுபட்ட
செங்களம் பற்றிநின்று எள்குபுன்
மாலை, தென் பால்இலங்கை
வெங்களம் செய்தநம் விண்ணோர்
பிரானார் துழாய்துணையா
நங்களை மாமைகொள் வான், வந்து
தோன்றி நலிகின்றதே.[2]"

இந்தப் பாசுரம் மாலைப் பொழுதுக்கு ஆற்றாத தலைவி தன் வருத்தத்தை உரைப்பதாகும். இப்பாசுரத்திலுள்ள

2. ஷை—77.

கற்பனைச் சித்திரம் (Imagery) அநுபவித்து மகிழத்தக்கது. இதில் மாலைப் பொழுதை ஒரு மகளாகவும், சூரியனை அவள் கணவனாகவும், சந்திரனை அவர்களது பிள்ளை யாகவும், சூரியனது சிவந்த கிரணங்களை அவனது செங் கோலாகவும், அந்தச் சூரியன் மறைவதை அக்கணவன் இறந்து போவதாகவும், அவன் மறைகின்ற திக்கினிடத்தை அவன் இறந்து விழுந்தொழிந்த போர்க்களமாகவும், சூரியன் மறை கின்ற காலத்து மேற்குத் திக்கில் அவன் கிரண சம்பந்தத் தால் தோன்றுகின்ற செவ்வானத்தை அவன் போரில் பட்டு இறக்கும்போது அவனது இரத்தம் தெறித்த இடமாகவும் உருவகப்படுத்தியுள்ளார் ஆழ்வார். கணவனைப் பிரிந்த இவளுக்கு கண்ணில் காணும் பொருளெல்லாம் கணவனை இழந்ததாகத் தோன்றுதலால் இக்கற்பனை கூறியதாகக் கருதலாம்.

எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிப்பதற்கு உரிய காலம் நெருங்கி அவனது போக்கியதையை நினைப்பூட்டித் தம்மை வருத்தும் விதத்தை ஆழ்வார் அருளிச் செய்தலே இதன் உள்ளுறைப் பொருளாகும். உலகியல் வழக்கையும் அறிவன் நூற்பொருளையும் நுவலும் மணிவாசகப் பெருமான் அருளிய திருக்கோவையாரும் திருவிருத்தமும் ஒரு சாயையாக இருக்கின்றன எனலாம்.

திருவாசிரியம் என்ற இரண்டாவது பிரபந்தத்தில் ஆழ்வார் எம்பெருமானது சொரூப ரூப குண விபூதிகளில் ஆழங்கால்பட்டுப் பரமானந்தம் பொலிய அவற்றை அநுபவிக்கின்றார். திருவாசிரியத்தின் ஏழு பாசுரங்களில் ஆழங்கால் பட்டு ஆழ்வார் பெற்ற அநுபவத்தையே பெற்றுத் திளைத்த அருளாளப் பெருமாள் எம்பெருமானார்,

"காசினியோர் தாம்வாழக்
கலியுகத்தே வந்துதித்த
ஆசிரியப் பாவதனால்
அருமறைநூல் விரித்தானை,

தேசிகனைப் பராங்குசனைத்
திகழ்வகுளத் தாரானை,
மாசடையா மனத்து வைத்து
மறவாமல் வாழ்த்துமே"[3]

என்ற தனியனில் தம் களிப்பை வெளியிட்டுப் போற்று கின்றார். இதில் 'பராங்குசன்' என்பது நம்மாழ்வாரைக் குறிக்கின்றது.

எண்பத்தேழு பாசுரங்களைக் கொண்ட பெரிய திருவந் தாதி ஆழ்வாரின் மூன்றாவது பிரபந்தமாகும். 'பெரிய திரு வந்தாதி' என்பதற்குப் 'பெருமை பொருந்திய திருவந்தாதி' என்று பொருள் கொள்ளலாம். உருவத்தில் பெருமை பெற்றதைப் பெரிது என வழங்குதல் போல, குணங்களால் பெருமை பெற்றதையும் பெரிது என வழங்குதல் உண்டல் லவா? பெரிய திருவந்தாதி என்று வழங்குதற்கு வேறொரு காரணமும் கூறலாம். இப் பிரபந்தத்தின் ஒரு பாசுரத்தில் ஆழ்வார் எம்பெருமானை நோக்கி, "பிரானே, உபய விபூதிகளும் உன்னிடத்தே அடங்கியுள்ளன என்பது உண்மையே. இங்ஙனம் உபய விபூதிகளையும் தரித்திருக் கின்ற நீ பெரியவனா? அன்றி உபய விபூதிகளையும் தரித்துக் கொண்டுள்ள உன்னைச் செவியின்வழியே புகுவித்துத் தரித்துக் கொண்டிருக்கின்ற நான் பெரியவனா? பெரிய பொருளைக் காட்டிலும் மிகப்பெரிய பொருள் என்று உன்னை வேதங்கள் சொல்லுகின்றனவே, இது தகுமா? பெரியவனான உன்னையும், ஒரு மூலையிலே அடக்கிக் கொண்டிருக்கும் நானன்றோ பெரியவன்? இதனை ஆராய வேண்டும்" என்று சமத்காரமாக அருளிச் செய்துள்ளார். இக் கருத்தை அடக்கிக்கொண்டுள்ள பாசுரம் இது:

"புவியும் இருவிசும்பும்
நின்அகத்த; நீ என்

---

3. தனியன்.

செவியின் வழிபுகுந்து
என்உள்ளாய் அவிவுஇன்றி
யான்பெரியன் நீ பெரியை
என்பதனை யார் அறிவார்?
ஊன்பருகு நேமியாய்
உள்ளு''[32]

இங்ஙனம் ஆழ்வார் தம்முடைய பெருமையைப் பேசிக் கொண்ட பிரபந்தம் இதுவாதலால் இதற்குப் 'பெரிய திருவந்தாதி' என்ற பெயர் ஏற்பட்டது என்றும் சொல்லி வைக்கலாம். திருவாசிரியத்தில் அநுபவித்த பகவத் விஷயத்தில் அவ்விஷயத்திற்குத் தகுதியாக ஆசை கரைபுரண்டு பெருகிச் செல்லுகிறபடியைப் பேசுகின்றது பெரிய திருவந்தாதி என்ற இப்பிரபந்தம்.

ஆழ்வார் அருளிய நான்காவது பிரபந்தம் திருவாய்மொழி. இஃது அவருடைய ஏனையபிரபந்தங்களைவிட மிகச் சிறப்பாகப் பாராட்டப்பெறுகின்றது. இப்பிரபந்தம் நூறு பதிகங்களாக அமைந்த 1102 பாசுரங்களையுடையது; பத்துப் பத்தாக அமைந்தது. ஒரு தாய் தன் குழந்தைக்குச் செறிமான மின்மையை நீக்கிப் பசியை மிகுத்துச் சோறிடுமாப்போலே, எம்பெருமான் தமக்குச் சுவையைப் பிறப்பித்த படியையும், அந்தச் சுவை பரபக்தி, பரஞானம், பரமபக்திகளாகப் பக்குவமானபடியையும், பின்பு பிரகிருதி சம்பந்த மற்றுப் பேற்றோடே தலைக்கட்டினபடியையும் அருளிச் செய்கின்றார் ஆழ்வார் இப்பிரபந்தத்தில். கவிச்சக்கரவர்த்தியாகியகம்பர் இப்பிரபந்தத்தை 'ஆரா அமுதக் கவியாயிரம்' எனச் சிறப்பித்துப் பேசுகின்றார். அவர் தாம் இயற்றிய 'சடகோபர் அந்தாதி' யில் நம்மாழ்வாரைப் புகழ்ந்திருப்பதைவிட அவருடைய திருவாய் மொழியை மிகச் சிறப்பாகப் புகழ்ந்துள்ளார். திருமாலினுடைய சிறப்புகள் எல்லாவற்றினும் நம்மாழ்வாருடைய திருவாய்மொழி

---

32. பெரி. திருவந்.—75.

அவருக்குக் கிடைத்தது மிகச் சிறப்பு என்கின்றார். திருவாய் மொழியின் முன் பிற கவிகள் யாவும் பொருளற்ற கவிகளே என்று பகர்கின்றார். இது தவிர, திருவாய் மொழியைப் பாராட்டித் தமிழிலும் வடமொழியிலும் பல நூல்கள் தோன்றியுள்ளமை, திருவாய்மொழியைப் பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்கள் இலக்கியக் கருத்துகட்கும், சமயக் கருத்துகட்கும், இலக்கணக் குறிப்புகட்கும் பல மேற் கோள்களாகக் காட்டியுள்ளமை இந்நூலின் பெருமையைப் பறைசாற்றுகின்றன.

நம்மாழ்வார் காலத்திலேயே அவருடைய சீடராயிருந்த மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரையும், அவருடைய நூல் களையும் சிறப்பித்துக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்னும் பத்துப் பாசுரங்கள் அடங்கிய ஓர் அரிய பிரபந்தத்தை அருளிச் செய்தார். இதில் அவர் "நம்மாழ்வாருடைய பாசுரங்களைப் பாடுதல் எனக்குப் பேரின்பமாக உள்ளது; அவரே எனக்குத் தெய்வம்; அவரையன்றி வேறு தெய்வம் அறியேன்; அவர் பாசுரங்களை இசையுடன் பாடுதலே எனக்கு இன்பமான பொழுது போக்காகும்" எனப் பல வாறாகப் போற்றியுள்ளார்.

> "தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி
> பாவின் இன்னிசை பாடித் திரிவனே"[5]

என்ற அவர் திருவாக்கால் இதனை அறியலாம். திருமங்கை யாழ்வார் எம்பெருமானைப்பற்றிப் பேசுங்கால்,

> "உளங்கனிந் திருக்கும் அடியவர் தங்கள்
> உள்ளத்துள் ஊறிய தேன்"[6]

என்று குறிப்பிடுவர். மதுரகவியாழ்வாரோ நம்மாழ்வாரைக் குறிப்பிடுங்கால்,

---

5. கண்ணிநுண்—2.
6. பெரிதிரு.—4. 3. 9.

"நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக் கும்அமு தூறும்என் நாவுக்கே"[7]

என்று பாடிய வாய் தேனூறும்படிப் போற்றிப் புகழ்வர். இதில் ஆண்டவனிடம் இருக்கும் ஈடுபாட்டைக் காட்டிலும் ஆண்டவனின் அடியாராகிய நம்மாழ்வாரிடம் மதுரகவி யாழ்வாருக்கு இருந்த அதிகமான ஈடுபாட்டைக் காணலாம்.

பக்தியினால் எம்பெருமானை அநுபவித்தல் பலவகைப் பட்டிருக்கும். அவனுடைய திருநாமங்களைச் சொல்லி அநுபவித்தல், அவனுடைய வடிவழகை வருணித்து அநுப வித்தல், அவன் உகந்தருளின திவ்விய தேசங்களின் வளங் களைப் பேசி அநுபவித்தல், அங்கே அபிமானமுள்ள அடியார்களின் பெருமையைப் பேசி அநுபவித்தல் என்று இப்படிப் பலவகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். நம்மாழ் வாருடைய பாசுரங்களை ஊன்றிப் படிப்போர் அவர் எம் பெருமானை இரண்டு வழிகளில் அநுபவிப்பதை நன்கு அறியலாம். இவரிடம் ஞானம் தலைதூக்கி நிற்குங்கால் தாமான தன்மையில் இருந்துகொண்டு ஆண்டவனை அநுபவித்து அவ்வநுபவத்தைப் பாசுரங்களாக வெளி யிட்டுள்ளார். பிரேமம் (காதல்) மீதூர்ந்து நிற்குங்கால் பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்று வாயாலே பெண் பேச்சாகப் பாசுரங்களை வெளியிட் டுள்ளார். இந்த உண்மையை,

"ஞானத்தில் தம்பேச்சு
பிரேமத்தில் பெண் பேச்சு" [8]

என்று 'ஆசாரிய ஹிருதயம்' என்ற நூல் குறிப்பிடும். பெண் பேச்சாகப் பேசுங்கால் நம்மாழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பராங்குச நாயகி' என்ற பெண்மைப் பெயர் வழங்கப்பெறும்.

---

7. கண்ணினுன்—1.
8. ஆசா. ஹிரு—118.

முதலில் தாமான தன்மை நிலையிலிருந்து கொண்டு ஆழ்வார் எம்பெருமானை அநுபவித்ததைக் காண்போம். திருவாய்மொழியில் 73 பதிகங்களால் இங்ஙனம் அநுபவித்து இனியராகின்றார். நம்மாழ்வார் பிறந்த நாள்தொட்டே எம் பெருமானிடத்துப் பேரன்பு பூண்டு, அவ்வன்பையே தம் இன்பமாகக் கருதி வாழ்ந்தவர் என்றும், உலக இன்பங்களை அவர் ஒரு சிறிதும் எண்ணவில்லை என்றும் அவர் வரலாற்றால் அறிகின்றோம்.

"அறியாக் காலத்துள்ளே
அடிமைக்கண் அன்புசெய்வித்து
அறியா மாமாயத்து
அடியேனை வைத்தாயால்"[9]

என்ற திருவாய்மொழிப் பாசுரப் பகுதியை இதற்கு அகச் சான்றாகக் கொள்ளலாம். இந்த இரண்டு அடிகளையும் அந்வயித்துப் பொருள் கொள்வதில் கருத்து வேறுபாடு உண்டு. பாட்டு உள்ளபடியே அந்வயித்து "(அதாவது) அறிவு நடையாடாத காலத்திலேயே எனக்குக் கைங்கரிய ருசியைப் பிறப்பித்து (அதை மேன்மேலும் வளர்த்துக் கொண்டு போவதற்கு வழி இல்லாதபடி) அறிவைத் தொலைப்பதான மாமாயத்தில், அதாவது சமுசாரத்தில், பின்னையும் வைத்துக் கெடுத்தாய்" என்று இழவு தோற்றச் சொல்லு கிறது என்று ஆளவந்தார் அருளிச் செய்தாராகத் திருமாலை யாண்டான் உடையவருக்கு அருளிச் செய்தார். இதனை எம்பெருமானார் கேட்டருளி, "கீழ்ப் பாசுரங்களும் மேற் பாசுரங்களும் உகவை தலையெடுத்துச் செல்லாநிற்க, இடையே இப்பாசுரம் பிரீதியின்மை தோற்றச் சொல்லுவது சேராது; ஆகவே, வேறு வகையாக அந்வயித்துப் பொருள் கொள்வது பாங்கு; 'அறியா மாமாயத்து' என்பதை 'வைத்தாய்' என்பதனோடு கூட்டாமல் 'அடியேனை'

9. திருவாய்.—2. 3:3

என்பதனோடு கூட்டுக. 'அறியா மாமாயத்து அடியேனை அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து வைத்தாய்' என்று கொண்டு 'அறிவுக் கேட்டை விளைவிக்கு மதான பிரகிருதியிலே மங்கிக் கிடந்த என்னை அறிவு நடையாடாத இளமையிலேயே அடிமையில் அன்புடையவனாம்படி செய்து வைத்தாய் என்பதாகப் பொருள் கொள்ள வேண்டும். ஆகவே, இதுவும் பிரீதி தோற்ற உபகாரத்தையே சொன்னபடி" என்று நிர்வகித்தருளினாராம். அறிவு தோன்றுதற்குரியதல்லாத மிக்க இளம் பருவத்திலேயே நம்மாழ்வார் இறைவனிடத்துப் பேரன்பு கொண்டவராயினர். அங்ஙனம் அன்பு கொள்ளுமாறு இறைவன் அருள்புரிந்தார் என்று இப்பகுதியில் கூறுகின்றார். இதனால் ஆழ்வார், பகவான் இராமகிருஷ்ண பரமஹம்சரைப் போல் ஓதாது உணர்ந்த ஞானச் செல்வர் என்பது ஒருவாறு அறியக் கிடக்கின்றது.

ஆழ்வார் சிறு பருவந்தொட்டே எம்பெருமானிடத்துக் கொண்ட அன்பில் மூழ்கி உலக இன்பங்களை எண்ணாதிருந்தனர் என்பது அறியப்படுகின்றது. தாம் எம்பெருமானுடன் கலந்த நிலையை,

"தானும்யா னும்எல்லாம்
தன்னுள்ளே கலந்தொழிந்தோம்
தேனும்பா லும்நெய்யும்
கன்னலும் அமுதும்ஒத்தே"[10]

என்ற பாசுரப் பகுதியில் கூறி மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கின்றார்; இவர் உலக இன்பங்களில் ஈடுபடாதிருந்தனர் என்பது உலகிற்கு உபதேசம் செய்த பதிகத்தின்,

"நீர்நுமது என்று இவை
வேர்முதல் மாய்த்து, இறை

10. திருவாய்.—2. 3:1.

சேர்மின்; உயிர்க்கு அதன்
நேர்நிறை இல்லே"[11]

என்ற திருவாய்மொழியால் அறியலாம். மேலும், அவர்தம் நூலை ஆய்ந்து பார்த்தால் இவ்வுண்மை தெளிவாக அறியப் படும்.

ஆழ்வாருக்கு அறியாக்காலந்தொட்டு இறைவனிடம் எழுந்த அன்பு நாளுக்கு நாள் வளர்ந்து பெருகியது. இறைவனை அன்போடு வணங்குதல், எண்ணுதல் என்பவை நடைபெறுவதோடன்றி, அவை இரண்டும் அவருக்கு இயல் பாகி (Second nature) விட்டன. எம்பெருமானை நினை யாமல் இருக்க இயலாதவராகி விட்டார். மக்கள் உணவின்றி உயிர்வாழ இயலாதவராய் உள்ளனர் என்பதை நாம் அறிவோம். நம்மாழ்வாரே எம்பெருமானை நினையா திருக்க — அவர்மீது கொண்டுள்ள அன்பை விட்டிருக்க — இயலாதவராகிவிட்டார். அவர் உண்ணும் சோறும் கண்ணன், பருகுநீரும் கண்ணன், தின்னும் வெற்றிலையும் கண்ணன் என்ற நிலை அவரிடம் ஏற்பட்டுவிட்டது. எம்பெரு மானின்நினைவு அவர் உள்ளத்தில் இன்ப ஊற்றாகிவிட்டது.

மக்கள் உள்ளத்தில் இன்பம் உண்டாவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று, மெய் வாய் கண் செவி மூக்கு ஆகிய ஐம்பொறிகளால் அறிதற்குரிய பொருள்களை அநுபவிக்கும் போது உள்ளத்தில் உண்டாகும் இன்ப உணர்ச்சி தமக் கினிய உறவினர்களை, நண்பர்களை, இனியகாட்சிகளைக் கண்ணாற் காணும்போதும் இன்பம் ஊற்றெடுக்கும். தம் மக்களின் மழலைச் சொற்கள், இனிய இசைப் பாடல்கள் முதலியவற்றைக் காதால் கேட்கும்போதும் உள்ளத்தில் இன்பம் உண்டாகும். இவ்வாறே ஒவ்வொரு பொறிக்கும் சொல்லி வைக்கலாம். நம்மாழ்வாருக்கு ஏற்பட்ட இன்பம் இத்தகையதன்று. அவரே, ''கண்டு கேட்டு உற்றுமோந்து

11. ஷை—1.2:3.

உண்டு உழலும் ஐங்கருவி கண்டஇன்பம்......ஒழிந்தேன் அடைந்தேன் உன் திருவடியை''[12] என்று கூறுகின்றார்.

மற்றொன்று, ஐம்பொறிகளின் சம்பந்தமின்றியே உள்ளத்தில் இன்பம் உண்டாவதாகும். அதுவே மிக உயர்ந்த இன்பம். துன்பமான காரியத்தை அநுபவித்துக் கொண்டே மனம் இன்பத்தில் திளைக்கும். தன் குடும்பத்தை நன்னிலையடையச் செய்ய வேண்டுமென்றெண்ணி மிக அதிகமாக உழைக்கும் ஒருவன், அவ்வுழைப்பாலாகும் வருத்தத்தை வருத்தமாக எண்ணுவதில்லை. இன்பமாகவே எண்ணுவான். அங்ஙனமே தம் நாடு நன்னிலையடைய வேண்டும் என்று எண்ணி உழைத்தவர்களும் அவ்வுழைப்பைத் துன்பமாக எண்ணாமல் இன்பமாக எண்ணியதை நம் நாட்டு வரலாற்றில் கண்டோம். இன்பமும் துன்பமும் அவரவர் உள்ளத்தில் உண்டாகும் ஒரு கொள்கையே. ஆதலால், உடல் சம்பந்தமின்றியும், உடல் அளவில் துன்பம் இருப்பினும் மனத்தகத்தே இன்பம் உண்டாதல் கூடும். 'இடுக்கண் வருங்கால் நகுக'[13] என்பது வள்ளுவர் வாக்கன்றோ?

ஆழ்வாருக்கு உடல் தொடர்பின்றியே உள்ளத்தில் இன்பம் ஊற்றெடுத்தது. எம்பெருமானை நினைக்க நினைக்க அவர் உள்ளத்தில் இன்பவெள்ளம் கரை புரண்டோடியது. அஃது உடல் தொடர்பில்லாத இன்பம்; உயிரை யொட்டிய இன்பம். ஐம்பொறி இன்பமாயின், அவ்வப்பொறிகளால் அநுபவித்தற்குரிய பொருள்கள் இல்லாதபோது இன்பம் உண்டாகாது. ஆழ்வார் எம்பெருமானை ஊனக் கண்ணால் கண்டிலர்; நினைந்து நினைந்தே இன்புற்றனர்; ஞானக் கண்ணால் கண்டு இன்புற்றனர். அதனால் அவருடைய இன்பம் தடையின்றி நிகழ்ந்தது. உலகப் பொருள்களில் இன்பம் தரத்தக்க பல்வேறு பொருள்களால் உண்டாகும் இன்பம் எல்லாம் ஒருங்கே கிடைத்தாற்போல்,

---

12. திருவாய்—4. 9:10.
3. குறள்—621.

எம்பெருமானை நினைதலால், ஆழ்வார் உள்ளத்தில் இன்பம் உண்டாயிற்று. அத்தகைய அவர் நிலையைப் பாசுரங்களில் காணலாம்.

"தேனும் பாலும் கன்னலும்
அமுது மாகித் தித்திப்ப
யானும் எம்பி ரானையே"
ஏத்தி னேன்யான் உய்வானே"[14]

என்ற பாசுரப் பகுதியில் தேன், பால், சருக்கரை, அமுது ஆகிய எல்லாவற்றின் இன்பமும் எம்பெருமானை நினைத்தலால் தமக்கு உண்டாகின்றது என்கின்றார். அப்படி இன்பம் உண்டாவதனால்தான் எம்பிரானை ஏத்துவதாகவும், அப்படி அப்பெருமானை நினைந்து ஏத்தி இன்பம் அடைவதால்தான் தாம் உயிர் வாழ்ந்திருப்பதாகவும் செப்புகின்றார். அப்படி இல்லையாயின் தாம் உயிர் வாழ்வது இயலாது என்றும் கூறுகின்றார். "யான் உய்வான் ஏத்தினேன்" என்ற தொடர் இக்கருத்தினைக் காட்டுகின்றது. 'உய்தல்' என்பது இங்கு 'நற்கதி அடைதல்' என்ற பொருளன்று; உயிர் பிழைத்திருத்தல் என்பதுவே பொருள். அப்பெருமானை நினைக்கும் அன்பே மக்கள் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத சோறும் நீரும் போலத் தமக்கு உண்ணும் சோறும் பருகும் நீரும் ஆகும் என்று சொல்லி மகிழ்கின்றார். ஆழ்வாருக்கு எம்பெருமான் உள்ளுந்தோறும் தித்திப்பான்; அப்பொழுதைக்கு அப்பொழுது ஆரா அமுதமாகவும் தோன்றுவான்.

"ஆரா அமுதாய் அடியேன்
ஆவி அகமே தித்திப்பாய்"[15]

என்றும்,

---

14. திருவாய்—4.3:10.
15. ஷை—5.8:10.

"எண்ணம் புகுந்து தித்திக்கும்
அமுதே இமையோர் அதிபதியே''[16]

என்றும் வரும் பாசுரப்பகுதிகளால் ஆழ்வார் பெற்ற இன்பம் பொறியுணர்ச்சியைக் கடந்தது என்றும், உயிரின்கண் உண்டாகியது என்றும் அறியலாம். இங்ஙனம் பல எடுத்துக் காட்டுகளைக் கூறிக்கொண்டே போகலாம்.

எம்பெருமான்மீது தாம் வைத்துள்ள அன்பு எத்தகையது என்பதை ஆழ்வாரே கூறியுள்ளார்: விரும்பிய பொருளை அநுபவித்து முடியாதது ஆசையாகும். ஒரு பொருளை அநுபவிக்க அநுபவிக்க ஆசை பெருகுவதல்லது முடிவடையாது. பிற காரணங்களால் அவ்வநுபவத்திற்கு இடையூறு நிகழ்ந்தால் ஒருக்கால் அவ்வாசை தணியலாம். ஆனால் அநுபவித்தலால் முடிவடையாது. திருவள்ளுவரும் ஆசையின் தன்மையை "ஆராவியற்கை அவா"[17] என்று சொல்லியுள்ளார். அநுபவிக்க அநுபவிக்க விறகு மேன்மேலும் இடப்பட்ட நெருப்புபோல அவ்வாசை பெருகுவதல்லது தணியாது என்பர் பரிமேலழகர். ஆனால் ஆழ்வாருக்கு அந்த ஆரா வியற்கையையுடைய அவா முழுவதும் இறைவன்பால் சென்றது. அதனால் அவர் தம்மை "ஆராத காதற் குருகூர்ச் சடகோபன்"[18] என்றே கூறிக் கொள்வர்.

ஆழ்வாரின் இந்த இயல்பைப் பல பாசுரங்களில் காணலாம்.

"தாவி வையம் கொண்ட
தடம்தா மறைகட்கே
கூவிக் கொள்ளும் காலம்
இன்னம் குறுகாதோ?"[19]

---

16. ஷ் — 6.10:3.
17. குறள் — 370.
18. திருவாய். — 2.1:11.
19. ஷ் — 6.9:9.

என்று கேட்டோர் நெஞ்சு நீராய் உருகும் வண்ணம் எம்பெருமானைக் கூப்பிடுகின்றார் ஆழ்வார்.

"நன்னி உனைநான் கண்டு
உகந்து கூத்தாட
நண்ணி ஒருநாள் ஞாலத்
தூடே நடவாயே"[20]

என்று வேண்டுகின்றார். ஞானக் கண்ணால் கண்ட எம்பெருமானை ஊனக் கண்ணாலும் காண விரும்பிய ஆழ்வார் காட்சி எய்தப்பெறாமல் மிகவும் மனம் கவல்கின்றார். கண்ணீர் பெருக நெஞ்சம் உருகப் பன்முறை அழைக்கின்றார். அப்போதும் அக்காட்சி அவருக்குக் கிட்டவில்லை.

"கூவிக் கூவி நெஞ்சுருகிக்
கண்பனி சோர நின்றால்
பாவி நீஎன்று ஒன்று
சொல்லாய் பாவியேன் காணவந்தே"[21]

என்று தம் முறுகிய அன்பை வெளியிடுகின்றார். "நான் ஊனக் கண்ணால் காணும்படி நீ அன்புடன் காட்சி அளிக்க விரும்பவில்லையாயினும், அவ்விருப்பமின்மையை என் கண் எதிரே தோன்றிக் கூறுக. 'நீ பாவி; அதனால் உனக்குக் காட்சி அளித்தல் இயலாது என்றாவது என் கண் முன் தோன்றிக் கூறுக. அதுவே போதும். நீ வெறுப்போடு கூறியதாயினும் விருப்புடன் கூறியதாயினும், அந்த வேற்றுமையை யான் பொருட்படுத்தவில்லை. உன்னைக் காண்டல், உன் சொற்கேட்டல் அவ்வளவே என் ஆசை" என்கின்றார்.

இன்னொரு பாசுரத்தில் தன் ஆசையை வேறுவிதமாக வெளியிடுகின்றார்.

---

20. ஷை—6.9:2.
21. ஷை—4. 7:3.

"சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்
இறப்பில் எய்துக, எய்தற்க; யானும்
பிறப்பு இல்பல் பிறவிப் பெருமானை
மறப்பு ஒன்றுஇன்றி என்றும் மகிழ்வனே''[22]

இப்பாசுரத்தில் ஆழ்வார் எம்பெருமானை நோக்கி, "பெருமானே, நீ எனக்கு வீடுபேறு அளிப்பினும் அளிக்க; சுவர்க்கம் அளிக்கினும் அளிக்க; நரகமே அளிக்கினும் அளிக்க; என்னை எங்கு வைப்பினும் வைக்க; அதுபற்றி எனக்குக் கவலை இல்லை; எப்போதும் உன்னை நினைந்து நினைந்து மகிழ்வேன்; இதுவே நான் விரும்புவது'' என்று பேசுகின்றார். இதனால் ஆழ்வாரது அன்பு இத்தகையது என்று அறுதியிட்டுக் கூறுதல் ஒல்லுமோ? திருவள்ளுவர் படைத்துக் காட்டும் தலைவி,

"நசைஇயார் நல்கார்
எனினும் அவர்மாட்டு
இசையும் இனிய
செவிக்கு''[23]

என்று கூறுவாள். தலைவனைப் பிரிந்திருக்கும் நிலையில் கூறுவது இது. இந்தக் குறள் கருத்தும்'' பாவி நீ என்று ஒன்று சொல்லாய் பாவியேன் காணவந்தே'' என்று ஆழ்வார் கருத்தும் ஒத்திருத்தல் கண்டு மகிழத் தக்கது. சிற்றின்ப வேட்கையுடையார்க்குக் கூறப்பட்ட இக் கருத்து பேரின்ப வேட்கையுடையார்க்கு எளிதேயன்றோ?

ஆழ்வார் உள்ளத்தில் எம்பெருமான் ஊறும் தேனாக நின்று அப்பொழுதைக்கப்பொழுது புதிய புதிய ஆராவ முதம் உண்டாற் போன்ற இன்பத்தைப் பெருக்கியதனால் ஆழ்வாரும் அவ் அன்பு உணர்ச்சி உள்ளடங்காத நிலையில் இறைவனைப்பற்றிப் பாடத் தொடங்கினர்.

---

22. ஷி. 2. 9:5.
23. குறள்—1199

"கண்டுகொண்டு என்கண்ணிணை
ஆரக் களித்துப்
பண்டை வினையாயின
பற்றோடு அறுத்துத்
தொண்டர்க்கு அமுதுண்ணச்
சொல்மாலைகள் சொன்னேன்
அண்டத்து அமரர்
பெருமான் அடியேனே"[24]

இங்கு ஆழ்வார் இறைவனைத் தாம் கண்டதாகக் கூறுவது தமது ஞானக் கண்ணாலேயாகும் என்பது அறியத் தக்கது. திருவாய்மொழியை முழுவதும் ஆய்ந்த நம் முன்னோர் ஆழ்வார் அநுபவத்தை மானசாநுபவமே என்று முடிவு செய்துள்ளனர்.

ஆழ்வார் எம்பெருமானைக் கண்டு மகிழ்ந்ததன் பயன் சொல்மாலை சொல்லுவதேயாகும். இதனால் இடைப்பிற வரலாக வந்த மற்றொரு பயன் 'பண்டை வினையாயின பற்றோடொழிந்தது' என்பதாகும். அது முக்கியப் பயன் அன்று. இறைவனிடத்து அன்பு செலுத்துதல் நம் கடமை. பச்சிலை வைத்துக் கட்டிய சிலந்திக் கட்டியில் முளை தானே கழலுதல் போல, வினைகள் அவ்விடத்து நிற்க இயலாமல் தாமே ஒழியும்; அல்லது அவற்றை அழித்து ஒழித்தல் இறைவனது கடமை. இதனை முக்கிய பயனாகக் கருதுதல் கூடாது என்பது ஞானச் செல்வர்கள் கண்ட முடிவு.

ஆழ்வார் ஞானக் கண்ணால் எம்பெருமானைக் கண்டு மகிழ்ந்து அம்மகிழ்ச்சிக்குப் போக்குவீடாகச் சொல்மாலைகள் சொன்னார். அதனால் மற்றொரு பயன் உண்டாயிற்று. அச் சொல்மாலைகள் அடியார் திருக்கூட்டத்திற்குச் செவி வாயாக நுகரும் அமுதமாயின.

---

24. ஷை.—9.4:6

எம்பெருமானைப்பற்றி,

"வண்டமிழ் நூற்க நோற்றேன்
அடியார்க்கு இன்பமாரியே''[25]

என்று ஆழ்வாரே இப் பயனை எடுத்துக் காட்டியுள்ளார். இப் பாசுரங்கள் கற்பார்க்கு இன்ப வெள்ளமாக இருத்தலால் திருவாய்மொழியைக் கம்ப நாட்டாழ்வார் "ஆரா அமுதக் கவியாயிரம்''[26] என்று போற்றிப் புகழ்ந்தார்.

மயர்வற மதிநலம் அருளின எம்பெருமானே தம்முள் இருந்து கொண்டு பாடின பாடல்களே இவை என்பது ஆழ்வார் கருத்து.

"என்னெஞ்சத்து உள்ளிருந்துஇங்கு
இருந்தமிழ்நூல் இவைமொழிந்து''[27]

என்ற பாசுரப் பகுதியாலும்,

"பண்ணார் பாடல் இன்கவிகள்
யானாய்த் தன்னைத் தான்பாடி''[28]

என்ற பாசுரப்பகுதியாலும்,

''என்சொல்லால் யான்சொன்ன
இன்கவி என்பித்துத்
தன்சொல்லால் தான்தன்னைக்
கீர்த்தித்த மாயன்''[29]

என்ற பாசுரப் பகுதியாலும் இதனை அறியலாம். ஆகவே அக்கவிகளைத் 'தொண்டர்க் கமுதம்' என்றும், 'அடியார்க்கு

25. ஷெ.—4. 5:10
26. சடகோபர் அந்தாதி—45.
27. திருவாய்,—10. 6:4.
28. ஷெ—10. 7:5.
29. ஷெ—7. 9:2.

இன்ப மாரியே' என்றும் தாமே புகழ்ந்து கூறுவது எம்பெருமானைப் புகழ்வதாகுமேயன்றி எவ்வாற்றானும் நம்மைத் தாமே புகழ்ந்து கொண்டதாகாது. இறைவனே அருளியதால் நம்மாழ்வார் பிரபந்தங்களை "தமிழ் மறை" எனச் சொல்லத்தட்டில்லை. நம்மாழ்வாரையும் 'வேதம் தமிழ் செய்த வித்தகன்' என்று கூறுவதும் பொருந்தும்.

இனி, பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு ஆழ்வார் எம்பெருமானை அநுபவித்ததைக் காண்போம். இங்ஙனம் அநுபவிக்கும்பொழுது அவர் தோழி, தாய், மகள் என்ற மூவரில் ஒருவரின் தன்மையை அடைவார். இதன் காரணமாகப் பாசுரங்களும் தாய் சொல்வதுபோல வடிவெடுத்துத் 'தாய்ப் பாசுரம்' என்று பெயர் பெறும்; தோழி சொல்வதுபோல உருக்கொண்டு 'தோழிப் பாசுரம்' என்று பெயர் பெறும்; தலைவி பேசுவதுபோல் வடிவெடுத்துத் 'தலைவிப் பாசுரம்' என்று பெயர் பெறும். இங்ஙனம் மூன்று வகையாகப் பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரங்களைப் பேசுகின்றவர் ஆழ்வாரேயாவார். இதனை அந்தந்தப் பதிகங் களின் திருக்கடைக் காப்புச் செய்யுள்களால் (பல சுருதிப் பாசுரங்களால்) அறியலாம்.

நம்மாழ்வார் 27 பதிகங்களில் பெண்பாவனையில் நின்று பேசி இறைவனை அநுபவிக்கின்றார். இவற்றுள்ளும் மகள் பாவனையில் பேசியவை 17 பதிகங்கள்; தாய் பாவனையில் பேசியவை 7 பதிகங்கள்; தோழி பாவனையில் பேசியவை 3 பதிகங்கள். இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பாசுரங் களில் ஆழங்கால் படுவோம்.

தோழிப் பாசுரப் பதிகங்களில் ஒன்று 'வெறிவிலக்கு'த் துறையிலும், மற்றொன்று 'தலைவியின் நிலையைத் தாய்க்கு உரைத்தல்' துறையிலும், பிறிதொன்று 'அயல் மணம் விலக்கல்' துறையிலும் அமைந்துள்ளன. தோழிப் பாசுரம் ஒன்றைக் காண்போம்.

"இதுகாண்மின் அன்னைமீர்! இக்கட்டு
விச்சிசொற் கொண்டு, நீர்
எதுவானும் செய்தங்கோர் கள்ளும்
இறைச்சியும் தூவேல்மின்
மறுவார் துழாய்முடி மாயப்
பிரான்கழல் வாழ்த்தினால்
அதுவே இவளுற்ற நோய்க்கும்
அருமருந் தாகுமே''[30]

இந்தப் பாசுரம் வெறிவிலக்கி அறத்தோடு நிற்கும் நிலையில் அமைந்தது. "கட்டுவிச்சியின் பேச்சைக் கேட்டு கள்ளும் இறைச்சியும் தூவி வேலனுக்கு வெறியாட்டெடுத்தலால் பயன் இல்லை. மதுவார் துழாய் முடி மாயப் பிரான் கழல் வாழ்த்தினால் அதுவே இவள் உற்ற நோய்க்கு அருமருந்தாகும்'' என்று கூறி நோயின் தன்மையையும் அதற்கு ஏற்ற மருந்தையும் கூறுகின்றாள் தோழி. திருவிருத்தத்தில் வெறிவிலக்குப் பாடல் அற்புதமாக அமைந்துள்ளது. தலைவியின் நோயினைக் காண்பான் வேண்டித் தாய் வேலனைக் கொண்டு வெறியாட்டயர்கின்றாள். தோழி அதனை விலக்க உணர்ச்சியுடன் பேசுகின்றாள்:

"சின்மொழி நோயோ கழிபெருந்
தெய்வம், இந் நோய்இனதென்று
இன்மொழி கேட்கும் இளந்தெய்வம்
அன்றுஇது, வேல! நில்நீ''

இது ஒரு பக்கமாக வெறியாடும் வேலனை நோக்கிப் பேசுவது.

"குளிர்ந்த மொழிகளையுடைய இவளுடைய நோய் பொருளற்ற சொற்களைக் கேட்டு மகிழும் சிறு தெய்வம் காரணமாக வந்தது அன்று. இந்தத் திருமாளிகையும் சிறு தெய்வம் புகும் திருமாளிகை அன்று; இவளுக்குற்ற

30. ஷெ — 4.6:3

நோய் மிகப் பெரிய தெய்வமான எம்பெருமான் காரண மாக உண்டானது. ஆகவே வெறியாடும் வேலனே, நீ விலகி அப்பாற் செல்க'' என்கின்றாள். பின்னர் இன்னொரு பக்கம் வேலன் வெறியாட்டை அமைத்து அதனைப் பார்ப்பதற்காகக் குழுமி இருந்த தாய்மார்களை நோக்கிப் பேசுகின்றாள்:

''என்மொழி கேண்மின்என் அம்மனை
மீர்! உல கேழும்உண் டான்
சொல்மொழி மாலையந் தண்ணந்து
ழாய்கொண்டு சூட்டுமினே''

''இவளுடைய நோய் தீர்ப்பதற்கு ஒழுங்காகவே உலகேழும் விழுங்கி உமிழ்ந்திட்ட பெருந்தேவன் திருநாமமே தக்க மந்திரமாகும். அவனது பிரசாதமான திருத்துழாயே பசு மருந்துமாகும். ஆகவே, அவன் செவிவழியாகத் திரு மந்திரத்தை ஓதி, அவன் கழுத்தில் அவள் அணிந்து கொண்ட திருத்துழாய் மாலையைக் கொணர்ந்து சூட்டுங்கள்'' என்கிறாள். மீண்டும் பாடலைக் காண்போம்:

சின்மொழி நோயோ கழிபெருந்
தெய்வம்,இந் நோய் இனதென்று
இன்மொழி கேட்கும் இளந்தெய்வம்
அன்றுஇது வேல!நில்நீ;
என்மொழி கேண்மின்என் அம்மனை
மீர்!உலகு! ஏழும்உண்டான்
சொல்மொழி! மாலையந் தண்ணந்து
ழாய்க்கொண்டு சூட்டுமினே''[31]

திருவாய் மொழியில் தோழியின் பாசுரமாக வரும் மூன்று பதிகங்களும் அநந்யார்ஹத்துவத்தைக் குறிப்பதாக ஆசாரிய ஹிருதயம் பேசும். அநந்யார்ஹத்துவம் என்பது, வேறு ஒருவருக்கும் இல்லாமல் எம்பெருமானுக்கே உரியதாயிருக்கும் அடிமைத்தன்மை.

---

31. திருவிருத்.—20.
சில.—10

அடுத்து, தாய்ப் பாசுரம் ஒன்றைக் காண்போம். தாய்ப் பாசுரங்கள் யாவும் ஈசுவர பாரதந்திரியத்தைக் குறிப்பதாக, ஆசாரிய ஹிருதயம் கூறும். அதாவது, தன்னைக் காத்து இரட்சிப்பவன் ஈசுவரனே ஆகின்றான் என்ற உண்மை யாகும் இது.

"கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்
சங்குசக் கரங்கள் என்றுகைக் கூப்பும்
'தாமரைக்கண்' என்றே தளரும்
'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு' என்னும்
இருநிலம் கைதுழா விருக்கும்
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறத்து என்செய்கின் றாயே?"[32]

இதில் பேச்சுக்கு நிலமல்லாதபடி தன் மகளுக்கு உண்டா யிருக்கும் நிலையை அரங்கநகர் அழகிய மணவாளனுக்கு அறிவித்து, அவள் விஷயமாக அவன் செய்தருள நினைத் திருப்பதுதான் என்னவோ என்று கேட்கின்றாள் பராங்குச நாயகியின் திருத்தாயார்.

தலைவி பாசுரம் ஒன்றைக் காண்போம்:

கண்டது வேகொண்டுஎல் லாருங் கூடிக்
கார்க்கடல் வண்ணனோ டென்திறத்துக்
கொண்டு,அலர் தூற்றிற்று அதுமுதலாகக்
கொண்டவென் காதல் உரைக்கில் தோழி,
மண்டினி ஞால மும்ஏழ் கடலும்
நீள்வி சும்பும் கழியப் பெரிதால்
தெண்டிரை சூழ்ந்தவன் வீற்றி ருந்த
தென்திருப் பேரையில் சேர்வன் சென்றே"[33]

32. திருவாய்.—7.2:1.
33. ஷை—7.3:8.

"பகவத் விஷயத்தில் காதல் உண்டான காலம் தொடங்கி ஊரார் பழி சொல்லத் தொடங்கினர். அந்தப் பழிச் சொல்லே எருவிட்டதுபோல் அமைந்து என் காதல் மேன்மேலும் வளர்ந்துச் சென்று எல்லா உலகங்களையும் கபளீகரித்துச் செல்லா நின்றது, ஆகவே, அவன் இருக்கின்ற திருப்பேரெயிலே சென்றன்றி நிற்கமாட்டேன்" என்கின்றாள் ஆழ்வார் நாயகி. குடியின் கட்டுப் பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டியல்லது உயிர் வாழ்ந்திருக்கமாட்டேன்?' என்னும் பதற்றத்தை உடையவள் தலைவி. எம்பெருமான் சித்தோபாயமாக இருப்பவனாதலால் அவனை விரைந்து அநுபவித்தாலொழிய தரிப்புற்றிருக்க வொண்ணாத நிலையைப் புலப்படுத்துவது மகள் பாசுரமா கும் என்பது ஆசாரிய ஹிருதயஆசிரியர் அழகிய மணவாளப் பெருமாள்நாயனாரின் கருத்தாகும். ஆழ்வாரின் முறுகிய பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கிய மரபே காதல் சுவையில் பாசுரங்களை அமைத்த நெறியாகும்.

திருவாய்மொழிப் பதிகங்கள் வைணவ சமயத் தத்துவ மாகிய அர்த்த பஞ்சக ஞானத்தை உணர்த்துவதாக இருக்கும். அவற்றைச் சுருக்கமாக விளக்குவோம். அர்த்த பஞ்சகம் என்பது 1) ஆன்மாவின் இயல்பு, 2) ஈசுவரனது இயல்பு, 3) ஆன்மா அடையும் பயன், 4) அப் பயனை அடைதற்கு உபாயம், 5) அப் பயனை அடைதற்குப் பகை யாய் உள்ளவைகள் ஆகிய ஐந்தும் ஆகும். திருவாய் மொழி யிலுள்ள 'உயர்வற'[34], திண்ணன் வீடு,[35] 'அணைவது'[36], 'ஒன்றுந் தேவும்'[37] ஆகிய இந் நான்கு திருவாய் மொழிகளும் எம்பெருமானுடைய சொரூபத்தை விளக்குவன. 'பயிலும் சுடரொளி'[38], 'ஏறாளும் இறையோனும்'[39], 'கண்கள் சிவந்து'[40], 'கருமாணிக்கம்'[41] என்ற நான்கு திருவாய் மொழி

34. ஷை —1.1.
35. ஷை —2.2.
36. ஷை —2.8.
37. ஷை —4.10.
38. ஷை —3.7.
39. ஷை —4.8.
40. ஷை —8.8.
41. ஷை —8.9.

களும் அடைகின்ற ஆன்மாவின் விஷயமாக இருக்கும். 'நோற்ற நோன்பு'[42], 'ஆராவமுதே'[43], 'மானேய் நோக்கு'[44] 'பிறந்தவாறும்'[45] என்ற நான்கும் எம்பெருமானை அடையும் வழிகளைக் கூறுவனவாக இருக்கும். 'எம்மாவீடு'[46], 'ஒழிவில் காலமெல்லாம்'[47], 'நெடுமாற் கடிமை'[48], 'வேய்மரு'[49] என்ற நான்கு திருப்பதிகங்களும் பலத்தைச் சொல்லும். 'வீடுமின் முற்றவும்'[50], 'சொன்னால் விரோதம்'[51], 'ஒரு நாயக மாய்'[52] 'கொண்ட பெண்டிர்'[53] என்ற நான்கு திருவாய் மொழிகளும் அடைவதற்குத் தடையாயிருப்பனவற்றைப் பேசும். ஏனைய எண்பது திருப்பதிகங்களும் இவற்றை விளக்கிக் கூறுவனவாக அமைந்துள்ளன. பராசர பட்டர் இவற்றை இரத்தினச் சுருக்கமாக,

> "மிக்க இறைநிலையும்
> மெய்யாம் உயிர்நிலையும்
> தக்க நெறியும்
> தடையாகித்—தொக்கியலும்
> ஊழ்வினையும் வாழ்வினையும்
> ஓதும் குருகையர்கோன்
> யாழின்இசை வேதத்து
> இயல்"[54]

என்ற தனியனில் கூறுவர். இதில் மிக்க இறைநிலை என்பது, ஈசுவர சொரூபம்; மெய்யாம் உயிர்நிலை என்பது, ஆன்ம சொரூபம்; தக்க நெறி என்பது, உபாய சொரூபம்; தடை

---

42. ஷை —5.7.
43. ஷை —5.8.
44. ஷை —5.9.
45. ஷை —5.10.
46. ஷை —2.9.
47. ஷை —3.3.
48. ஷை —8.10.
49. ஷை —10.3.
50. ஷை —1.2.
51. ஷை —3.9.
52. ஷை —4.1.
53. ஷை —9.1.
54. ஷை —தனியன்.

யாகித் தொக்கியலும் என்பது விரோதி சொரூபம் என்பதாக அறியப்படும்.

இங்ஙனம் கூறப்பெற்ற விரோதியைக் கழித்துப் புருஷார்த்தம் கைகூடுவதற்கு உபாயமாகக் கூறப்படுவன பக்தியும் பிரபத்தியுமாகும். இவற்றுள் எல்லோருக்கும் எளிதாக இருக்கும் பிரபத்தி நெறியை உபதேசித்தார் நம்மாழ்வார். பிரபத்தி நெறி என்பது, சரணாகதி தத்துவம். 'பிரபந்ந ஜன கூடஸ்தர்' என்று நம்மாழ்வாருக்கு ஒரு சிறப்புப் பெயர் உண்டு. பிரபத்தி நெறியை அநுட்டிக்கும் வைணவர்கள் யாவருக்கும் தலைவர் என்பது இதன் பொருள். ஆழ்வார் பிரபத்தி பண்ணியது அர்ச்சாவதாரத்திலே. "ஆறு எனக்கு நின்பாதமே, தந்தொழிந்தாய்"[55] என்றும், "கழல்கள் அவையே சரணாகக் கொண்ட"[56] என்றும், "நம்பெருமான் அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்"[57] என்றும், "உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"[58] என்றும் இப்படிப் பல இடங்களிலும் பிரபத்தி செய்தது அர்ச்சாவ தாரத்திலேயாகும். "பிறந்தவாறும்"[59] என்ற திருவாய் மொழி ஒன்றிலுமேயிறே அர்ச்சாவதாரத்திலே புகல புகுந்தது"[60] என்ற ஸ்ரீ வசனபூஷண வாக்கியம் ஈண்டு அநுசந்திக்கத்தக்கது.

"சரணமா கும்தன
தாளடைந் தார்க்கெலாம்
மாணமா னால்வைகுந்
தம்கொடுக் கும்பிரான்"[61]

---

55. ஷை —7.10.
56. ஷை —5.8:11.
57. ஷை —5.9:11.
58. ஷை —6.10:10.
59. ஷை —5.10:1.
60. ஸ்ரீ வசனபூஷணம்—38.
61. திருவாய்.—9.10:6.

என்று திருவாய் மலர்ந்த பெருமானல்லவா இவர்? தஞ்சம் புகவேண்டிய எம்பெருமான் நிலையைப்பற்றி,

> "திருக் கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்தஞ்சல் என்ற கையும்; கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸன பத்மத்திலே அழுந்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குச் தஞ்சம்''[63]

என்று முமுட்சுப்படி பகர்கின்றது. இத்தகைய ஒரு நிலையை திருவேங்கடமுடையானிடம் காணலாம். ஆகவே ஆழ்வாரும்,

> " 'அகல கில்லேன் இறையும்' என்று
> அலர்மேல் மங்கை உறைமார்பா!
> நிகரில் புகழாய் உலகம்மூன்(று)
> உடையாய் என்னை ஆள்வானே!
> நிகரில் அமரர் முனிக்கணங்கள்
> விரும்பும் திருவேங் கடத்தானே!
> புகலொன்று இல்லா அடியேன் உன்
> அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே."[63]

என்று திருவேங்கடமுடையானின் திருவடிகளில் சரணம் அடைகின்றார். பிராட்டியாருடைய புருஷகாரத்தின் ஊன்றுதலினால் ஈசுவரனுடைய சுதந்திரத் தன்மை மாய்ந்து அக்காலத்தில் (முன்பு) தலையெடுக்கப்பெறாமல் மறைந்திருந்தனவும் இக்காலத்தில் (பின்)ஓங்கி நிற்பனவுமான குணங்கள் வாத்சல்யம், சுவாமித்துவம், சௌசீல்யம், சௌலப்பியம் என்ற குணங்களாகும். இந்த நான்கு குணங்களும் சேதநன் பகவானைப் பற்றுவதற்கு உதவி செய்யக் கூடியவை. இவை

---

62. முமுட்சு.—142.
63. திருவாய்.—6.10:10.

நான்கும் இருட்டறையில் விளக்குப்போல் திருவேங்கட முடையானிடம் காணப்படுகின்றன. இங்குக் கூறிய பாசுரத்தில் 'நிகரில் புகழாய்' என்பதனால் வாத்சல்யமும், 'உலகம் மூன்றுடையாய்' என்பதனால் சுவாமித்வமும் 'என்னை ஆள்வானே' என்பதனால் சௌசீல்யமும், 'திருவேங்கடத்தானே' என்பதனால் சௌலப்பியமும் இருப்பதை அறிகின்றோம்.

வைணவ தத்துவத்தின் நவநீதம் போலிருப்பது கைங்கரியம் ஆகும். வைகுந்தத்தில் பரமபத நாதனுக்குக் கைங்கரியம் புரிவதே வைணவர்கள் விரும்பும் வீடுபேற்றின் பலனாகும். நம்மாழ்வாரும் இதனையே விரும்புகின்றார். ஏழுமலையானின் திருவடிப்பேற்றை விரும்பும் ஆழ்வார்,

"ஒழிவுஇல் காலம்எல்லாம்
உடனாய் மன்னி
வழுஇலா அடிமை
செய்ய வேண்டும்"[64]

என்று அவனுக்குக் கைங்கரியம் புரிய விரும்புவதையும் இப் பாசுரப் பகுதியில் காணலாம். "ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் இத் திருவாய்மொழியைப் பாடப் புக்கால் 'ஒழிவில் காலமெல்லாம், காலமெல்லாம், காலமெல்லாம்' என்று இங்ஙனே நெடும்போதெல்லாம் பாடி, மேல்போக மாட்டாதே அவ்வளவிலே தலைக் கட்டிப் போவராம்" என்பது ஈட்டில் காணப்பெறும் ஐதிகமாகும்.

நம்மாழ்வார் எப்பொழுதும் திருமால் திருவடியில் விளங்குகின்றார் என்பது வைணவ சமயக் கொள்கை. அதனால், திருமால் திருக்கோயில்களில் அப் பெருமானைச் சேவிக்கச் செல்வோர் முடிமீது அவர்திருவடியாக வைக்கப் பெறுவதைச் "சடகோபன், சடாரி" என்று வழங்குகின்றனர்

64. ஷை—3. 3:1.
5. ஷை—10. 10:11.

சடகோபன், சடாரி என்பன நம்மாழ்வாரின் திருப் பெயர் களாகும்.

அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச்சடகோபனாகிய நம்மாழ்வார் திருவவதரித்ததனால் வைகாசி விசாகத்திற்கும் ஏற்றம்; சடகோபர் என்ற அவர்தம் பெயருக்கும் ஏற்றம்; அவர் அருளிய திருவாய்மொழிக்கும் ஏற்றம்; அவர் பிறந்த திருக்குரு கூருக்கும் ஏற்றம்.

"உண்டோ வைகாசி
விசாகத்துக் கோப்பொருநாள்
உண்டோ சடகோபர்க்கு
ஒப்பொருவர் — உண்டோ
திருவாய் மொழிக்கொப்புத்
தென்குருகைக்(கு) உண்டோ
ஒருபார் தனில்ஒக்கும்
ஊர்"[66]

66. தனியன்.

# 10. நெடியோன் குன்றத்து நீலமுகில்*

'நீலத் திரைக்கடல் ஓரத்திலே—நின்று
நித்தம் தவம்செய் குமரி எல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு.''[1]

என்று கூறுவர் தேசிய கவி பாரதியார். இந்த 'மாலவன் குன்றமே' திருவேங்கடம் என்பது. சிலப்பதிகாரம் குறிப்பிடும் 'நெடியோன் குன்றமும்' இதுவேயாகும். ஆயின் தொல்காப்பியப் பாயிரத்திலும் சங்க இலக்கியங்களிலும் குறிப்பிடங் பெற்றுள்ள 'வடவேங்கடம்' என்னும் மலைத்தொடர் இதனினின்றும் முற்றிலும் வேறுபட்டது. என்பதை ஆழ்ந்து கற்றோர் நன்கு அறிவர்.[2] இன்றுள்ள திருப்பதிமலை மிகவும் புகழ் அடைந்தது சமயச் சார்பு பற்றிய தேயாகும் என்பதை நாம் அறிவோம். இடைக் காலத்தில் இது திருத்தலப் பயணிகளின் முக்கிய இடமாக அமைந்ததற்குக் காரணம் சமயச் சார்புபற்றியதேயாகும்.

---

*திருவண்ணாமலை குடமுழுக்கு விழா மலரில் (1976) வெளிவந்தது.

1. தே. கீ. பாரதியார் கவிதைகள்—செந்தமிழ்நாடு—5.
2. இவ்வாசிரியரின் 'திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்' (பாரிநிலைய வெளியிடு) என்ற நூலில் காண்க.

பழைய குறிப்புகள் : திருவேங்கடம் பற்றிய சமயச் சார்பான குறிப்புகள் புறப்பொருள் வெண்பாமாலையிலும், சிலப்பதிகாரத்திலும் காணப்பெறுகின்றன. இவற்றையே தமிழ் இலக்கியங்களில் முதன் முதலாகக்கூறப்பெறும் பழைய குறிப்புகளாகக் கருதலாம்.

"வெறிகொள் அறையருவி
வேங் கடத்துச் செல்லின்
நெறிகொள் படிவத் தோய்]
நீயும்—பொறிகட்கு
இருளீயும் ஞாலத்(து)
இடரெல்லாம் நீங்க
அருளீயும் ஆழி யவன்''[3]

*[வெறி - பாசனை; அறை - ஒலிக்கும்; நெறி - முறைமை]*

என்ற ஐயனாரிதனார் வாக்கில் 'வேங்கடம்' குறிப்பிடப் பெற்றிருப்பதுடன் அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவன் திருவாழியைத் தரித்துக் கொண்டிருக்கும் குறிப்பும் 'ஆழியவன்' என்ற சொல்லால் காட்டப்பெற்றிருத்தல் நோக்கத்தக்கது.

சிலப்பதிகாரத்தில் திருவேங்கடம் 'நெடியோன் குன்றம், எனக் குறிப்பிடப் பெறுகின்றது. காவியத்தில் குறிப்பிடப் பெறும் மாங்காட்டு மறையோன் திருத்தலப் பயணம் செய்து வருகின்றான். இங்ஙனம் வருகின்றவன், உறையூரை விட்டுத் தெற்கு நோக்கிக் கவுந்தியடிகளுடன் சென்றுகொண்டிருக்கும் கோவலனையும் கண்ணகியையும் சந்திக்கின்றான், அவனைக் கோவலன், 'யாது நும்மூர்?

3. புறப்பொருள் வெண்பா மாலை—பாடாண் படலம்—புலவர் ஆற்றுப்படை (43) உதாரணச் செய்யுள்.

ஈங்கென் வரவு?'[4] என வினவ, அதற்கு மாங்காட்டு மறை யோன் கூறும் மறு மொழியில் திருவேங்கடம் பற்றிய வருணனை காணப்பெறுகின்றது.

> "வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
> ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
> விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
> இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
> மின்னுக் கோடியுடுத்து விளங்குவிற் பூண்டு
> நன்னிற மேகம் நின்றது போலப்
> பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
> தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
> நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
> பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய
> செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்"[5]

*[மலையம் - மலை. மருங்கு - பக்'காம்; கோடி - ஆடை; ஆழி சக்கரம்; ஆரம் - மலை.]*

என்பது மாங்காட்டு மறையோன் வாக்காக இளங்கோவடி கள் காட்டும் சொல்லோவியம். இதனைத் தவிர,

> "நெடியோன் குன்றமும் தொடியோள் பெளவமும்
> தமிழ்வரம் புறுத்த தண்புனல் நாடு"[6]

என்றும்,

> "வேங்கட மலையும் தாங்கா விளையுள்
> காவிரி நாடும்"[7]

*[பெளவம் - கடல்.]*

---

4. சிலம்பு. காடுகாண். வரி—32.
5. சிலம்பு. காடுகாண். வரி—(41-51).
6. சிலம்பு. வேனிற்காதை.—அடி 1—2.
7. ,, கடலாடு காதை.—அடி (30-3`).

கோயிலின்பால் காட்டிய அக்கறையும், அவருடைய சொந்தப் பெருமையும் சிறப்புமாகச் சேர்ந்து திருக் கோயிலின் புகழை மிகவும் உயர்த்திவிட்டது. இராமாநுசர் திருமலைக்கு மூன்று தடவை வந்ததாக அவர் வரலாற் றால் அறியக் கிடக்கின்றது. இன்று திருமலையில் நடை பெறும் வழிபாட்டு முறைகள் யாவும் இராமாநுசர் வகுத்தவையே என்று 'திருமலையொழுகு' என்ற நூலால் அறிகின்றோம். இராமாநுசர் திருவேங்கடமுடை யானுக்குக் கைங்கரியம் செய்யும் அரிச்சகர்கட்குக் குடியிருப்பு வசதிகள், பிற வசதிகள் இவற்றைச் செய்தார். தன் தாய் மாமனாகிய திருமலை நம்பியையே இவற்றையெல்லாம் கண்காணிக்கும் மேலாளராகவும் நியமனம் செய்தார். இராமாநுசருடைய சமூகச் சீர்திருத்தமும் அவருடை தத்துவ ஞானமும் பாமரமக்கள் மனத்தையும் கவர்ந்தன. அவருடைய வடமொழி அறிவு அவருக்குப் பலவகையில் கைகொடுத்து உதவியது. அவருடைய கீதைப் பேருரையும் பிரம்மசூத்திரப் பேருரையும் அவரை வடநாட்டினர்க்கும் அறிமுகம் செய்து வைத்தன. இதனால் இராமாநுசரின் புகழ் நாட்டின் நாலாபுறங்களிலும் பரவியது. இதனால் அவர் மிக நெருங்கிய உறவுடன் கைங்கரியம் செய்து வந்த திருவேங்கடமுடையானின் பெருமையும் சிறப்பும் எங்கும் பரவி திருவேங்கடத்திற்கும் ஒரு முக்கியத்துவம் ஏற் படலாயிற்று. இவற்றைத் தவிர சைவ வைணவ வாக்குவாதம் பற்றிய வரலாறும் திருமலையின் புகழ் எங்கும் பரவக் காரண மாக இருந்தது. இந்த வரலாற்றைச் சுமார் 700 ஆண்டு கட்கு முன்பிருந்த பின்பழகிய பெருமாள்சீயர் அருளிய ஆறா யிரப்படிக் குருபரம்பரையிலும் இராமாநுசாசாரியரின் திவ்விய சரிதையிலும் காணலாம்,

**திருவேங்கடத்தின் சிறப்பு :** வைணவ தத்துவம் சித்து, அசித்து, ஈசுவரன் என்று மூவகைப்பட்டிருக்கும். இதனைத் 'தத்துவத் திரயம்' (திரயம் - மூன்று) என்று வழங்குவர். வைணவப் பெருமக்கள் சித்தும் அசித்தும் ஈசுவரனுக்கு

உடலாக அமைந்திருக்கும். இந்த உறவினைச் 'சரீர - சரீரி பாவனை' என்று போற்றியுரைப்பர் அப் பெருமக்கள். அசித்தும் எம்பெருமானுடைய படைப்பாகி அவனுடைய திருமேனியாகத் திகழ்வதால் அதுவும் வழிபாட்டிற் குரியது.

"சென்று சேர்திரு வேங்கட மாமலை
ஒன்று மேதொழ நம்வினை ஓயுமே"[12]

என்ற நம்மாழ்வாரின் பாசுரம் இக் கருத்திற்கு அரண் செய் வதாக அமைகின்றது. அசித்தின் பெயரைச் சொன்ன வுடனேயே எம்பெருமான் மன மகிழ்ந்து நமக்குத் திருவருள் பாலிக்கும் பெருமை பேசப்பெறுகின்றது.

"திருமா லிறுஞ்சோலை
மலைஎன்றேன்; என்னத்
திருமால் வந்துஎன்
நெஞ்சுநிறையப் புகுந்தான்"[13]

என்ற திருவாய்மொழி இதற்குச் சான்றாக நிற்கின்றது.

இயற்கை எழில் நிறைந்த திருவேங்கடத்தை ஆழ்வார் பெருமக்கள் தம்முடைய பாசுரங்களில் சிறப்பித்துப் பாடி யுள்ளனர். இவை யாவும் கல்நெஞ்சத்தையும் கரையச் செய்யும் இன்பப் பாசுரங்கள்; கவிநயமும் இசையேற்றமும் பொருட் செறிவும் பொருந்திப் பொலிபவை. இறைவனிடம் அன்பு கொண்டு ஈடுபட்டு நெஞ்சம் நெக்குருகிப் பாடுபவன் சாதாரண மனிதனாக இருப்பினும், அவன் பாட்டு எவர் உள்ளத்தையும் எளிதில் கவரும், ஆனால் பரம்பொருளின் பேரருளை நிறைவாகப் பெறவேண்டுமென்று பேரவாக்

---

12. திருவாய். 3.3:8.
13. ஷெ—10.8:1.

கொண்டு மனம் உருகி நெஞ்சம் கசிந்து பாடும் பக்தர்கள் இசைக் கவிஞர்களாக இருப்பின், அவர்களின் தோத்திரப் பாக்கள் எவ்வளவு உயர்சிறப்பை உடையன வாயிருக்கும்!

திருவேங்கடமலை திருவரங்கத்தைக் காட்டிலும் முதலாழ்வாரின் உள்ளத்தைக் கவர்ந்தது. பொய்கை யாழ்வார்,

> "வினைச்சுடரை நந்துவிக்கும்
> வேங்கடமே வானோர்
> மனச்சுடரைத் தூண்டும் மலை"[14]

[நந்துவிக்கும் - உருத்தெரியாமல் நசிப்பிக்கும்.]

என்று கூறித் தன் உள்ளத்தை அதில் ஈடுபடுத்துவர். மன மாகிய சுடரை—இதயம் என்னும் விளக்கைத்—தூண்டி ஒளிரச்செய்யும் மலை என்று சொல்லும் பொழுதே இவரது உள்ளத்தில் சுடர் விட்டெரியும் பக்தி விளக்கு நமக்கும் ஓரளவு புலனாகின்றது. மண்ணவர்க்கு மட்டுமன்று, விண்ண வர்க்கும் மனச்சுடரைத் தூண்டுகின்றது, இம்மலை என் கின்றார் ஆழ்வார். பக்தி என்ற ஒரு நெருப்பை மூட்டி மற்றொரு நெருப்பை அணைக்கின்றது திருவேங்கடம் என்று சமத்காரமாகக் கூறும் கவிதையில் பக்திச் சுடர் கவின்பெறு கின்றது. பேயாழ்வாரோ, பரமபதத்தோடும் பாற்கட லோடும் இம் மலையைச் சேர்த்துப் பேசுகின்றார்.

> "பண்டுஎல்லாம் வேங்கடம்
> பாற்கடல் வைகுந்தம்
> கொண்டுஅங்கு உறைவார்க்குக்
> கோயில்போல்"[15]

என்பது அவரது திருவாக்கு.

---

14. முதல் திருவந்.—26.
15. மூன். திருவந்.—61.

இக்காலத்தில் நான்கு திக்குகளினின்றும் பக்தகோடிகள் நாடோறும் திருப்பதிக்கு வந்து திருமலையில் திருக்கோயில் கொண்டு 'செடியாய வல்வினைகள் தீர்க்கும்' திருவேங்கட வனை வழிபட்டுச் செல்வதுபோல பொய்கையாழ்வார் காலத்திலும் பக்தர்கள் பல திசைகளினின்றும் திருமலைக்குப் போந்து நாடோறும் 'புகைவிளக்கும் பூம் புனலும் ஏந்தி'ய வண்ணம் வணங்கினர். இங்ஙனம் இவர்கள் வணங்கு வதனால்தான் திருமாலும் உள்ளம் உவந்து இந்தப் புனித மான வெற்பில் எழுந்தருளி உள்ளான் என்பது பொய்கை யாழ்வாரின் கோட்பாடு. திருமலையிலுள்ள மூங்கிற் காடுகளையும் குளிர்ந்த மலைச் சாரல்களையும் அநுபவித்த பூதத்தாழ்வாரோ இன்னொருவிதமாகக் கூறுவர்.

"—நின்றதுவும்
வேய்ஓங்கு தண்சாரல்
வேங்கடமே விண்ணவர்தம்
வாய்ஓங்கு தொல்புகழான் வந்து''[16]

[வேய் - மூங்கில்.]

என்கின்றார். பகவான் விண்ணகத்திலிருந்து மண்ணகத்திற்கு வருங்கால் திருமலையின் இயற்கைக் காட்சிகளில் ஈடுபட்டு அப்படியே அந்த மலையில் நின்றுவிட்டானாம்!

திருவேங்கடத்தைப்பற்றி பக்திசாரரின் அநுசந்தானம் மிகவும் அற்புதமானது.

"வெற்பென்று வேங்கடம்
பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று
நினைக் கின்றேன்''[17]

[வெற்பு - மலை; வீடு - மோட்சம்.]

---

16. இரண். திருவந்.—25.
17. நான். திருவந்.—40.
சில.—11

என்கின்றார். "பல மலைகளின் பெயர்களைச் சொல்லிவரும் அடைவிலே 'திருவேங்கடமலை' என்று என் வாயில் வந்து விட்டது. இதனால் பரமபதமும் எனக்குச் சித்தித்துவிட்டது" என்று கூறி இனியராகின்றார் ஆழ்வார். இந்த அநுபவத் தைக் கைமேல்கண்டவர் நம்மையும் அம் மலையைச் சென்று வணங்குமாறு ஆற்றுப்படுத்துகின்றார்.

"சென்று வணங்குமினோ
சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும்
நீர்மைபால்"[18]

என்பது ஆழ்வாரின் திருவாக்கு. திருச்சந்தவிருத்தத்திலும்,

"வேங்கடம்
அடைந்த மால பாதமே
அடைந்து நாளும் உய்ம்மினோ"[19]

என்று ஆற்றுப்படுத்துவதையும் காண்கின்றோம். இம் மலை வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைத்தமாநிதியாயிருப் பதாக இன்னொரு பாசுரத்தில் குறிப்பிடுகின்றார்.

"தண்ணருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும்
வைப்பு"[20]

என்று பேசுவதைக் காண்கின்றோம்.

சேரர்கோன் குலசேரப் பெருமாளுக்குத் திருவேங்கட மலையின்மீது ஏற்பட்ட கழிபெருங் காதல் அற்புதமானது. ஓர் இனிய திருமொழியில் அந்த ஆழ்வாரின் எண்ணக்கோவை களைக் கண்டு களிக்கலாம்,[21] திருவேங்கடத்தில் பிறத்தலும்

18. ஷை—42.
19. திருச்ச. விருத்.—81.
20. நான். திருவந்.—45
21. பெரு. திரு.—4.

அங்கு ஏதாவது ஒரு பொருளாக இருத்தலும் போதும் என்று கூறுகின்றார் இந்த ஆழ்வார். திருவேங்கடமலையில் வாழும் பேறு கிடைக்கப்பெற்றால் அறிவற்ற விலங்குப் பிறவியும் தனக்குப் போதும் என்கின்றார். கோனேரியில் வாழும் குருகு, திருவேங்கடச் சுனை மீன், வேங்கடக் கோன் உமிழும் பொன்வட்டில், செண்பகமரம், புதர், பொற்குவடு, மலையில் பாயும் கானாறு, காட்டு நெறி, கருவறைப் படி என்ற நிலை தனக்கு அமையின் போதும் என்று ஒன்றொன் றாகப் பாரித்துக் கூறுகின்றார். இறுதியாக 'எம்பெருமான் திருமலையில் ஏதேனும் ஆவேனே' என்று சொல்லித் தன் ஆசைக்குத் தலைக்கட்டி விடுகின்றார். இந்தத் திரு மொழியை அடியொற்றியே முத்தமிழ்க் கவி வீராகவ முதலியார்,

> மாடாக நிழற்று செழு
> மானாகத் தவச்சிறிய
> பூடாகக் குழைத்தநறும்
> புதலாக வழிப்படுவோர்
> ஓடாகப் பெறுவமெனில்
> உயிர்காணற் கதிபெறலாம்
> வீடாகத் திருநெடுமால்
> வீற்றிருக்கும் வேங்கடத்தே.''[22]

[மாடு - விலங்கு. நிழற்றும்-நிழல் தரும். தவச்சிறிய - மிகச்சிறிய. பூடு - புல் பூண்டு. புதல் - புதர்.]

என்ற பாடலை அருமையாக அமைத்து ஆழ்வாரிடமும் அவர்மூலம் திருமலையின்மீதும் தமக்குரிய ஈடுபாட்டைப் புலப்படுத்துகின்றார்.

திருமலையின் இயற்கைக் காட்சிகள் : எங்கெங்கெல்லாம் அழகு உள்ளதோ அங்கங்கெல்லாம் இறைவனும் இருப் பதாகக் கொள்வது தமிழரது கொள்கை. இக் கொள்கையே

22. திருவேங். கலம்—72.

'முருகன்' என்ற தமிழ்க் கடவுளின் தத்துவம் என்பதைத் திரு. வி. க. போன்ற இறையன்பு கொண்ட அறிஞர்கள் விளக்கிப் போந்துள்ளனர். இக் கொள்கையை யொட்டியே பக்தர்களும் இயற்கையில் தோய்ந்து இறைவனை அநுபவிக் கின்றனர். காட்டிலும் நாட்டிலும், மண்ணிலும் விண்ணிலும் எல்லா இடங்களிலும் காணும் இயற்கையழகுகளில் எம்பெருமானின் அழகுக்கூறுகளில் மனத்தைப் பறிகொடுக் கின்றனர். இத்தகைய மனநிலையைக் கொண்ட ஆழ்வார் களும் இயற்கை அழகினைத் தம் உள்ளத்து அழகுடன் குழைத்து தம் மனம் விரும்பும் கடவுள் வடிவத்தின் தெய்விக அழகாகக் காண்கின்றனர். இத்தகைய இயற்கை அழகு வாய்ந்த தலங்கள்தாம் 'திவ்விய தலங்கள்' என்றும், 'திருப் பதிகள்' என்றும் மதித்து அங்குள்ள திருக்கோயில்களில் வழிபடுவது முக்கியம் என்று கருதினர் பக்தர்கள். இத்தகைய தலங்களில் திருப்பதி என வழங்கப்படும் திருவேங்கடமலை ஆழ்வார்கள் காலத்தில் சிறந்த தலமாக இருந்திருக்க வேண்டும்.

அசித்தாகிய வேங்கடமலையில் சில காட்சிகளைக் காண்டலும் இறையநுபவம் பெற்றதாக அமைகின்றது. மலையும் மலைசார்ந்த இடமும் 'குறிஞ்சி' என்று வழங்கப் பெறுவதை நாம் அறிவோம். இத்தகைய இடத்தின் கருப் பொருளாகிய குறவர், யானை, குரங்கு, பாம்பு போன்ற வற்றை ஆழ்வார்கள் குறிப்பிட்டுச் செல்லும் அழகு அவர் களுடைய கவித்திறனைக் காட்டுவதுடன் நம்மையும் கவிதை அநுபவத்தின் கொடுமுடிக்குக் கொண்டுசெலுத்துகின்றது. ஆழ்வார்கள் குறித்துச் சென்ற ஒருசில காட்சிகளைக் காண் போம்.

'அரவக்கிரி' என வழங்கும் திருப்பதி மலையிலே அக் காலத்து மலைப்பாம்புகள் ஏராளமாக இருந்தன. அங்கு மலைக் குறவர்கள் கூட்டம் கூட்டமாக வாழ்ந்தனர். அவர் கள் தினைப்புனங்களை காவல் புரிந்துவருகையில் யானை முதலிய விலங்குகள் அப் புனங்களில் பட்டிமேயப் புகும்.

அவற்றைத் துரத்துவதற்காகக் குறவர்கள் தாம் அமைத்த பரண்மீது இருந்துகொண்டு கற்களை வீசி எறிவர்; கற்களுடன் மாணிக்கக் கற்களையும் அங்ஙனமே வீசி எறிவர். அப்பொழுது அங்குத் திரியும் மலைப் பாம்புகள் யானைகளின்மீது பட்ட மாணிக்கங்களைக் காண்கின்றன. யானைகளை மேகங்களாகவும் ஒளி கொண்ட மாணிக்கங்களை மின்னலாகவும் கருதி மின்னலுடன் தோன்றும் இடிக்கு அஞ்சித் தம்முடைய புற்றுகளிலே நுழைந்து கொள்ளுகின்றன. இக் காட்சியை,

> ஊரும் வரி அரவம்
> ஒண்குறவர் மால்யானை
> பேர எறிந்த
> பெருமணியைக் - கார்உடைய
> மின்என்று புற்றடையும்
> வேங்கடமே[23]

*[ஊரும் - நகரும்; அரவம் - பாம்பு.]*

என்ற பொய்கையாழ்வார் வாக்கினால் அறியலாம். 'வரி அரவம்' என்பது உடம்பில் வரிகளையுடைய மலைப்பாம்புகள்; 'ஒண் குறவர்' என்பது அழகிய குறவர்கள், சிறந்த குறவர்கள் என்று பொருள்படும். 'ஒண்மையாவது—இவர்கள் பாட்டன்—பூட்டனிலே ஒருத்தன் பூமியிலே இறங்கினான் என்றும் பழியின்றிக்கே இருக்கை' என்பது வியாக்கியானம். அஃதாவது, வழிவழியாகத் திருப்பதி மலையை விட்டுக் கீழே இறங்காமல் அங்கேயே பெயராது வாழும் சிறப்பு அந்தக் குறவர்கட்கே உரியது என்று கூறி ஆழ்வாரின் கருத்தை விளக்குவர் பெரியவாச்சான்பிள்ளை. அக் குறவர்கள் கற்களுடன் மாணிக்கக் கற்களையும் எறிவர் என்பது வெறும் உயர்வு நவிற்சியன்று; அவர்களுடைய மதிப்பீட்டில் கல்லும் மாணிக்கமும் ஒன்றுதான் என்பது குறிப்பு.

---

3. முதல். திருவந்.—38.

கேடும் ஆக்கமும்
கெட்ட திருவினார்
ஓடும் செம்பொன்னும்
ஓக்கவே நோக்குவார்''[24]

என்று சேக்கிழார் பெருமான் சிவனடியார்களைக் குறிப்பிட்டதுபோல் வீடும் வேண்டா விறலின் விளங்கினார்க்கு—ஞானியர்க்கு—இரண்டும் ஒன்று தானே? இங்ஙனம் ஓட்டையும் செம்பொன்னையும் ஒக்கவே நோக்கி, வீடும் வேண்டாது, பயன் கருதாது ஆற்றப்படும் தொண்டில் உறைந்து நிற்கும் வலியும் வெற்றியும்,

ஆசை அறுமின்கள்
ஆசை அறுமின்கள்
ஈசனோடாயினும்
ஆசை அறுமின்கள்[25]

என்ற திருமூலர் வாக்கினாலூம், அறியப்படும். கல்வியறிவே இல்லாத கள்ளங் கபடமற்ற குறவர்கள் ஓதியும் ஓதாதும் உணர்ந்த தூய சிந்தையுடைய ஞானியர் உள்ளத்தைப் பெற்றிருந்தனர் என்று ஆழ்வார் பெறவைத்த குறிப்பினை உன்னுந்தோறும் உவகை பயக்கின்றதன்றோ?.

மாலவன் குன்றத்தில் பூதத்தாழ்வார் காட்டும் காட்சி ஒன்றினைக் காண்போம். மதப் பெருக்கால் செருக்கித் திரிகின்றது ஆண் யானை ஒன்று. அது தன் பெண் யானையைக் காண்கின்றது. மதம் மறைந்து அதற்குத் தெளிவு பிறக்கின்றது. அதனை மீறி அப்பால் செல்ல மாட்டாது அதற்கு இனிய உணவு ஈந்து அதன் மனம் நிறைவிக்க விரும்புகின்றது அந்த ஆண்யானை. அருகிலிருந்த ஒரு மூங்கிற் குருத்தைப் பிடுங்கி மழை முழைஞ்சிலுள்ள ஒரு தேனடையில்

24. பெரியபுரா. திருக்கூட்டச் சிறப்பு—8.
25. திருமந்.—2570.

தோய்த்து அப் பிடியின் வாயில் ஊட்டுகின்றது 'குளோப் ஜாமுனை' ஊட்டுவது போல. இதனை ஆழ்வார்,

> பெருகு மதவேழம்
> மாப்பிடிக்கு முன்நின்று
> இருகண் இளமூங்கில்
> வாங்கி - அருகிருந்த
> தேன்கலந்து நீட்டும்
> திருவேங் கடம்கண்டீர்
> வான்கலந்த வண்ணன்
> வரை.[26]

[வேழம் - யானை; பிடி - பெண்யானை; இருகண் - இரண்டு கணுக்களையுடைய; வண்ணன் - நிறத்தன்; வரை - மலை]

என்ற சொல்லோவியமாகக் காட்டுவர். இத்தகைய ஒரு காட்சியைத் திருமங்கையாழ்வார் இமயமலையில் காட்டுவர். திருப்பிரிதி என்ற திவ்விய தேசத்தை வருணிக்கும் இந்த ஆழ்வார் இக் காட்சியைக் காட்டுகின்றார்.

> வரைசெய் மாக்களிறு இளவெதிர் வளர்முளை
> அலைமிகு தேன்தோய்த்துப்
> பிரச வாரிதன் இளம்பிடிக் கருள்செயும்
> பிரிதிசென் றடைநெஞ்சே.[27]

[வரைசெய் - மலைபோன்ற; களிறு - ஆண் யானை; வெதிர் - மூங்கில்; வளர் முளை - வளரும் இள மூங்கில்; அளை - முழைஞ்சு; பிரசவாரி - தேன் வெள்ளம்; அருள் செயும் - கொடுக்கும்]

இங்கு ஆண்யானை தன் பெண் யானைக்கு ஒரு தேன் தோய்ந்த மூங்கிற் குருத்தைத் தந்து அதனை மகிழ்விக்கின்றது. இக்

---

26. இரண். திருவந்.—75.
27. பெரி. திரு.—1. 2:4

காட்சியினை நினைவிற் கொண்ட கம்பநாடன் சித்திரகூட மலையில் இத்தகைய காட்சியொன்றைச் சீதைக்கு இராமன் காட்டும் போக்கில் காட்டுவன்.

உருகு காதலில் தழைகொண்டு
மழலைவண்டு ஓச்சி
முருகு நாறுசெந் தேனினை
முழைநின்றும் வாங்கி
பெருகு சூழ்இளம் பிடிக்குஒரு
பிறைமருப் பியானை
பருக வாயினில் கையில்நின்று
அளிப்பன பாராய்.[28]

[முருகு - மணம்; நாறு - வீசுகின்ற; முழை - மலை இடுக்கு; பெரு குசூல் - முதிர்ந்த கருப்பம்; மருப்பு - தந்தம்]

இங்கு ஓர் ஆண் யானை சூல் கொண்டுள்ள தன் இளம் பிடியின்மீது அளவற்ற அன்பு கொண்டுள்ளது. ஒரு மலையிடுக்கில் தேன் கூடு கட்டப்பெற்று அடையில் தேன் ததும்பி நிற்கின்றது. தேனீக்கள் அதனைச் சூழ்ந்து மொய்த்துக் கொண்டுள்ளன. ஆண் யானை அண்மையிலுள்ள மரத்தினின்றும் ஒரு தழைக் கொத்தினை ஒடித்து அதனைக் கொண்டு அம் மழலை வண்டுகளை ஓச்சுகின்றது. பிறகு அந்தத் தேன் அடையினை அப்படியே அசையாமல் தன் துதிக்கையினால் வாங்கிச் சூல் நிறைந்து பருகுவதற்கும் சிரமப்படும் தன் பிடியின் வாயில் வைத்துப் பருகுமாறு செருகுகின்றது. இந்த யானை மூங்கில் குருத்தினை விரும்பவில்லை. 'ரஸகுல்லா' போல் தேனடையை மட்டிலும் அளிக்க விரும்பினது போலும். பொய்கையாழ்வாரும்[29] பேயாழ்வாரும்[30]

28. கம்பரா. அயோத். சித்திர.—10.
29. முதல் திருவந். —40.
30. மூன். திருவந். —70.

இத்தகைய யானைக் காட்சிகளைக் காட்டித் திருமலையை அநுபவிப்பர்.

திருமழிசைபிரான் திருமலையின் இயற்கைக் காட்சியில் தம் மனத்தைப் பறிகொடுக்கின்றார். அங்ஙனம் பெற்ற களிப்பினால், எக்களிப்பினால், கற்பனை நயம் தோய்ந்த காட்சி யொன்றினை நமக்குப் புலப்படுத்துவர். மாமதியை மாலவனுக்கு மணி விளக்காக வைக்கும் நோக்கத் துடன் அந்த மதியை எட்டிப் பிடிப்பதற்காகத் தும்பிக்கை யைத் தூக்கியவண்ணம் நிற்கின்றது ஒரு யானை. அந்த யானையைப் பிடிப்பதற்காக நாற்புறமும் வேடர்கள் சூழ்ந்து கொள்கின்றனர். அந்த யானையின்மீது அம்பு தொடுக்கும் நோக்கத்துடன் குறவர்கள் விற்களை எடுத்துக் கொண்டு செல்லுகின்றனர்.[31] இந்த நிகழ்ச்சியைக் காட்டும் முகத்தான் திருமலை மதிமண்டலத்தை எட்டியிருக்கிற தென்று அதன் உயர்ச்சியையும் புலப்படுத்துகின்றார் ஆழ்வார். திவ்விய கவி பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் திருவேங்கடமலையின் உயர்ச்சியைக் காட்டும் திறன் மிக அற்புதமானது. இராசி மண்டலத்தையும் திருமலையையும் பொருத்திக் காட்டும் கற்பனைத்திறம் சொல்லும் திறமன்று. இப் பகுதியில் பன்னிரண்டு இராசிகளில் மேடம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்ற வைகள் மலையின் உயர்ச்சியுடன் பொருத்திக் காட்டப் பெறும் திறம் எண்ணி மகிழ்வதற்குரியது.[32] திருமங்கை யாழ்வாரும் வேங்கடம் விண்ணுலகம் வரை எட்டியுள்ளது என்பதைத் தன்மை நவிற்சியாகவே கூறுவர்.

ஏழுமலையான் சிறப்பு : திருமங்கையாழ்வாரும் நம்மாழ் வாரும் திருமலையின் இயற்கை எழிலிலும், மலையின் உயர்ச்சியிலும் ஈடுபட்டாலும் அங்குத் திருக்கோயில்

---

31. நான். திருவந்.—47.
32. சுப்புரெட்டியார், ந. "திருவேங்கடமும் தமிழ் இலக்கிய மும்" (பாரி நிலைய வெளியிடு) பக். 187—191.

கொண்டுள்ள இறைவன்பால் தம் மனத்தைப் பறி கொடுக்கின்றனர். பெரிய திருமொழியில் திருமங்கை யாழ்வார் எம்பெருமானின் பெருமையைப் பலவாறு பேசி இனியராகின்றார். எம்பெருமான் பல்வேறு அவதாரங்கள் எடுத்து மக்களுக்காகச் செய்த பல்வேறு நற் செயல்களை எடுத்துக்காட்டி அகமகிழ்கின்றார். திருவேங்கடமுடையான் குருந்தம் ஒசித்த கோபாலனாக வந்தவர்; கொக்கின் வடிவமாக வந்த பகாசுரனை வாய்பிளந்து வானுலகத் திற்கு அனுப்பிய வித்தகர்.[33] கல் நெஞ்சத்தையுடைய பூதனையிடம் பாலமுதம் பருகியதுடன் அவள் உயிரையே குடித்த அற்புதச் செயலை யுடையவர்; கிருத யுகத்தில் வெண்ணிறத்தையும், கலியுகத்தில் கருமை நிறத் தையும், துவாபரயுகத்தில் நீலமணி நிறத்தையும் கொண் டிருப்பவர்.[34] கண்ணனாக இருக்கும்பொழுது மருதிடைத் தவழ்ந்து நளகூபர மணிக்ரீவர்களின் சாபத்தை நீக்கிய பெருமையுடையவர். குன்றம் ஏந்திக் குளிர் மழை காத்து ஆநிரைகளின் துன்பத்தைப் போக்கியவர்.[35] பார்த்தனுக்குச் சாரதியாக நின்று தேரோட்டியவர்; ஆயர்பாடியில் கோபிய ருடன் குரவைக் கூத்து ஆடிய கோவலர்.[36] மாணியாய்ச் சென்று மண்ணிரந்து கொண்டவர்; இராமனாக நின்று மராமரங்கள் ஏழையும் ஓரம்பினால் எய்த அற்புதச் செயலை யுடையவர்.[37] பாலனாய் ஏழுலகுண்டு ஆலிலையில் துயின்ற வர்; திண்திறல் அரியாகி ஒண்திறல் அவுணன் உயிர் குடித்த திறலுடையவர்.[38] பஞ்சபூதங்களின் வடிவமாக நின்று பேராயிரம் கொண்ட பெம்மான்.[39]

---

33. பெரி. திரு.—1.8:1.
34. ஷெ —1.8:2.
35. ஷெ —1.8:3.
36. ஷெ —1.8:4.
37. ஷெ —1.8:5.
38. ஷெ —1.8:6.
39. ஷெ —1.8:7.

இன்னும் எம்பெருமான் இராவணனின் திண் ஆகம் பிளக்க அம்பு கோத்தது, இலங்கை அரக்கர்களை மடியச் செய்தது, நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு ஆலிளந் தளிர்மேல் துயில் கொண்டது, உறிமேல் நறு நெய்யை அமுது செய்தது, குறளுருவாய் நின்று ஈரடிகளால் நிலமனைத் தையும் கவர்ந்தது, அரியாய்த் தோன்றி அவுணன் உடல் பிளந்தது முதலிய செயல்களில் ஆழங்கால் பட்ட வண்ணம்.[40] பல வேண்டுகோள்களை விடுக்கின்றார். 'அடியேனுக்கு அருளாயே' என்றும், 'அடியேனுக்கு அருள் புரியாயே' என்றும், 'குறிக்கொள் எனை நீயே' என்றும் பிரார்த்திக்கின்றார். அடுத்து, திருவேங்கடமுடையான் அவருடைய திருவுள்ளத்தில் வந்து புகுந்த பெருஞ் செயலைப் பேசி அநுபவிக்கின்றார்.[41] 'திருவேங்கடம் மேல் என் ஆனை என் நெஞ்சில் உள்ளானே' என்றும், 'திருவேங்கடமாமலை மேய கோனே! என் மனம் குடிகொண்டு இருந்தாயே' என்றும் பேசி இனியராகின்றமையையும் காண்கின்றோம்.

எம்பெருமான் திறத்தை எடுத்துரைத்த ஆழ்வார் தன் குற்றங்களை யெல்லாம் விரித்துக் கூறி தன்னை ஆட்கொள்ளு மாறு வேண்டிச் சரண் புகுகின்றார். "எம்பெருமானே, உறவினரல்லாதாரை உறவினர்கள் என்று நம்பிக் கெட் டொழிந்தேன்[42]. அநுபவிக்கத் தகாதவற்றை அநு பவித்து[43] எண்ணற்ற பாவங்களைச் செய்தேன். பல உயிர்களைக் கொன்று பலவகைப் பாவங்களை பண்ணினேன்.[44] எண்ணற்ற யோனிகளில் பிறந்து இளைத்தேன்; ஒருவிதமான நற்செயல்களையும் புரிந்தேன்

---

40. ஷெ —1.10: 1 to 5.
41. ஷெ —1.10:6, 7.
42. ஷெ —1.9:1.
43. ஷெ —1.9:2.
44. ஷெ —1.9:3.

இலேன்[45]. பஞ்ச பூதங்களாலான யாக்கையில் புகுந்து புலம்பித் தளர்ந்தொழிந்தேன்.[46] அறியாப் பருவத்தே பல அவச்செயல்களைச் செய்து விட்டேன்; இளமைப் பருவத்தில் பெண்டிர்க்காகவே அலைந்து சதிர் கேடனானேன்[47]. இங்ஙனம் பாவமே செய்து பாபியான அடியேன் உன்னை விட்டுத் தரிக்கமாட்டாத அன்பு பிறந்து உன்னையே அடைக்கலமாகப் பற்றிக்கொண்டேன். முன்னைத் தீவினைகளை எண்ணி என்னைக் கைவிடாது ஆட்கொள்ள வேண்டும்''[48] என்று கூறிச் சரணமடைகின்றார் ஆழ்வார்.

ஆழ்வாரின் தலைவராகக் கருதப்பெறும் நம்மாழ்வாரின் அருளிச் செயல்களில் திருவேங்கடத்தைப்பற்றி வரும் செய்திகள் மிக அற்புதமானவை. விசிட்டாத்வைதத் தத்துவத்தின் உயிர் நாடியாகவுள்ள சரணாகதியின் அருமையை உலகுக்கு உணர்த்தும் பெருமையை இங்குக் காணலாம். திருமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் இந்த ஆழ்வாருக்குத் 'தாள் பரப்பி மண் தாவிய ஈசனா'கவும், 'என் கண், பாசம் வைத்த பரஞ்சுடரா'கவும்[50] 'வேதியர் முழுவேதத்து அமுத'மாகவும்,[51] காட்சி அளித்து அவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றான். இத்தகைய எம்பெருமானின் திருவடியில்,

> 'அகல கில்லேன் இறையும்' என்று
> அலர்மேல் மங்கை உறைமார்பா
> நிகரில் புகழாய் உலகம் மூன்று
> உடையாய் என்னை ஆள்வானே!

---

45. ஷை —1.9:4,5.
46. ஷை —1.9:6.
47. ஷை —1.9:7.
48. ஷை —1.9:9.
49. திருவாய்.—3.3:11.
50. ஷை —3.3:4.
51. ஷை —3.3:5.

நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல் ஒன்(று) இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.[52]

[இறை - கணநேரம்; நிகர் - ஒப்பு; புகல் ஒன்று - வேறு வழி.]

என்று சரண் புகுகின்றார். இந்த பாசுரம் வைணவர்கட்கு ''சரமசுலோகம்''[53] போல் இனிப்பது. அதுபோல் ஆன்மாவை ஈடேற்றும் புணைபோல் இருப்பது. இதுதான் எம்பெரு மானைக் 'கால்கை' பிடித்து (காக்கை பிடித்து) உய்யும் வழி யாக இருப்பது. வைணவ தத்துவமொழியில் கூறினால் 'சரணாகதியாக' இருப்பது. இப் பாசுரத்திற்கும் இப் பாசுரம் அடங்கிய பதிகத்திற்கும் ஈட்டாசிரியர் கூறும் சொற்பொருள் கள் சிந்தைக்கும் செவிக்கும் இனிப்பவையாகும். இத் திருவாய் மொழியின் ஒன்பதாம் பாசுரத்தின் இறுதியடி 'அந்தோ அடியேன் உன்பாதம் அகலகில்லேன் இறையுமே'[54] என்பது. ஆழ்வார் பாசுரங்கட்கு உரை சொல்லும்போதே வைணவ தத்துவம் அனைத்தையும் குழைத்துத் தந்துவிடுவார்கள் அன்னை பிள்ளைக்கு முலைப்பாலுடன் மருந்தைக் குழைத் துத் தருவதைப் போல. அன்னை உடலுக்கு மருந்து ஊட் கிருள்; ஆசாரியர்கள் உயிருக்கு மருந்து ஊட்டுகின்றனர். அவ்வளவுதான். இப் பாசுரம் சரணாகதியைக் குறிப்பதால் இத் திருவாய் முழுவதும் சரணாகதி சாரமாயிருக்கும் என்று வைணவ ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுவர்கள். அதற்கேற்ப இந்த ஆறாம் பத்து முழுவதிலும் 'உலகளந்த திருவடி' அடிக்கடிக் கூறப்பெறுவதையும் காணலாம், 'நெடியோன்' என்ற பெயர் திரிவிக்கிரமனைக் குறிப்பது;

---

52. ஷெ—6.10:10.
53. கீதை—18:66.
54. திருவாய்.—6.10:9.

மூன்று ஆச்சரியமான செயல்களைச் செய்தவன் திரிவிக்கிரமன். இத் திருப்பாசுரத்தைத் துவய மந்திரத்தின் பதங்களோடு ஒப்பிட்டுப் பொருள் கூறுவர் ஈட்டாசிரியர்.

கால வெள்ளத்தில் திருமலையின் பெயரும் திருவேங்கடமுடையானின் பெயரும் மக்கள் மனத்தில் நிலையான இடத்தைப் பெற்றுவிட்டன.

கண்ணனடி யினைஎமக்குக் காட்டும் வெற்பு;
கடுவினையர் இருவரையும் கடியும் வெற்பு;
திண்ணமிது வீடுஎன்னத் திகழும் வெற்பு;
தெளிந்தபெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்பு;
'புண்ணியத்தின் புகல்இது'எனப் புகழும் வெற்பு;
பொன்னுலகின் போகமெலாம் புணர்க்கும்வெற்பு;
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு;
வேங்கடவெற்பு எனவிளங்கும் வேத வெற்பே.[55]

[கடியும் - ஒழிக்கும்; திண்ணம் - உறுதி; செறிந்த - நிறைந்த; புகல் - இருப்பிடம்; பொன் உலகு - பரமபதம்; புணர்க்கும் - அடைவிக்கும்.]

என்ற வேதாந்த தேசிகரின் பாடல் மலையின் பெயரை மக்கள் மனத்திடம் ஆழப்பதித்துவிட்டது.

ஆழ்வார் பெருமக்களாலும் இராமாநுசராலும் அவர் பின் வந்த ஆசாரியப் பெருமக்களாலும் திருவேங்கடம்—நெடியோன் குன்றம்—பெரும் புகழ் பெற்றதைக் கண்டோம். இதனால் கற்றவர்கள், கல்லாதவர்கள், பக்தர்கள் சுற்றுலாச் செல்வோர் முதலிய எண்ணற்ற மக்கள் நாடோறும் திருமலைக்கு வருவதும் போவதுமாக உள்ளனர். திருவேங்கடமுடையான் மீது—நெடியோன் குன்றத்து நீல முகிலின்மீது—எண்ணற்ற கதைகள், செவிவழிச் செய்திகள் எழுகின்றன. இவை தலபுராணத்திலும் இடம் பெறுகின்றன. சில தனிப்பாடல்களும் திருவேங்கட மலைபற்றிப் புனையப்

55. தே.பி.—82.

பெறுகின்றன. அவை மேலும் மேலும் மக்களிடையே பக்திச் சுடர் கிளர்ந்தெழுவதற்குக் காரணமாக அமைகின்றன. சில பாடல்கள் அழியா வாழ்வும் பெறுகின்றன.

கூன்கொண்டு சென்றவன் கூன்நிமிர்ந்தோட,
    குருடன் கொம்பில்
தேன்என்று காட்ட, முடவன்
    அத்தேனை எடுக்க,அயல்
தான்நின்ற ஊமைஎனக் கென்று
    கேட்க, தருவன்வரம்
வான்நின்ற சோலை வடமலை
    மேல்நின்ற மாதவனே.[56]

என்பது அங்ஙனம் அழியா வாழ்வு பெற்ற ஓர் அழகிய பாடல். மக்கள் மனத்தில் மலைமேலிருக்கும் மாதவன் நிலையான இடம் பெற்றிருப்பது போலவே, பக்திச்சுவை கிளர்ந்தெழச்செய்யும் இப்பாடலும் நிலையான இடம் பெற்றுவிட்டது. இன்று மக்கள் மனமாகிய தேசப்படத்தில் (Map) மலையின் பெயரும், மலையன் பெயரும்—நெடியோன் குன்றமும் குன்றத்துக் கோயில் கொண்டுள்ள முகில் வண்ணன் திருநாமமும்—அழியா வாழ்வு பெற்றுத் திகழ்கின்றன. திருப்பதி உலக திருத்தலப் பயணிகளின் பேரிடமாகத் திகழ்கின்றது.

இத்தனைச் சிறப்புகளுக்கும் காரணம்என்ன? திருவேங்கடமுடையான்மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையே யாகும். இந்த நம்பிக்கையைத் திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்.

தானே சரணுமாய்த்
    தானே பலமுமாய்த்
தானே குறைமுடிக்கும்
    தன்மையான்—தேனேய்

---

56. ஒரு பழம்பாடல்.

திருவேங் கடந்தொழுதேம்;
தீய விபூதிக்குள்
மருவேம்; கடந்தனெம்
வாழ்வு.[57]

[சரணம் - உபாயம்; பலம் - பயன்; தேன் ஏய் - தேன்நிறைந்த; தீய விபூதி - லீலா விபூதி; மருவேம் - பொருந்தமாட்டேம்; கடந்தனெம் - கடந்துவிட்டோம்.]

என்று அழகாகக் கூறுவர். திருவேங்கட முடையானை அடைவதற்கு அவனே உபாயமாக இருக்கின்றான்; அவனை அடைந்தவர்கட்கும் பயனை அளிப்பவனாகவும் திகழ்கின் றான்; அவனை அடையவொட்டாமல் குறுக்கே வருகின்ற விரோதிகளையும் போக்குகின்றவனாகவும் அமைந்துவிடுகின் றான். இவன் வேண்டுவார்க்கு வேண்டுவன நல்கும் கலியுக வரதனாக இருப்பதனால்தான் நாலாபக்கங்களினின்றும் மக்கள் திரண்டுவந்து 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கு'கின்றனர். அவனும் குன்றின் மேலிட்ட விளக்காக இருந்துகொண்டு மக்களை ஈர்க்கின்றான். எண்ணற்ற அடியார்கள்—சைவர்கள், வைணவர்கள் உட்பட்ட எல்லோரும்—நாள்தோறும் குவிந்தவண்ணம் உள்ளனர், இவர்கள் மனத்திற்குகந்த,

திருப்பதி மிதியாப் பாதம்
சிவனடி வணங்காச் சென்னி
இரப்பவர்க்கு ஈயாக் கைகள்
இனியசொற் கேளாக் காது
புரப்பவர் தங்கள் கண்ணீர்
பொழிதரச் சாகாத்தேகம்
இருப்பினும் பயனென்? காட்டில்
எரிப்பினும் இல்லை தானே.[58]

என்ற 'பக்தி அவியல்' பாடலும் எழுந்து அழியா வாழ்வைப் பெற்றுவிட்டது.

---

57. நூற். திருப். அந்.—96.
58. விவேக சிந்தாமணி—28.

## 11. பாசுரங்களில் உருக்காட்சிகள்*

"உருக்காட்சி (imagery) என்பது சொற்களால் கவிஞன் புலன்கட்குக் கவர்ச்சியுடையதாகச் செய்யும் ஒரு வகை உத்தியாகும். புலன்களின் மூலம் படிப்போரின் எழுச்சி களையும் அறிவினையும் கிளர்ந்தெழச் செய்தல் இயலும்; இதனைக் கருதியே கவிதையில் உருக்காட்சி கையாளப் பெறுகின்றது" என்று கூறுவர் பர்ட்டன் என்ற ஆங்கிலத் திறனாய்வாளர் கவிதைத் திறனாய்வு என்ற தமது நூலில். மேலும் அவர் கூறுவார்: "புலன்கட்கு முறையீடு செய்வதற் கேற்ப உருக்காட்சிகள் வகை செய்யப்பெறுகின்றன; செவிப் புல உருக்காட்சிகள், கட்புல உருக்காட்சிகள், சுவைப்புல உருக்காட்சிகள், நாற்றப்புல உருக்காட்சிகள், நொப்புல உருக்காட்சிகள், அல்லது தொடுபுல உருக்காட்சிகள், இயக்கப்புல உருக்காட்சிகள் (Kinesthetic images) மரபுவழி உருக்காட்சிகள் (Conventional images) என்பவை இவை யாகும்" என்று. எண்ணத்திற்கும் புலன்காட்சிக்கும் குறியீடு களாக இருப்பவை சொற்களாகும் என்பதை நாம் அறிவோம். ஒரு கவிதையைப் படிக்கும்போது அக் கவிதையிலுள்ள சொற்கள் அல்லது சொற்கோவைகள் சில பல உருக்காட்சி களை நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றன. புலன்களின் மட்டத்தில் தூண்டல்கள் (Stimuli) செய்வதைப் போலவே உருக்காட்சிகளும் கருத்து நிலைச் செயலில் (ideationally) நம் புலன்களைத் தூண்டி நம்மிடம் கவிதை

* சென்னை ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றப் பேச்சு.

யநுபவத்தை எழுப்பிக் கவிதையைத் துய்த்து மகிழ்வதற்குத் துணையாக அமைகின்றன. மேலும் சில சொற்கள் நம்மிடம் 'கட்டுண்ட' உருக்காட்சிகளையும் (Tied images) விடுதலை உருக்காட்சிகளையும் (Free images) எழுப்பிவிடுகின்றன. இவையும் கவிதையை நுகர்வதற்கு இன்றியமையாத கூறுகளாக (Sine quo non) அமைகின்றன.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலுள்ள பாசுரங்களில் இத்தகைய உருக்காட்சிகள் அமைந்திருப்பதால் பாசுரங்களைப் பயில்வோர் மனத்தில் இவை தோன்றி கவிதையநுபவத்தைக் கிளர்ந்தெழச் செய்கின்றன; படிப்போரைப் பக்திக் கொடுமுடிக்குக் கொண்டு செலுத்துகின்றன. 'சீதக்கடலுள் அமுதன்ன தேவகி' (பெரியாழ் *1.2:1*) 'மைத்தடங்கண்ணி யசோதை' (ஷி *1.2:12*), 'மாணிக் குறளன்' (ஷி *1.3:1*), 'வெள்ளிப் பெருமலைக் குட்டன்', 'கருமலைக் குட்டன்' (ஷி *1.7:5*), 'கைந்நாகத்து இடர் கடிந்த கனல் ஆழிப்படை உடையான்' (ஷி *4.9:11*) 'ஓங்கி உலகளந்த உத்தமன்' (திருப். *3*) 'மாவாய்ப்பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதி தேவன்' (ஷி *8*), 'அழுது அழுது அலமந்து அம்மா வழங்க' (நா. திரு. *1:9*), 'போர் களிறு பொரும் மாலிருஞ் சோலை' (ஷி *9:2*), 'கோவை மணாட்டி' (ஷி. *10:3*), 'முல்லைப் பிராட்டி' (ஷி *10:4*), 'பட்டி மேய்ந்த காரேறு' (ஷி *14:1*) 'காயாம் பூ மலர்ப் பிறங்கல் அன்ன மாலை' (பெரு. திரு. *1:2*) 'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ வானாளும் செல்வம்' (ஷி *4:2*), 'மன்னுபுகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவன்' (ஷி *8:1*), 'கொல்லணைவேல் வரி நெடுங்கண் கௌசலைதன் குலமதலை' (ஷி *9:3*), 'வெங்கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்கு' (ஷி *10:1*), 'பச்சைமாமலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண்' (திருமாலை—*2*), 'பார் ஆயது உண்டு உமிழ்ந்த பவளத்தூண்' (பெரி. திரு. *2.5:1*) உம்பரும் இவ் ஏழ்உலகும் ஏழ்கடலும் எல்லாம் உண்ட

பிரான்' (ஷ 3.10:3) 'கன்று அதனால் விளவு எறிந்து கனி உதிர்த்த காளை' (ஷ 3.10:8), 'கவளயானை கொம்பு ஒசித்த கண்ணன்' (ஷ 4.10:1), 'ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த நாதன்' (ஷ 4.8:6), 'ஓர் எழுத்து ஓர்உரு ஆனவன்' (ஷ 6.1:5), 'பெண் ஆகி இன் அமுதம் வஞ்சித் தானை' (ஷ 2.5:8), 'கடிகைத் தடங்குன்றின் மிசை இருந்த அக்காரக் கனியை' (ஷ 8.9:4), 'முன்னம் குறள் உருவாய் மூவடிமண் கொண்டளந்த மன்னன்' (ஷ 9.4:2), 'செங்கனி வாய்க் கருமாணிக்கம்' (திருவாய். 3.3:3) என்பன போன்ற சொற்கோவை எழுப்பும் உருக்காட்சிகளை எண்ணி மகிழ்க. இனி, சிறப்பாக ஒவ்வொரு புலனையும், பொதுவாகப் பல புலன்களையும் கவரும் உருக்காட்சிகளைக் கண்டு மகிழ்வோம்.

**கட்புல உருக்காட்சிகள் :** பல்வேறு உருக்காட்சி களிடையேயும் கட்புலத்தைக் கவரும் உருக்காட்சிகளே அதிகமாக உள்ளன. இவையே படிப்போர் மனத்தில் நிலை யான பதிவினை விளைவிக்கின்றன. கட்புலநரம்பு ஏனைய புல நரம்புகளைவிடத் தடித்திருப்பதே இதற்குக் காரணம் எனக் கருதலாம். இதன் காரணமாகவே இக்காலக் கல்வி யில் கட்புல—செவிப்புலத் துணைக் கருவிகள் அதிகமாகப் பயன்படுத்தப் பெறுகின்றன. பள்ளிகளில் சுற்றுலா அமைத்து மாணாக்கர்களைப் பல்வேறு இடங்கட்கு இட்டுச் சென்று பல்வேறு காட்சிகளை நேரில் காணச் செய் கின்றனர். ஆழ்வார் பாசுரங்களில் கட்புலனைக் கவரும் ஒரு சில உருக்காட்சிகளைக் கண்டு மகிழ்வோம்.

பவ்வநீர் உடைஆடை ஆகச் சுற்றி
பார்அகலம் திருவடியா பவனம் மெய்யா
செவ்விமா திரம்எட்டும் தோளா அண்டம்
திருமுடியா நின்றான்பால் செல்ல கிற்பீர்[1];

---

1. பெரி. திரு.—6.6:3.

[பவ்வம் - கடல்; உடை - இடுப்பு; பார் - பூமி; அகலம் - பரப்பு; பவனம் - வாயு; மெய். உடல்; மாதிரம் - திசை]

இதில் எம்பெருமான் உலக உருவமாயிருக்கும் நிலையைத் திருமங்கையாழ்வார் அநுபவித்து மகிழ்கின்றார் இப்பாசுரத்தில். எங்கும் பரவியுள்ள (விபுவான) எம்பெருமானுக்குக் கடல் நீர் ஆடையாகின்றது; பூமிப் பரப்பெல்லாம் திருவடியாகின்றது; வாயு மண்டலம் திருமேனியாகின்றது; திசைகள் எட்டும் திருத்தோள்களாகின்றன; அண்ட கடாகம் திருவபிடேகமாகின்றது. இந்தப் பேருருவம் கட்புல உருக்காட்சியாக அமைந்துள்ளது.

இன்னொரு காட்சியைக் காண்போம்.

எழில்உடைய அம்மனைமீர்!
என்அரங்கத்து இன்னமுதர்
குழல்அழகர் வாய்அழகர்
கண்அழகர் கொப்பூழில்
எழுகமலர்ப் பூஅழகர்[2]

[எழில் - அழகு; அம்மனைமீர் - தாய்மார்களே; அமுதர்-அமுதம் போன்றவர்; குழல்- தலைமுடி]

இப்பாசுரம் ஆண்டாள் எம்பெருமானின் திருமேனி அழகினை அநுபவிப்பதைக் காட்டுகின்றது. 'இன்னமுதர்' என்பது சுவைப்புல உருக்காட்சி. ஏனையவை கட்புல உருக்காட்சிகள். பாடலில் வருவது கலவை உருக்காட்சியாகும்; இது கற்பனை நயத்துடன் திகழ்வதைக் காண்க.

திருவாய்மொழியில் ஒரு காட்சியைக் கண்டு அநுபவிப்போம் :

முடிச்சோதி யாய்!உனது
முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதி நீ நின்ற
தாமரையாய் அலர்ந்ததுவோ?

---

2. நாச். திரு.—11:2.

படிச்சோதி ஆடையொடும்
பல்கலனாய் நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ?
திருமாலே கட்டுரையே.[3]

[படி சோதி - இயற்கையான சோதி; கடிசோதி - இடுப்புப் பகுதி சோதி]

நம்மாழ்வார் திருமாலிருஞ்சோலைமலை அழகரின் திருமேனி அழகில் உள்ளத்தைப் பறிகொடுத்துப் பேசுவது இப்பாசுரம். "உனது திருமுகமடலத்தின் பேரொளி மேல் நோக்கிக் கிளர்ந்து கிரீடமாக ஆயிற்றா? (திருமுடியிலிருந்து திருவடியில் கண் வைக்கின்றார்). ஆசனபதுமம் என்று கீழே தனியாக ஒன்று இல்லை! கீழ் நோக்கிக் கிளர்ந்த திருவடியின் பேரொளியே ஆசன பதுமமாகத் தென்படுகின்றதா? தேவரீரின் திருமேனியொளியும் இடுப்புப் பகுதியொளியும் பரவித் திருவாபரணங்களாயும் திவ்விய பீதாம்பரமாயும் புலப்படுகின்றனவோ?" இப்பகுதி முழுவதும் கட்புலக் காட்சியாக அமைந்துள்ளது என்பது தெளிவாகின்றது. நாலாயிரத்தில் இத்தகைய உருக்காட்சிகள் எண்ணற்றவை.

செவிப்புல உருக்காட்சிகள் : காதினால் மட்டிலும் கேட்டு உள்ளத்தைப் பறிகொடுக்கச் செய்யும் உருக்காட்சிகள் இவை. ஆழ்வார்களின் பாசுரங்களில் இத்தகைய காட்சிகளைக் கண்டு மகிலாம்.

கீசுகீசு என்றெங்கும் ஆனைச்சாத் தன்கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே?
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிர்அரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி

3. திருவாய்.—3.1:1.

கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?
தேசம் உடையாய்! திறஏலோர் எம்பாவாய்.[4]

[ஆனைச்சாத்தன் - ஒருவகைப்பறவைகள்; குழல் - கூந்தல்; காசு - அச்சுத்தாலி; பிறப்பு - ஆமைத்தாலி; கைபேர்த்து - கைகளை அசைத்து; கேட்டே - கேட்டு வைத்தும்; கிடத்தியோ - உறங்குவாயோ; தேசம் - தேஜஸ்]

இப்பாசுரத்தில் 'வாசநறுங்குழல்' என்ற தொடரில் நாற்றப் புல உருக்காட்சி தென்படுகின்றது. 'தேசம்உடையாய்' என்பதில் கட்புல உருக்காட்சி உள்ளது. கீசு கீசு என்ற ஆனைச் சாத்தனின் பேச்சரவம், காசும் பிறப்பும் கலகலத்தல், மத்தினால் ஓசைப்படுத்தின தயிர் அரவம், கேசவனைப் பாடுதல் இவை யாவும் செவிப்புல உருக் காட்சிகளாகும். ஆகவே, இங்கு மூவகைக் காட்சிகள் கலந்த ஒரு கலவை உருக்காட்சியை அநுபவிக்கின்றோம்.

புள்ளும் சிலம்பினகாண் புள்அரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேர்அரவம் கேட்டிலையோ?[5]

[புள் - பறவைகள்; சிலம்பின - ஆரவாரம் செய்தன; புள் அரையன் - பெரிய திருவடி; விளி - அழைக்கும்; பேர் அரவம் - பெரிய ஒலி]

இதில் 'வெள்ளை விளி சங்கு' கட்புல உருக்காட்சி. புள் சிலம்புதல், சங்கின் பேரொலி இவை இரண்டும் செவிப் புல உருக்காட்சிகள். இந்தக் கலவை உருக்காட்சி கற்பனை நயத்துடன் நம்மை மகிழ்விக்கின்றது.

தொடர்சங் கிலிகை 'சலார்-பிலார்' என்னத்
தூங்கு பொன்மணி ஒலிப்பப்
படுமும் மதப்புனல் சோர வாரணம்
பைய நின்று ஊர்வதுபோல்,

---

4. திருப்.—7.
5. ஷை—6.

உடன்கூடிக் கிண்கிணி ஆர வாரிப்ப
உடைமணி பறைக றங்க
தடந்தா ளிணைகொண்டு சார்ங்க பாணி
தளர்நடை நடவானோ?[6]

[சங்கிலிகைதொடர் - இரும்புச்சங்கிலியின் தொடர்; தூங்கு - தொங்குகின்ற; சோர - பெருக; வாரணம் - யானை; கிண்கிணி - கால் சதங்கை; உடைமணி - இடுப்பில் கட்டிய மணி; கறங்க - ஒலிக்க; தளர் நடை - இள நடை]

இது பெரியாழ்வார் யசோதைப் பிராட்டி நிலையிலிருந்து கொண்டு கண்ணனின் தளர்நடையை அநுபவிக்கும் பாசுரம். வாரணம் பைய ஊர்தல், தளர்நடை நடத்தல், மும்மதப்புனல் சோர்தல் ஆகிய மூன்றும் இயக்கப் புல உருக்காட்சிகள். இரும்புச் சங்கிலி 'சலார் - பிலார்' என ஒலித்தல், தூங்கு பொன் மணி ஒலித்தல், கிண்கிணி ஆரவாரித்தல், உடைமணி பறைபோல் ஒலித்தல் ஆகியவை செவிப்புல உருக்காட்சிகளாகும். இக்கலவை உருக்காட்சி நமக்குக் கண்ணனின் தளர் நடையை நேர் காட்சியாகக் காட்டுகின்றது.

வண்டினம் முரலும் சோலை
மயிலினம் ஆலும் சோலை
கொண்டல்மீது அணவும் சோலை
குயிலினம் கூவும் சோலை
அண்டர்கோன் அமரும் சோலை.[7]

[முரலும் - இசைக்கும்; ஆலும் - கூத்தாடுதல்; அணவும் - படியும்; அண்டர்கோன் - தேவர் கட்குத் தலைவனான அரங்கநாதன்; அமரும் - நித்திய வாசம் செய்யும்]

---

6. பெரியாழ். திரு.—1.7:1.
7. திருமாலை.—14.

இது திருவரங்கத்தின் இயற்கை அழகினைக் காட்டும் தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாசுரம். மயிலினம் ஆலுதல், கொண்டல் அணவுதல் இயக்கப் புல உருக்காட்சி கள். வண்டினம் முரலுதல், குயிலினம் கூவுதல் செவிப்புல உருக்காட்சிகள். அண்டர்கோன் அமர்ந்திருத்தல் கட்புல உருக்காட்சியாகும். இம்மூன்று வகை உருக்காட்சிகளும் கலந்து கலவை உருக்காட்சியாக அமைந்து பாட்டநு பவத்தை மிகுவிப்பதை அறிந்து மகிழ்க.

சுவைப் புல உருக்காட்சிகள் : நாவினால் பெறும் அநுபவத்தைத் தரும் பாசுரங்கள் அதிகமாகவே காணப்பெறு கின்றன. இறைவனே 'ஆரா அமுதனாக' இருக்கும்போது அவனைப்பற்றி நுவலும் பாசுரங்களில் இத்தகைய உருக் காட்சிகள் மிகுதியாக இருப்பதில் வியப்பில்லை.

வேங்க டத்துஅரி யைப்பரி கீறியை
வெண்ணெய் உண்டுஉர லின்இடை ஆப்புண்ட
தீங்க ரும்பினை, தேனைநன் பாலினை
அன்றி என்மனம் சிந்தைசெய் யாதே.[8]

[அரி - சிங்கம்; பரி - குதிரை; கீறியை - கிழித்த வன்; ஆப்புண்ட - கட்டுண்ட]

திருமங்கை யாழ்வார் திருநறையூர் எம்பெருமானை அநுபவிக்கும் பாசுரம் இது. வெண்ணெய் உண்ணல் சுவைப் புல உருக்காட்சி. எம்பெருமானைக் கரும்பு தேன், பால் என்று உருவகம் செய்யும் பொழுது சுவைப்புல உருக்காட்சி கள் நம் மனத்தில் எழுகின்றன. அவனை அப் பொருள் களாகவே அநுபவித்து மகிழ்கின்றோம். அடுத்த பாசுரத் திலும் எம்பெருமானை "அம் கட்டியை கரும்பீன்ற இன் சாற்றை"[9] என்று உருவகித்து அநுபவிக்கும்போதும் சுவைப் புல உருக்காட்சிகளை நம் மனத்தில் எழுப்புவதை அறிய

8. பெரி. திரு.—7.3:5.
9. ஷை—7.3 : 9.

லாம். இவரே திருமெய்யத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை "திருமெய்யத்து இன் அமுத வெள்ளம்"[10] என்று உருவகித்து இனியராகும்போது நம் மனத்தில் சுவைபுல உருக்காட்சியை எழுப்பிவிடுகின்றார்.

உச்சநிலையில் காதல் நோயால் தாக்குண்டிருக்கும் போது ஆண்டாள் பேசுகின்றாள் :

ஆரா அமுத அனையான்தன்
அமுத வாயில் ஊறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே
பருக்கி இளைப்பை நீக்கீரே.[11]

[புலராமல் - உலராமல்; பருக்கி - பருகும்படி பண்ணி; இளைப்பை - ஆயாசத்தை]

"அமுதத்தில் உண்டான ஓர் அமுதத்தைக் கொணர்ந்து நான் சருகாய் உலர்ந்து போவதற்கு முன்னே என்னைப் பானம் பண்ணுவித்து என்னுடைய இளைப்பைப் பாருங்கள்' என்கின்றாள். 'ஆண்டவனும் அமுதன்; அவன் வாயில் ஊரும் உமிழ்நீரும் அமுதம்"—இதில் சுவைப்புல உருக் காட்சிகள் திகழ்வதைக் கண்டு மகிழலாம்.

விஷ்ணுசித்தர் யசோதைப் பிராட்டியின் நிலையிலிருந்து கொண்டு குழந்தைக் கண்ணனை குழல் வாரிக் கொள்ள அழைக்கின்றார். அப்போது பேசும் பாசுரம் இது:

திண்ணக் கலத்துத் திரையுறிமேல் வைத்த
வெண்ணெய் விழுங்கி விரைய உறங்கிடும்
அண்ணல்.[12]

[திண்ணக் கலம் - கெட்டியான பாத்திரம்; திரை உறி - பின்னுதலையுடைய உறி; விரைய - விரைவாக]

---

10. பெரிய திருமடல்.
11. நாச். திரு.—13:4.
12. பெரியாழ்.—திரு. 2.5:3.

இதில் 'வெண்ணெய் விழுங்குதல்' சுவைப்புல உருக் காட்சி. இதே திருமொழியில் வரும் "பேயின்முலையுண்ட பிள்ளை"[13] என்ற சொற்றொடரிலும் சுவைப்புல உருக் காட்சி அமைந்திருத்தல் காண்க.

கொண்டல் வண்ணனைக்
 கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன்என்
 உள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோன்அணி
 அரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள், மற்(று)
 ஒன்றினைக் காணாவே.[14]

[கொண்டல் - மேகம்; அண்டர்கோன் - நித்திய சூரிகளின் தலைவன்]

இது திருப்பாணாழ்வார் அரங்கநாதனை அநுபவித்ததைக் காட்டும் பாசுரம். இதில் கொண்டல் வண்ணன், அமுதினைக் கண்ட கண்கள் இவை கட்புல உருக்காட்சிகள். வெண்ணெய் உண்ட வாயன், அணி அரங்கன், என் அமுதம் இவை சுவைப் புல உருக்காட்சிகளாகும். இப் பாசுரத்திலமைந்த கலவை உருக்காட்சி சிந்தனைக்கு விருந்தாக அமைந்திருப்பதை அநுபவித்து மகிழ்க.

நாற்றப்புல உருக்காட்சிகள் : மூக்கினால் முகர்ந்து அநுபவிக்கக்கூடிய காட்சிகளாக அமைந்திருப்பவை இவை. ஆண்டாள் காட்டும் உருக்காட்சி இது.

கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ?
மருப்பு ஒசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல் ஆழி வெண்சங்கே.[15]

---

13. ஷை—2. 5:2.
14. அமலனாதி பிரான்—10.
15. நாச். திரு.—7:1.

ஆண்டாள் காதல் முறுகிய நிலையில் திருச்சங்கை நோக்கி வினவுவதாக அமைந்த பாசுரம் இது. "கண்ணபிரானின் திருவதரத்தில் ஊறுகின்ற அமுதம் பச்சைக் கருப்பூர வாசனையை ஒத்திருக்குமோ? அல்லது தாமரைப்பூவின் மணத்தை ஒத்திருக்குமோ? அல்லது திருப்பவளச் செவ்வாய் தான் இனிக்குமோ?'' என்று வினவுவதில் சுவைப்புல உருக் காட்சி கலந்த நாற்றப்புல உருக்காட்சியைக் கண்டு அநுபவிக்கலாம்.

இத்தகைய உருக்காட்சி ஆழ்வார்கள் பாசுரங்களில் காண்டல் அரிதாகவே உள்ளது.

தேனார் பூஞ்சோலைத்
திருவேங்கட மலை[16]

வெறியார் தன்சோலைத்
திருவேங்கட மலை[17]

விரைகுழுவும் மலர்பொழில்சூழ்
வித்துவக்கோடு[18]

வெறிகமழ் சோலைத்தென்
காட்கரை[19]

தெருவெல்லாம் காவி
கமழ்திருக் காட்கரை[20]

என்ற பாசுரப் பகுதிகளில் அத்திபூத்த மாதிரி ஆங்கொன்றும் ஈங்கொன்றுமாக நாற்றப்புல உருக்காட்சிகள் அமைந்திருப் பதைக் கண்டு நுகரலாம். "கந்தம் கமழும் குழல்'' [21] என்ற

16. பெரு. திரு.—4:7.
17. ஷ—4:8.
18. ஷ—5:1.
19. திருவாய்.—9.6:4.
20. ஷ—9.6:1.
21. திருப்.—18.

திருப்பாவை அடியிலும் நாற்றப்புல உருக்காட்சி அமைந்திருப்பதைக் காணலாம்.

நொப்புல உருக்காட்சிகள் : தொடுவதால் அநுபவிக்கக் கூடிய உருக்காட்சிகள் இவை. இவையும் ஆழ்வார் பாசுரங்களில் அரியனவாகும்.

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால கட்டில்மேல்,
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி,
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா![22]

[கோட்டுக் கால் கட்டில் - யானைத் தந்தத்தால் செய்த கட்டில்; பஞ்ச சயனம் - அழகு, குளிர்த்தி, மென்மை, மணம், வெண்மை என்ற ஐந்து குணங்கள் அமைந்த படுக்கை: குழல் - கூந்தல்]

இதில் குத்துவிளக்கு எரிதல், கோட்டுக்கால் கட்டில், நப்பின்னை கொங்கைமேல் கிடக்கும் மலர் மார்பன் இவை கட்புல உருக் காட்சிகள். மெத்தென்ற பஞ்ச சயனம் நொப்புல உருக்காட்சி. இக் கலவை உருக்காட்சி நம்மிடம் பாட்டநுபவத்தை மிகுவிக்கின்றதன்றோ? அடுத்த பாசுரத்தில் "செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா"[23] என்ற தொடரில் பயமாகிய சுரம் (காய்ச்சல்) வருவதைக் காண்க. இது நொப்புல உருக்காட்சியாகும்.

காமத்தீ உள்புகுந்து
கதுவப்பட்டு இடைக்கங்குல்
ஏமத்துஓர் தென்றலுக்கு இங்கு
இலக்காய்நான் இருப்பேனே.[24]

[காமத்தீ . காமாக்கினி; கதுவப்பட்டு - தொல்லைப் பட்டு; கங்குல் - இரவு; இடை ஜாமம் - நள்ளிரவு]

22. திருப்.—19.
23. ஷை—20.
24. நாச். திரு.—8:2.

இஃது ஆண்டாள் தன் காமநிலையை மேகத்திற்கு உரைக்கும் பாசுரம். "எம்பெருமானிடத்து வைத்த காமத் தீ உறுப்புகளை யெல்லாம் எஞ்சாமல் எரித்து விட்டு இரை காணாமல் உள்ளேயும் புகுந்து எரிக்கின்றது" என்கின்றாள். இவண் 'காமத் தீ' என்பதில் நொப்புல உருக்காட்சியினை எழுப்புவதைக் கண்டு மகிழலாம்.

இயக்கப்புல உருக் காட்சிகள் ; ஒரு பொருள் அல்லது ஒரு மனிதனின் இயக்கத்தை விளக்குவது இந் நிலை உருக் காட்சியாகும்.

> காயும்நீர் புக்குக் கடம்பேறிக் காளியன்
> தீயபணத்தில் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி
> வேயின் குழலூதி வித்தக னாய்நின்ற
> ஆயன்வந் தப்பூச்சி காட்டு கின்றான்.[25]

*[காயும் நீர் - கொதிக்கின்ற நீர்; கடம்பு - கடம்ப மரம்; பணம் - படம்; ஆர்க்க - ஒலிக்க; வேய் - மூங்கில்]*

சிறு பிள்ளைகள் பூச்சி காட்டி விளையாடுவதைப் போல கண்ணனும் அக்காலத்தில் பூச்சி காட்டி விளையாடியதை அக்காலத்துப் பெண்கள் கண்டு அநுபவித்து உகந்ததைப் பெரியாழ்வாரும் யசோதை நிலையிலிருந்துகொண்டு அந்த விளையாட்டை அநுபவித்து இனியராவதைக் காட்டும் பாசுரம் இது. நீர் புகுதல், கடம்பு ஏறுதல், பணத்தில் பாய்ந் தாடுதல் இவை இயக்கப்புல உருக்காட்சிகளைக் காட்டுவது. வேயின் குழல் ஊதுதல் செவிப்புல உருக்காட்சியாகும். இக் கலவை உருக்காட்சி சிறுவன் கண்ணனின் விளையாட்டினை நம் மனத்திரையில் எழச் செய்து நம்மை மகிழ்விக்கின்றது. இதே விளையாட்டை,

---

25. பெரியாழ். திரு.—2.1:3.

காளியன் பொய்கை, கலங்கப் பாய்ந்திட்டு அவன்
நீள்முடி ஐந்திலும் நின்று நடம்செய்து
மீளஅவ னுக்கருள் செய்தவித்தகன்.[26]

[பாய்ந்திட்டு - குதித்து; நீள் முடி - நீண்ட படம்;
மீள - இளைத்துச் சரணம் புகுந்த பிறகு]

என்ற பாசுரத்தில் மீண்டும் குறிப்பிடுவதைக் காணலாம். பொய்கை கலங்கல், பாய்ந்திடல், நீள் முடியில் நடனம் செய்தல் இயக்கப்புல உருக்காட்சிகளாகும்.

கண்ணன் பிருந்தாவனத்தில் குழலூதிய செயலைக் காட்டுகின்றார் பெரியாழ்வார். ஊதிய திறத்தை,

சிறுவி ரல்கள் தடவிப்பரி மாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்பக்
குறுவெ யர்ப்புரு வம்கூட லிப்பக்
கோவிந்தன் குழல்கொ ழுதின போது.[27]

[பரிமாற - பரவ; கோட - வளைய; கொப்பளிக்க -
குமிழ்க்க; கூடலிப்ப - கிளர்ந்து வளைய]

என்ற பாசுரப்பகுதி காட்டுகின்றது. கண்ணன் குழல் ஊதுவதை நேரில் காண்பது போன்ற நிலையை உண்டாக்குகின்றது பாசுரம். கண்ணனின் சிறு விரல்கள் புல்லாங்குழலின் துளைகள் தோறும் தடவுதல், கண்கள் வளைந்து காட்டுதல், வாய் குமிழ்த்தல், புருவம் கிளர்ந்து வளைதல் இவை சிறு சிறு இயக்கங்களைக் காட்டும் இயக்கப்புல உருக்காட்சிகளாகும்.

அற்புதமான புல்லாங்குழல் ஓசையைக் கேட்டவர்கள், கேட்டவைகள் இவர்களிடம் உண்டான விளைவையும் காட்டுகின்றன பாசுரங்கள்.

---

26. ஷ்ை—3.9:7.
27. பெரியாழ். திரு.—3.6:8

பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக்
கவிழ்ந்து இறங்கிச்செவி யாட்டகில்லாவே.[28]

[கணம் - கூட்டம்; துறந்து - விட்டொழித்து; படுகாடு - வெட்டி வீழ்ந்த காடுபோல; கிடப்ப - மெய்மறந்து கிடக்க; கவிழ்ந்து - தொங்க விட்டுக் கொண்டு; ஆட்டகில்லா - அசைக்க மாட்டா]

இதில் பறவைகள் கூடுதுறத்தல், அவை சூழ்தல், படுகாடு கிடத்தல் இவையும்; கறவை மாடுகள் கால் பரப்பிடுதல், கவிழ்ந்து இறங்குதல், செவியாட்டாதிருத்தல் இவையும் இயக்கப்புல உருக்காட்சிகளாகும்.

மருண்டுமான் கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்த புல்லும் கடைவாய்வழி சோர,
இரண்டு பாடும் துலுங்காப் புடைபெயரா
எழுதுசித் திரங்கள் போலநின் றனவே.[29]

[சோர - நழுவி விழ; பாடு - பக்கம்; துலுங்கா - அசையாமல்; புடை பெயரா - அடியைப் பெயர்த்து இடமாட்டாமல்]

இதில் மேய்ந்த புல் கடைவாய் வழி சோர்தல் இயக்கப்புல உருக்காட்சியாகும்.

மரங்கள் நின்றுமது தாரைகள் பாயும்
மலர்கள் வீழும்வளர் கொம்புகள் தாழும்
இரங்கும் கூம்பும் திருமால் நின்றநின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே.[30]

[பாயும் - பெருக்கும்; வீழும் - விழாநிற்றல்; தாழும் - தாழ நிற்றல்; இரங்கும் உருகுதல்: கூம்பும் - குவிதல்]

---

28. ஷெ—3.6:8.
29. ஷெ—3.6:9.
30. ஷெ—3·6:10.

இதிலும் மதுதாரை பாய்தல், மலர்கள் வீழ்தல், கொம்புகள் தாழ்தல், போன்றவை இயக்கப்புல உருக்காட்சிகளாகும்.

உருக்காட்சிகளின் கலவை : பெரும்பாலும் உருக்காட்சிகள் தனித்து வருதல் அருமை; அவை கலவையாகவே கவிதைகளில் அமைந்து அவற்றிற்கு மெருகூட்டுகின்றன.

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி
ஊழி முதல்வன் உருவம் போல் மெய்கறுத்து
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய்.[31]

[கரவேல் - மறைக்காதே; ஆழி - கடல்; புக்கு - முகந்து; ஆர்த்து - ஆரவாரித்து; பாழி - பெருமை; ஆழி - சக்கரம்; அதிர்ந்து - முழங்கி]

ஆயர்பாடிச் சிறுமிகள் மழை தெய்வத்தை வேண்டுவதாக ஆண்டாள் பாடிய பாசுரம் இது. ஆழியுள் புகுதல், ஏறுதல், சார்ங்கம் உதைத்தல் இவை இயக்கப்புல உருக்காட்சிகள்; ஆழிமழைக் கண்ணன், ஊழிமுதல்வன்போல் மெய்கறுத்தல், ஆழிபோல் மின்னுதல் இவை கட்புல உருக்காட்சிகள்; ஆர்த்தல், அதிர்தல், சரமழை பெய்தல் இவை செவிப்புல உருக்காட்சிகள். இத்தகைய கலவை உருக்காட்சியை இன்னொரு பாசுரத்திலும் காணலாம்.

மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா,உன்
கோயில்நின்று இங்ஙனே போந்தருளி....[32]

---

31. திருப்.—4. 32. ஷை—23.

[மாரி - மழைக்காலம்; முழைஞ்சு - குகை; மன்னி - ஒட்டிக்கொண்டு; சீரிய - சீர்மை மிக்க; வேரி - பரிமளமுள்ள; பாடு - பக்கம்; மூரி - சோம்பல்; பூவை - காயாம் பூ]

கோபியர் தங்கள் முன் கண்ணன் எவ்வாறு எழுந்தருளிக் குறை முடிக்கவேண்டும் என்பதைத் தெரிவிக்கும் பாசுரம் இது. மலை முழைஞ்சில் உறங்கும் சிங்கம், தீவிழித்தல், பூவைப் பூ வண்ணன் இவை கட்புல உருக்காட்சிகள்; வேரிமயிர் பொங்குதல், பேர்ந்து உதறுதல், மூரிநிமிர்தல், புறப்படுதல், போந்தருளுதல் இவை இயக்கப்புல உருக்காட்சிகள்; நிமிர்ந்து முழங்குதல் செவிப்புல உருக்காட்சி. இவை கலந்து நிற்கும் நிலையில் கவிதை யநுபவம் கொடு முடியை எட்டிவிடுகின்றது.

**கவிதை அநுபவம்** : நம் உடல் தூண்டல்—துலங்கல் (Stimulus - response) என்ற உளவியல் தத்துவப்படி இயங்குகின்றது. உள்ளமும் அதற்கேற்பத் துலங்குகின்றது. வெளி உலகிலிருந்து தூண்டல்கள் புலன்களைத் தாக்கும்போது (Sensory level) அவற்றிற்கேற்பப் புலன்கள் துலங்குகின்றன. அதாவது, அப் புலன்கள் அத்தூண்டல்களால் கிளர்ச்சியடைகின்றன. அதனால் ஏற்படும் உணர்ச்சியை மனம் அநுபவிக்கின்றது. இந்த உணர்ச்சிப் பெருக்கில் உண்டாகும் இன்பமே—முருகுணர்ச்சியே—சுவையாகும். எடுத்துக் காட்டாக, மணப்பொருள்கள் தரும் மணத்தை நாற்றப் புல நரம்புகள் வாங்கி மூளைக்கு அனுப்புகின்றன. மனம் அப் பொருள்கள் நல்கும் மணத்தை அநுபவிக்கின்றது. ஊதுவத்தியின் மணம் செயற்படுவதைக் கருதுக. இங்ஙனமே பிற புலன்களின்மூலம் பெறும் தூண்டல்களால் மனம் அந்தந்தப் பொருள்கள் தரும் சுவைகளைப் பெற்று அவற்றில் ஈடுபடுகின்றது. இவ்வாறு வெளியுலகத் தூண்டல்களால் அடிக்கடி மனம் பெறும் அநுபவம் பெருமூளையில் பதிவாகிவிடுகின்றது. உலகை இன்பமயமாகக் கண்டு உள்ளத்தில் பூரிப்பு அடைபவர்களே கவிஞர்கள். ஆழ்வார்கள் போன்ற ஞானச்செல்வர்கள்

உள்ளத்தின் கனிவு அடைந்தவர்களாதலின் அவர்கள் இயற்கையில் இறைவனையே காணும் பேறு பெற்றவர்களாகின்றனர்.

இவ்வாறு பெருமூளையில் பதிவாகியிருக்கும் அநுபவம் அச்சு வடிவிலுள்ள கவிதைகளைப் படிக்கும் போது நினைவாற்றலின் காரணமாகத் தூண்டல்களாக (Ideational level) மாறுகின்றன. அவை மூளையிலுள்ள பூத்தண்டு (Thalamus) மேற் பூத்தண்டு (Hypo—thalamus) என்ற பகுதிகளின் மூலமாகப் புலன்களை அடையும்போது மூளையில் அற்புதமாக அமைந்திருக்கும் நரம்பு அமைப்புகளைத் தூண்ட, அந் நரம்புகளின் இயக்கத்தால் மாங்காய்ச் சுரப்பிகள் (Adrenal glands) போன்ற நாளமிலாச் சுரப்பிகளில் சாறுகளை ஊறச்செய்து குருதியோட்டத்தை மிகுவிக்கின்றன. உடலும் கிளர்ச்சி அடைகின்றது. அப்போது கவிதைகளில் வரும் உருக்காட்சிகளைப் புலன்கள் மீண்டும் மனத்தில் தோன்றச் செய்கின்றன. மனம் அக்காட்சிகளை அநுபவித்து மகிழ்கின்றது. இத்தகைய முருகுணர்ச்சி ஆழ்வார் பாசுரங்களில் பக்தி உணர்ச்சியாகப் பரிணமிக்கின்றது. இந்தப் பாசுரங்களைப் பயிலுங்கால் அதே உணர்ச்சியை நாம் பயிற்சியால் பெறமுடிகின்றது. ஆழ்வார்கள் அநுபவித்த பக்தி உணர்ச்சி அவர்தம் பாசுரங்களில் தேக்கிவைக்கப் பெற்றுள்ளது. அவர்தம் பாசுரங்களை நாம் பயிலுங்கால் அவற்றிலுள்ள சுவைகளை—பக்தி உணர்வுகளை—நம் மனம் அநுபவித்து மகிழ்கின்றது. பாசுரங்களும் 'மம்மர் அறுக்கும் மருந்தாக' நமக்குக் களிப்பூட்ட, நாம் பிரம்மாநுபவம் பெற்ற நிலையை அடைகின்றோம்.

## 12. பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம்*

பரம்பொருளுக்கும் ஆன்மாவிற்கும் ஒன்பது வகையான தொடர்புகள் ஏற்பட்டுள்ளள என்று வைணவ தத்துவம் கூறுகின்றது. இவற்றுள் நாயக-நாயகி பாவனையும் (தலைவன் —தலைவி உறவு) ஒன்றாகும். இந்த உறவே ஏனைய வற்றுள் சிறந்தது; உயிராயது. இந்த முறையில் பரமான் மாவைத் தலைவனாகவும், சீவான்மாவைத் தலைவியாக வும் வைத்து விளக்கும் பாசுரங்களை நாலாயிரத்தில் காணலாம். வைணவப் பெருமக்கள் சங்க கால நெறியை யொட்டி ஓர் அகப்பொருள் தத்துவத்தை அமைத்துக் காட்டிய பெருமையினைப்பெற்றனர். புருடோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன்னர், உலகிலுள்ள ஆன்மாக்கள் யாவும் பெண் தன்மையினை அடைந்து நிற்கும் என்பது அவர்கள் கண்ட தத்துவமாகும். எனவே ஆழ்வார்கள், குறிப்பாக நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் பெண் தன்மை எய்திப் பல திருக்கோயில் மூர்த்தி களை அநுபவித்ததை அவர்களுடைய திருப்பாசுரங்களில் கண்டு மகிழலாம்.

வைணவர்களிடையே நிலவும் ஒரு மரபினை ஈண்டு நினைவு கூர்தற்பாலது. தண்டகாரண்ய முனிவர்கள் இராமபிரானின் பேரழகில் ஈடுபட்டுப் பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆய மங்கையர்களாகிக் கண்ணனைக்

* கலைமகள்—பிப்பிரவரி, 1982 இதழில் வெளிவந்தது.

கூடினர் என்ற வழக்கு ஒன்று உண்டு. ஆனால் ஆழ்வார்கள் அப்படியின்றி அப்பொழுதே பெண்மை நிலையை யடைந்து எம்பெருமானாகிய புருடோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர். நம்மாழ்வார் போன்ற ஞானச்செல்வர் களிடத்தில் சில சமயம் ஞானம் தலைதூக்கி நிற்கும்; சில சமயம் பிரேமம் (காதல்) மீதூர்ந்து நிற்கும். இந்த இரண்டு நிலைகளிலிருக்கும்பொழுதும் அவர்கள் பாசுரங்கள் அருளி யுள்ளனர். இதனை,

ஞானத்தில் தம்பேச்சு
பிரேமத்தில் பெண்பேச்சு.[1]

என்று 'ஆசாரிய ஹிருதயம்' என்ற நூல் குறிப்பிடும். அதாவது ஞான நிலையிலிருக்கும்பொழுது அவர்கள் தாமான தன்மை யிலே நின்று பேசுவர். பிரேம நிலையிலிருக்கும்பொழுது பிராட்டி நிலையை ஏறிட்டுக் கொண்டு வேற்று வாயாலே பெண் பேச்சாகப் பேசுவர். அப்பொழுது நம்மாழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பராங்குச நாயகி' என்ற பெண்மைப் பெயரும், திருமங்கை யாழ்வாருக்குப் 'பரகாலர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பரகால நாயகி' என்ற பெண்மைப் பெயரும் வழங்கப் பெறும்.

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும்பொழுது அவர்கள் தோழி, தாய், தலைவி என்ற மூவரில் ஒருவரின் தன்மையைத் தாம் அடைந்து கூற்றுகள் நிகழ்த்துவர்.

சம்பந்த உபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றம் ஆகிற பிரஜ்ஞாவஸ்தைகளுக்கு தோழி தாயார் மகள் என்று பேர்[2].

*[பிரஜ்ஞாவஸ்தை - மூன்று காலங்களையும் அறியும் அறிவின் நிலை]*

---

1. ஆசாரிய ஹிருதயம்—*118*.
2. ஷை—*133*.

என்று ஆசாரிய ஹிருதயமும் இங்ஙனம் மூன்று நிலைகளாக வடிவெடிக்கும் பாசுரங்கட்குத் தத்துவம் கூறுகின்றது. இந்த மூன்று நிலைகளையும் மூன்று பிரஜ்ஞாவஸ்தைகள் என்று விளக்கமும் தருகின்றது. அந்த விளக்கங்களைப் பின்னர்க் கூறுவோம்.

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும்பொழுது அவர்கள் பாசுரங்களும் தாய் சொல்வதுபோல் வடிவெடுத்துத் 'தாய்ப் பாசுரம்' என்று பெயர் பெறும்; தோழி சொல்வதுபோல் உருக்கொண்டு 'தோழிப் பாசுரம்' என்று திருநாமம் பெறும்; தலைவி பேசுவதுபோல் வடிவெடுத்து 'மகள் பாசுரம்' என்று வழங்கப்பெறும். இங்ஙனம் மூன்று வகையாகக் கூற்றுகள் நிகழ்ந்து பாசுரங்களில் வெளிவந்தாலும், பாசுரங்கள் பேசுகின்றவர்கள் ஆழ்வார்களே யாவர். இதனைப் பதிகங்கள்தோறும் வரும் பல சுருதிப் பாசுரங்களால் (திருக்கடைக் காப்புச் செய்யுட்களால்) தெளிவாகும். திருவரங்கப் பெருமான்மீது தாய்ப் பாசுரமாக அருளிய பதிகத்தின்[3] இறுதிப் பாசுரத்தில் 'வண்குரு கூர்ச்சடகோபன், முகில்வண்ணன் அடிமேல் சொன்ன சொல்மாலை ஆயிரத்துள் இப்பத்தும்' என்றும்; மலைநாட்டுத் திருப்புலியூர் எம்பெருமான்மீது தோழிப் பாசுரமாக அருளிப் பதிகத்தின்[4] பல சுருதிப் பாசுரத்தில் 'தொண்டர் தொண்டர், தொண்டர் தொண்டர் சடகோபன் சொல், நேர்பட்ட தமிழ் மாலை ஆயிரத்துள் இப்பத்தும்' என்றும்; மலை நாட்டுத் திருமூழிக்களத்து உறையும் எம்பெருமான்மீது மகள் பாசுரமாக அருளிய பதிகத்தின்[5] திருக்கடைக் காப்புச் செய்யுளில் 'வண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்து உரைத்த அழிவு இல்லா ஆயிரத்துள் இப்பத்தும்' என்றும் கூறி

3. திருவாய்.—7.2. "கங்குலும் பகலும்"
4. திருவாய்.—8.9. "கருமாணிக்க மலைமேல்"
5. திருவாய்.—9.7. "எம் கானல் அகம்"

யிருப்பதனால் இதனை அறியலாம். ஏனைய திருவாய்மொழி அகப்பொருள் நுவலும் பாசுரங்களிலும் பெரிய திருமொழி அகப்பொருள் பாசுரங்களிலும் இதே போக்கு இருப்பதையும் கண்டு மகிழலாம். ஓர் ஆறனாது பல வாய்க்கால்களாகப் பெருகினாலும் அவற்றிக்கு முக்கியமான பெயர் ஒன்றேயாக இருக்கும் என்பதை நாம் அறிவோம். அங்ஙனமே ஆழ்வாரது சொல்மாலைகள் மூன்று நிலைமைகளாக வழிந்து புறப்பட்டலும், அவை ஆழ்வார்களது பாசுரங்களாகவே தலைக் கட்டி நிற்கும்.

எம்பெருமானைப்பற்றிக் கூறும் நூல்களில் 'திருவாய் மொழி'யும் ஒன்று என்பதை நாம் அறிவோம். இது 'திருமால வன் கவி[6] என்றும் சிறப்பிக்கப்பெறும். இந்நூலில் நம்மாழ் வார் எம்பெருமானை 100 பதிகங்களால் அநுபவித்து இனியராகின்றார். இவற்றுள் 73 பதிகங்கள் ஆழ்வார் தாமான தன்மையில் பேசியவை; 27 பதிகங்கள் பெண் பாவனையில் நின்று பேசியவை. பெண் நிலையிலிருந்து பேசியவற்றுள் மகள் பாவனையில் பேசியவை 17 பதிகங்கள்; தாய்ப் பாவனையில் பேசியவை 7பதிகங்கள்; தோழி நிலை யிலிருந்து பேசியவை 3 பதிகங்கள். இந்த மூன்று நிலைகளும் 'ஞானாவஸ்தைகள்' என்னாமல் 'பிரஜ்ஞாவஸ்தைகள்' என்றது மூன்று விதமான நிலைகளும் இவருக்கு எல்லாக் காலங்களிலும் உண்டு என்னுமிடம் தோற்று கைக்காக. திருவெட்டெழுத்தின் முப்பதப்பொருளைப் பற்றிய ஞானமும் இவர் திருவுள்ளத்தில் எப்பொழுதும் நிலைத்தேயன்றோ இருப்பது? பெரிய திருமொழியில் உள்ள அகப் பொருள் நுவலும் திருமொழிகள் 23; திருநெடுந் தாண்டகத்தில் 2; மடல் 2; ஆகமொத்தம் 27 திரு மொழிகள். இவற்றுள்ளும் தாய்ப் பாவனையில் உள்ளவை 10; மகள் பாவனையில் உள்ளவை 17; தோழிப் பாவனை யில் ஒன்று கூட இல்லை.

---

6. திருவிருத்.—48.

இங்ஙனம் மூன்று வகையாகச் செல்லும் பாசுரங்கட்கு விளக்கமும் கூறுகின்றது ஆசாரிய ஹிருதயம்.[7] வைணவ முறைப்படி மோட்சத்தை அடைய விரும்புபவர்கள் (முமுட்சுகள்) தெரிந்து கொள்ளவேண்டிய 'இரகசியங்கள்'[8] மூன்று. அவை திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்பனவாகும். ஆன்மாவின் உண்மைச் சொரூபம் (Essenrial nature) இன்னதென்பதையும், அந்நிலைக்கேற்பச் சேதநன்விடவேண்டுவன இன்னவையென்பதையும், பற்றவேண்டுவன இன்னவையென்பதையும் தெரிவிப்பது திருமந்திரமாகும். இது தன்னைமனனம் செய்கின்றவர்கட்கு இரட்சகமாயிருத்தலின் 'மந்திரம்' எனத் திருநாமம் பெற்றது. இந்த மந்திரத்தின் தன்மையை அறிந்தவர்கட்கே ஏனைய துவயம், சரம சுலோகம் என்ற இருமந்திரங்களிலும் நுவலப் பெறும் உபாயங்களிலும் (Means) பலத்திலும் (Result) விருப்பம் ஏற்படும்: இந்த மூன்று மந்திரங்களும் ஒன்றையொன்றை விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன. முதலில் உள்ள திருமந்திரத்தில் 'ஓம்: 'நம:' 'நாராயணாய' என்ற மூன்று சொற்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் 'ஓம்' என்ற சொல்லின் பொருளையே ஏனைய இரண்டு சொற்களும் நன்கு விரிவுபடுத்துகின்றன. இந்த இரண்டு சொற்களின் பொருளையே 'துவயம்' என்ற இரண்டாவது மந்திரம் விரிக்கின்றது. இத் தத்துவத்தின் பொருளையே 'சரம சுலோகம்' என்ற மூன்றாவது மந்திரம் மேலும் விரிக்கின்றது.

மேற்குறிப்பிட்ட மூன்று பதங்களும் மூன்று பொருள்களைச் சொல்லுகின்றன[9]. அவை சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கரியம் என்பன.[10] அதாவது, 'பிரணவம்'

---

7. ஆசா. ஹிரு.—134.
8. இவற்றின் பெருமையை உணராதார் காதில் விழாதவாறு மறைக்கப்பெறுவதால் இவை 'இரகசியங்கள்' எனப்பட்டன.
9. முமுட்சுப்படி—29.
10. ஷி—30.

சேஷத்துவத்தையும் (பிறருக்கு அடிமையாயிருத்தலையும்) 'நமஸ்ஸு' பாரதந்திரியத்தையும் (பரனுக்கு அல்லது பகவானுக்கு வசப்பட்டிருத்தலையும்) 'நாராயணாய' சேதநன் ஈசுவரனுக்குப் புரியவேண்டிய கைங்கரியத்தையும் (பகவானுடைய முகமலர்ச்சிக்கு உறுப்பான தொண்டு வகையும்) தெரிவிப்பனவாகும்.

மேலும், இவற்றுள் 'பிரணவம்' பிரிந்திருக்கும் நிலையில் 'அ' 'உ' 'ம்' என்ற மூன்று எழுத்துகளைக் கொண்டது. இம் மூன்று எழுத்துகளும் இருக்கு, யஜுர் சாமம் என்ற முன்று வேதங்களின் உயிர் நிலையான எழுத்துகளாகும். மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாய் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். அதாவது, அகாரம் பகவானையும், அதில் ஏறிமறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தையும், (அடிமைத் தன்மையையும்), உகாரம் அந்த அடிமைத் தன்மையின் அநந்யார்ஹத்துவத்தையும் (மற்றவருக்கில்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தலையும்) மகாரம் ஞானவானாகிய சீவான்மாவையும் தெரிவிக்கின்றன.

திருவாய்மொழியில் தோழியின் கூற்றாக வரும் மூன்று பதிகங்களிலும் அநந்யார்ஹத்துவம் தெரியும். இதை விளக்குவோம். தோழிப் பாசுரமாக வருபவை 'தீர்ப்பாரை யாமினி' (4.6) 'துவளில் மணிமாடம்' (6.5), கருமாணிக்க மலை' (8.9) என்பவையாகும். இவற்றுள் முதல் பதிகம் 'வெறிவிலக்கு' என்ற துறையில் அமைந்துள்ளது. தலைவிக்கு எம்பெருமானுடன் இயற்கைப் புணர்ச்சி நடைபெற்றுவிடுகின்றது; பிறகு பிரிவு ஏற்படுகின்றது. பிரிவாற்றாமையால் வருந்துகின்றாள். இவள் நிலையைக் கண்டு தாய்மார்கள் இவள்நோயினையும், அது ஏற்பட்ட காரணத்தையும், அதற்குரிய மருந்தினையும் அறியாமல் வெறியாடுக்கின்றனர். தோழி "இவளுக்கு ஏற்பட்ட நோய் எம்பெருமானால் ஏற்பட்டது. ஒவ்வொருவரும் நோன்பு நோற்றுப் பெறவேண்டியது. ஆகவே, சங்கு சக்கரம் என்று இவள் கேட்குமாறு கூறுங்கள் (2); உலகேழும் விழுங்கி உமிழ்ந்

திட்டபெருந்தேவன் பேர் சொல்லுங்கள் (4); மாயப்பிரான் கழல் வாழ்த்துங்கள் (3); இந்நோய் ஏழ்மைப்பிறப்புக்கும் சேமம்; கண்ணபிரான் கழல் வாழ்த்துவதே இவள் உற்ற நோய்க்கு மருந்து'' என்று கூறுகின்றாள். மேலும்,

இவளைப் பெறும்பரிசு இவ்அணங்கு
 ஆடுதல் அன்று; அந்தோ!
குவளைத் தடங்கண்ணும் கோவைச்
 செவ்வாயும் பயந்தனள்;
கவளக் கடாக்களிறு அட்ட
 பிரான்திரு நாமத்தால்
தவளப் பொடிக்கொண்டு நீர்இட்
 டிடுமின்; தணியுமே.[11]

*[பரிசு - மார்க்கம்; அணங்கு ஆடுதல் - வெறியாடுதல்; பயந்தனள் - நிற வேறுபாடு அடைந்தனள்; கவளம் - மதகரமான மருந்துகளைக் கவளம் கொண்டதாய்; கடா - மதம் பெற்றதான; அட்ட -தொலைத்த; தவளம் பொடி - பரிசுத்த மான பாததூளி; இட்டிடுமின் - தூவுங்கள்; தணியும் - தீரும்.]*

என்று சொல்லி வெறிவிலக்குகின்றாள். ''எம்பெருமானுடைய திருநாமத்தை உச்சரித்து வைணவர்களுடைய பாத தூளியைக் கொண்டு வந்து இவள்மேல் தூவுங்கள்'' என்று உண்மையான பரிகாரத்தை எடுத்துக் காட்டுகின்றாள். தாய்மார்கள் தாங்கள் தொலைவில்லி மங்கலம் செல்லும்போது இவளையும் இட்டுக்கொண்டு சென்றனர்; இவள் அங்குப் புக்கவாறே எம்பெருமானின் கோல மேனியையும், திவ்வியாபரணங்களையும் திவ்வியாயுதங்களையும் நீர்வள நிலவளங்களையும் கண்டு மெய் மறந்து வாய் வெருவுகின்றாள். மீண்டும் தாய்மாருடன் உறவு செய்து கொள்ளும்படியான நிலை

---

*11.* திருவாய்.—*4. 6:5.*

மையும் இல்லையாயிற்று. தாய்மார்கள் தோழிபக்கல் வந்து இவளை மீட்கும் உபாயம் ஏதாவது உண்டோ? என வினவுகின்றனர். அதற்குத் தோழி, "இவள் தொலைவிலி மங்கலத்தைக் கனவிலும் காணாதபடி முன்பே செய்திருக்க வேண்டும். அது செய்யாதது மன்றி, நீங்களே இவளைக் கொண்டு போய் அகப்படுத்தி விட்டு இப்போது மீட்க வழி தேடினால் இது முடியுமோ? 'இவளோடு நமக்கு இனி உறவில்லை' என்று நசையற்று இருக்க வேண்டுவதன்றி வேறொன்றுண்டோ?" என்கின்றாள். 'இவளை நீர் இனி அன்னைமீர் உமக்கு ஆசை இல்லை விடுமினோ?' 'அமுத மொழியாளை நீர் உமக்கு ஆசையின்றி அகற்றினீர்' என்று கூறித் தலைவிக்கு 'உபாயத்திலே உள்ள உறுதி'யை வெளிப்படுத்துகின்றாள்.[12] அடுத்த மூன்றாவது பதிகம்[13] அறத்தொடு நிலையைக் கூறுவது. தலைவிக்குக் குட்ட நாட்டுத் திருப்புலியூர் மாயப் பிரானுடன் கலவி நேரிட்டு விட்டதை அன்னைமாருக்குத் தோழி வெளியிடுகின்றாள்—"தண் திருப்புலியூர், முனைவன் மூவுல காளியப்பன் திருவருள் மூழ்கினளே" என்பதாக. இப்படி இந்த மூன்று பதிகங்களாலும் "இவ்வுயிர் பிற தெய்வங்கட்கு அடிமைப்பட்டது மன்று! தனக்குத் தானே உரியதுமன்று; பகவான் ஒருவனுக்கே உரியது" என்ற கருத்தாகிய 'அநந்யார்ஹ சேஷத்துவம்' தெளிவாக விளங்குகின்றது.

திருவாய் மொழியில் தாய்ப் பாசுரமாக நடப்பன எழு பதிகங்கள். இவற்றின் கருத்தையும் விளக்குவோம். பெண் பிள்ளையைப் பெற்று வளர்ப்பவள் தாய். அப் பெண் தக்க வயதை அடைந்ததும், பேராண்மைக்கு இருப்பிடமாகவுள்ள எம்பெருமானிடம் கழிபெருங் காதலை உடையவளாகின்றாள். அவன் இருக்கும் இடத்தைப் போய்ச் சேர வேண்டும் என்று பதறுகின்றாள். இதனைத் திருத்தாயார் பேசுகின்றாள்:

---

2. ஷை—6.5. 13. ஷை—8.9.

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்;
கண்ணநீர் கைகளால் இறைக்கும்;
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும்;
தாமரைக் கண்என்றே தளரும்;
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட் டென்னும்;
இருநிலம் கைதுழா இருக்கும்;
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறத்து என்செய்கின் றாயே?[14]

[கங்குல் - இரவு; கண்ணநீர் - கண்ணீர்; இருநிலம் - பெரிய பூமி.]

இன்னொரு பதிகத்தில் திருத்தாயாரின் பேச்சு இது;

கோமள வான்கன்றைப் புல்கி
கோவிந்தன் மேய்த்தன என்னும்;
போம்இள நாகத்தின் பின்போய்,
அவன் கிடக்கை ஈது என்னும்;
ஆம்அளவு ஒன்றும் அறியேன்;
அருவினை யாட்டியேன் பெற்ற
கோமள வல்லியை மாயோன்
மால்செய்து செய்கின்ற கூத்தே.[15]

[கோமள - இளைய: வான் - பெரிய; போம் - விருப்பப்படிப் செலும்; கிடக்கை -படுக்கை; அருவினை யாட்டி - அநுபவித்து முடிக்க அரிய பாபத்தையுடையேனான நான்; மால் - மயக்கி; ஆம் அளவு - ஆகும் அளவு]

இங்ஙனம் பதறும் தன் மகளைத் தடுத்து நிறுத்துகின்றாள் திருத்தாயார். தலைவனே தலைவி இருக்கும் இடத்திற்கு வரவேண்டும் என்பது நடைபெறவேண்டிய ஒழுங்குமுறை

14. ஷெ—7.2 : 1.
15. ஷெ—4.4 : 5.

என்றும், அங்ஙனமின்றித் தலைவியே தலைவனிருக்கும் இடத்திற்குப் புறப்படுவது குலமரியாதைக்குச் சிறிதும் பொருந்துவதன்று என்றும் நினைக்கின்றாள் தாய். திருமந்திரத்தின் இரண்டாவது சொல்லாகிய 'நம:' என்பது இந் நிலையைக் குறிக்கின்றது. இச் சொல் ந+ம: என்று இரண்டாகப் பிரிக்கலாம். இவ்விரண்டு எழுத்துகளும் தனித்தனிப் பொருளைத் தருதலின் பதங்களாயின.[16] இவற்றுள் ஆறாம் வேற்றுமையுடன் கூடிய 'ம:' என்னும் பதம் 'சேதநன் ஈசுவரனுக்கே உரியன்' என இயம்பும் நான்காம் வேற்றுமையின் பொருளுக்கு மாறாய்த் 'தனக்குத்தான் உரியன்' என்னும் பொருளைக் கொடுக்கின்றது. ஆனால் 'ந' என்னும் பதமோ அதற்கு எதிர் மறைப் பொருளால் அதைத் தடுத்துத் 'தனக்கு தான் உரியனல்லன்' என்பதை அறிவிக்கின்றது.[17] இதனால் 'நான் பிறனுக்கு (ஈசுவரனுக்கு) உரியவன்' என்பது பெறபடுகின்றது. இம் முறையில் இச் சொல் ஈசுவர பாரதந்திரியத்தைத் தெரிவிக்கின்றது. இன்னும் விளக்கிக் கூறினால், இச் சொல் ஞானத்தினால் ஏற்படும் சுதந்திரத் தன்மையை ஒழிக்கின்றது. அதன் காரணமாய் ஏற்படும் 'தன்னைத் தானே காத்துக்கொள்ள முடியும்' என்ற எண்ணத்தையும் நீக்குகின்றது. இனி, இவனைக் காத்து இரட்சிப்பவன் ஈசுவரனே ஆகின்றான் என்ற துணிவு பிறக்கின்றது. அதாவது, ஈசுவரனே உபாயம் என்ற பொருள் கிடைக்கின்றது. இந்த மனநிலைதான் 'தாய்' என்று குறிக்கப்பெறுகின்றது. திருவாய்மொழியில் தாய்ப் பாவனையில் பேசின ஏழு பதிகங்களும்[18] ஈசுவர பாரதந்திரியத்தையும், அவனே உபாயமாகின்றான் என்ற கருத்தையும் தெரிவிக்கின்றன. ஆகவே, இவை உபாயத்தில் உறுதி பூண்டிருக்கும் நிலையிலே எழுந்த பேச்சுகள் என்பது தெளிவாகின்றது.

---

16. முமுட்சுப்படி—78.
17. ஷி—79, 80.
18. திருவாய்—2.4; 4.2; 4.4; 5.6; 6.6; 6.7; 7.2.

மகள் பாசுரமாக நடைபெறுகின்ற பதிகங்களின் உள்ளுறைப் பொருளையும் காண்போம். பெற்றோர் அல்லது உறவினர் கூட்டாமலேயே தலைவனுடன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து தலைவனுடைய ஒப்புயர்வற்ற வனப்பு முதலியவற்றில் ஈடுபட்டு இருப்பவள் மகள்; குடியின் கட்டுப் பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டியல்லது உயிர் வாழ்ந்திருக்கமாட்டேன்' என்னும் பதற்றத்தை உடையவள் இவள். காலக்கழிவை இவளால் சிறிதேனும் பொறுக்க முடிவதில்லை. பிரணவத்தினாலும் நமஸ்ஸாலும் எல்லோருக்கும் சேஷியாய் (தலைவனாய்), சரண்யனாய், அறுதியிடப் பெற்றவன் எம்பெருமான். எல்லோருக்கும் புகலிடமாக இருப்பவனும் இவனே. பிரணவத்தாலும் நமஸ்ஸாலும் இவை உணரப்பெற்ற பின்பு 'நாராயணாய' என்ற சொல்லினால் கூறப்பெற்றுள்ள சொரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றின்[19] சேர்க்கையாலுள்ள பெருமையை நினைந்து மகிழ்பவள் இவள். தலைவி பேசு கின்றாள்:

என்நெஞ்சினால் நோக்கிக் காணீர்
　　என்னை முனியாதே;
தென்நன் சோலைத் திருக்குறுங்குடி
　　நம்பியைநான் கண்டபின்,
மின்னு நூலும், குண்டலமும்,
　　மார்பில் திருமறுவும்
மின்னு பூணும் நான்குதோளும்,
　　வந்துஎங்கும் நின்றிடுமே [20]

---

19. சொரூபம் - ஈசுவரனின் தியானத்துக்குரிய சொரூபம்; ரூபம் - பகவானுடைய திவ்விய மங்கள விக்கிரகம்; குணம் - ஆன்மகுணம், விக்கிரக குணம்; ஆன்ம குணங் கள் - ஞானம்சக்தி முதலியன; விக்கிரக குணம் - அழகு, மென்மை முதலியன; விபூதி - நியமிக்கப்படும் பொருள் (ஐசுவரியம்.)

20. திருவாய்—5.5:2.

[நெஞ்சினால் - நெஞ்சைக் கொண்டு; நோக்கி - அநுபவித்து; முனியாதே - சீறாமல்; மறு ஸ்ரீவத்சம்]

இஃது உருவெளிப்பாடு கண்ட தலைவி தாயரை மறுத்துரைக்கின்ற பாசுரம். இன்னெரு பாசுரத்தில் தலைவி பேசுகின்றாள்;

கண்டதுவே கொண்டு எல்லாரும் கூடி,
கார்க்கடல் வண்ணனொடு என்திறத்து
கொண்டுஅலர் தூற்றிற்று; அதுமுதலாக்
கொண்டஎன் காதல் உரைக்கில், தோழி;
மண்திணி ஞாலமும் ஏழ்கடலும்,
நீள்விசும்பும் கழியப் பெரிதால்;
தென்திரை சூழ்ந்துஅவன் வீற்றிருந்த
தென்திருப் பேரெயில் சேர்வன் சென்றே.[21]

[கண்டதுவே - மேனி மாற்றம் கண்டு; கார்கடல் - கருங்கடல்; அலர் - பழி]

அலர் எழுந்ததால் காதல் கங்குகரையின்றிப் பெருகுவதால் அத் தாபம் தீர எம்பெருமான் வீற்றிருக்கும் இடமான தென் திருப்பேரையில் சென்று சேர்வதாகக் கூறுகின்றாள் தலைவி.

எம்பெருமான் சாத்தியோபாயமாக[22] இருந்தால்தான் செய்யும் சாதனங்கள் முடிவுற்றபிறகே சாத்தியமாகின்ற பேறு கிடைக்கக் கூடும் என்று பொறுத்திருக்கலாம். ஆனால், அவன் சித்தோபாயமாக[23] இருப்பவன். அதனால் அவனைத் தாமதித்து அநுபவிக்கக் காரணம் இல்லை; 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டையும் மீறித் தான் நினைத்த பேற்றினை உடனே பெறவேண்டும் என்ற பதற்றத்தை

21. ஷெ—7.3:8.
22. சாத்தியோபாயம்—மக்களால் சாதித்துக் கொள்ளுகின்ற உபாயம். எ-டு. பக்தி.
23. சித்தோபாயம் - முன்னமே இருக்கும் உபாயம்; அஃதாவது இறைவனாகிய உபாயம்.

உடையவளாக இருக்கின்றாள் இவள் இந்த மனநிலைதான் 'மகள்' (தலைவி) என்று குறிப்பிடப்பெறுகின்றது. திருவாய் மொழியில் மகள் பாவனையில் பேசும் 17 பதிகங்களும்[24] இந்த நிலையையே குறிக்கின்றன என்பதை இந்தப் பதிகங்களை ஊன்றிப் படிப்பதனால் அறியலாம்.

வேதாந்தங்களில் குறிப்பிடப்பெறும் பக்தி இங்ஙனம் ஆழ்வார்களிடம் காதல் முறையில் பரிணமித்து நிற்பதை அறிகின்றோம். இவர்கள் எம்பெருமான்மீது கொள்ளும் காமம் 'பகவத்விஷய காமம்' என்று வழங்கப்பெறும். இங்ஙனம் இவர்கள் மாதவன்மீது கொள்ளும் காமம் மங்கையர்மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறு பட்டது. ஆயினும் சிற்றின்ப அநுபவமாகிய காதலுக்குக் கூறப் பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் இந்த பகவத் விஷய காமத்திற்கும் கூறப்பெறும். சிற்றின்ப அநுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாயிருப்பது போல பகவத் விஷயாநுபவத்திற்குப் பரபக்தி,[25] பரஞானம்,[26] பரமபக்தி[27] இவை இன்றியமையாதனவாக இருப்பதால் அவையே கொங்கை முதலான சொற்களால் இவ்வாழ்வார்

---

24. திருவாய். 1.4; 2.1; 4.8; 5.3; 5.4; 5.5; 5.9; 6.1; 6.2; 9.6.8; 7.3; 7.7; 8.2; 9.5; 9.7; 9.9; 10.3;

25. பரபக்தி - எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்கிற ஆவல்.

26. பரஞானம் - அவனை நேரில் காணல்.

27. பரமபக்தி - பின்பு மேன் மேலும் இடையறாது அநுபவிக்கவேண்டும் என்னும் ஆவல்.

அன்றியும் - எம்பெருமானோடு கூடினபோது சுகிக்கும் படியாகவும், பிரிந்தபோது துக்கிக்கும்படியாகவும் இருப்பது பரபக்தி; பகவானுடைய முழுமையான நேர் காட்சி பரஞானம்; அவனுடைய அநுபவம் பெறாவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல மூச்சு அடங்கும்படி இருத்தல் பரமபக்தி - இவ்வாறு நம் பண்டைய ஆசாரியர்கள் நிலைப்படுத்துவர்.

களின் அருளிச் செயல்களில் கூறப்பெறுகின்றன என்று சமயச் சான்றோர் கொள்வர்.

காதல் சுவையின் தொடர்பு சிறிதுமின்றியே பக்திச் சுவையின் அடிப்படையாகவே பாசுரங்கள் அருளிச் செய்தல் கூடும். அங்ஙனமிருக்க, காதல் சுவையையும் கலந்து பாசுரங்கள் அருளிச் செய்யப்பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன? உடல் நலத்திற்குக் காரணமான வேப்பிலை உருண்டையை உட்கொள்ளவேண்டியவர்கட்கு வெல்லத்தை வெளியிற் பூசிக் கொடுத்து உண்பிப்பது போலவும், கொயினா மாத்திரைகட்குச் சருக்கரைப் பாகு பூசி இனிப்புச் சுவையை உண்டாக்கித் தின்பிப்பது போலவும் சிற்றின்பம் கூறும் வகையால் பேரின்பத்தை நிலைநாட்டுகின்றனர் என்று பெரியோர்கள் பணிப்பர். இது கடையாய காமத்தினையுடையவர்கட்குக் காட்டப்பெறும் உத்தி முறையாக இறையனார் களவியலிலும் கூறப்பெற்றுள்ளமை[28] ஈண்டு ஒப்பு நோக்கி உணர்தல் தகும். ஆழ்வார்களின் முறுகிய பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கிய மரபே இஃது என்று கொள்ளிலும் இழுக்கில்லை என்க.

---

28. இறை.கள நூற்.—2 (உரை காண்க.)

## 13. பாசுரங்களில் சில அகத் துறைகள்*

தலைவன் தலைவியரது அன்பின் அடியாகப் பிறந்த இன்பக் காதல் வாழ்க்கையைப்பற்றி விரித்துக் கூறுவன அகத்திணை நுவலும் நூல்களாகும். தலைவன் தலைவியரது அகத்தில் நிகழ்வதாய், அகமே உணர்ந்து நுகரும் தன்மையதாய், வெளிப்படையாக இன்னபடித்தென இயம்ப இயலாததாய் இருக்கின்றமையின் இஃது அகப்பொருள் என்று பெயர் பெற்றது.

எல்லா உயிர்கட்கும் வேண்டப்படும் பொருள் இன்பம் ஒன்றுமே என்பது தேற்றம்.

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான் அமர்ந்து வரூஉம் மேவற் றாகும்'

என்பது தொல்காப்பியம். இதனால் இன்பம் ஒன்றுதான் மனம் விரும்பும் பொருள் என்பதாகின்றது. இவ்வின்பம் என்பது உயிர்கட்குப் புறத்தினின்றும் புகுத்தப்படுவ தொன்றன்று. உயிர்கள் இயங்கும் இயக்கமும், புரியும் செயல் களும் இவ்வின்பத்தைத் தாமே தம்முள் கண்டு கோடற் பொருட்டேயன்றி வேறில்லை. இவ்வின்பமும் நெறியறிந்து ஒழுகுமிடத்தே காணப்படுவதாகும். இவ்வின்பம் தமக்கு

---

*ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றப் பேச்சு

1. தொல். பொருள், பொருளியல்—27.

'வேண்டும் வேண்டும்' என்று இடையறாது தூண்டிக் கொண்டிருக்கும் ஏதோ ஓர் உந்தல் இருத்தலை யாவரும் உணர்வர். இதனைத்தான் 'காமம்' என்று நூல்கள் வழங்கு கின்றன. இது சிற்றின்பம்; வேதாந்த நூல்கள் இதனை 'விஷயகாமம்' என்று வழங்கும். இந்தக் காமம் உயிரின் இயற் கயைன்று என்றும், அதனை மூடி மறைத்திருக்கும் ஓர் அழுக்கே என்றும் அந்நூல்கள் பகரும். இந்த அவாவின் துண்டுதலால்தான் உயிர்களின் இயக்கம் நடைபெறுகின்றது என்பது வெள்ளிடை மலை. இன்பத்தை நாடும் உயிர்கள் தம் அவாவின் தூண்டுதலாலேயே இயங்குமாயின் அவை உறுதியாக இன்பத்தைக் காண மாட்டா; அவை விரும்பு கின்ற இன்பத்திற்கு மாறாக அளவிலாத் துன்பத்தையே எய்துதல் ஒருதலை என்பது வேதாந்தத்தின்[1] விழுப் பொருளாகும். இதனை நன்குணர்ந்த நம்மாழ்வார்,

> கண்டுகேட் டுற்றுமோந்
> துண்டுழலும் ஐங்கருவி
> கண்டவின்பம், தெரிவரிய
> அளவிலாச் சிற்றின்பம்,
> ஒண்டொடியாள் திருமகளும்
> நீயுமே நிலாநிற்பக்
> கண்டசதிர் கண்டொழிந்தேன்
> அடைந்தேநுன் திருவடியே.[2]

[நிலா நிற்ப - அழகு றநிற்ப; கண்டசதிர் - கண்ட இருப்பு]

என்று கூறுவார். ஐங்கருவிகண்ட இன்பம் என்பது உழக் காலே அளக்குமாறு போன்று அளவிற்குட்பட்ட பொருள் களை அறியத்தக்கவைகளான இந்திரியங்களாலே அநுப விக்கப்பெற்ற இவ்வுலக இன்பம். தெரிவு அ்ரிய அளவிலாச் சிற்றின்பம் என்பது, கைவல்ய இன்பம்; ஆன்ம அநுபவ சுகம் பேரின்பத்திற்கு எதிர்த்தட்டானதாகையாலே இது

2. திருவாய்—4. 9:10

'சிற்றின்பம்' எனப்பட்டது. "திருமகளும் நீயும் ஒருபடிப்பட்டு நிற்கும் படியாகச் செய்து வைத்த நல்விரகை நேரே கண்டு, இரண்டு இன்பங்களையும் ஒழிந்தேன்; நின் திருவடிகளை அடைந்தேன்" என்கின்றார் ஆழ்வார். இதுவே பேரின்பம்; 'பகவத்விஷய காமம்' என்று சமய நூல்கள் வழங்குவது. ஆழ்வார்களின் அகப்பொருள் பாசுரங் களில் விஷய காமத்திற்குரிய துறைகள் யாவும் 'பகவத் விஷய காமத்திற்கும்' வழங்கப்பெறும். அவற்றுள் சில வற்றை ஈண்டுக் காண்போம்.

1. நலம் பாராட்டுதல் :

தலைவன் தலைவியினிடத்தில் தான் வைத்துள்ள காதலை ஒருவாறு வெளியிடவேண்டி அவளது சிறப்பைப் புகழ்ந்துரைத்தல் இத்துறையாகும். இத்துறையமைந்த திருவிருத்தப் பாசுரம்:

வண்டுக ளோ?வம்மின் நீர்ப்பூ
நிலப்பூ மரத்திலொண்பூ
உண்டு களித்துழல் வீர்க்கொன்
றுரைக்கியம், ஏனமொன்றாய்
மண்துக ளாடிவை குந்தமன்
னுள்குழல் வாய்விரைபோல்
விண்டு கள்வாரும் மலருள
வோநும் வியலிடத்தே?[3]

[வம்மின் - வாருங்கள்; ஒண் பூ - சிறந்த பூ; உண்டு - தேனைக் குடித்து; உரைக்கியம் - சொல்லு வோம்; ஏனம் - பன்றி; வைகுந்தமன்னாள் - அழியாத நல முடையாள்; குழல்வாய் - கூந் தலில்; விரை - மணம்; வியல் இடம் - விசால மான இடம்]

ஒருமலர்க் காவில் ஒரு புறமாய்த் தலைவி நிற்கையில் அவளை அணுகிச் செல்வதற்குக் கூசாநின்ற தலைவன்

---

3. திருவிருத்.— 55

இவள் திறத்தில் நமக்குள்ள காதலை ஒருவாறு நாம் உணர்த்துவோம்; பிறகு நடப்பதைப் பார்ப்போம்' என்று எண்ணி அங்குப் பல வகைப் பூக்களிலும் வாய்வைத்துக் களித்துத் திரிகின்ற வண்டுகளை விளித்து, 'நீங்கள் எவ் விடத்தும் சென்று நீர்ப்பூ, நிலப்பூ, கோட்டுப்பூ என்றிப்படி வெவ்வேறு வகைப்பட்ட பூக்களைக் கண்டறிவீர்களன்றோ? அவற்றுள் எவையேனும் இவளது கூந்தலின் இயற்கை நறு மணத்தை யொத்த மணமுடையவை உண்டோ? சொல்வீர் களாக' என்று தன் அன்பை வெளிப்படுத்தித் தலைமகளைப் புகழ்ந்து தன் காதலை அறிவிப்பதாக அமைந்துள்ளது இத் திருப்பாசுரம்.

'பூவின் தன்மையும் மணத்தின் தன்மையும் தேனின் தன்மையும் அறியும் நீங்கள், புறம்புண்டான உங்களுடைய சுவையின் பராக்கைவிட்டு நான் சொல்லுவதைக் கேளுங் கள்' என்ற கருத்தைக் கொண்டது 'வண்டுகளோ வம்மின்' என்பது.

'சிலம்பினிடைச் சிறுபரல்போல் பெரிய மேரு
திருக்குளம்பில் கணகணப்பத் திருவா காரம்
குலுங்க,நில மடந்தைதனை யிடந்து புல்கிக்
கோட்டிடைவைத் தருளியவெங் கோமான்"[4]

[ஆகாரம் - உடல்]

மேற்கொண்ட செயல் 'ஏன மொன்றாய் மண் துகளாடி' என்றதனால் சொல்லப்பட்டது. இதில், அந்தப் பெரிய பன்றி வடிவத்திற்குப் பெரிய பூமி முழுவதும் ஒரு துகளா யினமை தோன்றும்.

எம்பெருமான் திறத்தில் ஆழ்வார்க்கு அளவு கடந்து உண்டான பக்தியின் பாங்கினைக் கண்ட பாகவதர் கொண்

4. பெரி. திரு.—4.4:8.

டாடிக் கூறும் சொல் இப்பாசுரத்தின் உள்ளுறைப் பொருளாகும். பரம்பொருளை நாடித் திரிபவரான சாரக்கிராஹிகளை 'வண்டுகளோ வம்மின்' என விளித்து முன்னிலைப் படுத்தினது. 'நீர்ப்பூ நிலப்பூ...ஒன்றுரைக்கியம்': 'நீர்ப்பூ' என்றதனால் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள வியூக மூர்த்தியையும், 'நிலைப்பூ' என்றதனால் பூமியில் திருவவதரித்த இராமகிருஷ்ணாதி விபவாவதார மூர்த்திகளையும், 'மரத்திலொண்பூ' என்றதனால் வேத சாகைகளின் முடியில்|காண்கின்ற பரஞ்சோதியாகிற பரமபத நாதனையும் நினைத்தபடி. ஆக இப்படிப்பட்ட எம்பெருமானின் மூர்த்திகளின் விளக்கத்தை இடையறாது அநுபவித்து ஆனந்தித்து எவ்வுலகிலும் தடையின்றித் திரிகின்ற உங்களுக்கு ஒன்று சொல்லுகின்றோம். பிரளய காலத்தில் பூமியின் ஆபத்தைத் தீர்த்த எம்பெருமானது அழிவற்ற வைகுந்த நாடுபோலப் பேராநந்தம் தருபவரான இவ் வாழ்வாரது தலையணியாகவுள்ள பக்தி மிகுதியின் புகழ்போல நீங்கள் எங்கேனும் கண்டதுண்டோ?" என்று கொண்டாடி உரைத்தனர் பாகவதர்கள்.

2. கழற்றெதிர் மறுத்தல்:

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் தலைவன் காதல் நோயால் மிக மெலிந்து கிடக்கின்ற தலைவனைக் கண்ட தோழன் 'நாளடைவில் நீ இங்ஙனம் உடல் மெலிவுற்றதற்குக் காரணம் யாது?' என்று கேட்க, நண்பனுக்கு உண்மையை ஒளிக்காத தலைவன் 'யான் ஒருத்தி வலையில் அகப்பட்டேன்' என்று உற்றதை உரைக்க, அதனைச் செவிமடுத்த பாங்கன் 'கடல்போல் கம்பீரனான நீ ஒரு மங்கையின் நிமித்தம் இவ்வாறு ஆயினதாகக் கூறுவது உன் பெருந்தன்மைக்குத் தகாது' என்று இடித்துக் கூற, அதற்குத் தலைமகன் 'என்னால் காணப்பட்ட வடிவை நீ கண்டாய் இல்லை; கண்டவரெவரும் இவ்வாறு வன்சொற் பகரார். அப்படிப்பட்ட பேரழகுள்ள பெண்ணன்றோ அவள்?' என்று அவனோடு மறுத்துரைத்தலே கழற்றெதிர்மறையாகும்.

"காணிற் கழறலை கண்டிலை மென்தோள் சுரும்பினையே"[5] என்றும்,

குண்டலம் சேர்ந்த மதிவாள்
முகத்த கொழுங்கயற்கண்
கண்டிலீர் கண்டால் உரையீர்
கழறிய கட்டுரையே.[6]

என்றும் வரும் திருக்கோவையார் பாடற்பகுதிகளும் இத் துறை பற்றியவையே யாகும்.

புலக்குண் டலப்புண்ட ரீகத்த
போர்க்கொண்டை, வல்லியொன்றால்
விலக்குண் டுலாகின்று வேல்விழிக்
கின்றன, கண்ணன்கையால்
மலக்குண் டமுதம் சுரந்த
மறிகடல் போன்றவற்றால்
கலக்குண்ட நான்றுகண் டார், எம்மை
யாரும் கழறலரே.[7]

*[புலம்-அழகிய; புண்டரீகம்-தாமரை மலர்; கெண்டை-மீன் வகை; வல்லி - (மூக்காகிய) கொடி; உலாகின்று - உலாவிக் கொண்டு; மலக்குண்டு - கலக்கப்பட்டு; மறிகடல்-அலைகடல்; கழரலர் - குற்றம் சொல்லார்]*

"தோழனே, நான் கண்ட மங்கையின் முகம் அழகிய குண்டலங்களையுடைய தாமரை மலர் போன்றது. அந்த எழில் முகத்திலுள்ள கண்கள் தம்மில் ஒன்றோடொன்று எதிர்த்துப் போர் புரிகின்ற கெண்டை மீன்கள் போலும். அக் கண்கள் ஒன்றன்மீது ஒன்று பாய்ந்து நெருக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்டிருந்தும் மூக்காகிய ஒருகொடியால் குறுக்கிட்டு இடைவிலக்கப் பெறுவதால், அவை சீற்றத்துடன்

---

6. திருக்கோவை—23. 6; ஷை—31.
7. திருவிருத்—57.

தனித்தனியாக உலவிக் கொண்டு வேற்படையைக் கொண்டு வேகமாகக் குத்தினாற்போல வருந்துவனவாய் நோக்கு கின்றன. அப்படிப்பட்ட கண்களால் நான் கண்ட நங்கை என்னை நோக்கும்பொழுது அவற்றால் நான் கலக்கப்பட்ட விதம் சொல்லுந் தரமன்று. திருமால் பாற்கடலைக் கடைந்த காலத்தில் அலை கிளரப்பெற்ற அக் கடல் கலங்கின விதத்தோ டொக்கும் என் மனநிலை. அங்ஙனம் நான் கலக்குண்ட காலத்தில் அக் கண்களின் நிலையை நேரில் கண்டவர் எவரேனும் உளரேல் அவர் ஒரு காலும் என்னை இங்ஙனம் இடித்துரைக்க மாட்டார்" என்கின்றான் தலைவன். எம்பெருமான் ஆழ்கடலைக் கலக்கிச் சாரமான அமுதத்தை எடுத்துக்கொண்டாற்போல, தலைவியின் கண்களும் ஆழ்ந்த தலைவனின் நெஞ்சைக் கலக்கிச் சாரமான அறிவைக் கவர்ந்து கொண்டன என்னும் கருத்து பின்னடிகளில் உய்த்து உணரத் தக்கது. கண்களின் பேரழகு அநுபவித்தார்க்கன்றி மற்றை யோர்க்கு அறிய வொண்ணாது என்னும் கருத்து ஈற்றடியில் தோன்றுவதும் கண்டு மகிழத்தக்கது.

இப்பாசுரத்தின் உள்ளுறை: ஆழ்வாருடைய ஞானக்கண் விளக்கத்தை அறிந்து ஈடுபட்ட பாகவதர்கள் தங்கள் ஈடு பாட்டைக் கண்டு அதனைக் குறைத்திட வேண்டும் என்று நியமித்துக் கூறுகின்ற தம் சுற்றத்தாரை நோக்கி மறுத்துக் கூறும் சொல்லாகும் இது. முக்திக்குக் காரணமான முதற் பொருளை அறிவதற்கு உபாயம் மூன்று. அவை: கேள்வி, சிந்தனை, காட்சி என்பன. அவற்றுள் கேள்வியாவது, உபதேச மொழிகளை அநுபவமுடைய ஆசாரியர் பக்கல் கேட்டல்; சிந்தனையாவது, அவ்வுபதேச மொழிப் பொருளைப் பிரமாணங்களாலும் யுக்தியாலும் உள்ளத்தில் தெளிய ஆராய்தல்; காட்சியாவது, இவற்றால் முதற் பொருளை ஐயந் திரிபறத் தெளிதல். உள்ளுறைப் பொருளில் ஆழ்வாரது கண்ணாகிய ஞானம் முறையே இம்மூன்று உபாயங்களோடும் அமைந்திருத்தல் இப்பாசுரத்தின் முதலடியால் விளங்கும் முன்னர் 'புலக்குண்டலம்' என்று செவியணியைக் கூறிய

தனால் அவ்வுபாயங்களுள் முந்தியதான செவிக்கணியாகிய கேள்வியை குறித்தவாறு அறியப்பெறும். அதன்பின் 'புண்டரீகம்' என்றது, இதயத் தாமரையைக் குறித்ததாய், கேள்வியின்பின் உள்ளம் நிகழ்த்துதலாகிய சிந்தனையைக் குறிப்பால் புலப்படுத்தியது தெளியப்படும். 'போர்க் கொண்டை' என்றது, அங்ஙனம் சிந்திக்கும்பொழுது தொடக்கத்தில் யுக்திகளால் ஒன்றுக் கொன்று விரோதத்தை உண்டாக்கிப் பண்ணும் ஆராய்ச்சியைக் காட்டும். 'வல்லியொன்றால் விலக்குண்டுலாகின்று' என்றது, நடுநிலையான சித்தாந்த யுத்தியால் அவ்விரோதம் தணிந்தமையைக் காட்டும். 'வேல்விழிக்கின்றன' என்றதனால், இங்ஙனம் கேள்வி சிந்தனைகளால் சலன மொழிந்து ஒரு நிலை நின்றுற ஞானம் நுண்மையும் நெடுமையுமுடையதாய் எம்பெருமானைத் தரிசித்தமை தோன்றும். கண்ணன் கையால் கலக்கப்பெற்று அமுது சுரந்த அலைகடல் போலச் சபல சித்தரான யாம் இப்படிப்பட்ட ஆழ்வாரது ஞானச்சிறப்பால் நிலையிழந்து இனிய பக்தியைச் சுரந்து நிலைமாறியபொழுது அவ்வாழ்வாரது ஞான நிலையை அறிந்தவரெவரும் எம்மை இங்ஙனம் கூறார் என்பது இறுதியடியின் உட்கருத்தாகும். 'போன்றவற்றால்' என்று ஒரு சொல்லாக எடுக்கும்போது கண்ணன் கையால் கலக்கப்பட்டு அமுது சுரந்த அலைகடல்போல எம்பெருமான் வசப்பட்டுத் தன் வசமிழந்து பக்தியைச் சொரிகிற அதிவிசாலமான அவரது ஞானச் சிறப்பால் என்று உள்ளுறை காண்க. 'கண்டார் எம்மை யாரும் கழரலர்' என்பதால் புறம்புள்ளாரும் புகுந்தால் தாங்களும் ஈடுபடுவதேயன்றிப் பிறரை நியமிக்க மாட்டார் என்பதும் பெற வைக்கப்பெற்றது.

3. அறத்தொடு நிலை :

அறம் என்பது பல பண்புகளையும் தழுவியசொல். அகப்பொருள் இலக்கியத்தில் பெண்ணுக்குரிய முதற்பண்

பான கற்பையே குறிக்கும். கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படுத்தல் என்பது இதன் பொருள். தோழி இதனைத் தலைமகளின் பெற்றோருக்குக் குறிப்பாக வெளிப்படுத்துவாள். தொல் காப்பியர் இதனைப் 'புரைதீர் கிளவி' என்றும், இறைய னார் களவியலுரையாசிரியர் 'மாறு கோள் இல்லா மொழி' என்றும் குறிப்பிடுவர்.

தோழியின் பாசுரமாகச் செல்லும் குட்டநாட்டுத் திருப்புலியூர் மாயப்பிரான்மீது நம்மாழ்வார் பாடியுள்ள திருவாய்மொழியில் இத்துறை மிக அருமையாக அமைந் துள்ளது. பராங்குச நாயகி வயது முதிர்ந்து மங்கைப் பருவம் அடைகின்றாள். கணவனை நாடி அடைய வேண்டிய வயதல்லவா இது? திருப்புலியூர் எம்பெரு மானுடன் இயற்கைப் புணர்ச்சியும் நடைபெற்று விடு கின்றது. தலைவியின் உயிர்த் தோழியானவள் தலைவியின் உருவ வேறுபாட்டாலும் சொற்களின் வேறுபாட்டாலும் புணர்ச்சி நடைபெற்றமையை ஒருவாறு அறிகின்றாள். தன் மகளின் உண்மை நிலையை அறியாத தாய் தந்தையர் இவளுடைய திருமணத்தை நிச்சயித்து மணமுரசும் அறிவிக் கின்றனர். இதனை அறிந்த தோழி மனங்கவல்கின்றாள். 'பரதனே அரசன்' என்று அறைவித்த முரசொலி கேட்ட போது பரதாழ்வான் எங்ஙனம் மனக்கிலேசம் அடைந் தானோ அங்ஙனமே தோழி இப்போது துயர் அடை கின்றாள். இவ்வாறு சிந்திக்கின்றாள்: 'மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்'[8] என்று கூறியவள் இவள். 'அன்றிப்பின் மற்றொருவர்க் கென்னைப் பேச வொட்டேன் மாலிருஞ்சோலை எம்மாயற் கல்லால்'[9] என்ற பிடிவாதத்தைப் பிடிக்கின்றவள். மாறாக ஏதே னும் நடைபெற்றால் இவள் உயிர் தரியாள். அப்படி நடை

8. நாச். திரு.—1:5
9. பெரியாழ். திரு.—3.4;5

நடைபெறுவதை எப்படியாயினும் தடுத்தேயாகவேண்டும். அங்ஙனம் செய்ய முயலுங்கால் திருப்புலியூர் நாயனாருடன் புணர்ச்சி உண்டானமையை அறிவிப்பின் அஃது என் காவற் சோர்வாலே நிகழ்ந்தது என்று ஏற்பட்டுவிடும்; அறிவியாது ஒழியில் இவள் வாழாள். இந்நிலையில் செய்ய வேண்டியது என்ன?'' என்பதாக.

தோழி இங்ஙனம் சிந்தித்துக் கொண்டிருக்கும்பொழுது தலைவியின் பெற்றோரும் மற்றோரும் அவளுடைய வடிவ வேறுபாட்டிற்குக் காரணம் யாதாக இருக்குமோ என்று ஆராயும் நிலையைக் காண்கின்றாள். தான் அவர்களுடன் ஆராய்வதாகச் சேர்ந்து கொண்டு இதனை விலக்க வேண்டும் என்று உறுதி செய்கின்றாள். அந்த முறையைக் கூறுவதாக அமைந்ததே இத் திருவாய்மொழி. இதுவே அகப்பொருள் நூலார் குறிப்பிடும் 'அறத்தொடு நிற்றல்' என்பதாகும். இத்திருப்பதி எம்பெருமான்மீதுள்ள பதிகம் இதனையே கூறுகின்றது.

தோழி முதலில் இவ்வாறு தொடங்குகின்றாள்.

"கருமா ணிக்க மலைமேல்மணித்
தடந்தாமரைக் காடுகள்போல்
திருமார்பு வாய்கண்கை யுந்திகாலுடை
யாடைகள் செய்தபிரான்
திருமால் எம்மான் செழுநீர்வயல்
குட்டநாட்டுத் திருப்புலியூர்
அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்
அன்னைமீரிதற் கென்செய்கேனோ"[10]

[மணித்தடம் - தெளிந்த வ தடா கம்; உந்தி - கொப்பூழ்; கால் - திருவடி; உடை - தரித்திருக்கும்; செய்ய ஆடைகள் எனக் கூட்டுக; பேர் - திருநாமம்]

10. திருவாய்.—8. 9 : 1

என்பது பாசுரம். எம்பெருமானின் திவ்விய அவயவயங்களின் அழகினைக் கண்டு அவ்வடிவழகு அல்லது மற்றொன்று அறியாதபடி ஈடுபட்டாள் என்று தாய்மார்க்கு உரைக்கின்றாள். அநுபவிப்பார் நெஞ்சு குளிரும்படி கருமையுடைய தாய், பிரகாசத்தால் மிக்கு இருப்பதாய், தனக்குமேல் ஒன்று இல்லாததான இனிமையுடையதாய் இருப்பது ஒரு மலை மேலே என்ற கருத்துத் தோன்ற 'கருமாணிக்க மலைமேல்' என்கின்றாள். இத்தகைய ஒரு மலைமீது தெளிந்த ஒரு தடாகம் தாமரைக் காடுகள் பூத்தனபோல் எம்பெருமானது எழில் நீல மேனியில் திருமார்பு, திருவதரம், திருக்கண்கள், திருக்கைகள், திருவுந்தி, திருவடிகள் முதலிய உறுப்புகள் அமைந்துள்ளன என்பது தோன்ற 'மணித்தடம்... ஆடைகள் செய்ய பிரான்' என்கின்றாள். பக்தர்கட்குப் பற்றுக் கோடாகவுள்ள பெரிய பிராட்டியார் எழுந்தருளியிருக்கும் திருமார்மாதலால் அது சிவந்து காணப்பெறுகின்றது. அப் பிராட்டி வழியால் உறவு செய்தாருக்கு அநுகூலமான சொற்களைப் பேசுகின்றது அவரது திருப்பவளம். இச் சொற்கள் சொல்லப்புக்கு இனியனான தன்னைக் கண்ட காட்சியால் தடுமாறினால் குறையும் தலைக் கட்டிக் கொடுப்பது செவ்வரி படர்ந்த திருக்கண். அவனது நோக்கிற் தோற்றாரை அணைப்பது திருக்கை. உத்தேசியமான நிலத்தில் (அதாவது திருவடியில்) விழா நின்றால் காற்கட்ட வல்லது திருஉந்தி. இது நடுவே அமுக்கும் சுழியன்றோ? இவை எல்லாவற்றுக்கும் தோற்று விழும் இடம் எம்பெருமானது திருவடிகள். இவை யாவும் காட்டிலெறிந்த நிலாப்போலாகாமல் பக்தர்கட்கு அநுபவிக்கக் கொடுக்குமவன் என்பதைக் குறிப்பிடவே 'பிரான்' (உபகாரகன்) என்கின்றாள். இங்ஙனம் எம்பெருமாளின் திருமேனி அழகினை,

''என் அரங்கத்து இன்னமுதர்
குழல்அழகர் வாய்அழகர்

கண்அழகர் கொப்பூழில்
எழுகமலப் பூஅழகர்"[11]

[குழல் - திருமுடி]

என்று ஆண்டாள் கூறி அநுபவித்ததையும் நினைந்து பார்க்கின்றோம். மேலும், இங்குப் பர வியூக விபவம் இவைகளுக்குரிய திருநாமங்களையும் சொல்லாமல், அல்லாத உகந்தருளின திவ்விய தேசங்களில் நிற்கின்றவர்களின் பெயர்களையும் சொல்லாமல் குட்ட நாட்டுத் திருப்புலியூர் எம்பெருமானுடைய திருநாமங்களையே வாய்வெருவா நிற்கின்றாள் என்பது தோன்ற 'திருப்புலியூர், அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்' என்கின்றாள். அவள் நிலை தனக்கு அப்போதுதான் தெரியும் என்பது தோன்ற 'அன்னைமீர் இதற்கு என் செய்கேன்?' என்கின்றாள்.

இந்த எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பதியைச் சதா புகழ்ந்து கொண்டிருக்கிறாள் தலைவி என்பதனையும் குறிப்பிடுகின்றாள், "புன்னையம் பொழில் சூழ்திருப்புலியூர் புகழும் இவளே" [12] என்பதாக.

"அணிமேருவின் மீதுலவும்
துன்னு சூழ்சுடர் ஞாயிறும்
அன்றியும்பல் சுடர்களும்போல்
மன்னு நீள்முடி யாரம்பல்கலன்
தானுடை எம்பெருமான்"[13]

[அணி - அழகிய; துன்னு - செறிந்து; ஞாயிறு - கதிரவன்; பல்சுடர் - கோள்கள், உடுக்கள்; முடி -கிரீடம்; ஆரம் - மாலை]

என்ற பாசுரப் பகுதியால் அத் திருப்பதி எம்பெருமானது திவ்விய ஆபரண அழகில் தலைவி ஈடுபட்டுப் பேசும் படிகளை

11. நாச்.—திரு. 11 : 2
12. திருவாய்.—8. 9. : 2.
13. ஷை—8. 9 :2

விரித்துரைக்கின்றாள். "மேருமலையின்மீது ஆயிரம் கதிர்கள் விரித்தாற் போன்ற திருவபிடேகமும், விண்மீன் கூட்டங்கள் மின்னினாற் போன்ற பல மாலை வரிசைகளும், மற்றும் அணி வகைகளும் ஒளிரும் அழகை என்னவென்று சொல்வது?" என்று வாய் வெருவி நிற்கின்றாள் என்று குறிப்பிடுகின்றாள் தோழி. இவற்றாலும் சோலையைப்பற்றிக் குறிப்பிடுவதாலும் இவளுக்கு அத்தலத்து எம்பெருமானோடு கலவி நேர்ந்ததாகவே நினைக்கத் தோன்றுகின்றது என்பது தோழியின் குறிப்பு.

ஆழ்வார் நாயகி இரவும் பகலும் திருப்புலியூர் வளத்தையே புகழ்ந்து கொண்டிருக்கின்றாள் என்பதை அடுத்துக் குறிப்பிடுகின்றாள் தோழி.

> "புகழும் இவள்நின் றிராப்பகல்
> பொருநீர்க்கடல் தீப்பட்டு, எங்கும்
> திகழும் எரியொடு செல்வதொப்பச்
> செழுங்கதிர் ஆதிமுதல்
> புகழும் பொருபடை ஏந்திப்போர்
> புக்கசுரரைப் போன்றுவித்தான்
> திகழும் மணிநெடு மாடம்நீடு
> திருப்புலி யூர்வளமே.[14]
>
> [பொருநீர் கடல் - அலை எறியும் கடல்; தீப்பட்டு - நெருப்புக் கொளுத்தி; எரி - தீக்கொழுந்து; ஆழி - சக்கரம்; பொருபடை - போர் செய்யும் ஆயுதங்கள்; பொன்று வித்தான் - அழித்தவன்]

என்பது பாசுரம். கடல்வண்ணனான எம்பெருமான் திருவாழி யாழ்வான் முதலான திவ்வியாயுதங்களை யணிந்து கொண்டு எழுந்தருள்வது 'ஒருகடல் நெருப்புக் கொளுத்தி நடந்து செல்லுகின்றதோ?' என்று ஐயுறும்படியாகவுள்ள தென்கின்றாள். அன்றியும், 'இந்த எம்பெருமான் திருவாழி

14. திரு—8. 9 : 3

திருச்சங்கு முதலிய திவ்வியாயுதங்களுடன் போர்க்களத்தில் சென்று அரக்கர்களைத் தொலைத்தருளும் பேராற்றலை இரவும் பகலும் இடையீடின்றிப் புகழ்ந்து கூறாநின்றாள். இதனாலும் இத்திருப்பதி எம்பெருமானுடன் இவளுக்கு ஒரு சம்பந்தம் நிகழ்ந்ததாகத் தோன்றுகின்றது' என்று குறிப்பாகப் புலப்படுத்துகின்றாள் தோழி.

மேலும் தோழி கூறுகின்றாள் : "வண்டினம் முரலும் சோலை, மயிலினம் ஆலும் சோலை கொண்டல் மீதணவும் சோலை குயிலினம் கூவும் சோலை அண்டர்கோன் அமரும் சோலை"[15] என்றெல்லாம் சோலை வளத்தைப் பேசுகின்றாள். "வயலடங்கலும் கரும்பும் செந்நெலுமாய் வளர்ந்திருக்கும் அழகைச் சொல்லுகின்றாள். அங்கு உழுவதும் நடுவதுமான பண்ணையில் நடைபெறும் செயல்களின் அழகினையும், சுற்றிலும் நீர் நிலைகள் சூழ்ந்திருக்கும் வனப்பையும் வாய் வெருவுகின்றாள். இங்ஙனம் இப்பெண்பிள்ளை பேசும் அழகுகளை என் சொல்வேன்? இத்துடன் நின்றாளா?

'சீர்வ ளம்கிளர் மூவுல
குண்டுமிழ் தேவபிரான்
பேர்வ ளம்கிளர்ந் தன்றிப்பேச்
சிலள்.'[16]

இத்தலத்து எம்பெருமானின் 'ஆபத்தில் தோழன்' என்றிருக்கும் திருக்குணத்தில் ஈடுபட்டு அவன் பிரளய காலத்தில் எல்லா உலகங்களையும் தன் திருவயிற்றில் வைத்துப் படைப்புக் காலத்தில் அவற்றை வெளிநாடு காண உமிழ்ந்த அற்புதச் செயலையும் பேசுகின்றாள். இவற்றையெல்லாம் சொல்லும்போது 'இவளுடைய வடிவு ஆபரணம் பூண்டாற்போன்று விளங்கும் அழகு சொல்லுந்தரமன்று' என்று குறிப்பிடுகின்றாள். இதனாலும் இத்தலத்து

---

15. திருமாலை 14.
16. திருவாய்.—8. 9 : 4

எம்பெருமானுடன் கலவி நேர்ந்திருக்க வேண்டும்போல் தோன்றுவதை ஊகிக்க வேண்டும் என்கின்றாள் தோழி.

இன்னும் இத்தலத்து எம்பெருமானுடன் புணர்ச்சி நடை பெற்றிருத்தல் கூடும் என்பதற்குச் சான்றுகளையும் காட்டத் தொடங்குகின்றாள்.

"புனையிழைகள் அணியும் ஆடையுடையும்
புதுக்க ணிப்பும்
நினையும் நீர்மைய தன்று இவட்கிது;
நின்று நினைக்கப் புக்கால்
சுனையி னுள்தடந் தாமரை
மலரும்தண் திருப்புலியூர்
முனைவன் மூவுல காளிஅப்பன்
திருவருள் மூழ்கினளே"[17]

[புனை - பூணுதல்; புதுக்கணிப்பு - வடிவில் பிறந்த புதுமை; முனைவன் - முன்னோன்; ஆளி - ஆள்பவன்.]

என்பது பாசுரம். தலைமகளிடத்துக் காணப்பெறும் மூன்று சிறப்புகளை எடுத்துக் காட்டி தன் ஊகத்தை உறுதிப்படுத்து கின்றாள் தோழி. 'அவள் அணிந்திருக்கும் ஆபரணங்கள் முன்பு நாம் பூட்டினாற் போல் இல்லை; கலைத்துப் பூண்டாற் போல் தோன்றுகின்றதன்றோ?' என்கின்றாள். 'உடுத்தின ஆடையும் நாம் உடுத்தினபடி இல்லை. தலைப்பு மாற்றி உடுத்தினமாதிரி யல்லவா உளது? வேறுபாடு தோன்ற வில்லையா?' என்று ஆடையின்மீது கவனத்தை ஈர்க் கின்றாள். இவள் வடிவிலும் பிறந்திருக்கும் புதுமைகள் தோன்ற வில்லையா? இதற்கு முன்பு இது கோடையோடின வயல்போலேயன்றோ இருந்தது? இப்போது நீர் பாய்ந்த வயல்போலே தோன்றும் செவ்வியைப் பாருங்கள்' என் கின்றாள். 'காலம் என்னும் ஒரு பொருள் உள்ளவரையிலும் நின்று ஆராயப் புகுந்தாலும், இவளிடம் பிறந்துள்ள அழகு

17. ஷை 8.9:5

கள் நினைத்துக் கூடப்பார்க்க முடியாதவை' என்பதனையும் உணர்த்துகின்றாள். 'எம்பெருமானுடைய படிகளையே நினைக்க முடியாதபோது அவன் திறத்தில் ஈடுபட்டாருடைய படிளை நினைக்குந்தரமன்று' என்பதனையும் பெறவைக்கின்றாள். இவற்றால் 'முனைவன் மூவுல காளி அப்பன் திருவருள் மூழ்கினளே' என்று இயற்கைப் புணர்ச்சி நடைபெற்றுவிட்டதை உறுதிப்படுத்துகின்றாள்.

'மேற் கூறிய சான்றுகள் மட்டுமா? வேறு சான்றுகளும் உள்ளன' என்கின்றாள்.

> திருவருள் மூழ்கி வைகலும்
> செழுநீர்நிறக் கண்ணபிரான்
> திருவருள் களும்சேர்ந் தமைக்கடை
> யாளம் திருந்தஉள'[18]
>
> [வைகலும் - நாள்தோறும்]

என்று கூறுவதை நோக்குக. 'எப்பொழுதும் அவன் திருவருளிலேயே மூழ்கிக் கிடக்கின்றாள் அவனுடைய திருவருள் இவளிடம் சேர்ந்தமைக்கு மறைக்க முடியாத அடையாளங்கள் பல உள்ளன' என்று கூறி ஒன்றினைமட்டிலும் காட்டுகின்றாள்.

> 'திருவருள் கமுகு ஒண்பழத்தது
> மெல்லியல் செவ்விதழே'[19]
>
> [கமுகு - பாக்குமரம்; இதழ் - உதடு]

"எம்பெருமான் திருவருளால் இத்திருப்பதியில் வளர்ந்த கமுகு—திருவருள் கமுகு—ஈன்ற செவ்விய பழத்தின் நிறத்தையல்லவா ஒத்துள்ளது இவளுடைய உதடுகளின் நிறம்? இதனை நீங்களே ஆய்ந்து பார்க்கலாமே;" என்கின்றாள். இவ்விடத்தில் 'திருவருள் கமுகு' என்றதற்கு

18. ஷை—8.9:6.
19. ஷை—8.9:6

இன்சுவை ஈட்டின் "திருவருட் கமுகென்று சில உண்டு; அதாவது நீரால் வளருகையன்றிக்கே பெரிய பிராட்டியாரும் சர்வேசுவரனும் கடாட்சிக்க, அத்தால் வளருவன சில" என்ற பகுதி எண்ணி எண்ணி மகிழத் தக்கது.

இத்திருப்பதியின் இயற்கைச் சூழலைக் கூறுவாள்போல் அங்கு அஃறிணைப் பொருள்களும் கூட ஒன்றோடொன்று கலந்து பரிமாறி வாழாநிற்கும் என்பதனையும் காட்டுகின்றாள். மெல்லிய இலைத்தழைப்பையும் அழகினையும் உடைய வெற்றிலைக் கொடி முதிர்ந்து இளகிப் பருத்த கமுக மரத்தைத் தழுவி நிற்கின்றது, "(வெற்றிலை) தன் கணவனான கமுகுக்குத் தன் உடம்பை முற்றூட்டாகக் கொடுக்கும் போலே காணும்" என்பது ஈடு. இதற்குமேல் தென்றற் காற்று வாழைத் தோப்பில் வீசா நிற்கின்றது. 'இப்படிப்பட்ட வாய்ப்பு அமைந்த தலத்தில் இவளும் தான் உகந்த பொருளை அணையப்பெற்றது வியப்பு அன்று, முறையே' என்று குறிப்பிடுகின்றாள். "மல்லல் அம்,செல்வக் கண்ணன் தாள் அடைந்தாள் இம்மடவரலே"[20] என்ற தோழியின் கூற்றினை நோக்குங்கள். மேலும் "படம் அரவு அணையான் தன் நாமம் அல்லால் பரவாள் இவளே"[21] என்ற தோழியின் கூற்றையும் சிந்தியுங்கள். அத்திருப்பதி எம்பெருமானின் திருநாமமே யன்றி வேறொரு பெயரையும் சொல்லுவதற்கில்லை. அங்ஙனமே, 'பரவாள் இவள் நின்று இராப்பகல்...திருப்புலியூர் புகழன்றி மற்றே"[22] என்ற பாசுரப்பகுதியால் 'திருப்புலியூரின் புகழை வாய்விட்டுச் சொல்லுவது தவிர வேறொன்றும் அறியாள் இத்தலைவி' என்கின்றாள். இதனாலும் அத்தலத்து எம்பெருமானுடன் இவளுக்குக் கலவி நேர்ந்திருக்க வேண்டும் என்பதனை மேலும் உறுதிப்படுத்துகின்றாள்.

---

20. ஷெ—8.9:7.
21. ஷெ—8.9:8.
22. ஷெ—8.9:9.

இறுதியாக மேற்கூறிய காரணங் கட்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்த மாதிரி இதற்குவேறு விதமான முடிவும் கூற இயலாதவாறு, பிறிதொரு காரணம் காட்டுகின்றாள் தோழி.

'அன்றிமற் றோருபாய மென்?இவள்
அம்தண்து ழாய்க்கமழ்தல்
.......................
நின்ற மாயப்பி ரான்திரு
வருளாமிவள் நேர்பட்டதே'[23]

*[உபாயம் - காரணம்; கமழ்தல் - மணம் வீசுதல்]*

இவளது உடம்பில் அழகிய குளிர்ந்த திருத்துழாயின் மணம் வீசுவதற்கு வேறு என்ன காரணம் இருக்கமுடியும்? என் உடம்பிலாவது உங்கள் உடம்பிலாவது திருத்துழாயின் மணம் வீசுகின்றதோ? எம்பெருமான் திருமேனியை அணைந்தாலல்லது இம்மணம் வீசுதற்குக் காரணம் உண்டோ?' என்கின்றாள். "இராஜபுத்திரனை அணையா தார்க்குக் கோயில் சாந்து நாறுகைக்கு விரகு உண்டோ?" என்பது ஈடு. இதனால் திருப்புலியூரில் நின்ற மாயப் பிரானுடைய திருவருளுக்கே இவள் இலக்காயினாள் என்று தோழி சொல்லித் தலைக் கட்டுகின்றான. தோழியின் மதிநுட்பம் எல்லாம் புலப்படுமாறு அமைந்த இத்திருவாய் மொழியால் ஆழ்வாரின் ஆழ்ந்த தமிழ்ப் பண்பாடு தெள்ளிதின் விளங்குவதைக் கண்டு மகிழ்கின்றோம்.

4. வெறி விலக்கு:

தன் மகள் மேனி நாடோறும் மெலிவதைப் பார்த்து நற்றாய் (செவிலித்தாய்) மனம் கவல்கின்றாள். உண்மை யான காரணத்தை அவளால் அறிந்துகொள்ள இயலவில்லை. உடனே கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவள் தன் வழக்கப்படி

---

23. ஷை—8.9:10.

ஆய்ந்து தலைவியின் மெலிவு முருகக் கடவுளால் வந்தது என்று சொல்லுகின்றாள். உடனே வெறியாட்டாளனை அழைப்பித்து முருக பூசை செய்யத் துணிகின்றாள் செவிலித் தாய். இதனைக் கண்ட தலைமகள் மிகவும் வருந்துவதைக் காண்கின்றாள் தோழி. உடனே அவள் வேலனையும் தாயரையும் நோக்கிக் கண்டித்துச் சில கூறி வெறி விலக்கு வதாகச் செல்வன இத்துறைப் பாசுரங்கள்.

திருவிருத்தத்தில்[24] இத்துறை அமைந்த ஒரு பாசுரம்:

சின்மொழி நோயோ கழிபெருந்
தெய்வம், இந் நோயினதென் (று)
இன் மொழி கேட்கும் இளந்தெய்வம்
அன்றிது வேல! நில் நீ
என் மொழி கேண்மின் என் அம்மனை
மீர்! உல கேழும்உண்டான்
சொன்மொழி மாலையந் தண்ணந்
துழாய் கொண்டு சூட்டுமினே.[25]

[சில்மொழி - சில பேச்சுகளே பேசவல்லவள்; கழி பெரு - மிகப் பெரிய; இனது - இப்படிப்பட்டது; சொல் மொழி - திருநாமத்தைச் சொல்லுதல்].

"இந்த நங்கைக்கு இப்பொழுது நேர்ந்துள்ள நோயானது இவர்கள் நினைக்கின்றபடி சிறு தெய்வமடியாக வந்ததன்று; மிகப் பெரிய தெய்வமான எம்பெருமான் விஷயமாக உண்டானது' என்று வெறியாடும் வேலனையும் தாய்மாரை யும் நோக்கிக் கூறும் தோழி மீண்டும் வேலனை நோக்கி 'நீ விலகி நிற்பாயாக' என்று அவன் வெறியாட்டைத் தடுத்து நிறுத்தி, பின்னர் அன்னைமாரை நோக்கி 'நீங்கள் இங்ஙனே கலங்குவது உசிதமன்று; உங்களைவிட யான் மிகச் சிறியளே யாயினும் இப்போது என் பேச்சைக் கேளுங்கள். இந்த

24. நம்மாழ்வாரால் அருளிச் செய்யப்பெற்ற 100 பாசுரங் களைக் கொண்ட ஒரு பிரபந்தம் அகத்துறைகளாலானது.
25. திருவிருத்.—20.

விபரீத முயற்சிகளைக் கைவிட்டு உலகமுண்ட பெருவாயனு டைய திருநாமங்களை இவள் செவிப்படுமாறு சொல்லுங்கள்; அவன் மாலையில் திகழும் திருத்துழாய் பிரசாதத்தைக் கொணர்ந்து கொடுங்கள். இதுவே இவளுடைய நோய்க்கு ஏற்ற மருந்தாகும்,'' என்கின்றாள் தோழி. 'மறந்தும் புறந்தொழா மாந்தர்' வழி வந்தவளாதலால் 'இளந்தெய்வ' வழிபாட்டை நீக்கி 'கழிபெருந் தெய்வத்தை' வழிபடுமாறு கூறுவது எண்ணி மகிழத் தக்கது.

இதே கருத்தமைந்த இத்துறைப் பாசுரங்கள் திருவாய் மொழியிலும் உள்ளன. அவற்றையும் ஈண்டுக் காட்டுதல் பொருத்தமாகும்.

திசைக்கின்ற தேயிவள் நோயிது
மிக்க பெருந்தெய்வம்,
இசைப்பின்றி நீர்அணங்கு ஆடும்
இளந்தெய்வம் அன்றிது,
திசைப்பின்றி யேசங்கு சக்கரம்
என்றிவள் கேட்க,நீர்
இசைக்கிற்றி ராகில்நன் றேஇல்
பெறுமிது காண்மினே[26]

[திசைக்கின்றது - அறிவு கெடுதல்; இசைப்பு - தகுதி; அணங்கு ஆடும் - வெறியாடுகின்ற; திசைப்பு - மனக்குழப்பம்; இசைத்தல்-சொல்லு தல்; இல்பெறும் - வீட்டிருப்பும் பெறுவாள்]

சிறு தெய்வங்களைக் குறித்துப் பண்ணும் சாந்திகளால் இவளுடைய நோய் போக்குவது அரிதென்றும், எம்பெருமானு டைய இலக்கணங்களைச் சொல்லில் இவளைப் பெறலாம் என்றும் தோழி கூறுவதைக் காண்க.

இவ்விடத்தில் ஓர் ஐதிகம்: பராசர பட்டர் காலத்தில் ஆய்ச்சிமகன் என்ற ஒரு பாகவதர்; அவர் நோயுற்று உணர்ச்சி

---

26. திருவாய்.—4.6:2.

யின்றிக் கிடக்கும் காலத்தில் பட்டர் அவரைப் பார்க்க எழுந்தருளினாராம். அப்போது அந்த ஆய்ச்சி மகன் அடியோடு அறிவு நடையாடாதபடி இருப்பதைக் கண்ட பட்டர் அவர் அழகிய மணவாளனிடத்தில் மிக்க பக்தி யுடையவர் என்பது காரணமாக அவருடைய செவியில் மெள்ள ஊதினாப்போலே 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்றாராம். அதனால் பாகவதர் உணர்ச்சி உண்டாகி நெடும் போதெல்லாம் அவர் அந்த வார்த்தை யையே சொல்லிக் கொண்டிருந்து திருநாட்டுக்கு நடந்தா ராம்.

இன்னொரு பாசுரத்தையும் காண்போம்:

இதுகாண்மின் அன்னைமீர்! இக்கட்டு
விச்சிசொற் கொண்டு,நீர்
எதுவானும் செய்தங்கோர் கள்ளும்
இறைச்சியும் தூவேல்மின்,
மதுவார் துழாய்முடி மாயப்
பிரான்கழல் வாழ்த்தினால்
அதுவே இவளுற்ற நோய்க்கும்
அருமருந்து ஆகுமே.[27]

[இது - நான் சொல்லும் செயல்; எதுவானும் பொருந்தாத எதையாகிலும்; மது- தேன்; கழல் - திருவடி; அருமருந்து - அருமையான மருந்து]

தவறுதலான செயல்களை மேற்கொள்ளாமல் எம்பெரு மான் திருவடிகளை வாழ்த்தும் பரிகார முறையை அநுட்டித் தால் இவளுடைய நோய் தீரும் என்று தோழி கூறுவதைக் கண்டு மகிழ்க.

திருவிருத்தத்தில் 'வெறி விலக்கு'த் துறைபற்றிய மற்றொரு பாசுரத்தையும் காண்போம்.

---

27. ஷெ—4.6:3.

வாரா யினமுலை யாள்இவள்
வானோர் தலைமகனாம்
சீரா யினதெய்வ நன்னோய்
இதுதெய்வத் தண்ணந்துழாய்த்
தாரா யினும்தழை யாயினும்
தண்கொம்ப தாயினும்கீழ்
வேரா யினும்,நிறை மண்ணாயி
னும்கொண்டு வீசுமினே.[28]

[வார்-கச்சு; சீர்-கல்யாண குணம்: தார் - மாலை; தழை - துழாயின் இழை; கொம்பு - கிளை; நிறைமண் - துழாய்க்கு இருப்பிடமான மண்]

நோய்க் காரணமும் நோயும், பின்னடிகளால் அது தணிக்கும். முறையும் கூறப்பெறுகின்றன. எம்பெருமானுடன் சம்பந்தம் பெற்ற பொருள் யாதாயினும் இந்நோய்க்கு உற்ற மருந் தாகும் என்று உணர்த்துகின்றாள் கட்டுவிச்சி. சிறு தெய் வங்களின் ஆவேசத்தால் சீர்குலைந்து அல்லற்படும் தீய நோய் அன்று என்பதைத் தெரிவிக்க 'வானோர் தலை மகனாம் சீராயின தெய்வ நன்னோய் இது' என்கின்றாள். 'தெய்வ நன்னோய்' என்றதில் இப்படிப்பட்ட நோய் இவ் வுலகில் பெறுவதற்கு அரியது என்றும், நோன்பு நோற்றுப் பெற வேண்டிய நோய் இது என்றும், இந்நோய் பேரின்ப முடையது என்றும் தெரிவிக்கின்றாள் கட்டுவிச்சி என்க.

தாம் நினைத்தபடி எம்பெருமானோடு கலந்து பரிமாறப் பெறாது வருந்துகின்ற ஆழ்வாரின் துயரைக் காண்கின்றனர் ஞானிகள்; இதற்குப் பரிகாரம் அறியாது கலங்குகின்றனர். இங்கும் வெறியாட்டு நடைபெற, அதனை நடைபெறாது தடுக்கும் முயற்சியும் உடனே நிகழ்கின்றது. பராங்குச நாயகியின் நோய் வேலனின் ஆவேசத்தால் வந்ததாகக் கருதி உற்றார் உறவினர் கலங்கி வழியல்லா வழியில்—வெறியாட்

---

28. திருவிருத்.—53.

டெடுத்தலில்—பரிகாரங்கள் செய்யப் பார்க்கின்றனர். இவளுடைய தன்மையை நன்கு அறிந்திருந்த மூதறிவாட்டி ஒருத்தி வெறியாட்டெடுப்பதை நிறுத்திப் பேசுகின்றாள்; "நீவீர் மேற்கொண்ட முறை தகுதி யன்று; இந் நோய் வேலனால் வந்ததன்று; தேவாதி தேவனான எம்பெருமா னிடத்து ஈடுபட்டதனால் உண்டான சிறந்த நல்ல நோய் இது; இவள் உய்யவேண்டுமாகில் நான் செல்லுகிறபடி பரிகாரங்கள் செய்யப் பாருங்கள். திவ்வியமான திருத்துழாய் மாலையையாயினும், அத்துழாயின் ஓர் இலையையாயினும், அதன் கிளையையாயினும், அதன் வேரையாயினும், அதற்கு இருப்பிடமாய் நின்ற மண்ணையாயினும் கொண்டு வீசுங்கள்; அதன் காற்று இவள்மேல் பட்ட மாத்திரத்திலே இவள் பிழைத்திடுவாள்" என்று.

இதற்கு இன்னொரு விதமாகவும் பொருள் உரைத்தல் உண்டு. இதனைக் கட்டுவிச்சியே கூறுவதாக உரைப்பர் அழகிய மணவாள சீயர். "தலைவி யாற்றாமையால் வந்த நோவுக்குப் பரிகாரம் யாதோ என வினவிய செவிலி முதலா னார்க்குக் கட்டுவிச்சி நோய் நாடி நோயின் குணம் நாடி அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் சொல்லுகின்ற பாசுரம் இது" என்பர் அவர். களவொழுக்கத்தால் தலைவனுடன் கலவி யாடிக் கலந்து பிரிந்து ஆற்றாது மெலிந்து வருந்திய தலைவி யைக் கண்ட செவிலித்தாய் முதலியோர் இவள் நோய்க்குக் காரணம் இன்னதென்று அறியாமல் நிமித்தம் கண்டு கூறவல்ல கட்டுவிச்சியை அழைத்து வினவ, அவள் குறியிலக் கணப்படி சிறு முறத்தில் சில நெற்குறி கண்டு அதனால் உண்மையறிந்து கூறுகின்றாள். இப்பாசுரத்தின் முன்னடி களால் காரண காரிய உண்மை யுணர்ந்த நிரூபகர் 'பகவத் விஷயத்தில் ஈடுபாடு காரணமாக உண்டான இவ்வாற்றா மைக்கு அதன் சம்பந்தமான பரிகாரம் செய்தலே தகுதி' என்று கூறுதல் இப் பாசுரத்தின் உள்ளுறைப் பொருளாகும். எம்பெருமானுக்கே உரியதும் அவனது அநுபவித்தற்குக் கருவி யாவதுமான பக்தியே முலையாகக் கொள்ளப் பெறுதலால்

'வாராயின முலையாள்' என்றது—பக்குவமாய் முதிர்ந்த பக்தியையுடைய ஆழ்வார் என்று கொள்ள வேண்டும்.

5. மடலேறுதல்:

காமம் காழ்க் கொள்ளுங் காலத்தில் ஆடவன் மார்பில் எலும்பு மாலையும் தலையில் எருக்க மாலையும் கொண்டு பனங்கருக்கால் செய்யப்பெற்ற குதிரைமேல் ஏறித் தெருவில் வருவது மடலேறுதல் ஆகும். ஆடவன் மகளிரைக் குறித்து மடலேறலாமேயன்றி பெண் ஆடவனைக் குறித்து மடலூர லாகாதென்பது தமிழ் நெறியில் விதிக்கப்பெற்ற ஒரு வரம்பாகும்.

> எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்
> பொற்புடை நெறிமை இன்மையான.[29]

என்பது தொல்காப்பியம். திருவள்ளுவரும்,

> கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
> பெண்ணிற் பெருந்தக்க தில்.[30]

என்று இந் நெறியை வலியுறுத்துவதைக் காணலாம்.

திருமங்கையாழ்வார் பிராட்டி தசையை அடைந்து பரகால நாயகி ஆன பின்னர் மடலூரப் புகுதல் பொருந்துமோ என்றவினா எழுகின்றது. அந்த ஆழ்வார் அருளியுள்ள 'சிறிய திருமடல்' 'பெரிய திருமடல்' என்ற பிரபந்தங்களிலும் ஆழ்வார் நாயகி மடலேறத் துணிவதாகக் கூறப்பெறுகின்றது. இதனைத் தமிழ் மரபினை மீறிய ஒரு புரட்சி என்று கருதலாமா என்பது வினா. இரண்டு திருமடல் களிலும் ஆழ்வார் நாயகி 'மடலூர்வன், மடலூர்வன்' என்று சொல்லி அச்சமுறுத்தினாரே யன்றி அச்செயலை முற்ற முடிய நடத்தினதாகக் கூறவில்லை. சிறிய திருமடலில்,

---

29. தொல். பொருள். அகத். —38 (இளம்)..
30. குறள்—1137.

"ஓர் ஆனை கொம்பொசித்து ஓர்ஆனை கோள்விடுத்த
சீரானை செங்கண் நெடியானை தேன்துழாய்த்
தாரனை தாமரைபோல் கண்ணானை எண்ணருஞ்சேர்
பேர்ஆ யிரமும் பிதற்றி பெருந்தெருவே
ஊரார் இகழிலும் ஊராது ஒழியேன்நான்
வார்ஆர்பூம் பெண்ணை மடல்.[31]

[முதல் ஆனை - குவலாயா பீடம்; இரண்டாவது ஆனை - கசேந்திரன்; கோள் விடுத்த - இடரைப் போக்கின; இகழிலும் - பழித்தாலும்; ஊராது ஒழியேன் - ஊர்ந்தே தீருவேன்]

என்று கூறுவதாலும், பெரிய திருமடலிலும்,

"உலகறிய ஊர்வன் நான்
முன்னி முளைத் தெழுந்து ஓங்கி ஒளிபரந்த
மன்னியபூம் பெண்ணை மடல்[32]

என்று கூறுவதாலும் இதனை அறியலாம். நம்மாழ்வாரும் பராங்குச நாயகி நிலையில் இம் மடலேறுதலைக் குறிப்பிடும் பொழுது,

தோழீ! உலகு தோரலர் தூற்ற, ஆம்
கோணைகள் செய்து குதிரி யாய்மட லூர்துமே[33]

[கோணை - மினுக்கு; குதிரி - அடங்காத பெண்]

என்றும்,

யாம்மடல் ஊர்ந்தும் எம்மாழி
அங்கைப் பிரானுடை
தூமடல் தண்ணந் துழாய்மலர்
கொண்டு சூடுவோம்

31. சிறிய திருமடல்.
32. பெரிய திருமடல்.
33. திருவாய்.—5.3.9.

யாம் மடம் இன்றித் தெருவு
தோறயல் தையலார்
நாமடங் காப்பழி தூற்றி
நாடும் இரைக்கவே.[34]

[ஆழி - சக்கரம்; தூமடல் - பரிசுத்தமான இதழ்; மடம் - ஒடுக்கம்; தையலார் - பெண்கள்; நா மடங்கா பழி - நாக்கு இடைவிடாது சொல்லும் பழி மொழி; இரைக்க - இரைச்சல் போடும்படி]

என்றும் கூறுவது ஈண்டு ஒப்பு நோக்கி அறியத்தக்கது. எனவே, ஆழ்வார்கள் தமிழ் நெறியினை அறியாது கூறினர் என்று கொள்வதற்கில்லை. ஆகவே, ஆழ்வார்கள் கூற்றி னைப் புரட்சிப் போக்கு என்று சொல்வதும் ஒவ்வாது.

ஆழ்வார்தாமும் தாம் தமிழ் நெறியினை அறிந்திருப் பதாகவும், வடநெறியினைப் பின்பற்றியே இத் துணிவினை மேற்கொண்டதாகவும் கூறுவர்.

'மான் நோக்கின்
அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்
மன்னும் மடலூரார்' என்பதோர் வாசகமும்
தென்னுரையில் கேட்டறிவ துண்டு அதனை யாம்தெளி
யோம்!
மன்னும் வடநெறியே வேண்டினோம்.'[35]

[அலர் - பழிச்சொல்; ஏச - தூற்ற; தெளியோம் - நினைக்க மாட்டோம்.]

என்ற பெரிய திருமடல் பகுதியால் இதனை அறியலாம். "மடலேறுதல் என்பது ஆசை மிகுதியால் மேற்கொள்ளும் ஒரு செயல். ஆசையை வரம்பிட்டுக் காக்க யாராலும் இயலாது. அரசராணைக்கும் அது கட்டுப்படுமோ? வேலி யடைத்தால் நிற்குமோ வேட்கை? அளவு கடந்த வேட்கை யின் காரணமாக விளையக் கடவதான மடலூருதலை

34. ஷெ —5.3:10. 35. பெரிய திருமடல்.

ஆண்கள்தாம் மேற்கொள்ளலாம், பெண்கள் மேற்கொள்ள லாகாது என்று வரம்பு கட்டுவது காதலின் இயல்பை அறியாதவர்களின் செயலாகும் என்பது ஆழ்வாருடைய திருவுள்ளம்" என்று கொண்டால் ஆழ்வார் புரட்சியான போக்குடையவர் என்று கருதலாம்.

## 6. உடன் போக்கு:

தலைவனும் தலைவியும் 'பகற்குறி'யிலும், 'இரவுக்குறி' யிலும் பலகாலும் கூட்டம் நிகழ்த்தி வருவதனால் அவர் களது மறையொழுக்கம் வெளிப்பட்டு அலராகும். இதனை அறிந்த தலைவன் தோழியின் விருப்பத்திற் கிணங்கச் சில காலம் அவ்வலர் அடங்குமாறு கூட்டம் நீங்கி வேறிடத் திற்குச் சென்று உறைவான். அவ்வாறு நீங்கி உறைதலை அகப்பொருள் நூல்கள் 'ஒருவழித்தணத்தல்' என்று குறிப்பிடும். அலரறிந்த தலைமகன் இவ்வாறு ஒருவழித் தணந்து நில்லானாயின் அவன் தலைவியைத் தோழியின் துணைகொண்டு ஆங்கு நின்றும் பெயர்ந்து ஒருவருக்கும் தெரியாமல் நள்ளிரவில் தன் மனையிடத்துக்கு உடன் கூட்டிக் கொண்டு செல்வான். இங்ஙனம் அவன் செல்லலை 'உடன் போக்கு' என்று வழங்குவர் அகப்பொருள் நூலார். இந்தத் துறையில் வரும் பெரியாழ்வார் பதிகம் ஒன்றிலும் (3. 8) பெரிய திருமொழிப் பதிகம் ஒன்றிலும் (3. 7) ஆழங்கால் படுவோம்.

பரகாலநாயகி திருத்தாயாருடன் கண் உறங்கிக் கொண் டிருந்தபொழுது யாரும் அறியாமல் அவளைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போகத் துணிந்த வயலாளி மணவாளன் திருத்தாயார் சிறிது கண்ணயர்ந்தபொழுது அங்ஙனமே அவளைக்கொண்டு சென்றுவிட்டான். உடனே துணுக் கென்று கண்விழித்துக் கொண்ட திருத்தாயார் படுக்கையைத் தடவிப்பார்க்கின்றாள்; மகளைக் காண்கின்றிலள். தன்மகள் வயலாலி மணவாளனைக் குறித்து வாய்வெருவினபடியை

அறிந்தவளாதலின் அப்பெருமானே இவளைக் கொண்டு போயிருக்கவேண்டும் என்று நினைந்து எழுந்து பார்க்கின்றாள். தான் நினைத்தபடியே வயலாளி மணவாளன் தன் மகள் கையைப் பிடித்துக் கொண்டு செல்வதைத் தன் கண்ணாலே கண்டு வாய்விட்டுப் பேசுவதாக நடக்கின்றது இத்திருமொழி.[36] வயலாளி மணவாளனை நாளும் கலந்து அநுபவிக்க வேண்டுமென்றிருந்த ஆழ்வாருடைய விருப்பம் இத் திருமொழியாக பரிணமித்து விட்டது போலும்.

கள்வன்கொல் யான் அறியேன்
    கரியான் ஒரு காளைவந்து
வள்ளிமருங்குல் என்றன்
    மடமானினைப் போதவென்று
வெள்ளிவளைக் கைப்பற்ற
    பெற்றதாயரை விட்டகன்று
அள்ளலம் பூங்கழனி
    அணியாலி புகுவர்கொலோ? (i)

[கள்வன் - திருடன்; கரியான் - கருநிறத்தவன்; காளை - இளைஞன்; வள்ளி - வள்ளிக்கொடி; மருங்குல் - இடை; அகன்று - நீங்கி; கழனி - வயல்]

திருத்தாயார் சொல்லத் தொடங்கும்போதே 'கள்வன் கொல்?' என்று எம்பெருமானைக் கள்ளனாக ஐயுற்றுச் சொல்லுகின்றாள். சாத்திரங்களில் சேதநன் கள்வனாகக் கூறப் பெற்றுள்ளான். எம்பெருமானுக்கு உரிமைப்பட்டதான ஆன்மாவைத் தனக்கு அடங்கினதாகவும் பிறனுக்குரியதாகவும் கருதுகின்ற சேதநன் ஆன்மாவை அபகரித்த கள்வன் எனப்படுகின்றான். தன் உடைமையைத் தான் கைக்கொள்ளுகின்ற எம்பெருமானைக் கள்வன் என்று சொல்லத் தகாது. ஆயினும், "யானே என் தனதே" (திருவாய். 2. 9: 9) என்றிருக்கும் 'யான்' என்ற அகப்பற்றும், 'எனது' என்ற

36. பெரி.—திரு. 3, 7.

புறப்பற்றும் நெடுநாளாகச் சேதநனிடத்து அழுந்திக்கிடக்கும் வாசனையின் உறைப்பினால் தன்னுடைய கள்ளத்தனத்தை எம்பெருமான்மீது ஏறிடலாகும் என்பது தோன்றக் 'கள்வன் கொல்?' எனப்பட்டது. "செஞ்சொற்கவிகாள்! உயிர்காத்து ஆட்செய்மின் திருமாலிருஞ்சோலை வஞ்சக் **கள்வன் மாமாயன்**" என்று கூறப் பெற்றதையும் காண்க.

'கள்வன்கொல்யான் அறியேன்': 'கள்வனே வந்தான்' என்று உறுதியாகச் சொல்ல நா எழவில்லை. சர்வ சுவாமி யானவன் தன் உடைமையைக் கொண்டுபோனானாகையா லும் பிரகாசமாகவே கொண்டுபோனானாகையாலும், கள்வன் என்னல் முடியாது; ஆயினும் 'எனது' என்ற புறப் பற்றின் ஊற்றத்தாலே 'கள்வன்கொல்? யானறியேன்' என்று ஐயுறுவதுபோலச் சொல்லப்பெற்றுள்ளது. இங்ஙனே திருத்தாயார் தெருவில் ஓடிவந்து 'கள்வன் கொல்? யானறியேன்' என்று கதறினவாறே இங்கும் அங்கும் உள்ளார் அனைவரும் திரண்டுவந்து சேர்ந்து, 'அம்மா! இஃது என்ன அநியாயம்; கள்வனா வந்து விட்டான்? யார் அவன்? அவன் கவர்ந்து சென்ற பொருள் யாது?' என்று பேரார்வமாய் வினவுகின்றனர். மேலே சொல்லுகின்றாள் 'கரியான் ஒரு காளை வந்து' என்று தொடங்கி, "நீலமேக நிறத்தனாய் இளம் பருவமுடையவனான ஒருவன் என் இல்லத்தினுள்ளே புகுந்து என் மகளைப் 'புறப்படு புறப்படு' என்று சொல்லிக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போகின்றான், காண்மின்" என்கின்றாள்.

இதுபற்றிப் பக்தர்களிடையே ஓர் இதிகாசம் வழங்கி வருகின்றது. வயலாளி மணவாளன் பரகாலநாயகியைக் கவர்ந்து சென்றது மறைவாகவா? அல்லது பலரும் அறியவா? என்றவினா எழுகின்றது அவர்களிடையில். மகளைத் தாய் அணைத்துக் கொண்டு கிடக்கையில் எம்பெருமான் தனிமையில் வந்து யாரும் அறியாவண்ணம் கவர்ந்து சென்றதாகப் பிள்ளை அமுதனார் என்பார் உரைத்

தாராம்: அதனைக் கேட்டருளிய "பராசரபட்டர் 'அங்ஙனம் வேண்டா; பலரும் கண்டுகொண்டிருக்கையில் தீவட்டிக் கொள்ளைக் கள்ளர் கொள்ளை கொண்டுமாப்போலே கொண்டு சென்றதாக உரைப்பது எளிது" என்று அருளிச் செய்தாராம்.

"வயலாளி மணவாளன் தானே வந்து அழைத்துக் கொண்டு போனதால் 'திருவாலிக்கே சென்று சேர்ந்தாள்' என்று உறுதியாகச் சொல்லலாமன்றோ? அங்ஙனம் சொல்லாது 'அணியாலி புகுவார் கொலோ?' என்று ஐயுற்றுச் சொல்லுவதற்குக் காரணம் என்ன?" என்ற வினா எழுகின்றது. இதுபற்றிய இதிகாசம் இவ்வினாவிற்கு விடையாக அமையும். திருவாய்மொழியில் "உண்ணும் சோறு பருகும் நீர்" (6.7)என்று தொடங்கும் திருவாய்மொழியின் நடையும் இத் திருமொழியின் நடையும் ஓரளவு ஒன்றுபோல் ஒத்துள்ளது. அத்திருவாய்மொழியில் நம்மாழ்வாராகிய தலைமகள் (பராங்குச நாயகி) தானாகவே எம்பெருமான் உறையுமிடமான திருக்கோளூரை உசாவிக் கொண்டு புறப்பட்டுப் போவதாகச் சொல்லப் பெறுகின்றது; இத் திருமொழியில் எம்பெருமானே வந்து அழைத்துக் கொண்டு போனான் என்று சொல்லப் பெறுகின்றது; இவ்வளவே வேற்றுமை.

ஆளவந்தாருடைய குழுவில் இவ்விரண்டு திருப்பதிகங்களையும் பற்றி ஓர் ஆராய்ச்சி நடைபெற்றது. 'உண்ணும் சோறு' என்ற திருவாய்மொழியிலும் மகள் தாயை விட்டுச் சென்றாள்; 'கள்வன் கொல்' என்ற திருமொழியிலும் மகள் தாயைவிட்டுச் சென்றாள்; இவ்விருவருள் எந்த மகளுக்காகத் தாய் அதிகம் கவலைப்பட வேண்டும்?—இதுவே ஆய்வுப் பொருள். அப்போது அங்கிருந்த முதலிகள் - "பரகால நாயகி தனித்துச் செல்லவில்லை; 'நெடுமால் துணையா போயின பூங்கொடியாள்' (3.7:10) என்பதால் தலைவனுடன் சென்றவளாகின்றாள்; ஆகையால் அவளைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. பராங்குச நாயகியோ

அப்படித் துணையோடு செல்லாமல் தனியே சென்ற வளாகையாலே அவளைப்பற்றிக் கவலைப்படவேண்டி யுள்ளது" என்றார்கள். இது கேட்ட ஆளவந்தார் : "இப்படிச் சொல்லலாகாது; பராங்குச நாயகி தனியே சென்றாளாகி லும், தான் நினைத்தவிடத்திற்குப் போய்ச் சேரவேண்டும் என்னும் ஆவலினால் எப்படியாவது விரைவிற் சென்று சேர்ந்திடுவள்; வழியில் தங்கி அபாயங்களுக்கு உட்படக் காரணம் இல்லை. ஆனது பற்றியே "திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே' (6 : 7 : 1) என்று ஐயமின்றி உறுதியாகச் சொல்லப்பட்டது அங்கு; ஆதலின் அவளைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. பரகால நாயகியும் அப்படித் தனியே சென்றிருப்பளாகில் அவளும் தான் சேர வேண்டிய திருவாலியிலே சென்று சேர்ந்தே தீர்வள்; 'திண்ணம் என் இளமான் புகுமூர் திருவாலியே' என்று தாயும் உறுதியாகக் கூறியிருப்பள்; அவளைப்பற்றியும் கவலைப்பட வேண்டாதிருக்கும். அங்ஙனமின்றி இருவராய் - தம்பதிகளாய் - செல்லுகையாலே நாயகனுடைய வடி வழகில் ஈடுபட்டு நாயகி பைத்தியம் பிடித்தும், நாயகியின் வடிவழகில் ஈடுபட்டு நாயகன் பைத்தியம் பிடித்தும் இப்படி இருவரும் பித்தம் தலைக்கொண்டவர்களாய்ப் போக நேரு மாகையாலே செல்ல வேண்டிய இடமான திருவாலியில் சென்று சேர்வர் என்று உறுதியாகச் சொல்வதற்கில்லை. திருவாலியில் சென்று சேர்வார்களோ? அன்றியே ஒருவருக் கொருவர் 'பித்துக் கொளிகளாய்'ச் சென்று இலங்கை போன்ற விரோதிகளின் இருப்பிடத்தில் சென்று சேர்வார் களோ! என்று ஐயுற்றுக் கவலைப்பட வேண்டியுள்ளது. இது தோன்றவே 'அணியாலி புகுவர் கொலோ?' என்று ஐயம் ஏற்படுமாறு சொல்லப் பெற்றிருப்பதைக் காண்மின்!" என்றருளிச் செய்தாராம். இத் திருமொழியின் பாசுரந் தோறும் ஒரு தடவைக்கு ஒன்பது தடவையாக 'அணியாலி புகுவர் கொலோ?' என்று ஐயப்பாடு தோன்றவே சொல்லி யிருப்பது பொருந்தும்.

இந்தத் திருமொழியை ஒத்த ஒரு திருப்பதிகம் பெரியாழ்வார் திருமொழியிலும் உண்டு[37]. தன் மகளுக்கு எம்பெருமான் பக்கலிலுள்ள அன்பு மிகுதியைக் கண்ட திருத் தாயார் இவளுக்கு அவனோடு கலவி உண்டாயிற்றென்று தான் அறிந்த போதிலும், ஊர்ப் பேச்சு தோன்றுவதற்குமுன் இவன் பக்கலில் கொண்டுபோய்ச் சேர்ப்பதே தகுதி என்று உறவினர்கள் சொல்லிக் காட்டியபோதிலும் தாயார் அவளை அங்ஙனம் கொண்டு சேர்க்கவில்லை. ஆகவே, எம்பெருமானே ஓர் இரவில் தனியாக வந்து ஒரு படுக்கையில் தாயுடன் படுத்திருந்த இவளை எழுப்பித் திருவாய்ப்பாடிக்குக் கொண்டு செல்கின்றான். பிறகு கண் விழித்த திருத்தாயார் படுக்கையில் மகளைக் காணாமல் பலவகையாகக் கதறு கின்றாள். இதனைக் கூறுவது இத் திருமொழி.

திருத்தாயார் பேசுகின்றாள் :

நல்லதோர் தாமரைப் பொய்கை
நாள்மளர் மேற்பணி சோர
அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு
அழகழிந் தாலொத்த தாலோ?
இல்லம் வெறியோ டிற்றாலோ?
என் மகளை எங்கும் காணேன்;
மல்லரை அட்டவன் பின்போய்
மதுரைப் புறம்புக் காண்கொலோ? (1)

[பொய்கை - குளம்; நாள் மலர் - அப்போது அலர்ந்த பூ; சோர - பெய்ய; அல்லி - உள்ளிதழ்; தாது - மகரந்தம்; வெறி ஓடிற்று - வெறிச்சென்றுள்ளது; மல்லர் - சாணூரன், முஷ்டிகன்].

"என் பெண் பிள்ளை நீங்கின வீடு தாமரைப் பூக்களி லுள்ள இதழ்கள் உதிரப் பெற்றதனால் தாமரைப் பொய்கை அழகழிந்து தோற்றுவது போலுள்ளது; இவள் போனவிடம் இன்னதென்று தெரியவில்லை; ஒருகால் கண்ணனுடன் கூடித்

37. பெரியாழ். திரு—3. 8.

திருவாய்ப்பாடிக்குச் சென்றிருப்பாளோ?" என்று திருத் தாயார் ஐயமுற்றுக் கூறுகின்றாள். இத்திருமாளிகையில் பெண் பிள்ளை இருந்தது ஓரடி நிலமானாலும், வீடு முழுவதும் அவளே இருந்ததாகத் தாய்க்குத் தோற்றிக் கிடந்தபடியால் 'இல்லம் வெறிச்சோடிற்றாலோ?' என்கின்றாள்.

ஐயங்களெல்லாம் இரண்டு இடங்களைப்பற்றி பிறக்கு மாதலால் இங்கு கம்சன் இருப்பிடமான மதுரையிற் புகுந்தாளோ? அன்றி, அதனருகிலுள்ள திருவாய்ப்பாடியிற் புகுந்தாளோ? என்று ஐயமுற்றதாகக் கொள்க. ஒருவருக் கொருவர் பண்ணுகின்ற காதல் விளையாட்டுகளினால் இருவரும் மயங்கி மெய்மறந்து கம்சன் நகரில் புகுந்தார் களாகில் தீராத் துன்பம் விளையுமே! என்ற ஐயம்தான் நெஞ்சினுள் நடமாடுகின்றதாகக் கொள்க.

7. நகர் காட்டல்:

தலைவன் தலைவியை உடன் கொண்டு இடைவெளிப் பாலைக் கடந்து தன் ஊர்க்குப் போகும்போது அவளுக்கு வழிநடை இளைப்புத் துன்பம் தோன்றாதிருக்கும்பொருட்டு அவளை நோக்கி 'அதோ தெரிகின்ற அப் பெரிய நகர் காண். நம்முடைய நகரமாவது' என்று தனது நகரைக் காட்டி அணிமை தோன்றக் கூறுதல் 'நகர் காட்டல்' என்னும் துறை யாகும்.

நானிலம் வாய்க்கொண்டு நன்னீர்
அறமென்று கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ்
பாலை கடந்த பொன்னே!
கானிலந் தோய்ந்து விண்ணோர்தொழுங்
கண்ணன் வெஃகா உதுஅம்பூந்
தேனிலஞ் சோலையப் பாலது
எப்பாலைக்கும் சேமத்ததே.[38]

---

38. திருவிருத்.—26
சில.—16

[வாய் - கிரணமுகம்; அற மென்று - பசை அறும்படி மென்று; கோது - சாரமற்ற பகுதி; பொன் - பொன் போன்றவள்; வெஃகா - சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயில்; உது - அடுத்துள்ளது; அப்பாலது - அவ்விடத்தி லுள்ளது; சேமத்தது - இன்பம் தரும் இடம்]

என்பது இத்துறையை விளக்கும் பாசுரம். இதில், 'அன்பே, நம்முடைய வழி நடையில் நமது நற்பேற்றின் காரணமாகப் பாலை நிலத்தைக் கடந்து விட்டோம். இனி, நமது நகர் அருகில் உள்ளதைக் காண்பாயாக' என்கின்றான் தலைவன்.

இங்கே நம்பிள்ளை ஈடு : "நிலந்தான் நாலென்பாரும் அஞ்சென்பாருமாயிருக்கும்; ஐந்தென்கின்றவர்கள் பாலை நிலத்தையும் தன்னிலே ஒன்றாக்கிச் சொல்லுவார்கள்; நாலென்றவர்கள் இப்பாலை நிலந்தான் மற்றை நாலிலும் உண்டென்கின்றார்கள்; அதாகிறது—நீரும் நிழலும் இல்லாத இடம் பாலையாம் அத்தனையிறே." பகலவன் தனதுவெப்பக் கதிர்களால் பூமியிலுள்ள நீரைக் கவர்கின்றான் என்பது "நால் நிலம் வாய்க் கொண்டு நன்னீர் அற மென்று" என்ற சொற் றொடரால் அறியப்பெறும் செய்தி. நால்வகை நிலத்துள்ளும் பாலை சத்தற்ற நிலம் என்பதும், இன்பத்திற்கன்றிப் பிரிதல் துன்பத்திற்கு உரியதாகின்ற இதன் கொடுமை 'கோது கொண்ட', 'மென்று சுவைத்து உமிழ்' என்ற தொடர்களால் குறிக்கப்பெற்றுள்ளமை சிந்தித்து உணரத்தக்கது. பாலை நிலத்திற்குரிய பெரும் பொழுது இள வேனில், முது வேனில் என்பதையும் சிறு பொழுது நண்பகல் என்பதையும் நாம் அறிவோம். பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்று இலக்கண நூல்கள் கூறினும் ஈண்டு ஆழ்வார் அதன் தெய்வம் சூரியன் என்பதாகவே ('வேனில் அம் செல்வன்') காட்டுவர். இயல்பாகவே வெப்பக் கதிர்களையுடைய பகலவனும் வெறுத் தொதுக்கும்படியாக உள்ளது பாலையின் கொடுமை என்பது தோன்ற 'வேனில் செல்வன் சுவைத்து உமிழ் பாலை' என்று கூறப்பெற்றுள்ள நயம் உணரத்தக்கது. 'நன்னீர் அறமென்று'

'கோது கொண்ட' என்று கூறிய பின்னையும் 'சுவைத்து' என்றது சிறிதும் நீரில்லாதபடி பசையறப் பருகினமை தோன்றுவதற்காகும்.

இப்படிப்பட்ட கொடிய நிலத்தைக் காலால் நடந்து கடந்து வந்து மிக வருந்த வேண்டிய நிலையிலும் தலைவனைப் பிரியாது அவனுடன் வருதலையே ஓர் இன்பமாகக் கருதி வருகின்ற தலைவியை 'பாலை கடந்த பொன்னே!' என்று குறிப்பிடுகின்றான் தலைவன். பொற்கொல்லன் எரிகின்ற நெருப்பில் உருக்கின பொன்னை ஓடவிடுங்கால் அஃது ஒளி விடுவது போல, துன்பத்திலும் இன்பத்தைக் காணும் இவளது முகமலர்ச்சியைக் காட்டும் பொருள் பொதிந்த இச் சொற்றொடர் சுவைத்து மகிழத்தக்கது. தேவர்கட்கு இந் நில உலகில் கால் தோயாமை இயல்பு. உம்மர் உலகினும் பெருமையுடைய இத் திவ்விய தேசத்தில் அவர்களும் அந்த இயல்பு மாறி கால் பொருந்துவதற்கு அரிய பாலையின் வெப்பத்தைத் தணிக்கவல்லது திருவெஃகா. அத் திவ்விய தேசம் விண்ணுள்ளோரையும் கால் நிலம் தோய்ந்து நடக்கும் படியாகச் செய்து விடுகின்றது என்பதை 'கால் நிலம் தோய்ந்து விண்ணோர் தொழும் கண்ணன் வெஃகா' என்ற தொடர் காட்டுகின்றது.

இத்தலம் தாபம் தணிக்கும் சிறந்த இடம் என்பதைக் காட்டவே பாசுரத்தில் 'அம்பூ தேன் இளஞ்சோலை' எனக் குறிப்பிடப் பெற்றது. 'எப்பாலைக்கும்' என்பதில் 'பாலை' என்பது இலக்கணையாய் துன்பத்தைக் குறித்தது. அன்றியும், 'பான்மை' என்னும் பண்புப் பெயர் 'மை' விகுதியை இழந்து 'ஐ' விகுதி பெற்றுப் 'பாலை' என நின்று 'எந்த நிலைமைக் கும்' என்று பொருள்படுவதாகவும் உரைக்கலாம். 'எப் பாலைக்கும் சேமத்ததே' என்ற இடத்து நம்பிள்ளை ஈடு: "எல்லாப் பாலை நிலங்களால் வந்த வெம்மையையும் போக்கி நமக்கு இரட்சகமுகமான தேசங் காண் அது (திருவெஃகா). இந்தப் பாலை நிலமே யன்றிக்கே இன்னமும் சில பாலை வனமும் கடக்கலாங் காண் இந்நில முண்டாக" என்பது.

இப்பாசுரத்திற்கு உள்ளுறைப் பொருளும் உண்டு. ஆழ்வார் கொடிய சம்சாரத்தைக் கழித்த தன்மையையும் எம்பெருமான் உகந்தருளின நிலத்தின் பரம போக்கியதையை யும் அவர்களுக்குப் பாகவதர்கள் எடுத்துக் கூறி அவரது ஆற்றாமையைத் தவிர்த்தலே இதன் உள்ளுறை. முதல் இரண்டடிகள் ஒளி வடிவமான எம்பெருமானின் பலவகை நிலங்களையும் திருவுள்ளத்திற் கொண்டு ஆய்ந்து அவற்றில் சத்தற்றது என்று கழித்ததும், பசையற்றதும், வெப்பம் மிக்கதுமான சம்சாரத்தைக் கடந்து மிக்க ஒளி பெற்றவரே!' என்று பாகவதர்கள் ஆழ்வாரை விளிக்கின்றதைக் காட்டு கின்றன. பின்னிரண்டடிகள், மீளா உலகத்தவரான நித்திய சூரிகளும் மீண்டு வந்து வசிக்கும்படியான பெருமையுள்ள அர்ச்சாவதாரத் தலம் மிக்க அண்மையிலுள்ளதாய் மிகவும் இனிமை தருவதாய், எவ்வகைத் துன்பங்களையும் தவிர்ப்ப தாய், நன்மைகட்கெல்லாம் புகலிடமாய் உள்ளது என்பதைக் காட்டி நிற்கின்றன.

8. ஊடல்:

ஊடல் என்பது கணவன் மனைவியரிடையே நேரிடும் சிறு பிணக்கு. வடமொழியில் இது 'பிரணயகலகம்' என்று வழங்கப்படும். புலவி என்றும் இதனை வழங்குவதுண்டு. முதிர்ந்த பிணக்கைத் 'துனி' என்றும், முதிராத இளைய பிணக்கைப் 'புலவி' என்றும் வேறுபடுத்திக் காட்டுவர் வள்ளுவப் பெருந்தகை (குறள்—1306). திருவாய்மொழி ஈட்டில்[39] இஃது இவ்வாறு கூறப்பெற்றுள்ளது: "போகப் பிராகாரந்தான் மூன்று வகைப்பட்டாயிற்று இருப்பது. அவையாவன—ஊடல். உணர்தல், புணர்தல் என்பனவாம். 'ஊடல் உணர்தல் புணர்தல் இவை மூன்றும் காமத்தாற் பெற்றபயன்'[40] என மூன்றையும் பிரயோஜனமாகச்

---

39. திருவாய் 6.1:5 (ஈடு காண்க).
40. குறள்—1103. (சிறிதுமாற்றத்துடன் வந்துள்ளது)
ஊடல் உணர் தல் புணர் தல் இவை காமம்
கூடியார் பெற்ற பயன்

சொன்னார்கள் தமிழர்கள். இவற்றுள் ஊடலாவது, எதிர்த் தலையோடு கூடினால் அஹேதுகமாக (காரணமின்றி) விளைவ தொன்று. அதுதான், 'என்னை யொழியக் குளித்தாய்; என்னையொழியப் பூவைப் பார்த்தாய்; உன் உடம்பில் பூ நாறிற்று' என்றாற்போலே வருபவை. உணர்த்தலாவது, 'உனக்கென்று குளித்தேன்' என்கையும் 'உனக்கு ஆம்' என்று பார்த்தேன் என்கையும், 'உன்வரவுக்கு ஒப்பித்தேன்' என்றாற்போலே சொல்லுமிவை. "அநந்தரத்தே (உடனே) வருவது கலவி" என்பதாக. வள்ளுவத்தில் 'புலவி நுணுக்கம்' என்றதற்குப் பொருள் கூறும் பரிமேலழகர் 'தலைமகனும் தலைமகளும் ஒரமளிக்கட் கூடியிருந்துழி அவன் மாட்டுப் புலத்தல் காரணமில்லையாகவும் காதல் கைமிகுதலான் நுண்ணியதோர் காரண முளதாகவுட் கொண்டு அதனை அவன் மேலேற்றிப் புலத்தல்' என்றார்.[41]

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ஊடல் பற்றி மூன்று திருப்பதிகங்கள் காணப்பெறுகின்றன அவை; மின்னிடை மடவார்கள்' என்ற திருவாய் மொழி (6.2); (2) 'ஏர்மலர்ப் பூங்குழல்' என்ற பெருமாள் திருமொழி (6); (3) 'காதில் கடிப்பிட்டு' என்ற பெரிய திருமொழி (10-8). கிருஷ்ணாவ தாரத்தில் கண்ணபிரானோடு பரிமாறின ஆய மங்கையர் இங்ஙனே பிரணய ரோஷத்தாலே ஊடல் செய்தமை உண்டு. அவர்களுடைய செயலே ஆழ்வார்கட்கும் ஆகி அதுவே இவர் களிடம் முற்றியிருக்கிறதாயிற்று. இனி இவற்றை ஒவ் வொன்றாக விளக்குவோம்.

(1) பராங்குச நாயகியைப் பிரிந்து சென்ற எம்பெரு மான் அவள் முன் வந்து நிற்கின்றான். அவனை நோக்கிப் பேசுகின்றாள் பராங்குச நாயகி:

---

என்பது குறள். இங்கு 'உணர்தல்' என்பதற்குத் 'தலைமகன் தன்னுடைய தவறின்மையைக் கூறித் தலைவியின் ஊடலை நீக்குதல்' என்று பொருள் கூறப் பெற்றுள்ளது.

41. புலவி நுண்ணுக்கம் - இதில் உள்ள பத்துக் குறட்பாக் களும் நுண்ணியதோர் காரணமுளதாக உட்கொண்டு ஊடலை உணர்த்துகின்றன (குறள் 1311—1320).

மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார்
முன்புநா னதஞ்சுவன்,
மன்னுடை இலங்கை யரண்காய்ந்த மாயவனே
உன்னுடைய சுண்டாயம் நானறிவ னினியது
கொண்டு செய்வதென்,
என்னுடைய பந்தும் கழலும் தந்து
போகு நம்பீ.[42] *(ஆசிரியத்துறை)*

*[மின் - மின்னற் கொடிபோன்ற; மடவார் - பெண்டிர்; சூடுவார் - அநுபவிப்பார்; மன் - அரசன்; அரண் - கோட்டை; காய்ந்த - சீறி யழித்த; சுண்டாயம் - தன் காரியத்தில் நோக் குடைமை; விளையாட்டு; கழல் - அம்மானை ஆடும் காய்; போகு - போவாய்]*

இப்பாசுரத்தில் "என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு, நம்பீ" என்றிருப்பதால் பந்தும் கழலுமாகிற லீலோப கரணங் கள் (விளையாட்டுக் கருவிகள்) எம்பெருமான் கையில் உள்ள மையும் அவற்றைப் பராங்குச நாயகி விரும்புவதாகவும் தெரி கின்றது. பந்தும் கழலும் எம்பெருமான் கையில் இருக்கக் காரணம் என்னென்னில்: இதற்கு முன்னே இவளும் தானு மாக விளையாடல்கள் புரிந்துகொண்டிருந்தார்கள். அப்படி யிருக்கையில் எம்பெருமான் திடீரென்று பிரிந்து போனான்; போனவன் சிறிதுகாலம் கழித்து மீண்டு வந்து நின்றான். அப் போது நாயகிக்குப் பிரணய ரோஷம் (ஊடல் கோபம்) தலை யெடுத்திருந்ததனால் பேசாது வாளா இருந்தாள். எப்படி யாவது இவளைப் பேச வைக்கவேண்டும் என்று கருதிய அவன் பலவித சிறு குறும்புகள் செய்து பார்த்தும் ஒன்றும் பலிக்க வில்லை. விளையாட்டுக் கருவிகளாகக் கீழேவைத் திருந்த பந்தையும் கழலையும் எடுத்துக் கொண்டு அவற்றில் அளவு கடந்த ஆர்வத்தைக் காட்டினான். "பந்தே, நாயகிதான் பேசாவிட்டாலும் நீயாவது என்னோடு பேசுவாயன்றோ? கழலே, நாயகியின் கழல் எனக்குக் கிடைக்காவிட்டாலும்

42. திருவாய். 6.2;1

நீயாவது கிடைத்தாயன்றோ?" என்று இப்படிப் பலவும் சொல்லித் தன்னுடைய கழிபெருங் காதலைக் காட்டத் தொடங்கினான்; அப்போது நாயகி பேசாதிருக்க முடியாமல் பேசத் தொடங்கி இங்ஙனம் கூறுகின்றாள் என்க.

'மின்னல்போலவே நின் நுண்ணிய இடையழகு இருப்ப என்' என்று பராங்குச நாயகியை நோக்கி வருணித்துப் பேசினான் எம்பெருமான்; இதுகாறும் நம்மை மதியாது இதர மகளிருடன் கலந்து போந்த இவர் இப்போது இங்கே வந்து நம்மை வருணிப்பது நன்றாயிருக்கின்றது! என்று சீறி, "மின்னிடைமடவார் நானல்லேன்; நின் அருள் சூடும் மின்னிடைமடவார் வேறேயுண்டு" என்கின்றாள். 'நீ இங்கே வந்து செய்கின்ற காதல் விளையாட்டுகளை உன்னுடைய மின்னிடைமடவார்கள் அறியின், அவர்கள் நின்னையின்றி என்னையும் சேர்த்துத் தண்டிப்பர்' என்கின்றாள். 'சீதாப் பிராட்டிக்காக நீ செய்த செயலும், பெண்கட்குக் காரியம் செய்பவன்போல் பாசாங்கு செய்து அவர்களை வலையிலகப்படுத்திக் கொண்டு துடிக்கவிடுதற்கென்றே யாகும்; ஆதலின் இதுவும் மாயமாகும்' என்கின்றாள். 'உன்னுடைய சுண்டாயமெல்லாம் உன்னுடைய கபட எண்ணங்கட்கு இணங்கியவையன்றி உண்மையான எண்ணத்துடன் காரியம் செய்பவனல்லை நீ என்பதை நான் அறிவேன்' என்கின்றாள். 'நான் அறிந்தாலென்ன? அறியாவிடில் என்ன? இனி உனக்கும் எனக்கும் ஏதேனும் ஒரு தொடர்பு வைத்துக் கொள்வதற்காக இருந்தாலன்றோ இந்த விசாரம்?' என்கின்றாள். இப்படிக் கூறியவுடன் 'ஆகில் நான்போகிறேன்' என்று கூறி பந்து, கழல்களோடு புறப்பட்டான் எம்பெருமான். போனால் போகிறான் என்று இருக்கவல்லளோ இவள்? எனவே, 'பந்தும் கழலும் தந்து போகு நம்பீ' என்று மீண்டும் பேச்சுக்கு இடம் வைக்கின்றாள். 'இவை உன்னுடையவை எப்படி? என்னுடையவையே இவை' என்று அவன் பிணக்குச் செய்ய இடம் தருகின்றான். இந்தத் திருவாய்மொழிப் பாசுரங்கள் அனைத்தும் இந்தப் போக்கிலேயே செல்லுகின்றன.

(2) 'ஏர்மலர்ப்பூங்குழல்,[43] — இந்தப் பெருமான் திரு மொழி முழுவதும் ஊடிப் பேசும் பாசுரங்களாகும். ஆழ்வார் நாயகி பேசுகின்றாள்:

கருமலர்க கூந்தல் ஒருத்திதன்னைக்
கடைக்கணித்து, ஆங்கே ஒருத்திதன்பால்
மருவி மனம்வைத்து, மற்றொருத்திக்கு
உரைத்து, ஒருபேதைக்குப் பொய்குறித்து,
புரிகுழல் மங்கை ஒருத்திதன்னைப்
புணர்தி: அவளுக்கும் மெய்யன் அல்லை
மருதுஇறுத் தாய்உன் வளர்த்தியூடே
வளர்கின்ற தால்உன் மாயைதானே.[44]

*[கடைக்கணித்து - கடைக் கண்ணால் பார்த்து; மருவி - பொருந்தச் செய்து; பேதை - பெண்; புரிகுழல் - சுருண்ட கூந்தல்; புணர்தி - கலவி செய்தாய்; மாயை - கள்ளம், கவடுகள்]*

இதில் : "மலர்களைச் சூடியுள்ள கறுத்த கூந்தலையுடைய ஒருத்தியைக் கடைக் கண்ணால் நோக்கி ஒரு குறிப்புத் தந்தாய்; அப்படியிருந்தும், வேறொருத்தியிடம் மனத்தைப் பொருந்தச் செய்தாய்; மற்றும் ஒருத்தியிடம் 'உனக்கு நான் அடியன்' என்று சொல்லிவைத்தாய்: பின்னும் பேதை யொருத்திக்கு 'குறியிடமே' அமைத்துக் காட்டினாய்; இத்தனைப் பேரையும் ஏமாற்றி விட்டு புரிகுழல் மங்கை யொருத்தியுடன் கலவிசெய்தாய்! அவளுக்கும் நீ மெய்யன் அல்லைகாண்! நீ வளர்வதோடு கூடவே உன் கள்ளம் கவடு களும் வளர்கின்றன!" என்று கூறி ஊடுகின்றாள்.

(3) கண்ணபிரான் ஓர் ஆயமங்கையுடன் புணர்ந்து பிரிகின்றான். பிரியும் போது திரும்பும் காலத்தை குறித்துச் செல்லுகின்றான். அந்தச் சமயத்தில் அங்கு வந்து சேர

43. பெரு. திரு.— 6.
44. ஷெ. —6:3

முடியாதபடி வேறோர் ஆய்ச்சியிடம் போது போக்கிவிட்டுத் திரும்பி வருகின்றான். நெடுநேரமாக இவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அவ்வாய்ச்சி பிரணயரோஷம் தலையெடுக்கப்பெற்று. 'சுவாமி எங்கு எழுந்தருளிற்று? ஏதுக்கு எழுந்தருளிற்று? தேவரீர்க்குத் தகுதியான தேவிமார்கள் பலரிருக்க அவர்களை விட்டு இங்கு என்ன வேலை?' என்றாற்போல சில ஊடற் பாசுரங்களைச் சொல்ல அவனுக்கு முகம் கொடாது இகழ்ந்த விதம் பிரணய தாரையின் (ஊடற் பொழிவின்) மேல் எல்லையாகும். இந்த ஆயமங்கையைப் போலவே அநுபவிக்க வேண்டும் என்று விரும்பிய பரகால நாயகி பேசுகின்றாள்:

> காதில் கடிப்பிட்டுக் கலிங்கம் உடுத்து
> தாதுநல்ல தண்ணந் துழாய்கொ டணிந்து
> போது மறுத்துப் புறமேவந்து நின்றீர்
> ஏதுக்கு? இதுஎன்? இதுஎன்? இதுஎன்னோ?[45]

> [கடிப்பு - குண்டலம்; கலிங்கம் - கறுப்பு ஆடை; தாது - மகரந்தம்; தண் - குளிர்ந்த; புறமே - கதவின் புறமாக; போது மறித்து - காலதாமத மாக]

காலதாமதத்துடன் வந்தவன் கறுப்புத் திருப்பரிவட்டத்தை அணிந்து கொண்டு வருகின்றான்; பிரணய ரோஷம் நீங்கிக் கடுக அணைத்துக் கொள்வள் என்ற கருத்தினாலே சில அலங்காரங்களைச் செய்து கொண்டு வருகின்றான். 'ஒரு பகல் ஆயிரம் ஊழியாலோ' என்று சொல்லும்படியாக இருக்கிற ஆழ்வார் நாயகி ஆதரித்து முகம் கொடுத்து வார்த்தை சொல்ல மாட்டிற்றிலள்; அதுவே காரணமாக இவனும் விரைந்து செல்லமாட்டாமல் கதவின்புறமே கவிழ்தலையிட்டு நிற்க வேண்டியவனாயினன்; அந்த நிலைமையைக் கண்டு ஆழ்வார் நாயகி 'போதுமறித்துப் புறமே வந்து நின்றீர், ஏதுக்கு? இது என்? இது என்? இது என்னோ?' என்கின்றாள்.

---

45. பெரி. திரு.— 10.8:1.

கண்ணபிரான் "காதில் குண்டலம் இட்டுக்கொள்ளவும், அரையில் கலிங்கம் உடுத்தவும், நல்ல தண்ணந்துழாய் அணிந்து கொள்ளவும் தாமதமாயிற்றேயன்றி உன்னை யொழிய வேறொருத்தியிடம் போனதனால் தாமதம் ஆகவில்லை'' என்று குறிப்பாகப் புலப்படுத்துவா னாயினன். ஆழ்வார் நாயகியும் "இதுவென்? இதுவென்? இதுவென்?" என்கின்றாள். அதாவது - (இதுவென்) வெறுங்காதே பரமபோக்கியமாயிருக்கக் காதில் குண்டலம் ஏதுக்கு? (இதுவென்) 'பூணித்தொழுவினிற் புக்குப் புழுதியளைந்த பொன்மேனியைக் காணப் பெரிதும் உகப்பார்'[46] நாங்களிருக்கக் கலிங்கம் உடுத்து அத்திருமேனி அழகை மறைப்பானென்? (இதுவென்) 'சர்வ கந்த!' என்கிற படியே திருமேனிதானே பரிமளம் வீசுவதாயிருக்கத் திருத் துழாய்ப் பரிமளம் ஏறிடுவது எதற்காக? இருந்தபடியே உகக்கிற எங்களுக்காக அணி செய்துகொண்டு வர வேண்டுமா? என்கை. (ஏதுக்கிது?) கொடும்பசி வேளையில் கிடையாத சோறு ஏதுக்கு? உம் அழகை நீரே கண்டு கொண்டு உம் உடம்பையும் நீரே தொட்டுக்கொண்டு நீரே முகர்ந்து கொண்டு நீரே கட்டிக்கொண்டு நீரே மகிழ்ந்திரும்; எங்களுக் கேதுக்கு? வேண்டா வேண்டா'' என்று கதவடைகின்றாள்; வாயில் மறுக்கின்றாள்.

---

46. பெரியாழ். திரு.—2. 4:9.

## 14. பாசுரங்களில் தூது

தூது என்பது, ஒருவர் தம்முடைய கருத்தை வேறொருவருக்கு இடை நின்ற ஒருவர் வாயிலாகக் கூறி விடுப்பது. அரசர்கள் பகையரசர்கள்பாலும் புலவர்கள் வள்ளல்கள்பாலும் தலைவி தலைவன்பாலும், தலைவன் மணத்தின் பொருட்டுத் தலைவியைச் சார்ந்தோர்பாலும் ஊடலை நீக்கும் பொருட்டுத் தலைவியின்பாலும் தூதர் களை அனுப்புதல் மரபு. இராமாயணத்தில் வரும் அங்கதன் தூது முதலியனவும், பாரதத்தில் வரும் உலூகன் தூது, சஞ்சயன் தூது, கிருட்டிணன் தூது என்பனவும் பகையரசர் கள்பால் விடுத்த தூதுகளாகும். கோவை நூல்களில் தூதிற் பிரிவு என்னும் கிளவியிற் சொல்லப்படும் தூதும் இதனைச் சார்ந்ததே. திருக்குறளில் 'தூது' என்னும் அதிகாரத்தில் இவ்வகைத் 'தூது' செல்வாருடைய இலக்கணங்கள் கூறப் பட்டுள்ளன. பிசிராந்தையார் கோப்பெருஞ் சோழன்பால் அன்னச் சேவலை விடுத்ததாகப் புறநானூற்றில் (புறம் - 67) நுவலப்பெறும் தூது புலவர் உபகாரிபால் விடுத்தற்கு எடுத்துக்காட்டாகும். குணமாலை சீவகனுக்குக் கிளியை விடுத்ததுபோன்றவை தலைவி தலைவனுக்குத் தூது விட்டனவாம். தலைவன் மணப் பொருட்டாகத் தூதுவிடுதல் கோவை நூல்களால் புலனாகும். சுந்தர மூர்த்தி நாயனார் சிவபிரானைத் தூது விட்டதும் பிறவும் தலைவியின் ஊடலை நீக்கத் தலைவன் தூது விட்டனவாகும்.

மேற்கூறியனவற்றுள் தலைவி தலைவன்பால் விடும் தூதும் தலைவி தலைவின்பால் விடும் தூதும் பொருளாகத்

தனியே அமைந்த பிரபந்தங்கள் பல தூதென்னும் பெயருடனே தமிழிலும் பிற மொழிகளிலும் வழங்குகின்றன. இப் பெயர்கள் தூதுவிடப்பெறும் பொருள்களின் பெயர் களைச் சார்ந்தே வழங்கும். எ.டு. கிள்ளைவிடு தூது, மான் விடு தூது, தமிழ்விடு தூது, புகையிலைவிடு தூது. இவை முதல் இரண்டனுள் முன்னது களவுக் காலத்தும் பின்னது கற்புக் காலத்தும் பெரும்பாலும் நிகழ்வனவாகும். தமிழிலுள்ள தூதுப் பிரபந்தங்களில் தலைவி தலைவன்பால் தூது விட்டனவே மிகுதியாக உள்ளன. தலைவனைப் பிரிந்த காம மயக்கத்தால் தலைவி அஃறிணைப் பொருள்களையும், உயர் திணைப் பொருள்களையும் தூது விடுப்பதாகச் செய்தல் கவி மரபு. அஃறிணைப் பொருள்களை அங்ஙனம் விளித்துக் கூறுதல் 'காமம் மிக்க கழிபடர் கிளவி'' என்று சொல்லப் பெறும்;

> சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
> செய்யா மரபிற் றொழில்படுத் தடக்கியும்[1]

என்பது இதற்குரிய விதியாகும். மேலும்,

> ஞாயிறு திங்கள் அறிவே நாணே
> கடலே கானல் விலங்கே மானே
> புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
> அவையல பிறவும் நுதலிய நெறியாற்
> சொல்லுந போலவும் கேட்குந போலவும்
> சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்[2]

என்ற விதியையும் அமைத்துக் கொள்ளலாம். இதில் ஞாயிறு முதலாக நெஞ்சு ஈறாகச் சொல்லப்பட்ட பதினொன்றும்

---

1. தொல். பொருளியல் - 2. சொல்லாமரபின் ஆவன - புள்ளும், மாவும், மானும் கடலும் கானலும் முதலாயின; செய்யா மரபாவன - தூதாகச் சேறலும் வருதலும் உளபோலக் கூறும் அவைபோல்வனவும் பிறவும் (இளம்)
2. ஷெ. செய்யு. 192.

அத்தன்மைய பிறவுமாகிய மக்களல்லாத பொருள்கள் தாம் கருதிய நெறியினானே சொல்லுந போலவும் கேட்குந போலவும் சொல்லியமையப்பெறும் என்பர் இளம்பூரணர். இங்ஙனம் தலைவி தூதுவிட முயலுதலை வரைந்தெய்தும் கூட்டத்திற்கு ஏதுவாகிய எண்வகை மெய்ப்பாடுகளுள் தூது முனிவின்மை[3] என்பதனுள் அடக்குவர் தொல் காப்பியர்.

இவ்வாறு விடப்பெறும் தூதைப் பொருளாகவுடைய செய்யுட்கள் முற்காலத் தூது நூல்களிலும் பிற்காலத்து நூல் களிலும் உள்ளன. அக நானூற்றுள் 'கானலும் கழறாது' (அகம் -170) என்னும் செய்யுளில் ஒரு தலைவி நண்டைத் தூது விட்ட செய்தி காணப்பெறுகின்றது. ஐங்குறு நூற்றில் 'சூழ்கவம்மோ' (ஐங். 317) என்னும் செய்யுளில் நெஞ்சைத் தூது விட்ட செய்தி கூறப்பெறுகின்றது. பரிபாடலிலுள்ள 'தூதேய வண்டின் றொழுதி' (பரிபா - 8:36) என்னும் பகுதி வண்டைத் தூதுவிடும் மரபைக் காட்டுகின்றது. நற்றிணை யிலுள்ள 'சிறுவெள்ளாங்குருகே' (நற். 70) என்பது வெள்ளாங்குருகைத் தூது விடுவதைப் புலப்படுத்துகின்றது. நாலாயிரத்திலும் தேவாரத்திலும் அந்தாதி கலம்பகம் முதலிய சிற்றிலக்கிய வகை நூல்களிலும் பல செய்யுட்கள் தூதாக வந்துள்ளன.

தூது விடுத்தற்குரிய பொருள்கள் இவைதாம் என்ற வரையறை இல்லை. ஆயினும்,

> இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
> பயன்பெறுமே கம்பூவை பாங்கி—நயந்தகுயில்
> பேதைநெஞ்சம் தென்றல் பிரமாமீ ரைந்துமே
> தூதுரைத்து வாங்கும் தொடை.[4]

---

3. தொல். மெய்ப் 23. தூதுமுனிவின்மை - புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமின் அவர்க் கென்று தூதிரந்து பல முறையாலும் சொல்லுதல். (பேரா).

4. இரத்தினச் சுருக்கம்.

என்ற பாடலால் அன்னம், மயில், கிள்ளை, மேகம், நாகண வாய்ப் புள், பாங்கி, குயில், நெஞ்சு, தென்றல், வண்டு என்ற பத்தினைத் தூதுவிடப் பெறும் பொருள்கள் இவை என்பதை அறியலாமாயினும்[5] இந்தப் பத்தும் அல்லாத வேறு பல பொருள்களைத் தூது விட்டதாக அமைத்த பல தமிழ் நூல்கள் உள்ளன. ஒருவகையிலேயே ஒன்றுக்கு மேற்பட்ட நூல்களை வெவ்வேறு புலவர்கள் இயற்றியுள்ளனர். தூதுப் பிரபந்தங்கள் கலிவெண்பாவில் செய்யப்பெறுதல் வேண்டும் என்பது இலக்கணம். தத்தம் கற்பனைத் திறத்துக்கு எவ்வெப் பொருள்கள் ஏற்புடையனவாக உள்ளனவோ அவ்வப் பொருள்களைத் தூது விடுத்ததாகப் புலவர்கள் தூது பற்றிய சிற்றிலக்கியங்களை இயற்றியுள்ளனர்.[6]

சங்ககாலத்தில் 'காமம் மிக்க கழிப்படர் கிளவியாக' இருந்த துறையே பிற்காலத்தில் 'தூது இலக்கியங்களாக' வடிவு கொண்டது என்பது ஆய்வாளர்களின் கருத்து. முதலில் இதன் பொருளைக் காண்போம். காமம் மிக்க - (பிரிவினால்) காதல் விஞ்சுவதனால்; கழி - மிக; படர் - துன்புறுகின்ற; கிளவி - சொல என்பது இதன் பொருளாகும். 'தலைமகனைக்

---

5. இவற்றுள் ஒவ்வொன்றற்கும் தனித்தனியே இலக்கியமாக அமைந்துள்ள நூல்கள் முன்பு இருந்தன போலும்; இப்பொழுது அன்னம், நாகணவாய்ப் புள், குயில் என்பவற்றைத் தூதுவிட்டதாக அமைந்த நூல்கள் தமிழில் காணப் பெறவில்லை. மேற்கூறிய பத்தையும் தூது விட்டதாகத் தானப்பாசாரியாரெனும் ஓர் உபகாரி மீது திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப் பெற்ற தசவிடு தூது என்னும் நூல் ஒன்று உண்டு (இப்போது அது கிடைக்கவில்லை.)

6. அவை : வனசவிடு தூது, நெல்விடு தூது, துகில்விடு தூது, காக்கைவிடு தூது முதலியன; பின்னும் அன்றில், இருள்வாசி (இருவாட்சி), குவளை, சண்பகம், பாரிசாதம்; பிச்சி முதலியவற்றின் மலர்களும் புறவு, பொன் முதலியனவும தூதுக்குரியனவாகத் தத்தம் நூல்களில் கவிஞர்கள் புலப்படுத்தியுள்ளனர்.

காணலுற்று வருந்தா நின்ற தலைமகள் தனது வேட்கை மிகவாற் கேளாதனவற்றைக் கேட்பனவாக விளித்து... கூறாநிற்றல்' என்பர் பேராசிரியர் (திருக்கோவை—173 இன். உரை). அதாவது, காமம் மிக்கதனாலுண்டாகிய பெருந் துன்பம் காரணமாகக் கேட்டலும் அதற்கு மறுமொழி கூறலும் இல்லாத புள் முதலியவற்றை நோக்கிக் கூறுதல். "அவ்வகை வேட்கையளாய் நின்று புன்னைக்கானும் கழிக் கானும் அவ்வகை பிறவற்றிற்கானும் தன்கட்பொறை தணிப்பனவாகச் சிந்தித்துச் சொல்லுவதாயிற்று......... இதனைத் தலைமகன் கேளாவருமே எனின், 'இங்ஙனம் வந்தொழுக இவன் ஆற்றாளாம்' என்று ஒருவகை யான் முற்பட்டுப் பிற்றை ஞான்று வரைவொடு புகுவானாம்; தோழி கேட்குமே யெனின் தலைமகனை முன்னின்று வரைவு கடவுவாளாம்; யாரும் கேட்பாரில்லையெனின் ஆற்று தலைப் பயக்கும். என்னை? மூடிவேவாநின்றதோர் கலத்தை மூடிதிறந்தவிடத்து அகத்து நின்ற வெப்பம் குறைபடும்; அது போல், இவட்கும் அயர்வுயிர்ப்பாம், அச் சொற்கள் புறப் படுதலான் என்பது, இம் மூன்றனுள் ஒன்றாகாமை இல்லை என்பது. தலைமகன் கேட்பின் இன்னதொன்றாம், தோழி கேட்பின் இன்னதொன்றாம், யாரும் கேட்பாரில்லையாயின் இன்ன தொன்றாம் என்பது ஒரு பயன் சிந்தித்துச் சொல்லுமோ எனிற், சொல்லாள்; குழவி அழுதாற்போல் வேட்கை மிகுதியாற் சொன்ன விடத்து அப்பயன் நிகழும். குழவி அழுகின்றது, 'எனக்குப் பால் தம்மின்? நீர் ஆட்டுமின்' என்றழாது, துக்கம் வந்ததாக அழும்; அழ, அறிவார் பயன் எய்துவிப்பர் என்பது" (இறை. கள. 30—இன் உரை). எ.டு: குறள்—1210; குறுந்.—107; திருக்கோவை—177. காண்க.

பக்தி இலக்கியங்கள் வளர்ந்த காலத்தில் ஆழ்வார் பெருமக்கள் இத்துறையைப் பயன் படுத்திய அருமைப் பாட்டை ஈண்டுக் காண்போம். ஆழ்வார் திருமொழிகளில் அவர்கள் தாமான தன்மையை விட்டுப் பிராட்டியாரின் நிலையை ஏறிட்டுக் கொண்டு பாசுரங்கள் அமைக்கப்

பெற்றிருக்கும். பெரும்பாலும் ஆழ்வார்கள் புள்ளினங்களையே தூது போகும்படியான பாசுரங்களை அமைப்பர்; குருகினங்கள், நாரைகள், அன்னங்கள், பூங்குயில்கள், கிளி, மயில், பூவை, அன்றில்கள், வண்டினங்கள் முதலியவை தூதுவிடும் பொருள்களாக அமைந்திருப்பதைக் காணலாம். இவற்றைத் தவிர, வாடை, மேகம், நெஞ்சு போன்றவையும் இவர்கள் பாசுரங்களில் தூதுப் பொருள்களாக அமைந்திருப்பதையும் கண்டு மகிழலாம்.

இங்ஙனம் பறவைகளைத் தூதுவிடுவதற்கு உட்பொருள் உண்டு. ஆசாரிய ஹிருதயம்.

> "சேர்ப்பாரைப் பட்சிகளாக்கி ஜ்ஞாந கர்மங்களைச்
> சிறகு என்று, குரு ஸப்ரமசாரி புத்ர ரஷ்ய
> ஸ்தாநே பேசும்"[7]
>
> [ஸ்ப்ரமசாரி - ஒரு சாலை மாணக்கர்; ஸ்தாநே - இடத்தில்.]

என்று குறிப்பிடுகின்றது. 'விண்ணோர் பிரானார், மாசு இல் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே'[8] என்று ஆழ்வாரே அருளிச் செய்துள்ளமையால் பகவத் விஷயத்தில் கொண்டு சேர்க்குமவர்கள் பறவைகளாகக் கொள்ளப் பெறுவர். இரண்டு சிறகுகளைக் கொண்டு பறவைகட்கு எங்ஙனம் விசும்பில் பறந்து செல்லுதல் இயலுகின்றதோ, அங்ஙனம் ஞானம், ஒழுக்கம் (அநுட்டானம்) என்னும் இரண்டாலும் இறைவன் அடையப்பெறுகின்றான் என்பது ஆன்றோர் கொள்கை, எனவே, ஞானத்தையும் அநுட்டானத்தையும் சிறகுகளாகக் கொள்ளல் வேண்டும். ஆசாரியர்களும் ஒருசாலை மாணாக்கர்களும், புத்திரர்களும் இறைவனை அடையும் பேற்றுக்குத் துணையாக இருப்பார்

7. ஆசா. ஹிரு.—150.
8. திருவிருத்—55.

கள் என்பது அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் கருத்தாகும்.

மேற்குறிப்பிட்ட பறவைகளிலும் அன்னம், வண்டு முதலியவையாகச் சொல்லப்பெறுபவர்கள் இன்னார் இன்னார் போன்றவர்கள் என்னும் உள்ளுறைப் பொருள் அருளிச் செய்யப்பெற்றுள்ளது: அவற்றை ஈண்டுக் குறிப் பிடுதல் மிகவும் பொருத்தமாகும். அன்னமாகப் பேசப் பெறுபவர்கள் செல்வநம்பி, பெரியாழ்வார், நாதமுனிகள், ஆளவந்தார் ஆகியோர்.[9] நாரத முனிவர், உலோக சாரங்க முனிவரால் தாங்கப் பெற்ற திருப்பாணாழ்வார், தம்பிரான்மார் (அரையர்) போன்றவர்கள் தும்பி என்றும் வண்டு என்றும் பேசப்பெறுவர்.[10] அதே நூல் கிளி, பூவை, குயில், மயில் என்றவற்றிற்கு உள்ளுறைப் பொருளாக அமைபவர்கள் மதுர கவிகள், தொண்டரடிப் பொடி யாழ்வார், கூரத்தாழ்வான், திருமாலை யாண்டான், எம்பார், அருளாளப் பெருமாள் எம்பெருமானார் முதலா யினோர்களைக் கூறும்.[11] நாரை, கொக்கு, குருகு என்னும் பறவைகட்குக் குலசேகரப் பெருமாள், ஆசாரியபதத்தில் நின்றவர்களான முதலிகள் போல்வார் உள்ளுறைப் பொருள் களாக அமைவர்.[12] மேகத்திற்கு உள்ளுறையாக திருமழிசை பிரான், திருமங்கையாழ்வார், இராமாநுசர் முதலியோர் பேசப்பெறுவர்.[13]

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்கள் நான்கு உள்ளன. இவை யாவும் 'மகள் பாசுரமாகவே' அமையும்.

---

9. ஆசா ஹிரு—151.
10. ஷை.—152.
11. ஷை—153.
12. ஷை—154.
13. ஷை—155.

தூடுவிடுபவள் தலைவியேயன்றோ? அவை; 'அஞ்சிறைய மடநாராய்' (திருவாய் 1.4) 'வைகல் பூங்கழிவாய்' (ஷ 6.1), 'பொன்னுலகாளீரோ' (ஷ 6.8), 'எம் கானல் அகங்கழி வாய்' (ஷ. 9.7) என்பவையாகும். இதனை,

> "தம்பிழையும் சிறந்த செல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டை வாசமும் மறப்பித்த க்ஷமா தீக்ஷர ரஸ்ய ஸௌந்தர்யங்களை உணர்த்தும் வியூக விபவ பரத்வ துவய அர்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்"[14]

என்று ஆசாரிய ஹிருதயம் கூறும். இதற்கு நிரல் நிரையாகப் பொருள் கொள்ளுதல் வேண்டும். தம் பிழையை மறப்பித்த க்ஷமையை உணர்த்தும் வியூகம் தூது (நான்கனுள் முதல் தூதுக்கு) விஷயம் என்றும், சிறந்த செல்வத்தை மறப்பித்த தீக்ஷையை உணர்த்தும் விபவம் தூது (நான்கனுள் இரண் டாவது தூதுக்கு) விஷயம் என்றும், படைத்த பரப்பை மறப்பித்த சாரஸ்யத்தை உணர்த்தும் பரத்வ துவயம் தூது (நான்கனுள் மூன்றுவது தூதுக்கு) விஷயம் என்றும், தமரோட்டை மறப்பித்த ஸௌந்தர்யத்தை உணர்த்தும் அர்ச்சை தூது (நான்கனுள் நான்காவது தூதுக்கு) விஷயம் என்றும் கொள்க. 'மறப்பித்த' 'உணர்த்தும்' என்ற சொற் களை முன்னே உள்ள சொற்களோடு தனித் தனியே கூட்டுக. 'தூது நாலுக்கும்' என்றது தூது விடுகின்ற நான்கு திருப் பதிகங்களை. இப்படி எம்பெருமான் தூதுவிடும்படிமுகம் காட்டாமைக்குக் காரணம் தம் பிழை, சிறந்த செல்வம், படைத்த படைப்பு, தமரோட்டை வாசம். தூதுவிடுகைக்குப் 'பற்றாசாக' என்றது க்ஷமை, தீக்ஷை, ஸாரஸ்யம், ஸௌந் தர்யம் என்பவையாகும். 'பரத்வ துவயம்' என்றது பரம பதத்திலிருக்கும் நிலையினையும். கரந்த சில் இடந்தொறும் இடம் திகழ் பொருள்தொறும் கரந்தெங்கும் பரந்துறையும் அந்தர்யாமித்துவ நிலையினையும் குறிக்கும். துவயம் -

14. ஷ—156.

இரண்டு. இவ்விரண்டும் முதன்மைக்கு அறிகுறிகளாம். இதனை மேலும் விளக்குவோம்.

வியூகத்தில் தூது: 'அஞ்சிறைய மடநாராய்' (1.4) என்ற திருவாய்மொழியில் 'கடல் ஆழி—நீர் தோற்றி அதனுள்ளே கண் வளரும் அடலாழி அம்மானைக் கண்டக் கால்' (10) என்பதால் வியூகத்தில் தூது அறியக் கிடக் கின்றது. 'என் பிழையே நினைந்தருளி' (7) என்றதனால்; எம்பெருமான் தனது சீல குணத்தினால் முதலில் ஆழ் வாருடன் கலந்துவிட்டான்; கலந்த பிறகு அவரிடமுள்ள குற்றங்களைக் கண்டான். அதனால் அவரை வெறுத்துப் பிரியலுற்றான். அவனிடத்தின் பொறுக்கும் பண்பு (க்ஷமை குணம்) நிரம்பியிருக்கும்போது ஆழ்வாரின் பிழைகளை பொருட்படுத்தக் காரணம் இல்லை. தன்னுடைய பிழைகள் அவனுடைய பொறுக்கும் பண்பையும் மறப்பித்தன போலும் என்று கருதிய ஆழ்வார் நாயகி அப் பெருங்குணத்தைச் சிறிது நினைப்பூட்டிவிட்டால் போதும் என்று நினைத்துப் பறவைகளைத் தூது விடுகின்றாள். சீதாப் பிராட்டியை ஆயிரக்கணக்கான வானரங்கள் தேடுவதைப் போலவே, தன் கண்களில் கண்டவற்றையெல்லாம் தூது போகுமாறு ஏவுகின்றாள் ஆழ்வார் நாயகி. பறவைகளைத் தூது விடுத்த ஐதிகத்தைக் குறிப்பிடும் பட்டர், "சக்கரவர்த்தித் திருமக னார் திருவவதரித்த பின்பு வானர ஜாதி வீறு பெற்றது போல, ஆழ்வார்கள் திருவவதரித்த பின்பு பட்சி ஜாதி வீறு பெற்றது" என்று சுவையுடன் அருளிச் செய்வர். இத் திரு வாய்மொழியில் நாரை, குயில் அன்னம், அன்றில், குருகு, வண்டு, கிளி, பூவை ஆகிய பறவைகளைத் தூதுவிடுவதைக் காண்கின்றோம்.

பிரிவாற்றாமையுடன் இருக்கும் பராங்குச நாயகி நெய்தல் நிலத்தில் இருக்கின்றாள். பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலன்றோ? நீர் நிலத்தருகே இராநின்ற ஆழ்வார் நாயகி அண்மையிலிருக்கும் நாரையைப் பார்த்து,

'நாராய், நீ என் நிலைமையைக் கருடக் கொடியானுக்கு அறிவித்து என்னையும் அவனையும் சேர்க்கவேண்டும்' என்று இரக்கின்றாள்.

அம்சிறைய மடநாராய்
அளியத்தாய் நீயும்நின்
அம்சிறைய சேவலுமாய்
ஆஆஎன்று எனக்கருளி
வெம்சிறைப்புள் உயர்த்தார்க்கு
என்விருதூதாய் சென்றக்கால்
வன்சிறையில் அவன்வைக்கில்
வைப்புண்டால் என்செயுமே.[15]

[மடம் - இளமை; புள் - கருடன்; வைப்புண்டால் - அநுபவித்திருப்பாயானால்]

குழந்தை தாயினுடைய எல்லா உறுப்புகளையும்விட்டு முலையிலே வாய் வைப்பதுபோல, இங்கு நாரையின் மற்றைய உறுப்புகளைவிட்டு அதன் சிறகிலே கண்வைப்பது விரைந்து செல்வதற்கு அதுவே சாதனம் என்பது பற்றி. சொன்ன சொல் மறுக்காமல் உடனே புறப்படத் தயாராக இருப்பது போல் ஆழ்வார் கண்ணுக்குத் தோற்றியதால் 'மட' என்ற அடைமொழியால் சிறப்பித்தார். நாயகன் விடுகின்ற தூதைக் காட்டிலும் நாயகி விடுகின்ற தூதுக்கு ஏற்றமுண்டு. இராமனால் தூதுவிடப் பெற்ற சிறிய திருவடிக்குப் பல இன்னல்கள் நேரிட்டன. பிராட்டியின் தூதாக அவன் இராமனிடம் மீண்டு வந்தபோது அவனுடைய திருமார் போடே அணைக்கப் பெற்றான். நாரையின் உள்ளும் புறமும் வெண்மையாக இருப்பதுபோல் ஆசாரியார்களும் தூய்மை வாய்ந்த மனம் மொழி மெய்களையுடையவர்கள் என்பது நாரையின் உள்ளுறைப் பொருள்.

நாரையைத் தூது போகுமாறு இரந்த தலைவி, அங்குப் போனால் சொல்ல வேண்டிய செய்திகளைச் சில குயில்

---

15. திருவாய் 1.4:1

களுக்குக் கூறுகின்றாள். ஒருவரை அழைத்துவிட்டு மற்றொருவருக்குச் செய்தி சொல்லுகின்ற போக்கிலிருந்து ஆழ்வார் நாயகியின் மிகுதியான கலக்கம் நன்கு புலனாகும். இனக் குயில்கட்கு ஆழ்வார் நாயகி கூறும் செய்தி:

முன்செய்த முழுவினையால்
திருவடிக்கீழ்க் குற்றேவல்
முன்செய்ய முயலாதேன்
அகல்வதுவோ விதியினமே.[16]

[முன் - எனக்குத் தெரியாத காலம் முதலாக; முழுவினை - பெரும் பாவம்; குற்றேவல் - அடிமைத் தொழில்]

என்பது. "அநாதி காலமாகத் திரட்டின பாபத்தாலே திருவடி வாரத்திலே அந்தரங்க கைங்கரியம் பண்ணுவதற்கு ஏற்கனவே முயலப்பெறாத நான் அகன்று போக வேண்டியது தானோ என்று கேளுங்கள்" என்கின்றாள்.

முழுவினை - என்றவிடத்து நம்பிள்ளை காட்டும் ஓர் ஐதிகம் : பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருந்த காலத்து அங்குத் தெற்காழ்வான் என்றும், கோளரியாழ்வான் என்றும் இருவர் வாழ்கின்றனர். கோளரியாழ்வான் நற்குண நல்லொழுக்கமுடையவன்; தெற்காழ்வான் சாதாரணமாகக் காணப்பெறும் ஒரு மனிதன். இருவரும் ஒரு சிறப்பான திதியன்று சந்திக்கின்றனர். கோளரியாழ்வான் தெற்காழ்வானை நோக்கி, "அப்பா, இன்று புண்ணிய தினம் ஆயிற்றே. இன்றாகிலும் ஒரு முழுக்கிடமாட்டாயோ?," என்கின்றான். அது கேட்ட தெற்காழ்வான், "முழுக்கிட வேணுமென விதிக்கின்ற உன் அபிப்பிராயம் என்னுடைய பாவங்கள் இந்த முழுக்கினால் சில தொலையக் கூடும் என்பதுதானே; அந்தோ! என்னுடைய பாவம் திருக்கோட்டியூர் சௌமிய நாராயணப் பெருமாளுடைய திருக்கையிலுள்ள திருவாழியாலே போக்கினால் போகுமேயல்லது ஒன்றிரண்டு

---

16. ஷை—1 :4:2

முழுக்கால் போகக் கூடியது அன்று காண்!'' என்கின்றான். இந்தச் சொற்கள் பட்டருடைய திருச்செவியில் விழுந்த வளவில், 'ஆ! ஆ!! எவ்வளவு ஆத்திகனாயிருந்தால் இந்த வார்த்தை சொல்ல முடியும்; இவனை மேலெழுந்த வாரியாகப் பார்த்து நாத்திகன் என்று நினைத்திருந்தோமே. இவ்வளவு பேசும் பரிபாகமுடையவனா இவன்!' என்று மிகவும் ஈடுபட்டதாக வரலாறு.

நாயகி நிலையிலிருக்கும் ஆழ்வார் ''கொம்மை முலைகள் இடர் தீரக் கோவிந்தர்க்கோர் குற்றேவல்''[17] என்று ஆண்டாளைப்போல் 'முலையாலணைக்க' என்று சொல்ல வேண்டியிருந்தும் 'திருவடிக்கீழ்க் குற்றேவல்' என்று சொல்லுகின்ற அழகு காண்மின்! இங்கே நம்பிள்ளை ஈடு : ''பிராமணர் பிச்சேறினாலும் ஒத்துச் சொல்லுமாப்போலே இவர் பிராட்டியானாலும் முலையாலணைக்க நினையார்; திருவடிகளில் அணையத் தேடும் அத்தனை'' என்பதாக. வேதமோதின அந்தணனுக்குப் பைத்தியம் பிடித்தாலும் வேதாத்யயனமே சொல்லித் திரிதல்போல் ஆழ்வாருக்கு நிலைமை மாறினாலும் பாசுரம் பேசும் முறைமை மாத்திரம் மாறவில்லை என்று ஈண்டு அறியத் தக்கது. ''தேறியும் தேறாதும் மாயோன் திறத்தினளே இத்திருவே'' [18] என்பதும் ஈண்டு அநுசந்திக்க உரியது.

பராங்குச நாயகியின் கண் வட்டத்தில் பேடையோடு களித்திருக்கும் அன்னங்கள் தென்படுகின்றன. அவற்றை நோக்கித் தூது செல்ல வேண்டிய இடத்தையும் தூதுச் செய்தியையும் குறிப்பிடுகின்றாள் :

விதியினால் பெடைமணக்கும்
மென்னடைய அன்னங்காள்
மதியினால் குறள்மாணாய்
உலகிரந்த கள்வர்க்கு

---

17. நாச். திரு—13:9.
18. திருவாய்.— 4:4 :7 (தாய்ப் பாசுரம்).

மதியிலேன் வல்வினையே
　　மாளாதோ என்றொருத்தி
மதியெலாம் உள்கலங்கி
　　மயங்குமால் என்னீரே:[19]

[விதி - பாக்கியம்; குறள் மாண்ஆய் - வாமன பிரம்மசாரியாய்; கள்வர் - வஞ்சகர். மயங்கும் - அறிவிழந்து கிடக்கும்]

என்ற பாசுரத்தில். 'விதி' என்பதற்குச் 'சாத்திர விதி' என்றும், 'பாக்கியம்' என்றும் இரண்டு விதமாகப் பொருளுரைப்பர். பின்னதே சிறந்தது. இதனை யொட்டி நம்பிள்ளை ஈடு காண்மின் : "பெருமாள் பிராட்டியைப் பிரிந்து கடலும் மலையும் அரித்துக்கொண்டு வாராநிற்கச் செய்தே இராஜ்ய தாரங்களை இழந்து கிடந்த மகாராஜரைக் கண்டு அவர் குறையைத் தீர்த்த பின்னரே தம் இழவில் நெஞ்சு சென்றது; அங்ஙனன்றிக்கே, இப்போது இவை குறைவற்றிருக்கின்ற இதுதான் இவள் பாக்கியமா யிருக்குமிறே."

மேல் வருவதைத் தெரிந்து கொண்டு அதற்க்கிணங்க காரியம் செய்யவல்ல சாதுரியமே 'மதி' எனப்படும்.[20] அப்படிப் பட்ட சாதுரியத்தினால் மாண்குறள் கோல வடிவு காட்டி யாசகனாயினான். 'அந்தக் குணத்தில் ஈடுபடுத்தி என்னை இப்பாடு படுத்துவதற்காகவே' என்ற ஆழ்வார் நாயகியின் கருத்து 'மதியினால்' 'கள்வர்க்கு' என்ற சொற்களில் கண்டு மகிழலாம். கள்வம் - என்பது முதலில் சிறிய வடிவைக் காட்டிய பிறகுப் பெரிய வடிவான வஞ்சகம் என்று கூறுவர்

19. ஷெ— 1.4:3
20. கீழே கழிந்து போன விஷயத்தைப்பற்றின உணர்வு 'ஸ்மிருதி' எனப்படும்; மேலே வரப்போகின்ற விஷயத்தைப் பற்றின உணர்வு 'மதி' ஆகும்; அப்போதைக்கப் போது நடக்க வேண்டிய உணர்வு 'புத்தி' எனப்படும்; முக்கால விஷயங்களையும்பற்றின உணர்வு 'பிரஜ்ஞை' என்று வழங்கப் பெறும்.

திருமாலை யாண்டான். ஒன்றை நினைத்து ஒன்றைச் செய்த மாயமே கள்வம் என்பதாக எம்பெருமானார் நிர்வகிப்பர்.

முன்னம் குறளுருவாய்
மூவடிமண் கொண்டளந்த
மன்னன் சரிதைக்கே
மாலாகிப் பொன்பயந்தேன்.[21]

[மால - மயக்கம்; பொன் - மாமைநிறம்]

என்ற பரகால நாயகியின் வாக்கும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

'ஒருத்தி மதியெலாம் உள் கலங்கி மயங்குமால்'—என்ற செய்தியைக் கூறி வருமாறு பணிக்கின்றாள். 'ஒருத்தி' என்றால் தெரியுமோ? இன்னாளென்று குறிப்பிட வேண்டாவோ என்னில் : வேண்டா; ஒருத்தி என்ற போதே அவள் பராங்குச நாயகி என்று அறிந்து கொள்வான். இங்ஙனம் மதியெல்லாம் உள் கலங்கி மயங்கும்படியாகத் தன்னால் செய்து வைக்கப்பெற்றவள் இந்நிலத்தில் பராங்குச நாயகி ஒருத்தி தவிர, வேறு யாரும் இல்லை யாதலால் சிறப்பித்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இங்கே நம்பிள்ளை ஈடு : "ஒருத்தி என்றால் அறியுமோ என்னில் : எய்தவன் கை உணராதோ? இன்ன காட்டிலே, மான் பெடை ஏவுடனே கிடந்து உழையா நின்றதென்று ஊரிலே வார்த்தையானால் எய்தவன் கை உணராதோ? 'நீயன்றோ எய்தாய்' என்று சொல்ல வேண்டாவிறே"

பாசுரத்தின் இறுதி அடியின் நயத்தையும் காண்போம். 'ஒருத்தி அறிவு கலங்கினாள்' என்று கூறுங்கள். அது கேட்ட எம்பெருமான் 'தன்னதான அறிவு கலங்கப் பெற்றாலும் நாம் கொடுத்த அறிவு இருக்குமே; அது கொண்டு ஆறி யிருப்பள்' என்பன், அப்போது 'மதியெல்லாம் கலங்கிற்று' என்று கூறுங்கள். அது கேட்ட எம்பெருமான், 'நாம் கொடுத்த அறிவு அப்படிக் கலங்கிவிடாது; கலங்கினாலும்

21. பெரி. திரு.—9.4:2.

மேலெழச் சிறிது கலங்குமே யல்லது உள்ளே கம்பீரமாகவே இருக்கும்' என்பன். அப்போது 'மதி யெல்லாம் உள் கலங் கிற்று' என்று எடுத்து இயம்புங்கள். அது கேட்ட எம்பெரு மான் 'எல்லாம் உள்கலங்கிப் போனால் என்ன? நாம் இருக்கி றோம். பின்பு நாம் அணுகும்போது அறிவு கொடுத்துக் கொள்ளுகின்றோம்' என்பன், அப்போது 'மறுக்குமால்' என்று கூறுங்கள். அதாவது 'முடியும் தருணமாயிற்று' என்று விளக்குங்கள். 'மயங்கினாள்' என்று முடிந்ததாகவே சொல்லிவிட்டால். அப்படியா? முடிந்து போய் விட்டாளா? இனிப் போய் நாம் என் செய்வது?' என்று சொல்லி ஒரு முழுக்கு போட்டுவிட்டு நிற்பன். அப்படியின்றி, 'அரைகுறைத் தலை குலையஆனைக்கு உதவ ஓடி வந்தாற்போலே கடுக ஓடி வரும்படியாகச் சிறிது பசை இருப்பதாகச் சொல்லுங்கள்' என்கின்றாளாயிற்று.

'பூவை' என்ற ஒரு பறவையிடம் பேசுகின்றாள் பராங்குச நாயகி. "ஏற்கெனவே உன்னை வேண்டிக்கொண்டிருந்தும், எனக்காக நீ தூது செல்லாது அசட்டையாய் இருந்து விட்டாய்— "நோயெனது நுவலென்ன நுவலாதே இருந் தொழிந்தாய்'' என்கின்றாள்.

சாயலொடு மணிமாமை
தளர்ந்தேன்நான் இனியுனது
வாயலகில் இன்னடிசில்
வைப்பாரை நாடாயே.[27]

*[மணிமாமை - அழகான நிறம்; இன் அடிசில் - மதுர மான இரை]*

என்று தனது தற்கால நிலையைக் கூறுகின்றாள். சாயல் என்பது சமுதாய சோபை; இது வடமொழியில் 'இலாவண்யம்' எனப்படும். மணிமாமை என்பது அழகு. 'இவ்விரண்டும் நீங்கப்பெற்றேன்' என்கின்றாள். 'இங்ஙனம் இவள் சொல்லக்

---

21. *ஷை—1.4:8.*

கேட்ட பூவை 'இதோ விரைந்து சென்று எம்பெருமானுக்கு அறிவிக்கின்றேன்' என்று புறப்படத் தொடங்கும்போது 'இனி உனது வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே' என்கின்றாள். 'நானோ முடியா நின்றேன்; இனி உனக்கு இரட்சகராவாரைத் தேடிக் கொள்' என்கின்றாள்.

இவ்விடத்தில் ஓர் ஐதிகம்; பெரிய திருமலை நம்பி என்னும் ஆசிரியர் 'வெண்ணெய்க் காடும் பிள்ளை' என்கின்ற கிருட்டிணத் திருமேனியை வழிபாடு செய்து வந்தார். அவர் திருவாராதனம் படைக்க ஆற்றலற்றவராய் அந்திம தசை அடைந்தார்; பெருமாள் சந்நிதி முன்பே தண்டன் சமர்ப்பித்துத் திருத்திரையை நீக்கச்செய்து "சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான்; இனி உனது, வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே" என்று கைகூப்பி விண்ணப்பம் செய்தாராம். "அடியேனோ ஆசாரியன் திருவடியடையா நின்றேன்; இனித் திருவாராதனம் கண்டருளப் பண்ணுவாரைத் தேடிக்கொள்ளாய்" என்பது குறிப்பு.

அடுத்து இப்பதிகத்தில் அன்றில்கள், சிறுகுருகு, வண்டு, கிளி, வாடைக் காற்று, நெஞ்சு ஆகியவற்றைத் தூதுவிடுப்பதாகவுள்ள பாசுரங்களின் நயங்கள் விரிவஞ்சி விடப்பெற்றன.

விபவத்தில் தூது : 'வைகல் பூங்கழிவாய்' (6.1) என்ற திருவாய்மொழி விபவாதாரத்தில் தூது விடுவதாக அறுதியிடப் பெற்றுள்ளது. மணவாள மாமுனிகள் தம் நூற்றந்தாயில் "வைகல் திருவண் வண்டூர் வைகும் இராமனுக்கு (61) என்று அருளிச்செய்ததும் இது கருதியே. திருவண் வண்டூரில் தூது விடுகிறபடியால் 'இஃது அர்ச்சாவதாரத்தில் தூது' என்று கொள்ளலாமோ என்னில்; இத் திருவாய்மொழியின் பாசுரம் ஒன்றில் "வாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த' ஏறுசேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே" (10) என்று அமைந்திருக்கும்படியை நோக்கியும், அர்ச்சாவதாரத் தூதுப்பதிகம் வேறொன்று இருப்பதை நோக்கியும் ஆசாரியர்கள் இதனை விபவாவதாரத்தின் தூது

என வகை செய்தது மிகவும் பொருத்தம் என்பது போதரும். இத் திருவாய்மொழியில் பராங்குசநாயகி குருகு, நாரை, புள்ளினம், அன்னம், குயில், கிளி, பூவை, வண்டினம் ஆகிய பறவைகளைத் தூது விடுவதைக் காண்கின்றோம்.

பிரிவாற்றாமையுடன் இருக்கும் ஆழ்வார் நாயகி, எம்பெருமானுக்குத் தன் ஆராக் காதலை தெரிவிக்குமாறு சில குருகுகளை நோக்கி இரக்கின்றாள்.

வைகல்பூங் கழிவாய் வந்து
மேயும் குருகினங்காள்
செய்கொள் செந்நெல் உயர்திரு
வண்வண் டூருறையும்
கைகொள் சக்கரத் தென்கனி
வாய்ப்பெரு மானைக் கண்டு
கைகள் கூப்பிச் சொல்லீர்
விளையாட்டியேன் காதன்மையே.[22]

*[வைகல் - எப்போதும்; கழிவாய் - கழியில்; கழி - கடலையடுத்த நீர்ப்பரப்பு; செய் கொள் - கழநி நிரம்பிய; வினையாட்டி - பாவ முடைய வன்; காதன்மை - ஆவல்]*

குருகினங்கள் மேய்வது நீர்க்கரையிலாகையால் ''பூங்கழி வாய் வந்து மேயும் குருகினங்காள்'' என்று விளிக்கின்றாள். 'பூங்கழி' என்பது எழிலார்ந்த நிலையைக் காட்டுகின்றது. வைகல் வந்துமேயும் - எப்போதும் நீங்கள் உணவை மாத்திரமா நோக்குவது? பிறர் காரியமும் சிறிது செய்ய வேண்டாவோ? என்று காட்டுகிறபடியும் இதில் தொனிப் பதைக் காணலாம். திருவண் வண்டூர்க்குத் தூது போக வேண்டும் என்கின்றாள். குருகினங்கட்கு அங்குக் கொள்ளை யாய் உணவு கிடைக்கும் என்பதை 'செய்கொள் செந் நெலுயர்' என்ற அடைமொழியால் பெறவைக்கின்றாள். அங்குள்ள எம்பெருமானை அறிந்துகொள்வதற்கு இரண்டு

22. திருவாய்—6.1:1.

அடையாளங்களைக் குறிப்பிடுகின்றாள். கீழ்த் திருவாய் மொழியில் (5.10) 'பிறந்தவாறும்' என்று கண்ணன் அவதாரத்தை அநுசந்தித்து ஈடுபட்டவளாகையால் கையும் திருவாழியுமாக அவதரித்தபடி திருவுள்ளத்தில் ஊறியிருக் கிறபடியால் 'கைகொள் சக்கரத்து' என்று முதலில் அவ்வடையாளத்தைக் கூறுகின்றாள். அடுத்து, 'வளர்ந்த வாறும்' என்று ஆயர்பாடியில் வளர்ந்தபடியை அநுசந்தித்தவ ளாகையால் அவ்வவ்விடம் புகுந்து அவ்வாயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்க் கொவ்வைக் 'கனிவாய் கொடுத்து'க் கூழைமை செய்தபடிகளெல்லாம் திருவுள்ளத்தில் நிழலிட்டுத் தோற்றியிருப்பதனால் 'கனிவா' என்ற அடையாளத்தையும் கூறுகின்றாள்.

அப்பெருமான் தன்னிடம் வந்தபோது பல்வேறு கள்ளக் குழைச்சல்கள் காட்டித் தன்னுடைய சௌசீல்யம் தோற்ற இருந்தான்; இப்போது பிரிந்து இருக்கும் நிலையில் பரத் துவம் பாராட்டி நிற்கின்றான். அதற்கேற்றவாறு 'கைகள் கூப்பிச் சொல்லீர்' என்று குருகினங்கள் விண்ணப்பிக்கும் முறையையும் சொல்லித் தருகின்றாள். 'இன்னாள் உம்மை ஆசைப்பட்டிருக்கின்றாள்' என்று தெரிவித்தால் போதும் என்கின்றாள். எல்லாக் காலங்களிலும் இன்பம் நுகரும் இடங்கட்குத் தாங்களே சென்று தங்களைப் பிரியில் தரியாத அன்புடைய சீடர்களுடனேகூடப் பகவானுடைய குணங் களை அநுபவம் பண்ணுகின்ற தூய்மையான இயல்புடைய ஆசாரியர் ஒருவரை விளித்துத் தனக்கு இறைவனோடு சம்பந்தம் வேண்டும் என்று அடிபணிந்து கேட்டல் இதற்கு உள்ளுறையாகும்[23].

பராங்குச நாயகியின் கண்வட்டத்தில் சில குயில்கள் தென்படுகின்றன. அவற்றை நோக்கிப் பேசுகின்றாள்:

---

23. ஆசா. ஹிரு. 154இல் இந்த உள்ளுறையின் விரிவு காண லாம்.

போற்றி யானிரந்தேன் புன்னை
மேலுறை பூங்குயில்காள்,
சேற்றில் வாழை துள்ளும்
திருவண்வண் டூருரையும்,
ஆற்ற லாழி யங்கை
யமரர்பெரு மானைக்கண்டு
மாற்றங் கொண்டருளீர் மையல்
தீர்வ தொருவண்ணமே.[24]

[பூகுயில் - அழகிய குயில்; ஆற்றல் - சக்தி மிகுந்த; ஆழி - சக்கரம்; மையல் - காதல்; மாற்றம் - வார்த்தை]

திருவண்வண்டூரில் சென்று எம்பெருமானைக் கண்டு தன் நிலைமையை அறிவித்து அத்தலையினின்றும் ஒரு வார்த்தை கொண்டு வந்து தனக்குரைத்து தன் மையலைத் தீர்க்க வேண்டுமென்று இரக்கின்றாள்.

புன்னை மேலுறை பூங்குயில்காள்: 'வளர்த்ததனால் பயன் பெற்றேன்' (திருநெடுந். 14) என்னுமாப்போலே ஆசிரியர் பக்கலிலேயே வளருமவர்கள் (உள்ளுறையில்) குயிலாகச் சொல்லப் பெறுவர். குயில்கட்கு வடமொழியில் 'பரப்ருதம்' என்று பெயர்; காக்கையின் கூட்டிலே கொண்டு விடப் பெற்று அவற்றால் உணவூட்டப் பெற்று வளருபவை யாதலால் இப் பெயர் பெற்றது. அதுபோல ஆசாரியனால் வளர்க்கப்பட்டு வளரும் குருகுலவாசிகளைச் சொன்ன தாகின்றது. 'புன்னை மேலுறை' என்றது புன்னையின் கீழ் உறை என்றவாறு. இதில் ஒரு சிறப்புப் பொருள் உண்டு. நம் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஒரு மிடறாக ஈடுபட்ட தலமாகிய திருவரங்கம் பெரிய கோயிலில் திருப் புன்னை மரம் நெடுநாளாக இருப்பது யாவரும் அறிந்ததே. பட்டரும் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் இப்புன்னை மரத்தை வருணிக்கின்றார். முன்புள்ள நம் முதலிகள் எல்லாரும் இப்

24. திருவாய்.—6.1:6.

புன்னையின் கீழிருந்து பகவத்விஷயார்த்தம்பற்றிய ஆய்வு நடத்தினர் என்று தெரிவதால் இங்கு ஆழ்வார்கள் அன்ன வர்களையே விளிக்கின்றனர் என்று கொள்ளத் தகும். பெரிய திருமொழியில் திருமங்கை யாழ்வாரும் "மாம்பொழில் தளிர் கோதிய மடக்குயில் வாயது துவர்ப்பு எய்தத் தீம்பலாங்கனி தேனது நுகர்" (பெரி. திரு.) என்று குயில்களின் ஓர் இயல்பை அருளிச் செய்திருப்பதை நாம் அறிவோம். முதலில் மாந்தளிர்களில் வாய் வைத்ததனால் வாய் துவர்த்துப் போக அந்தத் துவர்ப்பு நீங்குவதற்காகப் பலாப்பழத்தேனைப் பருகு வதாகச் சொல்லுகிற இதனால், முதலில் சாமானிய சாத்தி ரங்களில் வாய் வைத்துப் பிறகு சிறப்பான சாத்திரங்களில் இன்பமாகப் போது போக்கும்படியைச் சொல்லுவதாக அமைகின்றது.

மையல் தீர்வதொரு வண்ணம் மாற்றம் கொண்டருளீர்: எம்பெருமான் பக்கலிலிருந்து ஏதேனும் ஒரு வார்த்தை கொணர்ந்து அருளினாலல்லது தன்னுடைய காதல் தீரமாட் டாது என்கின்றாள் பராங்குச நாயகி. இங்குப் பொதுவில் 'மாற்றம்' என்றுள்ளதேயன்றி, இன்ன மாற்றம் என்று விளக்கப் பெறவில்லை; இதனால் இஃது அநுகூலமாகவோ, பிரதி கூலமாகவோ அமையலாம். அத்தலையில் ஏதேனும் ஒரு வார்த்தை கிடைத்தால் போதுமானது என்கின்றாள்.

பாவிநீயென்று ஒன்று சொல்லாய்
பாவியேன் காண வந்தே.[25]

என்றாற்போல சொன்னாலும் போதும் என்பது குறிப்பு. அடுத்து, வண்டுகளை நோக்கி,

வேறு கொண்டும்மை யானிரந்
தேன்வெறி வண்டினங்காள்

25. ஷெ—4.7:3.

......................
ஏறு சேவக னார்க்கென்னை
யும்உளள் என்மின்களே[26]

[வெறி - மணம்; சேவகன் - வீரன்; இங்கு இராமன்]

என்று பணிக்கின்றாள். "எமது தலைவர் பெண் பிறந்தார் காரியமெல்லாம் செய்து தலைக்கட்டிவிட்டோம் என்றிருப்பர்; அப்படியன்றிக்கே இரட்சகவர்க்கத்தில் நானும் ஒருத்தி இருக்கிறதாகச் சொல்லுங்கள்" என்கின்றாள்.

"நான் பல பறவைகளையும் நோக்கித் தூது போம்படி இரந்ததுண்டாகிலும் இப்போது வண்டுகளான உங்களை இரப்பது சாமன்யமானதன்று; தனிப்பட்ட காரணமாகவே உங்களை இரக்கின்றேன் என்பாள் 'வேறு கொண்டும்மை யான் இரந்தேன்', என்கின்றாள். வேறு கொண்டிரத்தலுக்கு மூன்று காரணங்களை அருளிச் செய்கின்றார். ஒன்று, அப்பறவைகளிலும் இவை பல கால்களை உடையவை. இரண்டு, இவை சபைக்கு அஞ்சாமல் வளையத்தே இருந்து வார்த்தை சொல்லவும் வல்லவை. மூன்று, இவை தேன் உண்ணும் வண்டுகள். "திக்குகள் தோறும் முதலிகளைப் போகவிடா நிற்கச் செய்தே திருவடிகையிலே திருவாழி மோதிரம் கொடுத்துவிட்டாப் போலே காணும்" என்பது ஈடு. சாரக்ராகிகளான ஆசாரியர்களையோ சீடர்களையோ வண்டென்கின்றது. தேனையே தாரகமாகக் கொண்டிருக்கும் வண்டு. "உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்து ஊறிய தேன்" (பெரி.திரு. 4.3:9) எனப்பட்ட பகவத் விஷயமாகிய தேனையே தாரகமாகக் கொண்டிருப்பார்கள் ஆசாரியர்கள். அடுத்து இப்பதிகத்தில் நாரை புள்ளினம், அன்னம், கிளி, பூவை ஆகியவற்றைத் தூது விடுப்பதாகவுள்ள பாசுரங்களின் நயங்கள் விரிவஞ்சி விடப்பெற்றன.

பரத்துவ, அந்தர்யாமித்துவத்தில் தூது : 'பொன்னுலகாளீரோ'(6.8) என்ற திருவாய்மொழி பரத்துவத்தையும்

---

26. டி.— 6.1:10.

அந்தர்யாமித்துவத்தையும் நோக்கித் தூது விடப் பெறுகின்ற தாக அறுதியிட்டுள்ளனர் ஆசாரியர்கள்.

மாமது வார்தண்துழாய்
முடிவானவர் கோனைக் கண்டு
யாமிது வோதக்கவா
றென்னவேண்டும் (4)

*[மா மதுவார் – பெருவெள்ளமான மது ஒழுகுகின்ற; வானவர்கோன் - நித்திய சூரிநாதன்]*

என்ற பாசுரத்தை உயிராகக் கொண்டு பரத்துவத்திலும்,

எங்குச்சென் றாகிலும்கண்
டிதுவோதக்க வாறென்மினே (5)

*[எங்கு ஆகிலும் - எவ்விடத்திலாவது; கண்டு - சேவித்து]*

என்று பாசுரத்தைக் கொண்டு அந்தர்யாமித்துவத்திலும் தூது விட்டபடியாம் என்று அறுதியிட்டுரைப்பர்.

எம்பெருமான் தனது விபூதிகளை யெல்லாம் ஞானியர் களுடையதாக இலச்சினைப் படுத்தி வைத்திருக்கையாலே அந்த ஞானியரின் ஆணையின்றி ஒருவர்க்கும் ஒன்றும் கொடான். இவ்வர்த்தகங்களை யெல்லாம் ஆழ்வார் இங்கு 'பொன்னுலகாளீரோ? புவனி முழுதாளீரோ?' என்ற கம்பீர மான பாசுரத்தினால் மெய்ப்பிக்கின்றார். புள்ளினங்களை நோக்கிப் பேசுகின்றாள் ஆழ்வார் நாயகி:

பொன்னுல காளீரோ?
புவனிமுழு தாளீரோ?
நன்னலப் புள்ளினங்காள்!
விளையாட்டியேன் நானிரந்தேன்
முன்னுல கங்களெல்லாம்
படைத்தமுகில் வண்ணன்கண்ணன்
என்னலம் கொண்ட பிரான்
றனக்கென்னிலை மையுரைத்தே. (1)

[பொன் உலகு - நித்திய விபூதி; புவனி - லீலாவிபூதி; நல் நலம் - சிறந்த குணம்; புள் இனம் - பறவைத் திரள்; வினையாட்டியேன் - பாவி யான நான்; முன் - முதலில்; முகில் வண்ணன் - காளமேக நிறத்தன்.]

இதில் பறவை இனங்களை நோக்கி, "நீங்கள் எம்பெருமான் பக்கலிற்சென்று எனது நிலைமையை உரைத்து வந்தால் அதற்குக் கைம்மாறாக நான் உங்களுக்கு உபய விபூதிகளை யும் பரிசரிப்பேன்" என்கின்றாள்.

'நன்னலப் புள்ளினங்கள்': நன்னலம் என்பதனால் தேக குணங்களும் ஆன்ம குணங்களும் சொல்ல விரும்பப்பட் டவை; ஆசாரியனிடத்தில் இரண்டும் உத்தேசியமாகும். வினையாட்டியேன் நான் இரந்தேன்: ஆழ்வார் நாயகி தூது செல்ல வேண்டுமென்று இரக்கின்றாள் அல்லள்; 'உபய விபூதியையும் உங்களுக்கு நான் கொடுக்க நீங்கள் அவற்றை ஆளவேண்டும்' என்கின்றாள். எம்பெருமானார் கோஷ்டியில் ஓர் ஆராய்ச்சி செய்தார்களாம்—இவள் உபய விபூதியையும் கொடுத்துவிட்டாளாகில் அவன் வந்தால் தானும் அவளும் எங்கிருப்பதென்று. அப்போது அனந்தாழ்வான் பணித்தா ராம்—இக் குருவி காட்டின இடத்தே என்று. இரசிகமணி களின் சங்கையும் சமாதானமும் அநுபவிக்கத் தக்கனவாயி ருக்கும். ஈண்டு இன்னொரு வினாவும் எழுகின்றது; பொன் னுலகாளீரோ? என்று சொன்னது பொருந்தும்; அது சொன்ன வாயாலே புவனி முழுதாளீரோ? என்று சொல்வது தகுமோ? உத்தேசியமான நித்திய விபூதியைக் கொடுத்தவள் தாழ்ந்ததாயுள்ள லீலாவிபூதியையும் கொடுக்கத் தேட வேண்டுமோ? என்று. இவை புரியும் உதவியை நினைத்து இன்னது கொடுப்பது என்றறியாமல் கலங்கிச் சொல்கின் றாள் ஆழ்வார் நாயகி என்று கொள்ளல் வேண்டும்.

எம்பிரான் திறத்து தன்னிலைமை உரைக்கவேண்டும் என்று சொல்லும் பராங்குச நாயகி எம்பெருமானின் நான்கு

சிறப்புகளை நவில்கின்றாள்: "(1) பிரானே, நீ உலகங்களை யெல்லாம் படைத்தவன்; 'செடி வைத்தவன் தண்ணீர் வார்ப்பது' என்பதுபோல் 'படைத்த நீ அளிக்கவும் வேண்டாவோ?' என்று சொல்லுங்கள்; (2) பிரானே, நீ முகில் வண்ணனல்லையோ? நின் வடிவழகைக் காட்டி ஈடுபடுத்திக் கொண்ட பின்பு மேன்மேலும் அவ் வடிவழகைக் காட்ட வேண்டாவோ? என்று சொல்லுங்கள்; (3) பிரானே, நீ கண்ணனாக அவதரித்த காலத்தில் ஒவ்வொருவருக்கும் கையாளாயிருந்தாய்; இப்போது ஒருத்திக்கு அருமைப்படுவது தகுதியோ? என்று சொல்லுங்கள்; (4) பிரானே, ஒருத்தியை இங்ஙனம் முழுவதையும் அபகரித்துக் கொலையடிப்பது பாங்கோ? என்று சொல்லுங்கள்" என்று புள்ளினங்கட்குப் பணிக்கின்றாள்.

அடுத்து, கிளிகளை நோக்கிப் பேசுகின்றான் பராங்குச நாயகி:

மையமர் வாள்நெடுங்கண்
 மங்கைமார்முன்பென் கையிருந்து
நெய்யமர் இன்னடிசில்
 நிச்சில்பாலொடு மேவீரோ?
கையமர் சக்கரத்தென்
 கனிவாய்ப்பெரு மானைக்கண்டு
மெய்யமர் காதல்சொல்லிக்
 கிளிகாள்! விரைந் தோடிவந்தே (2)

[மைஅமர் - மையணிந்து; மங்கைமார்-தோழிமார்; முன்பு - முன்னிலையில்; நெய் அமர் - நெய்யோடு பொருந்திய; நிச்சல் - தினந்தோறும்; மேவீர் - உண்ணவேண்டும்; கனி - கொவ்வைக் கனி; மெய் அமர் - உடம்போடு அணைய வேண்டும்படி]

இதில், "கிளிகாள்! பெருமானைக் கண்டு என் காதலைச் சொல்லி ஓடிவந்து என் கையிருந்து இன்னடிசிலைப் பாலோடு

நாள்தோறும் உண்ணவேண்டும்'' என்கின்றாள். 'மையமர் வாள் நெடுங்கண்:' பரிசனங்களோடு கூடிக் குலாவிச் சத்தான கருத்தைக் கொள்ள வேண்டும் என்று ஆசையாகையாலே அது தன்னைக் காட்டுகிறபடி. இதுவே மையணிந்த நெடுங் கண்களையுடைய மங்கைமார்கள் என்பதற்கு அழகிய உள்ளுறையாகும். ஈண்டு பக்தியை மை என்றும், கண் என் பதை ஞானம் என்றும் உள்ளுறையாகக் கொள்ளல்வேண்டும்.

'நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ': நெய், அடிசில், பால் என்ற மூன்றைச் சொன்னதால் தத்துவம், இதம், புருஷார்த்தம் என்ற மூன்றையும் குறிப் பிட்டவாறு. ''உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற் றிலையும் எல்லாம் கண்ணன்'' (திருவாய்—6.7:1) என்று இருக்கக்கூடியவளன்றோ இவள்? பகவானின் பெருமை, பாகவதரின் பெருமை, ஆசாரியரின் பெருமை என்ற மூன்றை யும் சொல்லிற்றாகவும் கொள்ளலாம். மெய்யமர் காதல்: "அவளுக்கு உன் பக்கலிலுள்ள சிநேகம் மெய்யான சிநேகம் என்று அவனுக்குச் சொல்லி'' என்பது ஆறாயிரப்படி அருளிச் செயல். "திருமேனியிலே அணைய வேண்டும்படி யான காதல் என்னுதல்; என்னுடம்போடே யணைய வேண்டும்படியான காதல் என்னவுமாம்'' என்பது ஈடு. கிளி காள்: கிளி வலையுள் அகப்படுமாப்போலே 'மாதரார் கயற் கண் என்னும் வலையுள் படாமல்', 'தாமரைத் தடங்கண் விழிகளின் அக வலைப்படுப்பான்' என்கிறபடி எம்பெருமா னுடைய திருக்கண்ணோக்க வலையில் அகப்பட்டும் கிளி வளர்த்தெடுப்பாருடைய கைவசமாயிருப்பது போலே போஷகர்களாகிய ஆசாரியர்கட்கு அதீனர்களாயிருந்து கொண்டும், 'சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை' என்றவாறு கிளி கற்பித்ததையே சொல்லுமாப்போலே, முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின் ஓர்ந்து தாம் அதனைப் பேசுபவர்களாயும் இருப்பவர்கள் கிளியாக பேசப்பெறுபவர்கள். இன்னாரு பாசுரத்தில் (5) 'யான் வளர்த்த கிளிகாள்!' என்கின்றாள். நெய் அமர் இன் அடிசில்

நிச்சல் பாலொடும் ஊட்டி வளர்த்ததைச் சொல்லிக் காட்டு கின்றாள். "வளர்த்ததனால் பயன் பெற்றேன்; வருக வென்று, மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே" (திருநெடுந்.—14) என்கின்றாள் எங்கள் தோழிமார்களில் ஒருத்தி; அப்படியே நானும் கைகூப்பி வணங்கும்படியாகக் காரியம் செய்யுங்கள் என்கின்றாள்.

பின்னர் சில பூவைகளைத் தூது விடுகின்றாள் பராங்குச நாயகி :

என்மின்னு நூல்மார்வன்
  என்கரும்பெரு மான்என்கண்ணன்
தன்மன்று நீள்கழல்மேல்
  தண்துழாய்நமக் கன்றிநல்கான்
கன்மின்கள் என்றுஉம்மையான்
  கற்பியாவைத்த மாற்றம்சொல்லி
சென்மின்கள் தீவினையேன்
  வளர்த்தசிறு பூவைகளே. (6)

[மின்னு நூல் - பூணு நூல்; கழல் - திருவடி; கன்மின் கள் - கற்றுக் கொள்ளுங்கள்]

இதில் "தன் ஒப்பனை யழகாலும், வடிவழகாலும் சௌலப்பியத்தாலும் என்னை ஈடுபடுத்திக்கொண்ட எம்பெருமானிடம் சென்று 'இதுவோ தக்கவாறு?' என்று சொல்லுங்கள்'' என்கின்றாள். "திருத்துழாயை அவர் பல அவயவங்களிலும் அணிந்துகொள்வர்; எதை எவருக்குக் கொடுத்தாலும் அடிமேல் புனைவது அடியார்களுக்கே யாகையால், திருவடிகளில் சாத்திய திருத்துழாயை நமக்கன்றி மற்றையோர்க்குத் தந்திடார்; ஆகையால் நீங்கள் சங்கை யின்றிச் சொல்லுங்கள்" என்று சொல்லியனுப்புகின்றாள். "நான் கற்பித்த சொற்களைச் சொல்லிக்கொண்டே செல்லுங் கள். துவயநுசந்தானம் செய்துகொண்டே செல்லுங்கள்" என்பது உள்ளுறை.

'தீவினையேன் வளர்த்த' : உள்ளத்தைத் தொடும்படியான (மர்ம ஸ்பர்சியான) பொருளை நம்பிள்ளை வெளியிட்டருள்வதைக் காணீர் : "என்னுடைய பாபம் இருந்தபடி பாருங்கோள்; அவனும் நானும் கூடவிருந்து உங்களைக் கொண்டாடுகையன்றிக்கே உங்களைக் கொண்டு காரியம் கொள்ளும்படியான பாபத்தைப் பண்ணினேன். வயிற்றில் பிறந்தாரை யிடுவித்துக் காதலனை (அபிமதனை) அழைத்துக் கொள்ளுதலைப் போன்ற புன்மை இல்லையே" என்பதாக.

இந்தத் திருவாய்மொழியில் பராங்குச நாயகி இவற்றைத் தவிர வண்டினம், தும்பி, பாவை, குருகு, பெருநாரை (புதா இனம்), அன்னம் இவற்றைத் தூதுவிடுவதையும் காண்கின்றோம்.

அர்ச்சையில் தூது : திருமூழிக்களத்து எம்பெருமானின் அழகையும் குணங்களையும் பற்றாசாகக் கொண்டு அவன் பால் தூதுவிடுவதைக் கூறுவது "எங்கானல் அகங்கழிவாய்" (9.7) என்ற திருவாய்மொழி. தன் சோலையில் இரைதேடித் திரியும் நாரையைத் தூதுபோகுமாறு வேண்டுகின்றாள் பராங்குச நாயகி.

எங்கானல் அகங்கழிவாய்
இரைதேர்ந்திங் கினிதமரும்
செங்கால மடநாராய்!
திருமூழிக் களத்துறையும்
கொங்குஆர்பூந் துழாய்முடிஎம்
குடக்கூத்தர்க் கென்தூதாய்
நும்கால்கள் என்தலைமேல்
கெழுமீரோ நுமரோடே. (1)

[கானல் - உத்தியாவனம்; அகம் கழி - உள்ளிருக்கும் கழி; கொங்கு - தேன்; கெழுமீரோ - சேர்க்கின்றீர்களா]

பறவைகளைத் தூதுவிடுகின்ற இத்திருப்பதிகத்தின் முதற் பாட்டிலேயே ஆசாரியர்களே பறவைகளாகக் கருதப்பெறுகின்றார்கள் என்பதைத் தெளிய [illegible]வைத்தருள்கின்றார்

ஆழ்வார். 'நும் கால்கள் என் தலைமேல் கெழுமீரோ நுமரோடே' என்னும் ஈற்றடி அமைந்த அழகு மிகவும் அற்புத மானது. திருவிருத்தத்தில் தூதுபோகைக்கு வண்டுகளை அழைக்கும்போது (54) எம்பெருமானுடைய திருவடியிணைக் கீழ் தம்மைச் சேர்ப்பிக்கவல்ல ஆற்றல் வாய்ந்த ஆசாரியர் களையே தூதர்களாகக் கொண்ட அருமைப்பாட்டை நன்கு காட்டியருளினார். அப்படிப்பட்ட ஆசாரியர்கள் தம் சுற்றத் துடன் தம் தலைமீது திருவடிகளை வைப்பதே பெறற்கரிய பேறு என்பதை இத்தூதுப் பதிகத்தில் உயிராக வைத்து அருளிச் செய்கின்றார். 'செங்கால மடநாராய்!' என்று கால்களைச் சிறப்பித்துச் சொல்லுவதால் 'ஆசாரியன் திருவடிகளே' தஞ்சம் என்ற தொனிப் பொருளைப் புலப் படுத்துவதாகக் கொள்ளலாம் 'அகங்கழிவாய் இரைதேர்ந்து': அந்தரங்கமாய் வந்து இருக்கிறபடியைச் சொன்னவாறு. "தூதனுப்ப உங்களைத் தேடிப் பிடிக்க வேண்டாதபடி அருகிலேயே வந்து இருக்கப்பெற்ற பேறு என்னே!" என்று உள்குழைந்து சொல்லுகின்றாள். உள்ளுறையில் ஆசாரியர் களைச் சொல்லுகையாலே எம்பெருமானார் திருமாளிகை யிலேயே வந்திருந்து காலட்சேபம் செய்தருளின பெரிய நம்பிகளைப் போன்ற ஆசாரியர்களை இங்குக் கருதுவதாகக் கொள்ளலாம்.

எம்பெருமான் தனது அடியார் குழாங்களுடன் திருமூழிக் களத்தில் கலந்து பரிமாறிக்கொண்டிருக்கும் நிலையில் ஒரு கால் தன்னை (பராங்குச நாயகியை) மறந்திருத்தல் கூடும். அஃதன்றித் தன்னைப் புறக்கணித்தற்குக் காரணம் இல்லை. அந் நிலையிலிருக்கும் அவரைப் பார்த்துச் செய்தி சொல்ல வேண்டும் என்று குருகினங்களை வேண்டுகின்றாள் ஆழ்வார் நாயகி

நுமரோடும் பிரியாதே
நீரும்நும் சேவலுமாய்
அமர்காதல் குருகினங்காள்!
அணிமூழிக் களத்துறையும்

எமராலும் பழிப்புண்டு
இங்கென்?தம்மால் இழிப்புண்டு
தமரோடுஅங்கு உறைவார்க்குத்
தக்கிலமே கேளீரே. *(2)*

[நுமர் - உம் உறவினர்; சேவல் - ஆண் குருகு; எமர் - எம் உறவினர்! தமர் - அவருடைய உறவினர்; உறைவார் - வசிப்பார்; தக்கிலம் - தகுதியுடையோம்]

என்ற பாசுரத்தின் மூலமாக.

எம்பெருமான் உகந்த அடியார் குழுக்களுடன் தானும் வந்து அடிமை செய்வதற்குத் தகுதியற்றவளா என்று கேட்கு மாறு நாரையின் ஒரு பிரிவாகிய குருகினங்களைப் பணிக் கின்றாள். "அவன் தன் அடியார்களுடன் கூடிக் குலவுவது போல் நீங்களும் உங்கள் உறவினர்களுடன் கூடி வாழ்கின்றீர் கள். அவன் இருக்கும் நிலை உங்கள் திறத்தில் பலித்துள்ளது. அங்ஙனமே என் திறத்திலும் பலிக்க வேண்டாவோ?" என் கின்றாள். எம்பெருமான் அடியார்களுடன் கூடி வாழ்வது போலவும், குருகு தன் இனத்துடன் கூடி வாழ்வது போலவும், தானும் தன் காதலனாகிய எம்பெருமானுடன் வாழும்படிச் செய்ய வேண்டாமா? என்பது குறிப்பு, "குறை வாளர் காரியம் குறைவற்றார்க்குத் தீர்க்க வேண்டாவோ? உண்டார்க்குப் பட்டினி கிடந்தார் பசி பரிகரிக்க (நீக்கற்குப்) பிராப்தமிறே" என்பது ஈடு. 'அணி மூழிக்களத்துறையும் தம்மால் இழிப்புண்டு எமராலும் பழிப்புண்டு இங்கு ஏன்?' என்று அந்வயித்துப் பொருள் கொள்ள வேண்டும். "திரு மூழிக்களத்து நாயனார் யாத்ருச்சிகமாக (யாரோ ஒருவர் இச்சையில் உண்டாவது) ஒருகால் கலந்து கைவிட்டார்; அதுவே காரணமாக உறவினர்களும் கைவிட்டனர். இப்படி அத்தலைக்குமாகாதே உறவினர்க்குமாகாதே கைவல்யம் போலே இருக்கின்ற இவ்விருப்புக்கு என்ன பயன்?" என் கின்றாள்.

அடுத்து கொக்கினங்களையும், குருகினங்களையும் வேண்டுகின்றாள் ஆழ்வார் நாயகி. எம்பெருமானிடம் இரண்டில் ஒன்று கேட்டு வந்து கூறுமாறு குறிப்பிடுகின்றாள்:

தக்கிலமே கேளீர்கள்;
　　தடம்புனல்வாய் இரைதேடும்
கொக்கினங்காள்! குருகினங்காள்!
　　குளிர்மூழிக் களத்துஉறையும்
செக்கமலத்து அலர்போலும்
　　கண்கைகால் செங்கனிவாய்
அக்கமலத்து இலைபோலும்
　　திருமேனி அடிகளுக்கே. *(3)*

[குருகு - கொக்கில் ஒரு பிரிவு (கொய்யடி நாரை); கமலம் - தாமரை; திருமேனியடிகள் - எம்பெருமான்]

என்பது பாசுரம்; இஃது இப்பதிகத்தின் உயிரானது. தம்மை அடைந்த அடியார்களுடன் உண்டான சேர்க்கையின் இனிமையால் பிரிந்தார்க்கு உயிர் தரிக்க வொண்ணாதபடியிருக்கும் தம்முடைய வடிவழகை மறந்து தன்னை நினையாதிருத்தல் கூடும் என்பது அவளது உட்கிடக்கை. இவ்வடிவழகைப் பிரிந்தார் எங்ஙனம் உயிர் தரிப்பர் என்பதனை அறிவித்துவிட்டால் உடனே புறப்பட்டு வந்து விடுவார் என்பதாகக் கருதுகின்றாள். எனவே, அவரது வடிவழகை அப்பறவைகட்குக் குறிப்பிடுகின்றாள். அவருடைய உறுப்புகளெல்லாம் செந்தாமரை போலிருப்பதால், அவருடைய திருமேனி தாமரையின் இலைபோல் உள்ளது என்கின்றாள். தாமான தன்மையில் எம்பெருமானுக்கும் தடாகத்திற்கும் ஒற்றுமை காட்டி அவனை 'வாசத்தடம்' (திருவாய் 8.5:1) என்று கூறினவரன்றோ? ஆழ்வார் எம்பெருமானை முதன் முதலாகக் காண்பவர்களோடு அவருடைய திருக்கண்கள் முதலுறவு பண்ணும்; அத்திருக்கண்ணோக்குக்குத் தோற்றவர்களை அவருடைய திருக்கைகள் சேர்த்து அணைத்துக்

கொள்ளும்: கைகள் அணைக்குங்கால் அந்த ஊற்றின் பத்திற்குத் தோற்றார் அவருடைய திருவடிகளில் விழுவர்; திருவடிகளில் விழுந்தாரை நல்ல சொற்களை நல்கி அவர் களைத் தரிப்பிக்கும் அவனுடைய புன்முறுவல். இங்ஙனம் உறுப்புகளின் வனப்பையும் வடிவழகையும் காட்டி அடிமை கொண்டார் அவர். அவ்வடிவழகிற்குத் தோற்றுப் பசலை யைத் தரித்திருப்பார் அவருக்குத் தகாதவரோ? என்று கேட்குமாறு பணிக்கின்றாள் ஆழ்வார் நாயகி.

'தக்கிலமே கேளீர்கள்' என்பதற்கு நம்பிள்ளை ஈடு: "நாம் ஒன்றிலே துணியும்படி கேட்டுப் போருங்கள். அவர் இன்னும் இது வேணுமென்றிருந்தாராகில் பிராணன்களை வருந்தி நோக்கிக்கொண்டு கிடக்கவும், வேண்டாமென் றிருந்தாராகில் நாமும் ஒன்றிலே துணியும்படி அறுதியாகக் கேட்டு விடுங்கோள்; அவர் இன்னும் 'இவள் வேண்டும்' என்று இருந்தாராகில் பின்னின சடையினாலும் தூக்கி லிட்டுக் கொள்ளத் துணிந்த பிராட்டியைப்போல் ஏதாவ தொரு வழியில் துணிவதாக உறுதி கொண்டு 'விருப்பம் உண்டா? இல்லையா?' என்ற இந்த இரண்டில் ஒன்று அறுதி யிட்டுக் கொண்டு வாருங்கள்" என்று வேண்டுகின்றாள்.

மேலும் தூது செய்ய ஆயத்தமாகவுள்ள குருகுக் கூட்டத்திலுள்ள ஓர் இளங்குருகினை விளித்து இவ்வாறு பேசுகின்றாள் :

பூந்துழாய் முடியார்க்குப்
    பொன்னாழிக் கையார்க்கு
ஏந்துநீர் இளங்குருகே!
    திருமூழிக் களத்தார்க்கு
ஏந்துபூண் முலைபயந்து
    என்இணைமலர்க்கண் நீர்ததும்பத்
தாம்தம்மைக் கொண்(டு)அகல்தல்
    தகவுஅன்று என்று உரையீரே (4)

[பொன் ஆழி - அழகிய திரு ஆழி; பூண் - ஆபரணம்; தகவு - தகுதி]

எம்பெருமானுடைய வடிவழகு நினைக்கநினைக்க ஆழ்வாரை உருக்கி விடுகின்றது என்பது இப்பாடலில் தெரிவிக்கப் பெறு கின்றது. "அன்னார் திரு முடியிலே திருத்துழாய் மாலை சாத்திக்கொண்டிருக்கும் அழகு ஒன்று மட்டிலும் போதுமே; அதற்குமேல் கையும் திருவாழியும் ஆன அழகு 'சுடராழியும் பல்லாண்டு' (திருப்பல்.1) என்று ஆலத்தி வழிக்கும் படியன் றோ உள்ளது? இவ்வழகுகளை நினைத்ததனாலன்றோ நான் பசலை நிறம் அடைந்தும் கண்ணீர் சோர்ந்தும் நிற்கின்றேன். இந்நிலையை அவருக்குப் புலப்படுத்துங்கள்" என்று தெரிவிக்கின்றாள் பராங்குச நாயகி; "எம்பெருமான் என்னை விட்டுப் பிரிந்து போகும்பொழுது தன்னுடைய திருமேனியை இங்கு வைத்து விட்டன்றோ போயிருக்க வேண்டும்? அந்தத் திருமேனியையும் கொண்டு அகன்றாரே. தமக்கு உரிமைப் பட்ட பொருளை விட்டுவிட்டுப் பிறர்க்கு உரிமைப்பட்ட பொருளைக் கொண்டு போவது நியாயமா? பக்தர்கட் கல்லவா அவர் உடம்பு இருப்பது?"[27] என்று உரைக்குமாறு பணிக்கின்றாள். உலகில் விநோதமாய்ப் பேசுகின்றவர்கள் "நடந்தால் உடலும் கூட வருகின்றது; இதுதான் எனக்குப் பெரிய நோய்" என்று சொல்வதைக் கேட்டிருக்கின்றோம். இஃது ஒரு நகைச்சுவையாகக் கொள்ளப்பெறுகின்றது; இந்த முறையில்தான் உள்ளது ஆழ்வாருடைய வாசகமும். 'தாம் போக வேண்டுமானால் தம்மை வைத்துவிட்டுப் போக வேண்டாவோ?' என்கின்ற வாசகத்தின் கருத்து இவ்வளவே —அவர் இறைப்பொழுதும் பிரிந்து போகவே தகாது என்ப தாம். "இங்ஙனம் செய்தது தகுதியன்று" என்று தெரிவிக்கு மாறும் வேண்டுகின்றாள். 'தமக்கு உரிமைப்பட்ட பொருள் என்பதை "தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே"[28] என்று மூதலித்தவரன்றோ[29] இவர்?

---

27. 'தமக்கு உரிமைப்பட்ட பொருள், என்றது, ஆழ்வா ராகிய நாயகியை. 'பிறர்க்கு உரிமைப்பட்ட பொருள்' என்றது இறைவனது திருமேனியை.

28. திருவாய்.—2.9:4. 29. மூதலித்தல் - மெய்ப்பித்தல்.

இந் நிலையில் வானத்தில் உலாப்போகும் சில மேகங்கள் ஆழ்வார் நாயகியின் கண்ணில் படுகின்றன; உடனே அவற்றைத் தூது போகுமாறு வேண்டுகின்றாள்.

திருமேனி அடிகளுக்குத்
தீவினையின் விடுதூதாய்
திருமூழிக் களம்என்னும்
செழுநகர்வாய் அளிமுகில்காள்!
திருமேனி அவட்குஅருளீர்
என்றக்கால் உம்மைத்தன்
திருமேனி ஒளியகற்றித்
தெளிவிசும்பு கடியுமே? (4)

[திருமேனி அடிகள் - எம்பெருமான்; கடியுமே - தண்டிப்பரோ]

சில மேகங்களை நோக்கி "என் வார்த்தையை அவனுக்குச் சொன்னால் உங்களுக்கு ஏதேனும் தண்டனை நேருமோ" என்கின்றாள். வடிவழகையே அடையாளமாகக் கொண்டு விளங்கும் எம்பெருமானுக்குத் 'திருமேனி அடிகள்' என்று ஒரு திருநாமம் சாத்துகின்றாள் பராங்குச நாயகி. வடிவழகினால் ஆன்மாக்களனைத்தையும் தோற்பித்து அடிமை கொள்பவருக்கு இது பொருத்தமான பெயரன்றோ? எதிரிகளையும் அவ்வடிவம் கவருமல்லவா? கண்ணன் தூது போகுங்கால், அவனுக்கு அவையில் எவரும் மரியாதை செலுத்தலாகாது என்று ஆணையிட்டிருந்தான் துரியோதனன். கண்ணபிரான் ஆங்கு எழுந்தருளுங்கால் அவையிலிருந்த அரசர்களனைவரும் கண்ணனின் சோதி வடிவு கண்டு பரவசராய் எழுந்து மரியாதை செலுத்தினர். துரியோதனனும் துடைநடுங்கி எழுந்துவிட்டு உடனே தன் உறுதி தடுமாறியதற்கு வருந்தி 'என்னே இத்திருமேனி அழகு!' என்று கண்ணனை உற்று நோக்கினானாம். இதனைப் பெரியாழ்வாரும்,

கழல்மன்னர் சூழக்
கதிர்போல் விளங்கி

எழலுற்று மீண்டே
இருந்துஉன்னை நோக்கும்
சுழலை பெரிதுடைத்
துச்சோதனை.[30]

என்று அருளிச் செய்வர். "அப்படிப்பட்ட திருமேனியை இழந்து உங்கள் காலில் விழும்படியான 'தீவினையேன்' ஆயினேனே" என்கின்றாள். எதிர்மறை இலக்கணையால் 'நல்வினையேன்' என்பது குறிப்பு. பரமன் அடியார்களின் திருவடிகளில் வீழ்தல் நல்வினைப் பயனன்றோ? "நான்விடு தூதாய் நீங்கள் திருமூழிக்களத்திற் கேகி அத்திருமேனியடி களை நோக்கி, 'திருப்புளியடியிலே கிடக்கின்ற ஒருத்தி உம்முடைய திருமேனியில் ஆசை வைத்து நைகின்றாள்; அவளுக்கு உமது திருமேனியைக் கொடுத்தருள்வீர்' என்று சொல்லுவீர்களாக" என்று குறையிரக்கின்றாள். இச் சொல்லுதவி புரியின் அவர்கள் புதிய பொலிவினைப் பெற்றுத் தெளிவிசும்புப் பேறும் பெறுவர் என்கின்றாள்.

மேலும், மேகங்களை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள்:

தெளிவிசும்பு கடித்தோடித்
தீவிளைத்து மின்இலகும்
ஒளிமுகில்காள்! திருமூழிக்
களத்துறையும் ஒண்சுடர்க்கு
தெளிவிசும்பு திருநாடாத்
தீவினையேன் மனத்துறையும்
துளிவார்கட் குழலார்க்கு
என்தூதுரைத்தல் செப்புமினே (5)

[தீ - மின்னல்; தெளிவிசும்பு - பரமபதம்; துளிவார் கள் குழல் - துளித்து ஒழுகும் தேனினையுடைய மயிர்முடி]

இங்கு மேகங்ளை ஆசாரியர்களாகக் கொள்ளல் வேண்டும். விண்ணில் விரைவாகச் சஞ்சரித்தலும் கொள்ளிவட்டம்போல்

30. பெரியாழ். திரு—1.8:5

மின்னல் விளங்கப் பெறுதலும் முகில்களின் இயல்பு. ஆசாரியர்கட்கும் லீலாவிபூதி, நித்திய விபூதி என்ற இடங்களில் சஞ்சரிக்கவல்லமையுண்டாதலால் 'தெளிவிசும்பு கடிதோடுகை' அவர்கட்கும் பொருந்தும். நன்றாக மழை பொழியும் சமயத்தில்தான் மேகத்தில் மின்னல் தோன்றும். அங்ஙனமே சிறப்புப் பொருள்களை அருளும் நிலையில் ஆசாரியர்களும் இருப்பர். மேலும் மேகத்தை 'ஒளிமுகில்' என்று விளித்து, எம்பெருமானையும் 'ஒண்சுடர்' என்று குறிப்பிட்டிருப்பதிலும் ஒரு தனிச் சிறப்பு உண்டு. ஆசாரியர்கள் எம்பெருமானினின்றும் வேறுபட்டவரல்லர் என்றும், இருவரும் எல்லாவற்றிலும் ஒப்புடையவர் என்றும் காட்டற்காகவே இங்ஙனம் கூறப்பெற்றதாக நாம் கொள்ளல் வேண்டும்.

பரமபதத்தில் காட்டும் பெரு விருப்பத்தை எம்பெருமான் தன் பக்கல் காட்டுவதாக ஆழ்வார் நாயகி கொள்வதால் 'தெளிவிசும்பு திரு நாடாத் தீவினையேன் மனத்துறையும்' என்று குறிப்பிடுகின்றாள். நெஞ்சில் எழுந்தருளியிருக்கும் அவனைக் கண்ணால் காணமுடியவில்லையே என்று நைகின்றாள். துன்புறுபவர்களைக் காப்பதற்கென்று திருமுடியில் தனி மாலை யிட்டிருக்கும் எம்பெருமானுக்குத் தன் விண்ணப்பத்தைத் தெரிவிக்குமாறு வேண்டுகின்றாள். ஈண்டு ஆறாயிரப்படியின் அருளிச்செயல் சுவை மிக்கது: "அவளுக்கு அருளீர் என்ன அமையுமோ? இன்னாருக்கு அருளீர் என்ன வேண்டாவோ என்னில்: யாவளொருத்தியுடைய நெஞ்சை உமக்குத் திருநாடாகக் கொண்டு நீர் உறைகின்றீரோ அவளுக்கு அருளீர் என்று சொல்லிக்கோள் என்கின்றாள்" என்பதை எண்ணி எண்ணி மகிழ்வோமாக.

சிறிது நேரத்தில் பராங்குச நாயகி சில அன்னங்களைக் காண நேரிடுகின்றது. அவற்றைப் பார்த்து வேண்டுகின்றாள். ஒருத்தியை இங்ஙனம் கலங்க வைப்பது அவருடைய பெருமைக்குத் தகுதியன்று என்பதை உணர்த்துமாறு செப்புகின்றாள்.

தகவுஅன்றுஎன்று உரையீர்கள்
　　தடம்புனல்வாய் இரைதேர்ந்து
மிகஇன்பம் படமேவும்
　　மெல்நடைய அன்னங்காள்!
மிகமேனி மெலிவுஎய்தி
　　மேகலையும் ஈடுஅழிந்துஎன்
அகமேனி ஒழியாமே
　　திருமூழிக் களத்தார்க்கே. *(10)*

*[தகவு - நியாயம்; தடம் - விசாலமான; அகமேனி - அந்தரங்கமான உடல்]*

*"தகவு அன்று என்று உரையீர்கள்"—என்பது இதயத்தில் தைக்கும்படியான சொல் என்பது ஆழ்வார் நாயகியின் திருவுள்ளம். எம்பெருமானது பிரிவினால் உடலும் மெலிந்து மேகலையும் தங்காதபடி சீர் குலைந்தது. இனி தன் 'அகமேனி' ஒழிவதற்குமுன் தன் நிலையைத் தெரிவிக்குமாறு அன்னங்களை வேண்டுகின்றாள். எல்லா ஆன்மாக்களும் எம் பெருமானுக்கு உடலாக இருப்பினும் (சரீர - சரீரி பாவனை) தன் ஆன்மாவை 'அகமேனி' என்று சிறப்பிக்கின்றார் ஆழ்வார். இவ்வுலகில் எம்பெருமானுக்குக் கிடைத்தற்கரிய 'மகாத்மா' அன்றோ ஆழ்வார்? ஈண்டு ஆசாரியர்களே அன்னமாக விளிக்கப்பெறுகின்றனர் என்பது அறியத் தக்கது. தங்கட்குப் பேரின்பம் பயக்கும் நுண்பொருள்களைத் தேடுவதில் நோக்குடையவர்களாதலாலும் நல்ல நடத்தையை யுடையவர்களாதலாலும் அவர்கள் 'மென்னடைய அன்னங்கள்' எனப்பட்டனர்.*

*இவற்றைத்தவிர ஆழ்வார் நாயகி வண்டினம், தும்பிகள் ஆகியவற்றையும் தூதுவிடுகின்றாள். விரிவஞ்சி இவைபற்றிய பாசுரங்களின் நலம் காட்டப்பெறவில்லை.*

*இங்ஙனம் பல இடங்களிலும் தூது விட்டாலும் அடையத் தக்க பொருள் ஒன்றேயாகும். ஐந்து நிலைகளிலும் உள்ள*

எம்பெருமான் ஒருவரே யாவர். இடத்தின் வேற்றுமையே யொழியப் பொருளில் வேற்றுமை இல்லை.[31] வைணவ சமயத் தத்துவப்படி ஐந்து நிலைகளிலும் உள்ள இறைவன் ஒருவனே யாவன்.

---

31. ஆசா. ஹிரு. 157 (விளக்கம் காண்க).

## 15. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் : பிரபந்தத் தொகையும் பாசுரத் தொகையும்*

'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' தென்னாட்டில் வைணவப் பெருமக்களால் பெரிதும் போற்றப்பெறும் சிறந்த பக்திநூல் என்பதும், அது மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் பன்னிருவரால் செய்யப்பெற்றப் பாசுரங்கள் அடங்கியது என்பதும் பக்திப் பாடல்கள் என்ற நூல் வகையில் இதனைப்போன்ற பெருமையுடைய நூல்கள் இலக்கிய உலகில் மிகமிகச் சிலவற்றைத்தான் கருதுதல் கூடும் என்பதும் யாவரும் அறிந்த செய்திகளாகும். இந்த நூலில் அடங்கியுள்ள பிரபந்தங்களின் தொகைபற்றியும், பாசுரங்களின் தொகைபற்றியும் இரு வேறு கருத்துகள் நிலவுகின்றன. அவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

கால வெள்ளத்தாலும் போற்றுவா ரின்மையாலும் எப்படியோ மறைந்துபோன இப்பாசுரங்களை நாதமுனிகள் என்ற வைணப் பெரியார் அரும்பாடு பட்டுத் திரட்டி, வேதவியாசர் வேதங்களை நான்காக வகுத்துத் தொகுத்தது போல் நாதமுனிகளும் இப்பாசுரங்களை நான்கு தொகுதிகளாக்கி ஒவ்வொரு தொகுதியிலும் கிட்டத்தட்ட ஆயிரம் பாசுரங்கள் அடங்கியிருக்குமாறு அடைவுபடுத்தினார். பாசுரங்களை அவர் 'இசைப்பா', 'இயற்பா' எனப் பிரித்து இசைப் பாக்களை மூன்று தொகுதிகளாகவும், இயற்பாக்

*திருச்சி டாக்டர் மதுரம் அவர்களின் மணிவிழா மலரில் (1969) வெளி வந்தது.

களை ஒரு தொகுதியாகவும் அடைவுபடுத்தி வெளியிட்டார். அங்ஙனம் அடைவுபடுத்திய தொகுதிகள் வருமாறு :

## (அ) இசைப்பாத் தொகுதிகள்

(1) முதலாயிரம் : இதில் அடங்கிய பிரபந்தங்களும் அவற்றிலடங்கிய பாசுரங்களின் தொகையும்.

| | பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|---|
| 1. | பெரியாழ்வார் திருமொழி | 473 |
| 2. | திருப்பாவை | 30 |
| 3. | நாச்சியார் திருமொழி | 143 |
| 4. | பெருமாள் திருமொழி | 105 |
| 5. | திருச்சந்த விருத்தம் | 120 |
| 6. | திருமாலை | 45 |
| 7. | திருப்பள்ளி எழுச்சி | 10 |
| 8. | அமலனாதிபிரான் | 10 |
| 9. | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| | ஆக, பிரபந்தங்கள் 9 க்குப் பாசுரங்கள் : | 947 |

இவற்றுள் 1 எண்ணுள்ளது பெரியாழ்வாராலும், 2, 3 எண்களுள்ளவை ஆண்டாளாலும், 4 எண்ணுள்ளது குலசேகர ஆழ்வாராலும், 5 எண்ணுள்ளது திருமழிசை பிரானாலும், 6, 7 எண்ணுள்ளவை தொண்டரடிப் பொடிகளாலும், 8 எண்ணுள்ளது திருப்பாணாழ்வாராலும், 9 எண்ணுள்ளது மதுரகவிகளாலும் அருளிச் செய்யப்பெற்றவையாகும்.

(2) பெரிய திருமொழி : இதிலடங்கிய பிரபந்தங்களும் பாசுரங்களின் தொகையும்.

| | பிரபந்தம் | பாசுரத்தொகை |
|---|---|---|
| 10. | பெரிய திருமொழி | 1084 |
| 11. | திருக்குறுந் தாண்டகம் | 20 |
| 12. | திருநெடுந் தாண்டகம் | 30 |
| | பாசுரங்கள் | 1134 |

இம் மூன்று பிரபந்தங்களும் திருமங்கையாழ்வாரால் அருளிச் செய்யப்பெற்றவையாகும்.

(3) திருவாய்மொழி : இதிலடங்கிய பிரபந்தமும் பாசுரத்தொகையும்.

| | பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|---|
| 13. | திருவாய்மொழி | 1102 |
| | ஆக, பிரபந்தம் 1க்குப் பாசுரங்கள் : | 1102 |

இப் பிரபந்தம் நம்மாழ்வாரால் அருளிச்செய்யப்பெற்றதாகும்.

## (ஆ) இயற்பாத் தொகுதி

(4) இயற்பா : இதிலடங்கிய பிரபந்தங்களும் பாசுரங்களின் தொகையும்.

| | பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|---|
| 14. | முதல் திருவந்தாதி | 100 |
| 15. | இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 16. | மூன்றாம் திருவந்தாதி | 100 |
| 17. | நான்முகன் திருவந்தாதி | 96 |
| 18. | திருவிருத்தம் | 100 |
| 19. | திருவாசிரியம் | 7 |

| | | |
|---|---|---|
| 20. | பெரிய திருவந்தாதி | 87 |
| 21. | திருவெழுக்கூற்றிருக்கை | 1 |
| 22. | சிறிய திருமடல் | 1 |
| 23. | பெரிய திருமடல் | 1 |
| | ஆக, பிரபந்தங்கள் 10க்குப் பாசுரங்கள் : | 593 |

இவற்றுள் 14, 15, 16 எண்ணுள்ளவை முறையே முதலாழ்வார்களான பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகியோராலும், 17 எண்ணுள்ள திருமழிசைப்பிரானாலும் 18, 19, 20, எண்ணுள்ளவை நம்மாழ்வாராலும் 21, 22, 23 எண்ணுள்ளவை திருமங்கையாழ்வாராலும் அருளிச்செய்யப் பெற்றவையாகும்.

**தொகுதி பற்றிய குறிப்புகள் :** நாதமுனிகள் தாம் ஏற்படுத்தின திருமொழி - திருவாய்மொழித் திருநாளில் முதலாயிரத்தையும், திருவாய்மொழியையும் தேவகானத்தில் ஏறிட்டுச் சேவித்தார் என்றும், இயற்பாவை இயலாகச் சேவித்தார் என்றும் 'கோயிலொழுகு' என்ற நூலினால் அறிகின்றோம். இச் செய்தி 'இசைப்பா', 'இயற்பா' என்னும் பாகுபாட்டைத் தெளிவாக உணர்த்துகின்றது. இசைப்பாத் தொகுதிகட்குப் பண், தாளங்கள் அமைந்திருத்தலும் கவனிக்கத் தக்கது. திருவாய்மொழிப் பாசுரங்கள் முழுமைக்கும் பண், தாளங்கள் உள்ளன. 'பண் ஆர் பாடல் இன்கவிகள்'[1] என்று சடகோபரே அருளிச்செய்திருப்பதும், இவரது சீடரான மதுரகவிகளும்,

> 'தேவுமற் றறியேன்; குருகூர் நம்பி
> பாவின் இன்னிசை பாடித் திரிவனே'[2]

என்று கூறியிருப்பதும் காண்க. பெரிய திருமொழிக்குப் பண், தாளங்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஏட்டில் காணப்படு

1. திருவாய்.—10.7:5.
2. கண்ணிநுண்—2.

கின்றன. 'இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை'[3] 'பண்ணார் பாடல்,[4] 'பண்ணுள் ஆர்தரப் பாடிய பாடல்'[5] 'பண்கள் அகம் பயின்ற சீர்ப்பாடல்'[6] முதலியனவாக வரும் பெரிய திருமொழிப் பகுதிகள் இத் தொகுதியும் இசைப்பா எனத் தெரிவிக்கின்றன. இங்ஙனமே முதலாயிரத்திற்கும் பண், தாள அமைப்புகள் முன்பு வழக்கத்தில் இருந்திருத்தல் வேண்டும். பெரியாழ்வார் பாசுரங்கள் பண்ணில் இயன்றவை என்பதை, 'பட்டநாதன் பண்ணியல் நானூற்றேழு பத்து மூன்றும்' என்ற வேதாந்த தேசிகரின் வாக்கினால் அறியலாம். திருமழிசைப்பிரான் அருளிய இரண்டு பிரபந்தங்களில் 'திருச்சந்த விருத்தத்தை' முதலாயிரத்திலும், 'நான்முகன் திருவந்தாதியை' இயற்பாவிலும் சேர்த்து முறைப்படுத்தியுள்ளமையை நோக்கினாலும் முதலாயிரத் தொகுதியிலுள்ள பிரபந்தங்கள் அனைத்தும் இசைப்பாக்களே எனத் துணிய இயலும். எனவே, இயற்பா ஒழிந்த ஏனைய மூன்று தொகுதிகளும் இசைப்பாத் தொகுதிகள் என்பது தெளிவாகும்.

மேலே கூறப்பெற்ற முதலாயிரம், பெரியதிருமொழி, திருவாய்மொழி, இயற்பா என்ற பாகுபாடும், பிரபந்தங்களின் அமைப்பு முறையும் நாதமுனிகள் காலத்தில் ஏற்பட்டவையாகும். பிரபந்தங்களின் எண்ணிக்கை இத்தனை என்பது நாதமுனிகள் காலத்தில் வழங்கிவந்ததாகத் தெரியவில்லை. திருவரங்கத்தமுதனார் இராமாநுசர் மீது அருளியுள்ள 'இராமாநுச நூற்றந்தாதி' இராமாநுசர் காலத்தில் இயற்பாத் தொகுதியுடன் 24வது பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டது என்பதைக் 'கோயிலொழுகு' என்ற நூலின் வாயிலாக அறிகின்றோம். அக்காலத்திலிருந்து முதலாயிரத்தில் 'கண்ணிநுண் சிறுத்தாம்பை'ப் போல

3. பெரி, திரு.—2. 8:109, 2:10.
4. ஷை—1.9:10.
5. ஷை—4.2:10.
6. ஷை—6.9:10.
7. தே. பி.—15.

இயற்பா இறுதியில் 'இராமானுச நூற்றந்தாதி' எங்கணும் பெருவழக்காக ஓதப்படுவதாயிற்று. இன்றும் அவ்வழக்கு நடைமுறையில் உள்ளது. கோயில்களில் இயற்பாவின் இறுதியில் இப்பிரபந்தத்தை அநுசந்தித்து வருகின்றனர். இதனால் இந் நூற்றந்தாதி இயற்பாப் பிரபந்தங்களுள் ஒன்றாக அமைந்துவிட்டமை புலனாகும்.

திவ்வியப் பிரபந்தம் நான்கு ஆயிரமும் சேர்த்து அச்சிட்ட பதிப்புகளில் சில குளறுபடிகள் நேர்ந்துள்ளன. இப்போது கிடைத்திருக்கும் பெரும்பான்மையான ஏட்டுப் படிகளில் திவ்வியப் பிரபந்தம் நான்கு ஆயிரங்களும் தனித்தனியாகவே அமைந்துள்ளன. பெரும்பாலான இயற்பா ஏடுகளில் 'இராமநுச நூற்றந்தாதி' இறுதியில் சேர்ந்தே அமைந் துள்ளது. கி. பி. 1856இல் அச்சிடப்பெற்ற திரு. கூர்மா சாரியார் பதிப்பில் இயற்பாவுடன் 'இராமாநுச நூற்றந்தாதி' சேர்த்துப் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. நாலாயிரம் முழுமையு முள்ள ஒரு சில ஏடுகளில் இயற்பாவை நான்காவது ஆயிர மாக அமைத்துள்ளனர். இதுவே நாதமுனிகள் அமைத்த முறையாகும். திருமொழி - திருவாய்மொழித் திருநாளில் (பகல்பத்து—இராப்பத்து) இறுதியாக இயற்பாவை ஓதும் வழக்கமும் இந்த அமைப்பு முறையை உறுதிப்படுத்துகின்றது. எனினும், பிற்பட்ட பதிப்பாசிரியர்கள் பலரும் 'இராமாநுச நூற்றந்தாதியை' இயற்பா இறுதியில் சேர்க்காமல் திருவாய் மொழிக்குப் பின்னர், திவ்வியப் பிரபந்தத்தின் இறுதியில் பதிப்பித்துள்ளனர். இவர்கள் 'இராமாநுச நூற்றந்தாதியை' மட்டிலும் அது இருந்த இடத்திலேயே விட்டுவிட்டு மற்ற இயற்பா பகுதி முழுவதையும் மூன்றாவது ஆயிரமாக மாற்றிவிட்டனர் போலும்! கி. பி. 1865இல் திவ்வியப் பிரபந்தத்தைப் பதிப்பித்த திரு. அப்பாவு முதலியார் இயற்பாவுடன் 'இராமாநுச நூற்றந்தாதி'யைச் சேர்க்கா மலும் திருவாய்மொழியில் இறுதியில் இணைக்காமலும் தனி நூலாகவே வெளியிட்டுள்ளார். நாலாயிரம் எண்ணிக் கையில் இவர் இப் பிரபந்தத்தை உட்படுத்த விரும்பவில்லை

போலும்! இவரைப் பின்பற்றியே பின் வந்த பதிப்பாசிரி யர்கள் பலரும் திவ்வியப் பிரபந்தத்தின் இறுதிச் சேர்க்கை யாக 'இராமாநுச நூற்றந்தாதியை' அமைத்தனரோ என்று கருதவேண்டியுள்ளது.

'இராமாநுச நூற்றந்தாதி' சேர்ந்த திவ்வியப் பிரபந்தம் இருபத்து நான்கில் இயற்பாப் பிரபந்தங்கள் பதினொன்று. இவற்றுள் கட்டளைக் கலித்துறைப் பாக்களால் அமைந் தனவும் இசைக்குச் சேரக்கூடியனவாகவும் உள்ள 'திரு விருத்தம்', 'இராமாநுச நூற்றந்தாதி' ஆகியவை இயற்பா என்றே பெயர் பெறுகின்றன. மற்றும் இயற்பாத் தொகுதியில் ஒரே பாடலாக உள்ள 'திருவெழுக்கூற்றிருக்கை' 'சிறிய திருமடல்', 'பெரிய திருமடல்' ஆகிய மூன்றைத் தவிர, ஏனைய எட்டுப் பிரபந்தங்களும் அந்தாதிப் பிரபந்தங் களாகும். 'இராமாநுச நூற்றந்தாதி' மட்டிலும் கட்டளைக் கலித்துறைப் பாக்களால் அமைந்தது. 'திருவிருத்தமும்' கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் அமைந்த அந்தாதிப் பிரபந்தமாக இருப்பினும், அதனை அந்தாதி எனப் பெயரிட்டு வழங்குதல் இல்லை. அந்தாதிப் பிரபந்தங்களைத் தொடர் நிலைச் செய்யுள் வகையில் சொற்றொடர்நிலைச் செய்யுள் என்று வழங்குவர். இவை தொல்காப்பியர் கூறும் 'விருந்து' என்ற வகையில் அடங்கும்.[8] மேற் கூறப்பெற்ற எட்டு அந்தாதிப் பிரபந்தங்களில் முதலாழ்வார் மூவர் பாடிய அந்தாதிகள், நான்முகன் திருவந்தாதி, பெரிய திருவந்தாதி ஆகிய ஐந்தும் வெண்பா அந்தாதிகள். 'இராமாநுச நூற்றந்தாதி' மட்டிலும் கலித்துறை அந்தாதி. 'திருவாசிரியம்' 'திருவெழுக் கூற்றிருக்கை' ஆகிய இரண்டும் ஆசிரியப் பாவால் அமைந்த பிரபந்தங்களாகும். திருவாசிரியம் அந்தாதிப் பிரபந்தமாகும். திருவாசிரியம் அந்தாதிப் பிரபந்த மாக அமைந்தும், இயற்பாவில் உள்ள ஏனைய அந்தாதிப் பிரபந்தங்களைப்போல இறுதியும் முதலும்

---

8. தொல், பொருள். செய்யு. நூற். 551 (பேராசிரியர் உரை).

மண்டலித்து அமையவில்லை. 'திருவிருத்தம்', 'சிறிய திருமடல்' 'பெரிய திருமடல்' ஆகிய மூன்றும் அகத்துறைப் பிரபந்தங்களாகும். இம்மூன்றினுள் மடல்கள் இரண்டும் கலிவெண்பாவாலான பிரபந்தங்களாகும்.

திவ்வியப் பிரபந்தத்திலுள்ள பிரபந்தங்களின் எண்ணிக்கையும் பாசுரங்களின் எண்ணிக்கையும் வேதாந்த தேசிகர் காலத்தில் வரையறுத்துக் கூறப்பெற்றவையாகும். தேசிகர் திருப்பல்லாண்டைத் தனிப் பிரபந்தமாகக் கொள்ளவில்லை. அது பெரியாழ்வாரின் திருமொழியுடன் சேர்ந்தது என்ற சம்பிரதாயத்தை அப்படியே கொண்டவர்.

> "ஏரணிபல் லாண்டுமுதற் பாட்டு நானூற்
> றெழுபத்தொண் றிரண்டு மெனக் குதவு நீயே"[9]

என்று சேர்த்த ஒரே தொகையாகக் கூறியிருப்பதும் இதனை அறியலாம். அவர் தமது பிரபந்த சாரத்தில் மேற்கொண்டுள்ள முறையைக் கவனித்தால் இது தெளிவாகும். இந்த முறை பிரபந்தசார முதற் பாட்டில்,

> 'வாழ்வான திருமொழிகள் அவற்றுள் பாட்டின்
> வகையான தொகை இலக்கம் மற்றும் எல்லாம்'[10]

என்று பேசப்பெறுகின்றது. இதில் பாட்டின் வகையான தொகை என்பது 'பாட்டின் வகுப்பின்படி எண்கள்' என்பதையும், 'இலக்கம்' 'என்பது' அவரவர் அருளிச் செய்த பாசுரத்தின் கூட்டிய எண் என்பதையும் குறிக்கின்றன என்பது தெளிவு. இந்த முறையை மேற்கொண்டு தமது பிரபந்த சாரம் இரண்டாவது முதல் பதினான்காவது வரையிலுள்ள பதின்மூன்று பாடல்களில் ஒவ்வொரு ஆழ்வாருடைய திருமொழிகளையும் அல்லது திருமொழியையும், தனித்தனியே அதனதன் தொகை இலக்கத்தையும் கூறுகின்றார். அவற்றில்

---

9. தே. பி. —375.
10. ஷெ —367.

திருமழிசைப்பிரான், நம்மாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடிகள், திருமங்கை மன்னன் இந்த ஐவர்களைப் பற்றின பாடல்களில் அவரவர் அருளிச்செய்த பிரபந்தங்களைத் தனித்தனியே எடுத்து, அவற்றில் தனித்தனித் தொகை இலக்கத்தைக் கூறியுள்ளார். முதலாழ்வார்கள் மூவர், மதுரகவிகள், குலசேகரப் பெருமாள், திருப்பாணாழ்வார், திருவரங்கமுதனார் (இராமாநுச நூற்றந்தாதி அருளிச் செய்தவர்) என்ற இவ்வெழுவர்பற்றிய பாடல்களில் அவர்கள் ஒவ்வொரு பிரபந்தத்தையே செய்தவர்களாதலின் வகை எதுவுமின்றி அதனதன் தொகை இலக்கமே கூறப்பெற்றுள்ளது. ஆயின், பெரியாழ்வாரைப்பற்றின பாடலில் வகை எதுவுமின்றித் தொகை மட்டிலும் நானூற்றெழுபத்தொன்றிரண்டு (473) என்று கூறியுள்ளதை நோக்கும்போது தேசிகரின் திருவுள்ளத்தில் 'திருப்பல்லாண்டு' தனிப்பிரபந்தம் அன்று என்றிருந்தமை தெளிவாக அறியக்கிடக்கின்றது. இவர் 'இராமாநுச நூற்றந்தாதி' யைச் சேர்த்து திவ்வியப் பிரபந்தம் நாலாயிரம் பாசுரங்களையுடையது' என்ற கொள்கையினர். தேசிகருக்குக் காலத்தால் சற்றுப் பிற்பட்டவரான அப்பிள்ளை ஆசிரியர் திருப்பல்லாண்டைத் தனிப் பிரபந்தமாகக் கொண்டவர். இதனை,

> நல்லதிருப் பல்லாண்டு நான்மூன்றோன் வாழியே
> நானூற்றது பத்தொன்றும் நமக் குரைத்தான் வாழியே[11]

என்று பெரியாவாழ்ரைப் பற்றிய தமது 'வாழித் திருநாமத்தில்' கூறியிருப்பதனால் அறியலாகும்.

மேற்குறிப்பிட்ட இருவர் கருத்துகளையும் ஒரு சிறிது ஆராய்வோம். திவ்வியப் பிரபந்தத்தை நாலாயிரமாகப் பிரித்து ஒவ்வொரு தொகுதியிலும் இந்த இந்தப் பிரபந்தம் இந்த இந்த வரிசையில் இருக்கவேண்டுமென்ற முறையை வரையறை செய்தவர் நாதமுனிகள். அவர் திருப்பல்லாண்டைத் தனிப் பிரபந்தமாகக் கருதியிருந்தால் 'வண்ண

11. வாழித் திருநாமம்—8.

மாடங்கள்' முதல் 'மெச்சூது' வரையில் பத்துத் திருமொழி களைச் சேர்த்து ஒரு தொகுதியாக்கி 'பெரியாழ்வார் திருமொழி—முதற்பத்து' என்று வகுத்திருக்க வேண்டுமே யன்றி ஒன்பது திருமொழிகளை வைத்துப் 'பத்து' என்று பெயரிடக் காரணம் எதுவுமில்லை. அவர் அங்ஙனம் செய்யாமல் 'வட்டு நடுவே' என்ற திருமொழியுடன் ஒரு பத்தாக்கி யுள்ளார். திவ்வியப் பிரபந்தத்தில் 'பத்து' என்ற பிரிவு ருக் வேதத்தில் மண்டலங்களின் உட்பிரிவுகள் வகுக்கப் பெற்றுள்ள மரபினை ஒட்டியது. அங்கு அந்த உட்பிரிவுகள் 'ஸூக்தம்' எனப்படுகின்றன. 'ஸூக்தம்' என்பதே தமிழில் 'திருமொழி' என்று வழங்கப்பெறுகின்றது. பல திருமொழி களுள்ள பிரபந்தங்களே பெரியாழ்வார் திருமொழி, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, பெரிய திருமொழி என்றிப்படித் திருமொழி என்ற பெயர் பெற்றன என்பதும், நம்மாழ்வாராயிரமும் நம்மாழ்வார் திருமொழி என்றே கூறப்பெறலாமாயினும் அதன் சிறப்புத் தோன்ற திருவாய்மொழி என வழங்கப்பெற்றது என்பதும் ஈண்டு அறிதற்பாலவை. எனவே, திருமொழி, திருவாய்மொழி என்ற பெயர்கட்குக் காரணமான பெயரையுடைய திருமொழி களின் தொகையைக் கொண்டு 'முதல் பத்து', 'இரண்டாம் பத்து'—என்றிப்படி வரையறை ஏற்பட்டது என்பது தெளிவு. இம்முறையால் பெரியாழ்வார் திருமொழி முதல் பத்துக்கு இதில் இரண்டாம் பத்து முதலானவற்றைப் போலும், 'பெரிய திருமொழி', 'திருவாய்மொழி' இவற்றின் பத்து களைப்போலும் வழக்கமாகப் பத்துத் திருமொழிகள் இருந்தே தீரவேண்டும். ஆயின், 'பெரியாழ்வார் திருமொழி' ஐந்தாம் பத்தில் நான்கு திருமொழிகள்தாமே உள்ளன. அதனைப் போலவே பத்துக்குக் குறைந்த ஒன்பது திருமொழி களே உள்ள முதல் பத்தினை ஏன் 'பத்து' என்று வழங்குதல் கூடாது? என்று வினவலாம். பத்துப் பத்துத் திருமொழி களாகப் பிரித்துக் கொண்டே போய் எஞ்சியுள்ள நான்கு திருமொழிகளை ஒரு பத்தாகக்கொள்வதற்கும் திவ்வியப் பிரபந்தத்தின் தொடக்கத்திலேயே அங்ஙனம் கொள்வதற்கும்

வேறுபாடு உண்டு. தான் வரையறுத்த கொள்கையை எடுத்த எடுப்பிலேயே எவரும் கைவிடார். தவிர, முழுப் பத்து ஒன்றுக்குமேல் இருக்குமிடங்களில்தான் ஓதுதல் முதலான வசதிகளைக் கருதித் திருமொழிகளைப் பத்துப் பத்தாகப் பிரித்தனர் என்பதும், பதினான்கு திருமொழிகளே உள்ள நாச்சியார் திருமொழியைப் பத்துப் பத்தாகப் பிரிக்காததற்குக் காரணம் முழுப் பத்து ஒன்றுக்குக் குறைந்திருப்பதேயாகும் என்பதும் ஈண்டு அறிதற்பாலவை. எனவே, திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தம் அன்று என்று கொள்வதற்கு ஏதுவொன்றும் இல்லை. பெரியவாச்சான் பிள்ளை போன்ற வியாக்கியாதாக்கள் முதலானவர்களும் திருப்பல்லாண்டுடன் சேர்ந்து பெரியாழ்வார் திருமொழி ஒரே பிரபந்தம் என்ற திருவுள்ளம் கொண்டவர்கள். பெரியாழ்வார் திருமொழியின் இறுதிப் பாசுரமான 'வேயர் தங்கள் குலத்து' என்கிறதில் 'கோயில் கொண்ட கோவலனை' என்ற சொற்றொடருக்கு வியாக்கியானம் செய்யுமிடத்தில்,

> திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும் இவர் மனத்திலிருக்கின்ற கிருஷ்ணன் தான் பிறந்தபடியையும் தளர்ந்தபடியையும் இவரைக் கொண்டு கேட்டான்.

என்று பெரியவாச்சான் பிள்ளை கூறியிருப்பதனாலும், இதற்கு முன்னர் "திருப்பல்லாண்டி னர்த்தத்தை நிகமிக்கிறார்" என்று பன்முறை கூறியிருப்பதனாலும், ஒரு பிரபந்தமானால்தான் 'தொடக்கம்' என்பதும் 'நிகமனம்' என்பதும் சேருமாதலாலும் இவர் கருத்து, 'திருப்பல்லாண்டு' தனிப் பிரபந்தமன்று என்பது உறுதிப்படுகின்றது.

மேலும், 'உபதேச ரத்தின மாலை'யில் 'பல்லாண்டு பாடிய நம் பட்டர்பிரான்' *(16)* 'ஆதி திருப்பல்லாண்டானதுவும்' *(19)* 'உண்டோ திருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர் கலை' *(20)* என்ற சொற்றொடர்களில் வரும் 'திருப்பல்லாண்டு' என்பது அது தனிப் பிரபந்தம் என்பதை உறுதிப்படுத்துகின்றது என்றும், திருக்கோயில்களில் ஏதாவது ஒரு பிரபந்தம் ஓத நேரிடும்பொழுதெல்லாம் 'திருப்பல்லாண்டு' முதலில்

ஓதப்பெற்றும் அதன்பின்னரே அக்குறிப்பிட்ட பிரபந்தம் ஓதப்படுகின்றது என்ற வழக்கம் இருப்பதால் 'திருப் பல்லாண்டு' தனிப் பிரபந்தம் என்பது மேலும் வலியுறுத்து கின்றது என்றும் கூறுகின்றனர். மேற்குறிப்பிட்ட உபதேச ரத்தின மாலைப் பாசுரங்களில் இரண்டாவது தொடரிலுள்ள 'திருப்பல்லாண்டு' வேதத்திற்கு 'ஓம்' என்ற பிரணவம்போல் திவ்வியப் பிரபந்தத்தின் பொருளுக்கெல்லாம் சுருக்கமாயும் மங்களரூபமாயும் இருப்பதாகக் கூறுகின்றதே யன்றி, தெளிவாக அது ஒரு பிரபந்தம் எனக் கூறாமை யாலும் அங்ஙனமே கோயில்களில் இருந்து வரும் வழக்கும் அது தனிப் பிரபந்தம் என்பதற்குத் தக்க ஆதாரம் அல்லாமை யாலும் இரண்டையும் தக்க சான்றுகளாகக் கொள்வதற் கில்லை. மேலும், 'உபதேச ரத்தினமாலை' ஆழ்வார்கள் அவதரித்த நாள்கள், மாதங்கள், தலங்கள் முதலிய செய்தி களைக் கூறுகின்றதேயன்றி அவர்கள் அருளியுள்ள பிரபந்தங் களைப்பற்றி யாங்கணும் கூறவில்லை. ஆயினும் 'திருப் பல்லாண்டு' என்ற திருமொழி அகண்ட திவ்யப் பிரபந்தத்தின் தொடக்கத்திலிருப்பதாலும் அது வேதத்தின் பிரணவம் போல் நிகழ்வதாலும் அதற்குத் தனிப்பெருமை உள்ளது. திருக்கோவில்களில் முதலில் ஓதப்பெறுவதற்கு அதனையே காரணமாகவும் கொள்ளலாம். 'திரு' என்ற அடைமொழி யால் அது சிறப்பிக்கப்பெறுவதற்கும் அதுவே காரணமாகும்.

இனி, திவ்வியப் பிரபந்தத்திலுள்ள பாசுரங்களின் எண்ணிக்கையைப்பற்றிய இருவேறு கருத்துகளையும் ஆராய் வோம். மேலே குறிப்பிட்டவாறு இருபத்து மூன்று பிரபந்தங் களடங்கிய திவ்யப்பிரபந்தத்தின் பாசுரத்தொகை $947+1134+1102+593=3776$ ஆகின்றது. அதாவது, இரு மடல் களையும் நீக்கினால் இத்தொகை 3774 என்றாகின்றது. இத் தொகை நாலாயிரத்திற்கு (4000—3774) 226 குறை கின்றது. வேதாந்த தேசிகர் தாம் இயற்றியுள்ள பிரபந்த சாரத்தில் இரு திருமடல்களையும் 118 பாசுரங்களாகக் கொள்வர்.

"சிறியமடற் பாட்டு முப்பத்தெட்டு இரண்டும்
சீர்பெரிய மடல் தனிப்பாட்டு எழுபத் தெட்டும்"[12]

என்பது அவரது திருவாக்கு. பிறிதோரிடத்தில் அவர்,

"பரகா லன்சொல்
அத்தனுயர் வேங்கடமாற்கு ஆயிரத்தோடு
ஆனஇரு நூற்றாரைம் பத்து மூன்று"[13]

என்று திருமங்கை மன்னனின் பாசுரங்களை 1253 என்று பேசுவர். மடல் ஒழிந்த நான்கு பிரபந்தங்களிலும் அடங்கிய பாசுரங்கள் 1135 ஆகின்றன. எனவே, இரு மடல்களும் (1253—1135) 118 பாடல்கள் ஆகும் என்பது இதனாலும் தெளிவாகின்றது. தேசிகர் "சிறிய திருமடல் முப்பத்தெட்டு இரண்டும்", "பெரிய மடற்பாட்டு எழுபத்தெட்டு" என்று குறித்த எண்ணிக்கையைப் பெரும் பாலான பதிப்பாசிரியர்கள் மேற்கொண்டுள்ளனர். பாடலின் பொருட்போக்கைக் கொண்டு அங்கங்கே பாசுரங்களாக நிறுத்தியுள்ளனர்.[14] இப் பதிப்புகளில் பெரிய திருமடலை 78 பாசுரமாகப் பிரித்துக் காட்டியுள்ளனர். சிறிய திரு மடலை 40 பாசுரமாகக் கொள்வதால் நூலை 38 பாசுரங் களாகவும் பிற்சேர்க்கைப் பாடலை 2 பாசுரங்களாகவும்

---

12. தே. பி.—379.
13. ஷ—382.
14. ஒரே பாடலாக அமைந்த நீண்ட பாசுரங்களைப் பொருள் முடிவு கருதி தனித்தனிப் பகுதியாகப் பிரித்துக் கொள்ளுதல் பண்டிருந்து வரும் ஒரு மரபேயாகும். நச்சி னார்க்கினியர், அடியார்க்கு நல்லார் இம் முறையை மேற் கொண்டுள்ளனர். இம் மரபை யொட்டியே இருமடல் பிரபந்தங்களையும் பல பாசுரங்களாக (சரியாகச் சொன்னால் பல பகுதிகளாகக்) கணக்கிடும் மரபும் ஏற்பட்டிருத்தல் வேண்டும். பாசுரத்தைச் சேவிக்கும் போது இப்பகுதிகளின் இறுதியில் சற்று நிறுத்தப் பெறுகின்றது.

இவர்கள் கொள்கின்றனர். பிற்சேர்க்கைப் பாடலைச் சேர்த்துக் கொள்வது சிறிதும் பொருத்தமன்று. சில ஏட்டுப் பிரதிகளில் சிறிய திருமடலை 38 பாசுரங்களாகவும் பெரிய திருமடலை 80 பாசுரங்களாகவும் பிரித்துள்ளனர். இம் முறையால் இருமடல் பிரபந்தங்களும் 118 செய்யுட்கள் என்ற எண்ணிக்கை நிரம்பிவிடுகின்றது. தேசிகப் பிரபந்தத்தில் 'சிறிய திருமடல் முப்பத்தெட்டு இரண்டும் பெரிய திருமடல் எழுபத்தெட்டு' என்றிருப்பதை 'சிறிய திருமடல் முப்பத்தெட்டு இரண்டும் எழுபத்தெட்டும் எனக் கூட்டிப் பெரிய திருமடலை எண்பது பாசுரமாகக் கொண்டனரோ என நினைக்க இடமுண்டு. எப்படியிருப்பினும் இதுவே சரியான முறை. இங்ஙனம் பெற்ற 118 பாடல்களும் இராமாநுச நூற்றந்தாதிப் பாடல்கள் 108ம் சேர்ந்து 226 என்ற தொகையாகி திவ்வியப் பிரபந்தம் 4000 பாடல்கள் என்ற கணக்கு நிறைவு பெறுகின்றது. அப்பிள்ளையாசிரியர் மடலில் அமைந்த ஒரு கண்ணியை (இரண்டு வரிகளை) ஒரு பாசுரமாகக்கொண்டு சிறிய திருமடலை 77½ பாசுரங்கள் என்றும், பெரிய திருமடல் 148½ பாசுரங்கள் என்றும் கணக்கிட்டு இரு மடல்களிலும் 226 பாசுரங்கள் உள்ளனவாகக் கொள்வர். இதனைத் தாம் இயற்றிய வாழித் திருநாமத்தில்,

> 'இலங்குஎழு கூற்றிருக்கை இருமடல் ஈந்தோன் வாழியே
> இம்மூன்றில் இருநூற்றுஇருபத்து ஏழ்ஈந்தான்
> வாழியே''[15]

எனவரும் திருமங்கை மன்னன் வாழித்திருநாமப் பகுதியால் அறியலாம். இவர் கொள்கைப்படி 'இராமநுச நூற்றந்தாதி' இன்றியே 4000 என்ற எண்ணிக்கை நிறைவு பெறுகின்றது. இருவர் கொள்கை எப்படியிருப்பினும் இரு கொள்கையைச் சேர்ந்தவர்களும் இராமாநுச நூற்றந்தாதியை மறக்காமல் ஓதி வருவது பாராட்டத்தக்கது. அங்ஙனம் ஓதாமல் கை

15. வாழித் திருநாமம்—11.

விட்டால் "செய்ந்நன்றி கொன்ற" பாவத்திற்கு ஆளாவர். வைணவம் நிலைத்திருக்கும் காலம் வரையிலும் இராமாநு சருடைய பெயரும் நிலைத்திருக்குமாறு காத்தல் வேண்டும்.

யாப்பிலக்கணப்படி திருமடலை ஒரே பாட்டாகக் கொள்வதே பொருத்தம். காரணம், ஒவ்வொன்றும் ஒவ் வொரு கலிவெண்பாவாலான பிரபந்தம். ஆகவே, திவ்வியப் பிரபந்தத்தின் பாடல்கள் 3776 என்றும், இராமாநுச நூற்றந்தாதிப் பாடல்கள் சேர்ந்து அத்தொகை 3884 ஆகின்றது என்றும் அறியக் கிடக்கின்றது. இத்தொகை மிகுதிபற்றி நாலாயிரம் என்றே வழங்கப்பெறுகின்றது என்று கொள்ளலே சால்புடைத்து. நாலாயிரத்திற்குச் சில பாசுரங்கள் குறையினும் கூடினும் நாலாயிரம் என்று கொள் ளலே ஏற்புடைத்து. நூறு, ஐம்பது குறைந்த கால்களை யுடைய மண்டபத்தை 'ஆயிரங்கால் மண்டபம்' என்பது போலவும், நான்கு அல்லது இரண்டு கைகளுடன் விடுக்கப் பெற்ற வாணாசுரனது வதத்தைக் குறித்து ஆழ்வார்கள், "வாணணாயிரம் தோள் துணித்த" என்றும், "வாண னீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்த" என்றும் அருளிச் செய்தது போலவும் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனமே திருவாய்மொழி 1102 பாசுரங்களா லமைந்திருப்பினும் "நிரனிரை ஆயிரத்து" "சீர்த்தொடை ஆயிரத்து" "அமர் சுவை ஆயிரத்து", "குருகூர்ச் சடகோபன் சொன்ன ஓராயிரம்" என்று ஆழ்வார் தாமே அருளிச் செய்துள்ளமை யும், பெரிய திருமொழி 1084 பாசுரங்களாலமைந்திருந்து "பொங்கு புகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரம்" என்று அருளிச் செய்யப்பட்டுள்ளமையும், 108 பாடல்களமைந்த பிரபந்தத்தை "இராமாநுச நூற்றந்தாதி" என்று வழங்கப் பெறுவதும் ஈண்டு சிந்தித்தல் தகும். இக் கூறியவாற்றால் நாலாயிரத்திற்குச் சில பாடல்கள் குறைந்துள்ள திவ்யப் பிரபந்தத்தை "நாலாயிரம் திவ்வியப் பிரபந்தம்" என்று வழங்கு வது எல்லாவற்றானும் பொருந்தத் தடை இல்லை என் பதை உணரலாம்.

## 16. பிள்ளைகட்குத் திருநாமம் சூட்டல்

இல்லற வாழ்கையின் இன்றியமையாத பகுதி மனை மாட்சி; அவ்வாழ்க்கைக்கு முத்தாய்ப்பு வைத்தமாதிரி அமைவது நன் மக்கட்பேறு. இதனை வள்ளுவப் பெருந்தகை,

> மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு![1]

என்று போற்றுவர். இல்வாழ்வில் பிள்ளை கட்குத் திருமாமம் இடுதல் ஒரு முக்கிய சடங்காக நடை பெற்று வருவதை அறிவோம். ஒவ்வொருவரும் தத்தம் விருப்பதிற்கேற்பப் பெயரிட்டு மகிழ்கின்றனர். அரசியல் தலைவர்கள், சமூகத் தொண்டர்கள், சமயப் பெரியார்கள் சினிமா நட்சத்திரங்கள் போன்றவர்களின் பெயர்களைச் சூட்டுதல் இன்று நாகரிக மாகவே வழங்கிவருகின்றது. ஆயினும் எம்பெருமானின் திருநாமங்களையிட்டு மகிழ்வதையும் ஒரு சிலரிடம் மரபாக இருந்துவருவதையும் காணலாம். எம்பெருமானின் மேன்மையைக் காட்டிலும் அவனைக் குறிக்கும் திருநாமத்தின் மேன்மை உயர்ந்ததாகும் என்ற சாத்திர உண்மையை கண்டு அறிந்தவர்கள் இவர்கள்.

எம்பெருமான் திருநாமத்தின் பெருமையை,

> அவன் தூரஸ்தனானாலும், இதுகிட்டி நின்று உதவும்.
> திரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது
> திருநாமமிறே.[2]

---

1. குறள்—60. 2. முமுட்சுப்படி—15, 16.

என்ற முமுட்சுப்படி வாக்கியங்களும் எடுத்துக் காட்டு கின்றன. இத் திருநாமத்திற்கு உரியவனாய்ச் சொல்லப் பெறும் எம்பெருமான் அருகிலில்லாமல் தொலைவிலிருப் பினும், அவனைப்பற்றிச்சொல்லுகின்ற இத் திருநாமம் அகிலிருந்து தன்னைப் பக்தியுடன் சொன்னவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றும். பெரிய அவையில் துச்சாதனன் திரௌபதியின் ஆடைகளைக் களையுங்கால் அவள் கண்ணனை நினைந்து உருகுவதை,

> ஆறாகி இருதடங்கண் அஞ்சனவெம்
> புனல்சோர அளகம் சோர
> வேறான துகில்தகைந்த கைசோர
> மெய்சோர வேறோர் சொல்லும்
> கூறாமல் 'கோவிந்தா! கோவிந்தா!'
> என்றரற்றிக் குளிர்ந்து நாவில்
> ஊறாத அமிழ்தூற உடல்புளகித்து
> உள்ளமெலாம் உருகி னாளே.[1]

[புனல் - நீர்; அளகம் - கூந்தல்]

என்று காட்டுவர் வில்லிபுத்தூரார். பலன், பற்பல வண்ணச் சேலைகள் ஆயிரம் ஆயிரம் கோடியாகக் கொடுத்தருளினான் கண்ணன்; திரௌபதியின் மானமும் காக்கப்பெற்றது. பாரதியாரும் இச் செய்தியை,

> பிச்சே றியவ னைப்போல—அந்தப்
> பேயனும் துகிலினை உரிகையிலே.
> உட்சோ தியிற்க லந்தாள்;—அன்னை
> உலகத்தை மறந்தாள் ஒருமையுற்றாள்

என்று எடுத்துக்காட்டுவர். பலனைக் கூறுங்கால் கவிஞர்,

> கண்ண பிரானருளால்—தம்பி
> கழற்றிடக் கழற்றிடத் துணிபுதிதாய்

1. வில்லிபா. சூதுப்போர்—246.
3. பாஞ்சாலி சபதம்—292.

வண்ணப்பொற் சேலைக ளாம்—அவை
வளர்ந்தன வளர்ந்தன வளர்ந்தனவே.[5]

என்று வருணிப்பர்.

எம்பெருமானின் திருப்பெயரைச் சொல்ல வேண்டும் என்ற எண்ணமின்றியே சொன்னாலும் தம் குழந்தைகட்கு இப்பெயரை இட்டு அழைக்கினும், பரிகாசமாகவே இழிவாக வோ பொருளுணர்ச்சியின்றியோ சொல்லினும் அஃது இரட்சணமாகின்ற தன் காரியத்திலிருந்து தவறாது. இதனை அஜாமிளன் வரலாற்றால் தெளிவுபெறச் செய்யலாம். அஜாமிளன் தன் வாழ்நாட்களில் தெய்வச் சிந்தனை சிறிது மின்றிப் பல கொடுஞ்செயல்களைப் புரிந்துவந்தான். அவனுக்கு அந்திய காலம் நெருங்கியது; யம படர்கள் அவனை நெருங்கினர். அவ்வமயமும் அவன் தன் கடைக் குட்டியின்மீது இருந்த பற்றினால், நாராயணன் என்னும் திருநாமமுடைய அவனை 'நாராயணா!' என்று அழைத் தான். உடனே நாராயணனின் தூதுவர் வந்து அவனைச் சூழ்ந்தனர். அவனுடைய கொடுந்தன்மையை நோக்கி வந்த காலதூதர்கட்கும் பகவானுடைய தூதுவருக்கும் பல வாதங் கள் நிகழ்ந்தன. இறுதியில் பகவானுடைய தூதுவரே அவன் ஆன்மாவைப் பற்றிச் சென்றனர் என்பது வரலாறு. ஒரு தடவை பகவானுடைய நாமத்தைச் சொன்னதும் அதன் பலன் சொல்லற்கரியதாய் அமைந்துவிட்டதைக் காண் கின்றோம். இதனை,

சொல்லும் கிரமம் ஒழியச் சொன்னாலும் தன்
ஸ்வருபம் கெட நில்லாது![6]

என்று முமுட்சுப்படியும் விளக்கும்.

எம்பெருமான் திருநாமத்தை பரிகாசமாயும், ஏளனமா யும் அடிக்கடிக் கூறிக்கொண்டிருந்த சிசுபாலன் போன்றார்க் கும் நற்கதி கிடைத்த தென்பதையும் அறிகின்றோம்.

---

5. ஷ—299.
6. முமுட்சுப்படி—17.

பலபல நாழம் சொல்லிப்
பழித்தசிசு பாலன் தன்னை
அலவலை மைதவிர்த்த அழகன்.[7]

[நழம் - குற்றம்; அலவலைமை - அற்பத்தனைதை;
தவிர்த்த - போக்கின]

என்று இந்நிகழ்ச்சியைப் போற்றி மாலிருஞ்சோலை அழகனை யும் போற்றியுரைப்பர் பெரியாழ்வார். இசைவாணர்கள் ஒரு பாட்டைப் பாடி முடிக்கும்போது தங்கள் ஆலாபனத்திற் கேற்ப யாதாவது ஒரு சொல்லைச் சொல்லி முடிக்கும் வழக்கத்தை நாம் அறிவோம். அது பொருளற்ற சொல்லா யிருப்பினும் இருக்கலாம். ஆனால், சிலர் அங்கு 'இராமா' என்ற சொல்லை உணர்ச்சியின்றியே சொல்லிமுடிக் கின்றனர். அவர்கட்கும் நன்மை ஏற்படத்தான் செய்கின்றது. இதனாலும் பிள்ளைகட்கு எம்பெருமான் பெயர்களையிட்டு வழங்கினால் நாம் அவர்களைக் கூப்பிடும் போதெல்லாம் இறைவனின் திருநாமத்தை உச்சரிக்க வாய்ப்பு ஏற்படுகின்றது என்பது தெரிகின்றது. ஒரு தாய் விரும்பிய கைங்கரியங்களைச் செய்து, அவள் முக உல்லாசத்திற்கேற்ப நடந்து கொள்ளவேண்டுவது ஓர் உத்தம புத்திரனுக்கு இன்றியமையாத கடமையாகும். ஆயினும், அவன் தன் அறியாமையினாலோ செருக்கினாலோ அவளை அலட்சியம் செய்து நடப்பினும், அன்பும் அருளும் நிறைந்த அந்த அன்னை எங்ஙனம் அவனை விடாமல் அவனுக்கு நன்மைகளையே புரிவாளோ, அங்ஙனமே அருள் நிரம்பிய எம்பெருமான் திருநாமங்களும் முறைதவறித் தம்மைப் பயன்படுத்துபவர்கட்கும் நன்மைகளையே நல்கு கின்றன.

எம்பெருமானின் திருநாமத்தின் பெருமையை விளக்க இரண்டு இதிகாசங்களை அருளிச்செய்கின்றார் தொண்ட

---

7. பெரியாழ். திரு.—4,3:5.

ரடிப் பொடியாழ்வார். அவற்றுள் ஒன்று கத்திரபந்து வைப்பற்றியது :

மொய்த்தவல் வினையுள் நின்று
 மூன்றெழுத் துடைய பேரால்
கத்திர பந்தும் அன்றே
 பராங்கதி கண்டு கொண்டான்;
இத்தனை அடியார் ஆனார்க்கு
 இரங்கும்நம் அரங்கன் ஆய
பித்தனைப் பெற்றும் அந்தோ!
 பிறவியுள் பிணங்கு மாறே.[8]

[மொய்த்த - அடர்ந்து கிடக்கிற; வல்வினை - கொடிய பாவம்; மூன்றெழுத்து உடைய பேர் - கோவிந்த; கத்திரபந்து - க்ஷத்திர பந்து; பராங் கதி - சிறந்த பதவி; இரங்கும் - அருள் புரியும்; பித்தன் - அண்டியவரிடத்தில் மயங்கியவன்; பிறவி - சம்சாரம்; பிணங்கும் - வருந்தும்.]

என்ற பாசுரத்தில் இவனைப்பற்றிய குறிப்பு வருகின்றது. கோவிந்த நாமத்தாலே கத்திர பந்து போன்ற பாவிக்கும் பரமபதப் பேறு அடையக்கூடும் என்றால், இவ்வளவு தூரம் அருள் புரியக்கூடிய அழகிய மணவாளனைச் சேஷியாகப் (தலைவனாகப்) பெற்றும் சம்சாரத்தில் அகப்பட்டு வருந்துகின்றவிதம் என்னே! என்று வியக்கின்றார் ஆழ்வார்.

மூன்றெழுத்துடைய பேரால்—இன்ன திருநாமம் என்னாமல் மறையாகச் சொல்லப்பட்டது; 'ருசி' பிறந்த பின்பு 'அந்தத் திருநாமம் என்?' என்று விரும்பிக் கேட்டால் அப்போது சொல்லப்பெறும் என்பதாம். பொய்த்த வல்வினையுள் நின்று பெரும்பாவியாக இருந்தும் என்றபடி. கத்திரபந்து - க்ஷத்திரபந்து; வடமொழிப் பெயர் தற்பவமா யிற்று. பிராமணர்களுள் அதமனைப் 'பிரஹ்மபந்து' என்றாற்போலே, க்ஷத்திரியர்களுள் அதமனை 'க்ஷத்திர

---

8. திருமாலை—4.

பந்து'[9] என்று சொல்லப் பெற்றது. இவன் வரலாறு வருமாறு :

கத்திரபந்து கொடிய நடத்தைகளையுடையவன்; பல்வகைப் பாவங்களே உருவெடுத்தாற் போன்றவன். இவன் தாய் தந்தையர், மக்கள், உறவினர், நண்பர்கள் ஆகிய அனைவராலும் கைவிடப்பெற்று காட்டில் திரிந்து உயிர்க் கொலை புரிந்து வயிறு வளர்த்துக் காலம் கழித்து வந்தான். இங்ஙனம் நெடுங்காலம் சென்றது. ஒரு நாள் மாமுனிவர் ஒருவர் கொடிய நண்பகலில் வெப்பம் தாங்காமல் வழி தப்பிப் போகா நின்றவர் இப்பாவி திரியும் கானகத்தில் புகுந்து இவன் கண்ணுக்கு இலக்காயினர். அவருடைய பரிதாப நிலையைக் கண்ட இவனுக்குத் தன்னையும் அறியாமல் அவர்பால் இரக்கம் உண்டாயிற்று. அவரிடம் அவர் வழி தப்பிப் போவதைச் சுட்டிக்காட்டினான். அவரும் அதனை உணர்வாராயினர். பொறுக்க முடியாத தாக விடாயுடன் அவர் ஒரு தடாகத்தை நாடிச் செல்லுகையில் அருகே ஓர் அழகிய பொய்கையைக் கண்ணுற்றார். தாப மிகுதியால் தவறி அக் குளத்தில் விழுந்திட்டார். அப்போது அருகிலிருந்த கத்திரபந்து தன் கையிலிருந்த வில்லையும் அம்பையும் எறிந்துவிட்டு அம் மாமுனிவரை நீரினின்றும் அகற்றித் தாமரைக் கிழங்குகளை உணவாக நல்கி அவரது விடாயைப் போக்கி அவரை மகிழ்வித்தான்.

முனிவர் அக் குளக்கரையின் மீதிருந்த ஒரு மரத்து நிழலில் அமர்ந்து இளைப்பாறினர். கத்திர பந்தும் அவரது கால்களைப் பிடித்து அமுக்கி நோவு தீர உபசாரங் களைப் புரிந்தான். முனிவர் அவனுடைய வரலாற்றைக் கேட்க, அவனும் தான் சூரியன் மரபில் விச்வதரன் என்பவருக்கு மகனாய்ப் பிறந்தவன் என்று தொடங்கித் தன்னுடைய பாவச் செயல்களை ஒன்றும் ஒளிக்காமல்

---

9. 'விஷ்ணு தர்மத்தில்' 97-வது அத்தியாயத்தில் இவனைப் பற்றிய வரலாறு விரிவாகக் கூறப்பெற்றுள்ளது.

அவரிடம் உரைப்பானாயினன். இவற்றைச் செவியுற்ற முனிவரும் அவனை நல்வழிப்படுத்த எண்ணி அவனுடைய தீச் செயல்களை விட்டொழித்து ஆருயிர்களிடம் அன்பு காட்டுமாறு பணித்தார். இவனும் தான் தீய குணங்கட்குப் பிறப்பிடமானவன் என்றும், தன் மனம் தன் வசப்பட்டதல்ல என்றும், இது தவிர வேறு நியமனம் பணிக்கப்பெற்றால் அதனைச் சிரமேற் கொள்ளக் காத்திருப்பதாகவும் கூறினான். எப்படியாவது இவனை உய்விக்கப் பேரவாக் கொண்ட முனிவரும் எப்போதும், 'கோவிந்த, கோவிந்த' என்று சொல்லிக் கொண்டிருந்தால் அஃது அவனுக்கு நன்மையை பயக்கும் என்று உரைத்துப் போயினர். அதுமுதலாக கத்திரபந்துவும் அத் திருநாமத்தை இடைவிடாது சொல்லிக் கொண்டு தன் காலத்தைப் போக்கினன். சில ஆண்டுகள் கழித்து அவன் காலகதி அடைந்தான். பின் அந்தணர் குலத்தில் முற்பிறப்பு உணர்வுடன் பிறந்தான். அவனுக்கு கொடிய சம்சாரத்தில் வெறுப்பு உண்டாயிற்று. தனக்கு இவ்வுயர் குலத்தில் பிறவி நேர்ந்ததும் முற்பிறப்பில் நினைவு ஏற்பட்டதும் முன்பு பண்ணின கோவிந்த நாம சங்கிர்த்தனத் தின் பயன் என்பதை உணர்வானாயினன். தனக்கு மேலான நன்மையை விளைத்த அந்தக் கோவிந்தனையே ஆராதனம் செய்து 'திண்டாவழும்பும் செந்நீரும் சீயும் நரம்பும் செறி தசையும் வேண்டா நாற்றமிகும் உடலை விட்டு', 'மாயவன் சேற்றள்ளற் பொய்நிலத்தைக் கடந்து', 'நலமந்தமில்லதோர் நாடு புகும்' எண்ணத்துடன் துணிந்து அங்ஙனமே செய்து பரமபாகவதனாகி வீடு பேறும் எய்தினன் என்பது வரலாறு.

மற்றோர் இதிகாசம் முற்கலனைப் பற்றியது.

நமனும்முற் கலனும் பேச,
 நரகில்நின் றார்கள் கேட்க,
நரகமே சுவர்க்க மாகும்
 நாமங்கள் உடையன் நம்பி;
அவனதூர் அரங்கம் என்னாது,
 அயர்த்து வீழ்ந்தளிய மாந்தர்

கவலையுள் படுகின்றார்; என்று
அதனுக்கே கவல்கின் றேனே[10]

[நம்பி - பரி பூரணன்; அளிய - அருமந்த; அயர்த்து - மறந்து; வீழ்ந்து - விஷயாந்தரப் படுகுழியில் வீழ்ந்து; கவலை - துக்கம்; கவல்தல் - கவலைப் படுதல்]

என்பது பாசுரம். "'நாமங்கள் உடைய நம்பியின் திவ்விய தேசம் திருவரங்கம்' என்று சொன்னாலே போதும்; இங்ஙனிருக்கவும் இவர்கள் விஷயாத்தரப் படுகுழியில் தலைகீழாக விழுந்து வருந்துகின்றார்கள்" என்று கவல்கின்றார் ஆழ்வார். இங்ஙனம் கவன்கின்றபோது 'முத்கலன்'[11] என்பானது வரலாற்றையும் குறிப்பிடுகின்றார்.

முத்கலன் என்பான் பெரும்பாவிகளின் தலைவன். அவன் ஒருநாள் கோதானம் செய்யும்போது 'கிருஷ்ணாய' என்று சொல்லித் தானம் செய்தான். பின்னர் அவன் காலகதி யடைந்தபோது யமதூதர்கள் வந்து நெருங்கி அவனை யமனிடம் கொண்டு சென்றனர். யமன் இவனை எதிர் கொண்டு மரியாதை செய்வானாயினன். முத்கலன் யமனிடம் தன்னைப் பாராட்டுவதன் காரணத்தை வினவ, யமனும் கிருஷ்ண நாமத்தை ஒரு தடவை சொன்னதை நினைவூட்டினான். யமனுக்கும் முத்கலனுக்குமிடையே நடைபெற்ற உரையாடல் நரகவாசிகளின் காதில் விழுந்தது. உடனே நரகமும் துக்கானுபவ நிலமாயிருந்த நிலை மாறி ஆனந்தானுபவ நிலமாகி விட்டது. யமன் 'கிருஷ்ணன்' என்ற திருநாமத்தைத் தனக்கு நன்மை செய்யும் என்று கருதி உச்சரிக்கவில்லை; முத்காலன் வேண்டுகோட் கிணங்கி உபதேசிக்கவும் இல்லை; நரகவாசிகளின் காதில் இது விழுந்து அவர்கள் உய்வு பெறவேண்டும் என்று நினைத்தும் சொல்ல

10. திருமாலை—12.
11. இவன் வரலாறு 'விஷ்ணு தர்மத்தில்' 96-ஆவது அத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ளது.

வில்லை. இதனைக் கேட்டவர்களும் பாவம் செய்ததற்குக் கவன்று அதற்குக் கழுவாயாகச் செய்து கொள்ளக்கூடிய காலத்திலும் கேட்கவில்லை. பாவத்தின் பலன்களை அநுபவிக்கும்போது கேட்டனர். அப்போதும் விருப்பத் துடன் கேட்டார்கள் அல்லர்; எதிர்பாராத விதமாகவே அத் திருநாமம் அவர்கள் செவியில் பட்டது. இப்படிப்பட்ட திருநாமம் இவ்வளவு பெருமையுடையது என்பது இவன் வரலாற்றால் தெளிவுறுத்தப்பட்டது.

மேலே கூறப்பெற்ற இரண்டு இதிகாசங்களாலும் எம்பெருமானின் திருநாமத்தின் பெருமையும் காரணமின்றி உச்சரித்தாலும் ஏற்படும் பலனும் விளக்கப் பெற்றன. இறைவன் பெயர்களைத் தங்கள் பிள்ளைகட்கு இடாமல் வேறு பெயர்களைப் பல்வேறு காரணங்கட்காக இடும் மக்களை நோக்கிப் பெரியாழ்வார் இவ்வாறு உபதேசிக் கின்றார்.

> கேசவன் பேரிட்டு
>     நீங்கள் தேனித்திருமினோ
> நாயகன் நாரணன்
>     தம்அன்னை நரகம்புகாள்.[14]
> [தேனித்து - மகிழ்ச்சியாக]

கேசவன், நாயகன், நாரணன் என்ற திருநாமங்களைத் தம் பிள்ளைகட்குப் பெயர்களாக இட்டால் அவர்களால் பெற்ற தாய் தந்தையர் நமன்தமர் கையிலகப்பட்டு நலிவு படாமல் உய்ந்து போவர் என்கின்றார் ஆழ்வார்.

மேற்கூறிய கருத்தையே இப் பதிகப் பாசுரங்கள்தோறும் வற்புறுத்துகின்றார்.

> செங்கண் நெடுமால்
>     சிரீதராஎன்று அழைத்தக்கால்
> நங்கைகாள் நாரணன்
>     தம்அன்னை நரகம்புகாள்.[15]

---

14. பெரியாழ். திரு.—4.6:1, 15. ஷ—4.6;2;

என்கின்றார். 'பிச்சைபுகினும் எம்பிரான் திருநாமமே நச்சுமின்'[16] என்று அறிவுறுத்துகின்றார். இங்கு வியாக்கியானத்தில் உள்ள கதை அறியத்தக்கது. ஓர் அந்தணன் தன் மகனுக்கு நாமகரண காலத்தில் 'ஐசுவரியம் தரவல்லானொருவனுடைய பெயரை இப் பிள்ளைக்கு இட வேண்டும்' என்றெண்ணிக் குபேரன் பெயரை இடு என்றதும் "'ஜளிபிளீ' என்று பேரிட்டழைத்து ஜீவிப்பதற்காட்டிலும், நாராயணன் என்ற திருநாமத்தைச் சாத்திப் பிச்சைபுக்காகிலும் ஜீவிவிக்க அமையும் என்றார் ஓர் ஆஸ்திகர்." என்பது இக் கதை ('ஜளிபிளி'—குபேரன் பெயர்.)

விஷ்ணுச்சித்தர் மேலும் உபதேசிக்கின்றார் :

மானிடசாதியில் தோன்றிற்றோர்
    மானிட சாதியை
மானிட சாதியின் பேரிட்டால்
    மறுமைக் கில்லை
வானுடை 'மாதவா, கோவிந்தா'
    என்றழைத் தக்கால்
நானுடை நாரணன்
    தம்மன்னை நரகம்புகாள்.[17]

[மானிடசாதி - வினைப்பயனை அநுபவிக்கப் பிறந்த சாதி; மறுமைக்கு - வீடுபேறு பெறுகைக்கு; வான் - பரமபதம்]

என்பது பாசுரம். சீவான்மா கருமங்களுக்கிணங்க தேவயோநி முதலிய பல யோநிகள்தோறும் பிறக்கக் கடவன்; நல்வினை தீவினை ஆகிய இரண்டையும் அநுபவிப்பதற்கும் புதிதாகப் பெறுகைக்குமன்றே மானிடயோநியில் பிறப்பது? இப்படி வினைக்கு வசப்பட்டு மானிடசாதியிற் பிறக்கும் பிராணியை இம்மைப் பயனை விரும்பி வினை வயத்ததான மானிடசாதியின் பெயரிட்டழைப்பின்

16. ஷை—4.6:3.
17. ஷை—4.6:4.

இவ்வுலகில் சில சிறிய பலன்கள் கிடைக்கினும் மறு உலகப் பேற்றுக்கு யாதொரு வழியும் இல்லை; 'இங்ஙனமின்றி எம்பெருமான் திருநாமங்களாகிய 'மாதவன்' 'கோவிந்தன்' என்பனபோன்ற பெயர்களிட்டால் மறுமையில் அப்பேறு பெறக் குறை இல்லை.

வயிர வாணிகர் ஒருவருக்கு நான்கு குமாரர்கள். அவர் தன் தொழிலுக்கு இணங்க இரத்தினம், மாணிக்கம், முத்து, தங்கம் என்று பெயர்களை இட்டு மகிழ்ந்தார் இம்மைப்பயன் களை நினைந்து; ஏதோ மறுமையின் நினைப்பு தோன்றவே 'வேல்' என்ற 'வாலைச்' சேர்த்து இரத்தினவேல் மாணிக்கவேல், முத்துவேல், தங்கவேல் என்று முருகனது வேலை நினைக்கச் செய்துகொண்டார்; வழிக்குத் துணை 'வடிவேல்' எனக் கண்டுகொண்டார். இம்மை மறுமைப் பயனை ஒரு சேரப் பெற்றதாக மன நிறைவும் கொண்டார். பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் ஒரு சூக்தி:[18] "ஒருவனுடைய அந்திம சமயத்திலே திருமந்திரத்தை உபதேசித்து 'இத்தைச் சொல்லாய்' என்ன: அவனும் 'ஆமாகில் சொல்லிப்பார்க்கிறேன், ஆமாகில் சொல்லிப்பார்க் கிறேன்' என்று இத்தை அநேகம் உருச்சொல்லித் திருமந்திரம் தன்னைச் சொல்லாதே செத்துப் போனான்; இரண்டும் அட்சரங்கள் ஒத்திருக்கச் செய்தே[19] சொல்ல வொட்டிற் றில்லையிறே பாபபலம்!" என்பது. இவர் எண்ணத்தில் இரத்தினம், மாணிக்கம், முத்து, தங்கம் ஊன்றிக்கிடந் தனவா? 'வடிவேல்' ஊன்றிக் கிடந்தனவா? என்பது அந்த வடிவேலனுக்கே வெளிச்சம். இன்னொரு சைவப் பெரியாருக்கு நான்கு மைந்தர்கள். அவர்அவர்கட்கு திருநாவுக்கரசு, ஞானசம்பந்தன், நம்பியாரூரன் மாணிக்கவாசகன் என்று பெயரிட்டு மகிழ்ந்தார். இவருக்கு

18. திருமாலை—12 (வியாக்கியானம்).
19. 'ஆமாகில் சொல்லிப்பார்க்கிறேன்' என்பதும் (மெய் யெழுத்து நீக்கி) எட்டெழுத்து; திருமந்திரமும் எட்டெழுத்து.

ஆண்டவனிடத்திலிருந்த பக்தியைவிட அடியாரிடம் பக்தி அதிகமாகவே இருந்தது.

பெரியாழ்வார் 'நாடு நகரும் அறிய மானிடப் பேரிட்டு கூடி யழுங்கிக் குழியில் வீழ்ந்து தவறிப்' போகாமல் இருக்குமாறு எச்சரிக்கின்றார்; எச்சரித்தவர்,

குலமுடைக் 'கோவிந்தா
கோவிந்தா'வென் றழைத்தக்கால்
நலமுடை நாரணன்
தம்மன்னை நரகம் புகாள்.[20]

[குலம் - இடைக்குலம்]

சாடிறப் பாய்ந்த 'தலைவா
தாமோதரா' என்று
நாடுமின், நாரணன்
தம்மன்னை நரகம் புகாள்.[21]

[சாடு - சகடாசுரன்; பாய்ந்த - உதைத்த]

என்றும் எம்பெருமான் பெயர்களையே இடுமாறு அறிவுறுத்து கின்றார். அன்றியும், 'மண்ணிற் பிறந்து மண்ணாகும் மானிடப்பேரிட்டு' மகிழாமல் 'கண்ணுக்கினிய கருமுகில் வண்ணன் நாமமே நண்ணுமின்'[22] என்று அறிவுரையும் பகர்கின்றார். இன்னும்,

நம்பி பிம்பியென்று
நாட்டுமானிடப் பேரிட்டால்
நம்பும் பிம்புமெல்லாம்
நாலுநாளில் அழுங்கில்போம்.[23]

[நாடு மானிடர் - தாழ்ந்த மானிடர்; அழுங்கி - அழிந்து]

---

20. ஷை—4.6:5.
21. ஷை—4.6:6.
22. ஷை—4.6:7.
23. ஷை—4.6:8.

என்று ஏசுகின்றார். 'நம்பி' என்றால் 'குறைவற்றவன்' (பூரணன்) என்னும் பொருளையுடையதாதல் பற்றி 'இப் பெயரை நமது பிள்ளைக்கு இட்டால் ஒரு குறையுமின்றி பூரணனாயிருப்பான்' என்று நினைத்து அப்பெயரை இடுகின்றவர்களைக் குறித்து ஏளனம் செய்கின்றார் 'பிம்பி' என்பதற்கு இங்கு ஒரு பொருளும் இல்லை. இச்சொல் எப்படிப் பொருளற்றதோ, அப்படித்தான் 'நம்பி' என்கின்ற சொல்லும் பொருளற்றது என்பது ஆழ்வார் கருத்து. ஆகவேதான், 'நம்பி'க்கு எதிர்த்தட்டாக ஒரு 'பிம்பி'யை அருளிச் செய்கின்றார். இங்ஙனே வெறுப்புத் தோற்றச் சொல்லும் இடங்களிலெங்கும் மற்றொரு சொல் பொருளின்றி வழங்கப் பெறுவது உலகியற்கை. ஒருவன் ஒரு கடையில் 'உப்பு உளதோ?' என்று கேட்டால் அதற்குக் கடையிலுள்ளவன் வெறுப்புக் கொண்ட காலத்தில் 'உப்பும்' இல்லை, பப்பு மில்லை' என்று கூறுவதை நாம் காண்கின்றோமன்றோ? அது போலவே இங்கும் 'நம்பி' என்னும் பெயரில் வெறுப்புக் கொண்ட ஆழ்வார் 'பிம்பி' என்ற மற்றொரு பொருளில்லாப் பெயரைக் கூட இணைத்துக் கூறுகின்றார். ஆகவே,

> செம்பெருந் தாமரைக்
> கண்ணன்பேரிட் டழைத்தக்கால்
> நம்பிகாள்! நாரணன்
> தம்மன்னை நரகம்புகாள்.[24]

[நம்பிகாள் - (அறிவினால்) குறை வற்றவர்களே.]

என்கிறார். மேலும் கூறுவார்:

> ஊத்தைக்குழியில் அமுதம்பாய்
> வதுபோல், உங்கள்
> மூத்திரப் பிள்ளையை
> என்முகில்வண்ணன் பேரிட்டு
> கோத்துக் குழைத்துக்
> குணாலமாடித் திரிமினோ

24. ஷை—4.6:8.

நாத்தகு நாரணன்
தம்மன்னை நரகம்புகாள்.[25]

[ஊத்தை—அசுத்தமான; மூத்திரம்—அசுத்தமான; கோத்துக் குலழத்து—கூடிக் கலந்து குணாலக் கூத்து—தலை கீழாக ஆடும் கூத்து.]

எம்பெருமானுடைய உயர்ந்த திருநாமத்தை கேவலமான மானிட மக்களுக்கு இடுவது, அசுத்தமாகிய ஓர் எச்சிற் குழியில் அமுதத்தைப் பாய்ச்சுவதை ஒக்கும் என்கின்றார். ஊத்தைக் குழியில் அமுதம் பாய்ந்தால் அமுதமும் அசுத்த மாகித் துய்ப்பதற்கு அருகதையற்றுப் போகும். எம்பெருமா னுடைய திருநாமமோ தனக்கு யாதொரு கேடுமில்லாதபடி தான் புகுந்த விடத்தையும் பரிசுத்தமாக்கி விடும் என்று திருநாமத்தின் பெருமையை எடுத்துக் காட்டுகின்றார் ஆழ்வார். இங்ஙனம் பலபடியாகப் பிள்ளைகட்கு எம்பெருமான் திருநாமங்களை இடும் இன்றியமையாமையை விளக்குவர் விஷ்ணு சித்தர்.

எம்பெருமான் பேரருள் சுரத்தல் நினைந்து பார்க்க முடியாதது. பிள்ளை உலக ஆசிரியர் கூறுமாப் போலே 'என் ஊரைச் சொன்னாய்; என் பேரைச் சொன்னாய்; என் அடியாரை நோக்கினாய்; அவர்கள் விடாயைத் தீர்த்தாய்; அவர்கட்கு நிழலைக் கொடுத்தாய்' என்று ஏறிட்டுக்கொண்டு மடிமாங்காய் இட்டு,[26] மக்கள்மீது கருணை சுரப்பான். ஆகவே, எம்பெருமான் பெயர்களாகிய கேசவன், நாரா யணன், வாசுதேவன் போன்றவற்றையும், அவன் உகந்த ஊர்களாகிய சீரங்கம், திருமலை, திருவேங்கடம் கடிகாசலம் போன்ற பெயர்களையும் தம் பிள்ளைகட்கு இட்டு உய்வடையுமாறு அறிவு கொளுத்துகின்றார் விஷ்ணுவையே தன் சித்தத்தில் வைத்திருக்கும் ஆழ்வார்.

25. ஷை—4.6:9.

26. மாங்காய் எடாமலே வாளா வழி போகிறவன் மடியிலே மாங்காயை மறைத்துக் கொண்டு சென்று 'மாங்காயைக் களவு கண்டாய்' என்று கூறுதல்.

## 17. கம்பனும் ஆழ்வார்களும்*

தமிழ் நாட்டில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தோன்றிப் பக்தியைப் பெருக்கெடுத்துப் பரந்தோடும்படி யாகச் செய்தததன் விளைவுதான் கம்பனது 'இராமகாதை' ஆகும். இந்தப் பக்திப் பெருக்கு இராமாநுசர் காலத்தில் இராமாயணம் என்னும் திருவாய்க்காலின் வழியே சென்று தமிழ் நாட்டில் பாய்ந்து கொண்டிருந்தது. இது,

> படிகொண்ட கீர்த்தி இராமாயணம்
> என்னும் பக்திவெள்ளம்
> குடிகொண்ட கோயில் இராமாநுசன்.[1]
>
> [படி - உலகம்]

என்ற அமுதனார் வாக்கால் தெளிவாகின்றது. கம்பனும்,

> முன்னோர் மொழிப் பொருளே
> யன்றி அவர்மொழியும்
> பொன்னேபோற் போற்றுவம்'.[2]

என்ற தமிழ் இலக்கிய மரபினை யொட்டித் தமக்கு முன்னிருந்த புலவர்களின் கருத்துகளைத் தாராளமாக எடுத்துக் கொண்டுள்ளான் என்பதைக் கம்பராமாயணத்தை ஊன்றிப் படிப்பார் தெளிவாகக் காண்பர். இக் கட்டுரையில்

---

*கம்பன் மணி மலர் — 1981இல் (காரைக்குடி கம்பன் கழகம்) வெளிவந்தது.

1. இராமாநுச நூற்றந்தாதி—27.
2. நன்னூல்—9.

கம்பனில் ஆழ்வார்களின் தாக்கம் பற்றிய சில இடங்களைக் காண்போம். கம்பனது இராம பக்தி அவனைப் பிற்காலத்தார் 'கம்பநாட்டாழ்வார்' என்று வழங்கும்படியாகவும் செய்துவிட்டது என்பதனையும் நாம் அறியலாம்.

1. தத்துவக் கருத்துகள் :

இறைவன் அநந்த கல்மாண குணங்களை யுடையவன்; அவன் பெருமைகள் பேசி முடியா. இவற்றை அடக்கிக் கொண்டு அவன் ஆயிரத்திற்கு மேற்பட்ட (எண்ணற்ற) பெயர்களைத் தாங்கி நிற்கின்றான். கம்பநாடன்,

> நினையும் தேவர்க்கும் நமக்கும்ஒத்
> தொருநெறி நின்ற
> அனகன் அங்கணன் ஆயிரம்
> பெயருடை அமலன்.[3]

என்று இராமனைக் குறிப்பிடுவன். மண்ணுலகில் பிறந்து சிறப்பான அறிவைப் பெறாத நம்மைப் போலவே, அறிவு ஆற்றல்களில் மிக்கவரென்று நம்மால் மதிக்கப்பெறும் தேவர்களாலும் அவன் பெருமையை அறிய வொண்ணாது என்பது கவிஞனின் குறிப்பு. ஆண்டவன் ஆயிரம் பெயருடைய அமலன் என்பதையே கருடன் வாய்மொழியாக,

> பேராயிரங்கள் உடையாய் பிறந்த
> பொருள்தொறும் நிற்றி.[4]

என்று பேசுவன். "நாமங்கள் ஆயிரம் உடைய நம்பெருமான்"[5], "பேரும் ஓர் ஆயிரம் பிறபல உடைய எம்பெருமான்"[6]

---

3. அயோத். சித்திரகூட.—1.
4. யுத்த. நாகபாசப்.—261.
5. திருவாய்.—5.9:11.
6. ஷை—1.3:4.

"பேராயிரம் உடைய பேராளன்"[7] என்ற ஆழ்வார்களின் வாக்குகளை நினைவிற் கொண்டே இங்ஙனம் பேசுவதாகக் கொள்ளலாம்.

சித்தும் அசித்தும் ஈசுவரனின் உடலாக அமைந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கை. இஃது உடல்—உயிர் உறவு (சரீர—சரீரிபாவனை) என்று வழங்கப்பெறும். இக் கருத்து,

> வானின்று இழிந்து வரம்பிகந்த
> மாபூ தத்தின் வைப்புளங்கும்
> ஊனும் உயிரும் உடலும்போல்
> உள்ளும் புறனும் உளன்என்ப.[8]

என்ற பாடற்பகுதியில் அமைந்திருப்பதைக் காணலாம். இங்கு 'வான்' என்பது மூலப் பிரகிருதி (அசித்து). மூலப் பகுதியிலிருந்து தோன்றிய ஐந்து பூதங்களின் விகாரமே இந்த அகிலம்.

> வானும் நிலனும் முதலீறில்
> வரம்பில் பூதம்.[9]

என்று பூதங்களின் வரம் பின்மையைப்பற்றிப் பின்னும் விளக்குவன். இங்கு 'உணர்வு' என்பது தர்மபூத ஞானம். பிரகிருதியின் உள்ளே இருப்பதற்கு ஊனுக்குள் உயிர் இருப்பது உவமை; அங்ஙனமே அவன் அதன் வெளியில் இருப் பதற்கு உயிரில் உணர்வு இருப்பது உவமை. மேற்கூறிய பாடலில் 'ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறனும் உளன் என்ப' என்னுமிடத்து,

---

7. பெரி. திரு.—8.1:6.
8. அயோத்.—காப்பு.
9. ஷ—நகர் நீங்கு.—120.

திடவிசும்பு எரிவளி
நீர்நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவதும்
ஆய்அவை அவைதொறும்
உடல்மிசை உயிர்எனக்
கரந்துஎங்கும் பரந்துளன்.[10]

என்ற ஆழ்வார் பாசுரத்தின் கருத்தினை அடக்கிக் கொண்டிருப்பது ஈண்டு கண்டு மகிழத் தக்கது. உயியிர் உடம்பினுள் இருந்து அதனைத் தரிக்கச் செய்து அதற்குத் தலைவனாக நின்று அதனை நடத்துவது போலவே இறைவனும் எல்லாப் பொருள்களுள்ளும் இருந்து அவற்றைத தரிக்கச் செய்து அவற்றிற்குத் தலைவனாக நின்று அவற்றைத் தன் விருப்பம் பால் நடந்துகின்றனன் என்பது இதன் கருத்தாகும்.

பிறிதோரிடத்தில் இந்த உடல்—உயிர் உறவுபற்றிய கருத்து மிகத் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளது.

மூன்றுரு எனக்குணம்
மும்மை யாம்முதல்
தோன்றுரு எவையும்அம்
முதலைச் சொல்லுதற்கு
ஏன்றுரு அமைந்தவும்
இடையின் நின்றவும்
சான்றுரு உணர்வினுக்கு
உவந்த தாயினான்''

[முதல்—மூலப் பிரகிருதி; தோன்று உரு—மூலப் பகுதியில் தோன்றும் எல்லாத் தத்துவங்கள்; ஏன்றுரு—வடிவமைந்த அகிலம்; இடையில் நின்றவும்—சீவர்கள்; சான்றுஉரு—சிறந்த சரீரம்.]

---

10. திருவாய்—1.1:7.
11. கிட்கிந்.—காப்பு.

என்ற பாடலில் இந்த விளக்கத்தைக் காணலாம். மூலப் பிரகிருதியும் அதில் தோன்றும் சேதநாசேதநங்களின் வடிவ மான எல்லாப் பிரபஞ்சமும் இறைவனுக்குத் திருமேனி யாகும் என்பது இதன் கருத்தாகும். மூலப் பிரகிருதியினின்று தோன்றும் தத்துவங்கள் 24 என்பதை,

> பொங்கு ஐம்புலனும் பொறிஐந்தும்
> கருமேந்திரியம் ஐம்பூதம்
> இங்குஇவ் உயிர்ஏய் பிரகிருதி
> மான் ஆங் காரம் மனங்களே.[12]

என்ற ஆழ்வார் பாசுரம் விளக்கும். அவை சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய புலன் ஐந்தும்; மெய், வாய், கண், செவி, மூக்கு ஆகிய பொறி ஐந்தும்; வாக்கு, கால், கை, பாதை, உபத்தம் ஆகிய கருமேந்திரியம் ஐந்தும், மண், நீர், எரி, கால், வான் என்னும் பூதங்கள் ஐந்தும்; இங்குள்ள இந்த ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப்பிர கிருதி ஒன்றும்; மகத்தத்துவம் ஒன்றும்; அகங்காரத் தத்துவம் ஒன்றும்; மனம் ஒன்றும் ஆக 24. இவற்றுடன் ஆன்மா (புருடன்), இறைவன் (ஈசுவரன்) ஆகிய இரண்டும் சேர விசிட்டாத்வைத தத்துவங்கள் 26 ஆகின்றன.

படைப்புக் காலத்திற்கு முன்னர் சேதநாசேதநங்களெல் லாம் தன் திருமேனிக்குள் பரவி நிற்கப் பரம்பொருள் ஒன்றே தனித்து நிற்கும். அந்தப் பரம்பொருள் 'பலவாகக் கடவேன்' என்று சங்கற்பித்துக்கொண்டு இவ்வுலகத்தை யெல்லாம் தனி திருமேனியினின்றும் விரியச் செய்யும். இங்ஙனம் தேவர்கள், மனிதர்கள், விலங்குக்ள், தாவரங்கள் என்ற நால்வகைப் பிறவியாகத் தோன்றிய பொருள்தோறும் இறைவன் மறைந்து அந்தர்யாமியாகப் பரந்துள்ளான். இதனைக் கம்பநாடன் இந்திரன் வாய்மொழியாக,

---

12. திருவாய்.—10.7:10.

ஒன்றாகி மூலத்(து) உருவம் பலவாகி
உணர்வும் உயிரும் பிறிதாகி ஊழி
சென்றா சருங்காலத்து அந்நிலைய தாகித்
திறத்துலகம் தானாகிச் செஞ்செவே நின்ற
நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே[13]

[ஆசறுதல் - முடிதல்]

என்று கூறுவன். இங்கு 'ஒன்றாகி......ஞானக் கொழுந்தே என்றது,

கரந்தசில் இடந்தொறும்
இடந்திகழ் பொருள்தொறும்
கரந்தெங்கும் பரந்துளன்;
இவை உண்ட கரனே.[14]

என்ற ஆழ்வார் பாசுரப் பகுதியை நினைவிற்கொண்டு என்று கொள்ளலாம். மேலும், இந்திரன் வாய்மொழியாகவே இறைவனின் அந்தர்யாமித்துவத்தை,

தோய்ந்தும் பொருளனைத்தும்
தோயாது நின்றசுடரே.[15]

என்று வற்புறுத்துவன்,

ஈசுவரன் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத் தொழில்களையும் தனது சங்கல்பத்தாலேயே வருத்தமின்றி நிறைவேற்றுவான். இதனைக் கம்பநாடன்,

உலகம் யாவையும்
தாம்உள வாக்கலும்
நிலைபெ றுத்தலும்
நீங்கலும் நீங்கலா
அலகி லாவிளை
யாட்டுடை யார்அவர்

13. ஆரணி. சரபங். பிறப்பு.—30.
14. திருவாய்.—1.1:10.
15. ஆரணி. பிரபங். பிறப்பு நீங்கு.—27.

தலைவர்; அன்னவர்க்
கேசரண் நாங்களே[16]

என்று கூறுவன் இங்கு. 'உளவாக்கல்' என்பது சூக்கும வடிவினவாக உள்ளவற்றைத் தூல வடிவினவாகச் செய்தல்; இல்லாதவற்றை உண்டாக்குதல் அல்ல. இஃது 'உள்ளது போகாது; இல்லது வாராது' என்னும் சற்காரிய வாதம்[17]; சூனிய வாதத்திற்கு மறுதலே. இத் தொழில்களைச் சிறார் மணல்வீட்டு கட்டி அழிக்குமாப்போலே கேவல விளையாட்டாகவே நிறைவேற்றுவான் இறைவன். இதனையே பிறிதோர் இடத்தில் கம்பநாடன்,

உலகம் யாவையும் படைத்து அளித்து
உண்டு உமிழொருவன் [18]

என்றும் மற்றோர் இடத்தில்,

காட்டுவாய் உலகம் காட்டிக்
காத்தவை கடையிற் செந்தீ
ஊட்டுவாய் உண்பாய் நீயே.[19]

என்றும் வற்புறுத்துவன். இத்தகைய கூற்றுகளுக்கு,

தானே உலகெல்லாம்
தானே படைத்து இடந்து
தானே உண்டு உமிழ்ந்து
தானே ஆள்வானே.[20]

---

16. கம்பரா. சிறப்புப் பாயிரம்—1.
17. முன்பில்லாதது இடையே தோன்றாது என்றும் காரியம் அழிந்த காலத்தும் காரிய வடிவம் காணத்தில் அழியாது சூக்குமமாய் நிலைத்திருக்கும் என்றும் வாதித்து நிலை நாட்டுவது.
18. பாலகா. அகலிகை.—7.
19. யுத்த. வருணனை வழிவேண்—69.
20. திருவாய்.—10.5:3.

மண்கொண்டு மண்உண்டு
மண்உமிழ்ந்த மாயன் என்று
எண்கொண்டு என்நெஞ்செ
இரு.[21]

என்பனபோன்ற ஆழ்வார்கள் பாசுரங்களே அடிநிலமாகும்.

நாராயணனே உலகத் தோற்றத்திற்கு முதற் காரணன் என்ற வைணவ சமயக் கருத்தை ஒப்புக்கொண்டவன் கம்பநாடன். உபநிடதங்கள் கூறும் 'பரம் பொருள்' திருமாலையே குறிக்கும் என்பதை ஏற்றுக்கொண்டவன். இதனைப் பல இடங்களில் கதைமாந்தர்களின் கூற்றாகவும் தன் கூற்றாகவும் பெறவைப்பான். சீதை தூயவள் என்று அங்கியங் கடவுள் மெய்ப்பித்த பிறகு தேவர்களின் வேண்டு கோட் கிணங்க நான்முகன் இராமனது உண்மைச் சொரூபத்தை விளக்குகின்றான்.

...மறைகளின் தலைகள்
மன்பெ ரும்பர மார்த்தமென்(று)
உரைக்கின்ற மாற்றம்
அன்ப நின்னையல் லால்மற்றிங்(கு)
யாரையும் அறையா [22].

[மறைகளின் தலைகள் - உபநிடதங்கள்]

என்ற பாடப்பகுதியில் 'பரம்பொருள்' திருமாலைக் குறிக்குமேயன்றி தன்னையோ சிவனையோ அல்லது இந்திரனையோ குறிக்கவில்லை என்று உணர்த்துவதை அறியலாம். அடுத்து சிவபெருமான்,

முன்னை ஆதியாம் மூர்த்தி நீ
மூவகை உலகின்
அன்னை சீதையாம் மாதுநின்
மார்பின்வந் தமைந்தாள்.[23]

---

21. இரண். திருவந்—36.
22. யுத்த. மீட்சி—101.
23. யுத்த. மீட்சி—103.

என்று திருமாலே முதற் கடவுள் என்றும், சீதாப்பிராட்டியே உலக அன்னை என்றும் உறுதி செய்வன். சேதுவை அமைக்க வருணனை வழி வேண்டியபொழுது, வருணன் வரத் தாமதித்ததனால், இராமன் சினங்கொள்ளுகின்றான். இதனைக் கவிஞன்,

> உற்றொரு தனியே தானே
> தன்கணே உலகம் எல்லாம்
> பெற்றவன் முனியப் புக்கான்.[24]

என்று குறிப்பிடும் இடத்தில் 'இராமனே பரம்பொருள்' என்று தன் கூற்றாகக் கூறுவதைக் காணலாம். இங்ஙனம் கூறுவதற்கு,

> கற்பார் இராமனை அல்லால்
> மற்றும் கற்பரோ?[25]

என்ற நம்மாழ்வாரின் வாக்கும்,

> தாமரைமேல் அயனவனைப்
> படைத்தவனே! தயரதன்தன்
> மாமதலாய்! மைதிலிதன்
> மணவாளா![26]

என்ற குலசேகரப் பெருமாளின் வாக்கும் இவைபோன்ற பிற ஆழ்வார்களின் வாக்குகளும் அடிப்படையாக அமைந்தன என்று கருதலாம்.

நாராயணனே இராமனாக அவதரித்துள்ளான் என்பதைக் கவந்தன் வாய்மொழியாக,

> நிற்கு நெடு நீத்த
> நீரின் முளைத்தெழுந்த

---

24. யுத்த. வருணனை வழி—63.
25. திருவாய்.—7-5:1.
26. பெரு. திரு.—8:4.

மொக்குளே போல
முளைதெழுந்த அண்டங்கள்
ஒக்க உயர்ந்துனுளே
தோன்றி ஒளிக்கின்ற
பக்கம் அறிதற்கு
எளிதோ பரம்பரனே.[27]

[நீர் - ஆவரண நீர்; மொக்குள் - நீர்க்குமிழிகள்; பக்கம் - தன்மை; பரம்பரன் - மிகச் சிறந்தவன்]

என்று கூறுவன். மெய்யறிவு தோற்றப் பெற்ற விராதன் புகழ்மொழியாக,

ஓயாத மலரயனே
முதலாக உளராகி
மாயாத வானவர்க்கும்
மற்றொழிந்த மன்னுயிர்க்கும்
நீயாகின் முதல்தாதை
நெறிமுறையால் [28]

என்று பின்னும் வற்புறுத்துவன். இக் கருத்துகள்,

தான்ஓர் உருவே தனிவித்தாய்
தன்னின் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றுமாய்[29]

என்ற ஆழ்வார் பாசுரக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு வந்திருப்பது கண்டு மகிழத் தக்கது.

இறைவன் பிறப்பில்லாதவன்; ஆனால் பல பிறப்புகளை யுடைவன்.

---

27. ஆரணி. கவந்தன்வதை—48.
28. ஷை. விராதன் வதை—53.
29. திருவாய்.—1.5:4.

பிறப்பில் பல்பிறவிப்
பெருமான். [30]

என்பது ஆழ்வார் வாக்கு. பிறப்பில்லாதவன் என்றது ஏனையோரைப்போல் வினை காரணமாகப் பிறக்கும் தன்மையில்லாதவன் என்றவாறு. பல பிறவிகளையுடையவன் என்றது அடியார்கள் பொருட்டுப் பல பிறப்புகளை (அவதாரங்களை) மேற்கொள்பவன் என்றபடி. கம்பநாடன் இதனை நான்முகன் வாக்காக,

தோற்றம் என்பதொன்று
உனக்கில்லை. [31]

என்று கூறுவன். இராமனது பிறப்பினைக் கூறும் பகுதியில் இதனை மிக விளக்கமாகக் காணலாம். பிறிதோர் இடத்தில் இராமனைக் குறிப்பிடுமிடத்துக் கம்பன்,

மெய்யே பிறந்தேயும்
பிறந்தி லாதான். [23]

என்று இக் கருத்தினை மீண்டும் வற்புறுத்துவன்.

யுக முடிவில் பிரளயம் வரும் என்பதும், அப்பொழுது திருமால் பாலனாகத் தோன்றி எல்லா உலகங்களையும் விழுங்கிக் காப்பான் என்பதும் வைணவக் கொள்கை. இக் கொள்கை ஆழ்வார் பாசுரங்களில் பல்வேறு விதமாகப் பேசப்பெறுகின்றது.

அண்டமும் இவ் அலைகடலும்
அவனிகளும் குலவரையும்
உண்ட பிரான் [33]

என்றும்,

---

30. திருவாய்.—2.9:5.
31. யுத்த. மீட்சி—107.
32. யுத்த. நாகபாசப்.—222.
33. பெரி. திரு.—4.1:5.

ஞாலம் எல்லாம் அமுதுசெய்து
நான்மறையும் தொடராத
பாலகன்ஆய் ஆல்இலையில்
பள்ளிகொள்ளும் பரமன் [34]

என்றும் கூறுவர் திருமங்கை மன்னன்.

பாலகனாய் ஆல்இலைமேல்
பைய உலகெல்லாம்
மேல் ஒருநாள் உண்டவனே! [35]

என்று பேசுவர் பேயாழ்வார்.

பாலனாய் ஏழ் உலகு
உண்டு பரிவுஇன்றி
ஆல்இலை அன்னவசம்
செய்யும் அண்ணலார். [36]

என்று இயம்புவர் நம்மாழ்வார். இவற்றையெல்லாம் நினைவிற்கொண்டு, மூலபலத்தையெல்லாம் ஒழித்துத் தனித்து நின்றுள்ள இராமன் நிலையை,

அண்டமாக் களமும் வீந்த
அரக்கரே உயிரும் ஆகக்
கொண்டதோர் உருவம் தன்னால்
இறுதிநாள் வந்து கூட
மண்டுநான் மறித்துக் காட்ட
மன்னுயிர் அனைத்தும் வாரி
உண்டவன் தானே ஆன
தன்னொரு மூர்த்தி ஒத்தான். [37]

[மாகளம் - பெரிய போர்க்களம்; இறுதிநாள் - யுக முடிவுநாள்.]

---

34. பெரி. திரு.—4.1:6.
35. மூன். திருவந்.—33.
36. திருவாய்.—4 2:1.
37. மூலபல வதை—232.

என்று காட்டுவன் கம்பநாடன். அரக்கரை எல்லாம் மடியச் செய்து அங்குத் தனித்து நின்ற இராமன் யுக முடிவில் எல்லா உயிர்களையும் வாயுட் கொண்டு நிற்கும் திருமாலை யொத்து நின்றான் என்ற கருத்தினை இப் பாடல் விளக்கி நிற்கின்றது.

மேலும், திருமால் அன்னமாய் இருந்து, அருமறைகள் உரைத்ததை ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் குறிப்பிடுவர். திருமங்கையாழ்வார்,

முன்உல கங்கள்ஏழும் இருள்மண்டி உண்ண
முதலோடு வீடும் அறியாது
என்இது வந்தது?என்ன இமையோர் திசைப்ப
எழில்வேதம் இன்றி மறைய
மின்னும்வா னவர்க்கும் முனிவர்க்கும் நல்கி
இருள்தீர்ந்து இவ்வையம் மகிழ
அன்னம்அது ஆய்இருந்து அங்குஅற நூல்உரைத்த
அதுநம்மை ஆளும் அரசே.[38]

[மண்டி உண்ண - வியாபிக்கும்படி; வீடு - முடிவு; திசைப்ப - திகைத்து நிற்க; உரைத்த - அருளிச் செய்த; அது - அந்தப் பரஞ்சோதி; அரசு ஆளும் - அடிமை கொள்ளும்]

என்று ஹம்சாவதார வரலாற்றை விரித்துப் பேசுவர். இந்த வரலாற்றைக் கம்பநாடன் நினைவிற்கொண்டு விராதன் வாய் மொழியாக,

அன்னமாய் அருமறைகள்
அறைந்தாய்நீ அவையுன்னை
முன்னம் ஆர் ஓதுவித்தார்
எல்லாரும் முடிந்தாரோ?[39]

---

38. பெரி. திரு.—11.4:8.
39. ஆரணி. விராதன்வதை,—60.

என்ற பாடலில் பேசுவன். இதில் நாராயணனே ஊழிக்குப் பிறகும் நிலைபெற்று நிற்பவன் என்ற கருத்து வலியுறுத்தப் பெற்றுள்ளமையைக் காணலாம்.

2. சில நிகழ்ச்சிகள் : பல்வேறு தத்துவக் கருத்துகளைக் கம்பநாடன் ஆழ்வார் பாசுரங்களிலிருந்து எவ்வாறு எடுத் தாண்டுள்ளான் என்பதை மேலே கண்டோம். இனி, ஆழ்வார் பாசுரங்களிலிருந்து சில நிகழ்ச்சிகளை எடுத்து எவ்வாறு கையாண்டுள்ளான் என்பதை எடுத்துக்காட்டுவோம்.

'ஏழை, ஏதலன், கீழ்மகன்' என்னாது
இரங்கி, மற்றுஅவர்க்கு இன்னருள் சுரந்து
'மாழை மான்மட நோக்கி உன்தோழி,
உம்பிஎம்பி' என்று ஒழிந்திலை : உகந்து
'தோழன் நீஎனக்கு, இங்குஒழி' என்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட
ஆழி வண்ண!நின் அடியிணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங் கத்து அம்மானே![40]

*[ஏதலன் - யாதொரு சம்பந்தமும் இல்லாதவன்; மாழை - பேதமைக் குணம்; எம்பி உம்பி - என் தம்பி உன்தம்பி; ஒழிந்திலை - விட்டிடாத வனாய்]*

இது கானவர் தலைவனான குகப்பெருமானுக்கு வானவர் தலைவனான இராமபிரான் திருவருள் புரிந்த செயலில் ஈடு பட்டு, அத் திருவருள் தன்பாலும் சுரக்கவேண்டும் என்று வேண்டுகின்றார் பரகாலன். குலத்திலும் செயலிலும் குணத் திலும் குறையொன்றையும் பாராமல் அவன் கொண்ட அன்பே காரணமாக அவனிடம் இரங்கியருளின கருணை யுள்ளத்தை தன் நெஞ்சில் நிறுத்திப் பேசுகின்றார் ஆழ்வார். அசோகவனத்தில் அரக்கியர் கூட்டத்திடையே சீதை வருந்தியிருக்கும் நிலையில் பல எண்ண அலைகள் அவள்

40. பெரி. திரு.—5.8:1.

மனத்தில் எழுகின்றன. அவற்றுள் ஒன்று குகனோடு தோழமை கொண்டது. கம்பன் இதனை,

ஆழ நீர்கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு 'எம்பிநின் தம்பி; நீ
தோழன்; மங்கை கொழுந்தி' எனச்சொன்ன
வாழி நண்பிணை உன்னி மயங்குவாள்.[41]

[அம்பி - தோணி; கடாவிய - செலுத்திய; உன்னி - நினைந்து; வாழி என்பது இங்கு அசை]

என்று போற்றுவன். ஆழ்வார் பாசுரங்களில் கவிஞன் ஆழங்கால் பட்டதனால் இவ்வாறு பாடத் தோன்றுகிறது. இச்செய்தி வான்மீகத்தில் இல்லை என்பதும் ஈண்டு கருதத் தக்கது.

மந்தரை என்று பெயர் பெற்ற கூனி என்ற பாத்திரமும் வான்மீகத்தில் காணப்பெறவில்லை. இராமன் கூனியின் முதுகில் உண்டை தெறித்த நிகழ்ச்சியில் ஆழ்வார்கள் ஈடுபட்டுப் பேசுகின்றனர்.

கொண்டை கொண்ட கோதைமீது
தேன்உலாவு கூனிகூன்
உண்டை கொண்டு அரங்கவோட்டி
உள்மகிழ்ந்த நாதன்[43]

[கொண்டை - மயிர் முடி; கோதை - மாலைதேன்; வண்டுகள்; கூன் - முதுகின் வளைவு: அரங்க ஓட்டி - அமுக்கி]

என்று சிறுவன் இராமன் கூனியிடம் செய்த சிறு குறும்பில் ஆழங்கால் படுவர் திருமழிசையாழ்வார். மேலும் இவர்,

கூன் அகம் புறத்தெறித்த கொற்ற
வில்லி அல்லையே[43]

41. கந்தர. காட்சி—23.
42. திருச்சந்த விருத்தம்—49.
43. ஷை—30.

என்று கூறுவதையும் காணலாம்.

> கூனே சிதைய உண்டைவில்
> திறத்தில் தெறித்தாய்[44]

என்று நம்மாழ்வாரும் இச் சிறுகுறும்பில் ஈடுபடுவர். திருமங்கையாழ்வாரும்,

> கூன்உலாவிய மடந்தைதன் கொடுஞ்சொலின்
> திறத்து, இனங் கொடியோடும்
> கான் உலாவிய கருமுகில் திருநிறத்தவன்[45]

> [கூன் உலாவிய - கூன்ஏறின; இளங் கொடி . சீதாப் பிராட்டி; கான் - காடு; முகில் - மேகம்]

என்று இந்த நிகழ்ச்சியில் ஈடுபட்டுரைப்பர். திருமுடி கவித் தற்குக் கட்டின காப்பே கானுறை வாழ்க்கைக்குக் கட்டின காப்பாம்படி புறப்பட்டுக் கானகமே சென்றவிடத்திலும் மகிழ்ச்சியே விஞ்சித் திருமேனி புகர்பெற்றிருந்தனால் 'கரு முகில் திரு நிறத்தவன்' என்று சிறப்பித்தமை அறிதற்பாலது. பெரியாழ்வாரும்,

> கூன்தொழுத்தை சிதகுரைப்பக்
> கொடியவள்வாய்க் கடியசொற்கேட்டு
> ஈன்றுஎடுத்த தாயரையும்
> இராச்சியமும் ஆங்குஒழிய
> கான்தொடுத்த நெறிபோகிக்
> கண்டகரைக் களைந்தான்[46]

> [தொழுத்தை - பணியாள், அடிமைப் பெண்; சிதகு - விபரீதம்; கொடுத்த - அடர்ந்திரா நின்ற; கண்டகர் . முள்ளைப் போன்ற அரக்கர்கள்]

---

44. திருவாய்.
45. பெரி. திரு—3.1:6.
46. பெரியாழ். திரு.—4.8:4.

என்று கூறுவர். இந்தச் சிறு நிகழ்ச்சியில் கம்பநாடனும் உள்ளத்தைப் பறிகொடுத்து,

பண்டைநாள் இராகவன்
பாணி வில்லுமிழ்
உண்டையுண் டதனைத்தன்
உள்ளத்து உள்ளுவாள்.[47]

[பாணி - கையிலுள்ள; உமிழ் - வெளிப்படுத்திய; உண்டை - திரளை; உண்டதனை - மேற்பட்ட தனை; உள்ளுவாள் - நினைப்பாள்]

என்று பேசுவன். விளையாட்டே வினையான செய்தி இதி காசச் சிறப்பு பெற்றதைக் கண்டு இறும்பூது எய்துகின்றோம்.

காகாசுரன் வரலாறும் ஆழ்வார்கள் பாடல்களில் சிறப்பிடம் பெற்றுள்ளது. அநுமன் சீதைக்குக் கூறிய அடையாளங்களுள் ஒன்றாக இதனைப் குறிப்பிடுவர் பெரியாழ்வார்.

சித்திரகூ டத்திருப்பச்
சிறுகாக்கை முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய
அனைத்துலகும் திரிந்தோடி
'வித்தகனே! இராமாவோ!
நின்அபயம்' என்றுஅழைப்ப
அத்திரமே அதன்கண்ணை
அறுத்ததும்ஓர் அடையாளம்[47]

[சிறுகாக்கை - காக்கை வடிவமாக வந்த சயந்தன்; அத்திரம் - நான்முகன் கணை]

என்ற பாசுரத்தில் இந்நிகழ்ச்சி நுவலப்பெற்றிருத்தலைக் கண்டு மகிழலாம். இந்த நிகழ்ச்சியைக் கம்பன் பல இடங் களில் சுட்டி மகிழ்வான்.

---

46. அயோத். மந்தரை சூழ்ச்சி—41.
47. பெரியாழ். திரு.—3.10:6.

அசோகவனத்தில் சீதாப்பிராட்டி இந் நிகழ்ச்சியை நினைந்து போற்றுவதாகக் காட்டுகின்றான் கம்பன்,

> ஏக வாளிஅவ் இந்திரன் செம்மல்மேல்
> போக ஏவி யதுகண் பொடித்தநாள்
> காக முற்றும்ஓர் கண்ணில ஆக்கிய
> வேக வென்றியைத் தன்தலைமேல் கொள்வாள்.[48]

[ஏகம் - ஒப்பற்ற; வாளி – அம்பு; இந்திரன் செம்மல் - சயந்தன்; பொடித்த - போக்கடித்த; காகம் முற்றும் - எல்லாக் காகங்களும்; கண் இல; கண் இல்லாதனவாக; வேகம் - உக்கிரமான; தலை மேற்கொள்வாள் - கொண்டாடுவாள்]

என்று தன் பாடலில் குறிப்பிடுவன். இதுவும் அசோகவனத்தில் இருந்தபோது சீதை முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சிகளை எண்ணுவதைக் காட்டுவது. இந்த நிகழ்ச்சியைச் சற்று விரிவாகவே ஐந்து பாடல்களில்[48] சீதை அநுமனுக்குக் கூறும் அடையாளங்களுள் ஒன்றாகக் கூறுகின்றாள். இந்த நிகழ்ச்சி இராமனும் சீதையும் தனிமையான ஓர் இடத்தில் இருந்த போது நடைபெற்றதால் இலக்குவனும் அறியான்.

இங்ஙனம் பல்வேறு எடுத்துக் காட்டுகளால் கம்பராமாயணத்தில் ஆழ்வார் பாசுரங்களின் தாக்கம் மிக்குள்ளது என்பதை விளக்கலாம். இராமாயணத்தின் பல பாடல்கள் ஆழ்வார்களின் பாசுரங்களால் புதுமெருகேறிப் பொலிவதைக் காவியத்தை ஆழ்ந்து கற்பார் நன்கு அறிவர். ஆழ்வார்களின் பக்திப் பெருக்கு, அவர்கள் புலப்படுத்தும் தத்துவ – சமயக் கருத்துகள், பல்வேறு சிறு நிகழ்ச்சிகள் கம்பன் காவியத்தில் ஊடுருவிக் கிடப்பதும் அவர்கட்கு நன்கு புலனாகும். இதனால் 'கம்பநாட்டாழ்வார்' என்று மக்கள் அவனுக்குத் திருநாமம் சூட்டியதும் மிகப் பொருத்தம் என்பது தெளிவாகும்.

---

48. சுந்தர. சூளாமணி—(77—81).
49. சுந்தர. காட்சி—28.

# 18. ஆழ்வார்களின் சமுதாயக் கண்ணோட்டம்*

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க காலத்தையும் (கி.மு. 500—கி.பி. 200) நீதிநூல் காலத்தையும் (கி.பி. 100—கி.பி. 500) அடுத்துத் தெளிவாகக் காணப்பெறுவது பக்தி இயக்கக் காலம் (கி.பி. 600—கி.பி. 900) ஆகும். கி.பி. ஏழு, எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் சைவ சமயப் பெரியார்களான நாயன்மார்களும் வைணவ சமயப் பெரியார்களான ஆழ்வார்களும் தோன்றிப் பக்திப் பாடல்கள் பாடி ஊர் ஊராகச் சென்று தம்தம் சமயங்களைப் பரப்பி வந்தனர். நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த பௌத்த சமண சமயங்களை எதிர்த்து மக்களைத் திரட்டுவதற்குக் கலை நயத்துடன் கூடிய பக்திப் பாடல்கள் நன்முறையில் பயன்பட்டன. ஆழ்வார்களில் பலர் இசையோடு பாடல்களைப் பாடி கோயில்தோறும் இறைவனை வழிபட்டனர்.

'பண் ஆர் தமிழ்',[1] 'செயிர் இல் சொல் இசைமாலை'[2] 'பால்ஏய் தமிழர் இசைகாரர், பத்தர் பரவும் ஆயிரத்தின்'[3]

---

* பல்கலைக்கழக மானியக் குழுத் திட்டப்படி மதுரைக் கல்லூரி (தன்னாட்சி)யில் 26-2-82 அன்று ஆற்றிய சொற்பொழிவு.

1. திருவாய்.—9.8:11.
2. ஷெ—3.2:11.
3. ஷெ—1.5:11.

என்ற திருவாய்மொழியில் வரும் சொற்றொடர்களும் 'விழுமிய இசையினொடு ஒலி சொலும் அடியவர்'[4] என்ற பெரிய திருமொழித் தொடரும் இப் பாசுரங்கள் இசையுடன் பாடப்பெறுபவை என்பதை வலியுறுத்தும். திருவாய்மொழி முழுமைக்கும் பெரிய திருமொழியில் கிட்டத்தட்ட முக்கால் பங்கு அளவிற்கும் பண்-தாளக் குறிப்புகள் அமைந்திருத்தல் கவனித்தற்குரியது.

...குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் தன்னைத் திரிவனே[6]

என்ற மதுரகவிகளின் பாசுரப் பகுதியும்,

பண்ணார் பாடல் இன்கவிகள்
யானாய்த் தன்னைத் தான்பாடி
தென்னா என்னும் என்அம்மான்
திருமா லிருஞ்சோ லையானே.[7]

என்ற நம்மாழ்வாரின் திருவாக்கும் ஆழ்வார்கள் இசையோடு பாடினர் என்பதைப் புலப்படுத்தும். இசை மக்களை ஒன்றாகப் பிணைக்கும் பெருவிசை என்பதை நாம் அறிவோம்.

சமணர்களும் பௌத்தர்களும் புலனடக்கத்தையும் உண்ணா நோன்பு இன்ப வெறுப்பு முதலியவற்றையும் மக்களிடையே வற்புறுத்திக்கொண்டிருந்தனர். துறவறத்தையே பெருமையோடு பேசி அதனை மக்களிடையே பேரளவில் பரப்ப முனைந்தனர். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தியையே போற்றினர்; அதற்கு இசைவாக இருக்கும் ஆடல் பாடல் முதலான கலைகளைப் போற்றிப் பாராட்டினர். இல்லற நெறியைப் பின்பற்றி அதில் இன்ப முற்றிருந்தாலும், எந்தத் தொழிலை மேற்கொண்டிருப்

4. பெரி. திரு.—8.7:10.
6. கண்ணிநுண்.—2.
7. திருவாய்.—10.7:5.

பினும் உள்ளத்தை இறைவனுக்கே வைத்து வாழ்க்கை நடத்தினால் அதுவே போதும் என்றனர். பலவகைக் கலைகளையும் வளர்க்கும் பண்ணைகளாகத் திகழ்வதற்கு அவர்களுடைய பக்தி இயக்கம் துணையாக அமைந்தது. மக்களிடையே அவர்களின் இயக்கம் பரவுவதற்குத் தமிழ்ப் பாடல்கள் இசையோடு அமைந்து பெருந் துணை புரிந்தன.

'ஆழ்வார்' என்ற சொல்லுக்கு 'இறைவனுடைய குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுபவர்கள்' என்று பொருள் கூறுவர். 'ஆழ்வார்' என்பதை 'ஆள்வார்' என்ற சொல்லின் திரிபாகக் கொண்டு 'நம்மை ஆள்பவர்' என்று பொருள் உரைப்பதும் உண்டு. இந்தப் பொருளில், ஆழ்வார்களும் 'ஆண்டவன் மீது மெய்யன்பு செலுத்தி நம்மை ஆளும் தலைவர்கள் ஆகின்றனர். பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமழிசையாழ்வார், தொண்டரடிப்பொடிகள், திருப்பாணாழ்வார், மதுரகவிகள், திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் என்று ஆழ்வார்கள் பன்னிருவர். வைணவர்களில் சிலர் ஆழ்வார்கள் பதின்மர் என்றும், சிலர் பதினொருவர் என்றும் கூறுவர். பதின்மர் என்போர் ஆண்டாள், மதுரகவி என்ற இருவரையும் சேர்க்காது கணக்கிடுகின்றனர். பதினொருவர் என்போர் இவ்விருவரில் ஒருவரைச் சேர்க்காது கணக்கிடுகின்றனர். ஆண்டாள் ஏனைய ஆழ்வார்களைப் போலல்லாது திருமாலைக் கணவராக வரிக்கின்றனர் என்பதை அவரைச் சேர்க்காது விடுவதற்கு ஒரு நியாயமாகக் காட்டுவர். மதுரகவியாழ்வார் ஏனைய ஆழ்வார்களைப்போல் திருமால் திருவடிகளில் பக்தி பாராட்டாது, அனைத்தையும் குருகூர்ச் சடகோபராகவே கொண்டு அவர்பால் பக்தி செலுத்தி வந்ததை அவரைச் சேர்க்காது விடுவதற்கு ஒரு நியாயமாகக் காட்டுவர். பெரும்பாலோர் ஆழ்வார்களைப் பன்னிருவர் என்றே கொள்ளுகின்றனர். இவர்கள் பாடியருளிய பாசுரங்கள் 4000. அவற்றின் விவரம் :

| | |
|---|---|
| பொய்கையார் | 100 |
| பூதத்தாழ்வார் | 100 |
| பேயாழ்வார் | 100 |
| திருமழிசையார் | 216 |
| நம்மாழ்வார் | 1296 |
| மதுரகவியாழ்வார் | 11 |
| குலசேகராழ்வார் | 105 |
| பெரியாழ்வார் | 473 |
| ஆண்டாள் | 173 |
| தொண்டரடிப் பொடிகள் | 55 |
| திருப்பாணாழ்வார் | 10 |
| திருமங்கையாழ்வார் | 1253 |
| திருவரங்கத்தமுதனார் | 108 |
| மொத்தம் | 4000 |

இராமாநுசரின் சீடரான திருவரங்கத்தமுதனார் பாடியருளிய இராமாநுச நூற்றந்தாயிதிலுள்ள 108 பாசுரங்களும் இவற்றுள் அடங்கியிருப்பது கவனிக்கத் தக்கது. இந்தப் பாசுரங்களில் ஆழ்வார்களின் சமுதாயக் கண்ணோட்டத்தைக் காணலாம்.

இன்றைய பேச்சில் ஆழ்வார்களின் சமுதாயக் கண்ணோட்டத்தைத் திருப்பள்ளி எழுச்சி, பாவைப் பாட்டு, அகத்திணை மரபுகள், புலவர்கட்கு அறிவுரை, நாட்டுப்பாடல்களின் தாக்கம், பழமொழிகளின் விரவல் என்ற ஆறுபகுதிகளில் ஆராய எண்ணியுள்ளேன்.

திருப்பள்ளியெழுச்சி : தொண்டரடிப் பொடி யாழ்வார் இத்தலைப்பில் பத்துப் பாசுரங்களடங்கிய ஒரு சிறு பிரபந்தத்தை அருளியுள்ளார். இலக்கியம் வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டும் கண்ணாடி என்று கூறுவர் மேனாட்டுத் திறனாய்வாளர். மேலும் அவர்கள் இலக்கியம் வாழ்க்கையினின்று மலர்கின்றது; அது வாழ்க்கைக்கு உரியது;

அது வாழ்க்கைக்காகவே நிலைபெற்றுள்ளது என்றும் தம் கருத்தை நிலை நாட்டுவர். இந்த அடிநபடையில் கருதினால் பண்டைத் தமிழர்களிடையே இருந்து வந்த ஒரு மரபே 'திருப்பள்ளி எழுச்சி' என்ற இப் பிரபந்தம் தோன்றுவதற்குக் கருவாய் அமைந்தது என்று கருத இடமுண்டு (உறங்குகின்ற அரசனை அதிகாலையில் துயிலெழுப்புதல் என்ற ஒரு முறை பண்டிருந்தே தமிழ்ச் சமுதாயத்தில் நிலவி வந்தது. தொல் காப்பியர் இதனைத் 'துயில் எடை' என்ற புறத்திணைத் துறையாகக் காட்டுவர். துயிலெடை - துயிலினின்றும் எழுப்புதல்; அதாவது பள்ளி யெழுச்சி.)

> தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
> சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்[8]

என்ற தொல்காப்பிய நூற்பாப் பகுதியால் இஃது அறியப் பெறும். இது பாடாண் திணையைப்பற்றிய நூற்பா. தமது வலியாலே பாசறைக்கண் யாதொரு மனக்கவர்ச்சியின்றித் துயிறன் அரசர்க்கு நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் அவரைத் துயிலெழுப்புவர். "இத்துறை அரசர்க்கு உரியதாய்த் தொன்று தொட்டு வரும் என்பதூ உம், சூதர் மாகதர், வேதாளிகர், வந்திகர் முதலாயினோருட் சூதரே இங்ஙனம் வீரத்தால் துயின்றாரைத் துயிலெழுப்புவர் என்பதூஉம், யாண்டும் முன்னுள்ளோரையும் பின்னுள் ளோரையும் பிறரையும் கூறப்படுமென்பதூஉம் கொள்க" என்ற நச்சினார்க்கினியரின் விளக்கமும் ஈண்டு அறியப் பெறும். 'ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற், காலம் மூன்றொரு கண்ணியவரும்' புறத்திணைகளுள் ஒன்றாகிய இத்துயிலெடை நிலை, உறங்கலும் விழித்தலும் உடையராய் உணர்த்த உணரும் இயல்பினராகிய அரசர் முதலிய மாந் தர்க்கே உண்மையாக உரித்தாகும். 'புறத்திணை வெண்பா மாலை'யின் நூலாசிரியராகிய ஐயனாரிதனாரும்,

---

8. தொல். பொருள். புறத். நூற்பா—36.

அடுதிறன் மன்னரை யருளிய வெழுகெனத்
தொடுகழன் மன்னனைத் துயிலெடுப் பின்று[9]

என்று இதனை விளக்குவர்.

பக்தி இயக்கக் காலத்தில் சமுதாயத்தில் நிலவிவந்த இவ்வழக்கம் இறைவனை எழுப்புவதாக அமைந்தது.

உறங்கலும், விழித்தலும் இன்றி 'உறங்குவான்போல் யோகு செய்வானாய்' தானே முழுதுணரும் இயற்கை உணர்வினனாய்த் திகழும் இறைவன்மீது இவ்வழக்கம் திருப்பள்ளி எழுச்சியாகப் பரிணமித்து உள்ளது. 'அரங்கத்து அரவணைப் பள்ளியானை', 'ஆம் முதல்வன் இவன்' என்று தேறிய அப்பனை உறங்கி விழிக்கும் இயல்பின ராகிய மாந்தர் துயில் எழுங்காலத்துத் தொழுது கொண்டு எழுதல் இன்றியமையாததாதலின், 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கித்' துயிலெழும் வழிபாட்டு நெறிமுறையினை மாந்தர்க்கு அறிவுறுத்தும் நோக்கத்துடன் ஆழ்வாரால் அருளிச்செய்யப் பெற்றது 'திருப்பள்ளி யெழுச்சி' என்னும் இச் சிறு பிரபந்தம். தூங்கி விழிக்கும் இயல்பினராகிய வேந்தர் முதலாயினாரை எழுப்பும் 'துயிலெடை நிலை' என்னும் துறையினும் இது வேறுபட்டது என்பது புலனாக இதனைச் சான்றோர் 'துயிலெடை நிலை' என்னாது 'திருப் பள்ளி யெழுச்சி' எனத் தொன்று தொட்டு வழங்கி வருவா ராயினர் என்பது ஈண்டு அறியத்தக்கது.

நீறணிந்தார் அகத்திருளும்
நிறைகங்குற் புறத்திருளும்
மாறவரும் திருப்பள்ளி
யெழுச்சியினில்[10]

என வரும் சேக்கிழார் பெருமான் வாய்மொழியில் காணப் பெறும் இந் நுட்பம் ஆழ்வார் 'திருப்பள்ளி யெழுச்சி'க்கும்

9. புறப்பொருள் வெண்.—197.
10. பெ. புரா. திருநாவுக்.—68.

எல்லாவற்றானும் பொருந்தும். முன்னிலைப் பரவலாக அமைந்த இப் பிரபந்தத்தில் "பொன்னி அணி அரங்கத்து அரவணையில் பள்ளி கொள்ளும் மாயோனை" ஆழ்வார் பாசுரங்கள் தோறும் எழுப்புதலைக் கண்டு களிக்கலாம்; நாமும் பாடி அவ்வாறு எழுப்புதலில் பங்கு பெறலாம். இதனை 'இராஜோபசாரம் போலச் செய்கிறபடி யென்று சமாதானம் காண்க' என்பர் வியாக்கியாதர்.

அரசரைத் துயில் உணர்த்துவதுபோல அரசர்க்கெல் லாம் அரசராகிய அரங்கநகர் அப்பனை,

> திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
> திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
> கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டு[11]

களிக்கின்றார் ஆழ்வார். இந்த எக்களிப்புதான் அற்புத மான திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்களாக மலர்கின்றன. ஏழுமலையான் திருச் சன்னிதியில் நாடோறும் வைகறையில் சுப்ரபாதம் பாடப் பெறுவது போல் 'திருப்பள்ளி யெழுச்சி' ஒவ்வொரு திருமால் திருக்கோயில்களிலும் பாடவேண்டிய தொன்றாகும். இவ்விடத்தில் மணிவாசகப் பெருமானின் 'திருப்பள்ளி யெழுச்சியும்' பாரதியாரின் திருப்பள்ளி யெழுச்சி யும் நினைவு கூரத் தக்கவை.

இனி பாசுரங்களில் சொல்லோவியங்களாகக் காட்டப் பெறும் வைகறைக் காட்சிகளை மானசீகமாகக் கண்டு களிக் கின்றோம். விண்வெளியெங்கும் முத்துப் பந்தல் போட்டது போன்ற விண்மீன் கூட்டம் கருகிவிட்டது. இரவு முழுவதும் அரசோச்சின தண்மதியம் ஒளிமழுங்கியது. பரந்த இருட்பட லமும் விலகியது. கிழக்குத் திக்கில் உதயகிரியின் கொடுமுடி யிலே பகலவன் தோன்றுகின்றான். வானவர் ஏற்றி வைத்த

---

11. பெரு. திரு.—1:1.
12. அரங்கனைத் தவிர வேறு தல எம்பெருமானைப் பாடாத இவரைப் 'பத்தினியாழ்வார்' என்று குறிப்பிடுவர் வைணவர்கள்.

மங்கல விளக்குப் போல், ஒளிக்கதிர்கள் திசையெங்கும் பரவுகின்றன. தாமரை முதலான பூக்கள் மலர்கின்றன. அப்படியே தொண்டரடிப் பொடிகளின் முகமும் மலர்ச்சி பெறுகின்றது. வண்டுகள் மதுவுண்டு இன்னிசை எழுப்பு கின்றன. முல்லை மலர்களின் நறுமணத்தை அளைந்து வரும் காலைக் காற்று ஆழ்வார் முகத்தில் சில்லென்று வீசு கின்றது. இடையர்கள் மாடுகளை மேயவிடுகின்றனர். அவர் களுடைய புல்லாங்குழலின் இன்னோசையும், எருதுகளின் கழுத்தில் கட்டியுள்ள மணிகளின் ஓசையும் அவர் செவியில் விழுகின்றன. நீராடிய மகளிர் கூந்தலைப் பிழிந்து உதறிக் கொண்டே கரையேறுகின்றனர். கீழ்வானம் வெள்ளென்று தோன்றியவுடன் பறவையினங்களும் கிளம்பி காலைக் கதிர வனை—எழு ஞாயிற்றை—வரவேற்கின்றன. தொண்டரடிப் பொடியாழ்வாரும்,

அரங்கத் தம்மா!பள்ளி எழுந்தரு ளாயே!
எம்பெரு மான்!பள்ளி எழுந்தரு ளாயே!

என்று முடிவு பெறும் பத்துப் பாசுரங்களால் எம்பெரு மானைத் துயில் எழுப்புகின்றார்.

குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித்
தென்திசை இலங்கை நோக்கிக்
கடல் நிறக் கடவுள் எந்தை
அரவணைத் துயிலுமா கண்டு[13]

ஞானக் கதிரவனாகிய ‘சூழ்புனல் அரங்கத்தானுக்குப்’ பூபாளப் பண்ணில் பொங்கி யெழும் உணர்ச்சியுடன் திருப்பள்ளி எழுச்சி பாடிக் களிக்கின்றார் ஆழ்வார். இது நாட்டையே உறக்கத்தினின்றும் விழிக்கச் செய்யும் பாடல் என்று கருதுதல் வேண்டும்.

---

13. திருமாலை.—19.

**பாவைப் பாட்டு :** சமுதாய நோக்காக அடுத்து நாம் காண இருப்பது ஆண்டாளின் திருப்பாவை. இதுவும் பண்டிருந்து இல்லறத்தார் நிகழ்த்தி வந்த நோன்புகளில் ஒன் றாகிய 'மார்கழி நோன்பு' பற்றிக் கூறும் மகளிர் பாடல் ஆகும். சமுதாயத்தில் பல்லாண்டுக் காலமாக நிலவி வந்த நோன்பு பாவைப் பாட்டில் பாடு பொருளாக இடம் பெறு கின்றது. 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில்' அதி காலையில் திருமணம் ஆகாத மகளிர் ஒருவரை யொருவர் துயில் எழுப்பி, குழுக்களாகக் கூடி, பொய்கைக் கரைக்குச் சென்று, நீராடி, பாவை வைத்து வழிபாடு நடத்திப் பாடுவது பாவைப் பாட்டாகும். மழை பெய்து நாடு நலம் பெறுவதற் காகவும், தமக்கு நல்ல கணவர் வாய்த்துத் திருமணம் நடை பெறுவதற்காகவும் கன்னிப் பெண்கள் அவ்வாறு வைகறை யில் நீராடி நோன்பு நோற்பது பழங்கால வழக்கமாகும். பக்தி இயக்கக் காலத்தில் அது கடவுள் வழிபாட்டோடு ஒன்றி அமைந்து விட்டது. ஆண்டாளின் 'திருப்பாவை'யும் மணி வாசகப் பெருமானின் 'திருவெம்பாவை'யும் அவ் வகையில் அமைந்த பாடல்களாகும்.

திருப்பாவை வியாக்கியானத்தின் தொடக்கத்தில் பெரிய வாச்சான் பிள்ளை மார்கழி நோன்புபற்றிக் குறிப்பிடுவது: "இந் நோன்புக்கு மூலம் என்னெனில், மீமாம்சையிலே ஹோளாதி கரண நியாயத்தாலே[14] சிஸ்டாசார சித்தம். 'மேலையார் செய்வனகள்' (திருப். 26) என்று ஸ்ரீ ஆண்டாள் தானும் அருளிச் செய்தாள்." இதனால் மார்கழி நோன்புக்கு வேத விதி இல்லை என்பதும், ஆன்றோர் அநுட்டானமே இதற்கு மூலம் என்பதும் பண்டையோர் கொள்கை என்பது நன்கு விளங்கும். இந் நோன்புபற்றிப் பெரியவாச்சான் பிள்ளை தரும் குறிப்பு கவனத்திற்குரியது; 'கோகுலத்திலுள்ள ஆடவர்கள் மழை பெய்யாக் குறையைப் போக்க வேண்டிக்

---

14. வேதத்தால் விதிக்கப் பெறாதிருப்பினும் வசந்தோத்ச வாதிகள் மேலோர் வழக்காதல்பற்றி வேத விகிதமென்று குறித்துணரும் நெறி.

கண்ணனைத் தலைமையாக நியமித்துத் தங்கள் பெண்களை மார்கழி நோன்பை நோற்கச் சொன்னார்கள். அம் மகளிர் அதற்கிசைந்து பெருமானையும், தோழிமார்களையும் அதிகாலையில் துயிலுணர்த்தி அழைத்துக்கொண்டு, யமுனா நதியில் மார்கழி நீராடி நோற்று, கண்ணபிரானைக் கணவனாகப் பெறும் தங்கள் நோக்கத்தை அடையப் பெற்றனர்' என்பது. ஆனால் இவ்வரலாற்றுக்கு அவ்வுரையாளர் நூற்சான்று ஒன்றையும் காட்டிற்றிலர். ஆயினும், நாம் ஈண்டு மூன்று சான்றுகளைக் காட்டலாம்.

சான்று 1: ஸ்ரீமத் பாகவத்தில்[15] கண்ணன் கோபியர் துகில் கவர்ந்த வரலாறு கூறும் தொடக்கத்தில் இந் நோன்பு பற்றிய செய்திகள் கூறப்பெறுகின்றன. "கோகுலத்து மகளிர் ஏமந்த ருதுவின் முதல் மாதத்தில் (மார்கழியில்) காத்யாயனீ நோன்பைத் தொடங்கி அவிசைப் புசித்துக் கொண்டு அதனை நடத்தி வந்தனர். அருணோதயத்தில் எழுந்து யமுனையாற்றில் நீராடி ஈர நுண்மணலால் கார்த்தியாயனீ தேவியின் உருவத்தை அமைத்து சந்தனம், மலர், தூபம், தளிர், பழம் இவற்றாலும் சிறந்த நைவேத்தியங்களாலும் தேவியைப் பூசித்தனர். அவர்கள் நோக்கம் கண்ணனை நாயகனாக அடைவது. ஒரு திங்கள் இந் நோன்பை நோற்ற பின்னர் ஒரு நாள் அருணோதயத்தில் எழுந்து அவரவருடைய தோழிமார்களின் பெயரைச் சொல்லி அழைத்து ஒருவரையொருவர் கைகோத்துக்கொண்டும், கண்ணன் சரிதங்களைப் பாடிக்கொண்டும் நடந்து சென்றனர். யமுனையாற்றின் ஒரு பக்கமாகச் சென்று, வழக்கப்படித் தங்கள் ஆடைகளை அவிழ்த்து வைத்துவிட்டுக் கண்ணனை நினைந்தவண்ணம் ஆற்றில் நீராடுவாராயினர். இதனை யறிந்த கண்ணன், அம் மகளிர் துகில்களை யெல்லாம் கவர்ந்துகொண்டு அருகிலிருந்த கடம்ப மரத்தில் ஏறி நின்றான். நீராடி முடித்த பெண்கள் 'ஆடையின்றி வாடையின் மெலிந்து, கையது கொண்டு மெய்யது பொத்திக்' கண்ணனிடம் வந்து தங்கள்

15. ஸ்ரீமத் பாகவதம், தசம ஸ்கந்தம், அத்தி.—22.

துகில்களைத் தருமாறு வேண்டினர். கண்ணனும் அவர்களது அன்பைப் பலவகையாலும் சோதித்து முடிவில் அவர்கள் துகில்களை அளித்தான். 'உங்கள் எண்ணம் இன்றிரவில் என்னுடன் கூடி விளையாடுவதால் நிறைவேறும்; எல் லோரும் கோகுலத்திற்குச் சென்றிடுவீர்' என்று பணித்தான்.

சான்று 2 : வையையாற்றின் சிறப்பைக் கூறும் பரிபாட லில்[16] ஆசிரியர் நல்லந்துவனார் இந் நோன்புபற்றிய சில புதிய செய்திகளைத் தெரிவிக்கின்றார். "சூரிய வெப்பந் தாக்காத கடைமாரியை யுடைய மார்கழி மாதத்தில் நிறைமதி நாளாகிய திருவாதிரையில் ஆகமங்களை யுணர்ந்த பூசகர் தெய்வத்திற்குத் திருவிழாவைத் தொடங்கினர். "பூமியானது மழைவளம் பெற்றுக் குளிர்வதாக" என்று சொல்லி அம்பா வாடலைச் செய்வதற்குக் கன்னிப் பெண்கள் கூடினர். சடங்கறிந்த முதிய பார்ப்பனிமார் நோன்பு நோற்கும் முறைமையைத் தெரிவித்தனர். மகளிர் பனியையுடைய அருணோதயத்தில் நீராடி, நீர்வாடை வீசுதலால் கரையில் தங்கியிருக்கும் அந்தணரது வேதாக்கினியை வணங்கியவராய் அதில் தம் ஈரத்தையும் புலர்த்தி நின்றனர். அவ்வந்தணர் வேள்வித் தீயிற் பெய்யும் அவிஸ்ஸானது, 'வையையையே! உனக்கு வாய்ப்புடையதாயிருந்தது. ஓலையைப் பிடித்துப் படிக்கும் இளைய ஆண் மக்களோடு காமக் குறிப்பில்லாத விளையாட்டைப் புரியும் கூட்டத்தாரகிய அச்சிறுமியர், புலன் களடக்கித் தீ முன்னர்ச் செய்யும் தவத்தை முன் (பிறவிகளில்) அடுத்தடுத்துச் செய்ததனாற் போலும் தாயருகாக நின்று தவமாகிய தைந்நீராடலை, வையையே! நின்னிடமாக வாய்க்கப்பெறுவாராயினர்; இதனை நீ கூறுவாயாக" என்பது நோன்புபற்றிய பாடற்பகுதியின் பொருளாகும்.

இப்பரிபாடற் பகுதியால் வையைக் கரையில் மார்கழி நீராடி நோற்கும் நோன்பு சங்க காலத்தில் கன்னிப் பெண் களிடம் பெருவழக்காயிருந்தமை தெளிவாகும். பாடலினால்

16. பரி. பா.—11.

'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில் இந் நோன்பு தொடங்கி நடைபெறுவதென்பதையும் உய்த்தறியலாம். இதில் 'அம்பாவாடல்' என்பதற்கு 'தேவியின் பொருட்டு நிகழ்த்தப்பெறும் நீராட்டு' என்று பொருள் கோடலே பொருத்தமுடைத்து.

திருப்பாவை கூறும் 'மார்கழி நீராடலைச்' சங்க நூல்கள்[17] 'தைந்நீராடல்' என்று கூறுகின்றன. இதற்கு அமைதி கூறுவது இன்றியமையாததாகின்றது. பௌர்ணமியும் திருவாதிரையும் மார்கழித் திங்கள் 15 ஆம் நாளிலேனும் அதன் பின்பேனும் ஒன்று சேர்வது இயல்பு. அமாவாசை யோடும் பௌர்ணமியோடும் மாதங்கள் முடிவு பெறுதலால் அவை முறையே அமிந்தம், பூர்ணிமாந்தம் என்னும் பெயர் கொண்ட இருவகை மாத முறைகள் வழங்கி வருகின்றன. பூர்ணிமாந்தம் என்ற முறைப்படி, மார்கழியிடையில் பௌர்ணமிக்குப்பின் வரும் மாதம்—மார்கழியின் பிற்பகுதி யும் தையின் முற்பகுதியும் ஆகும். அதனால் மார்கழி நீராட்டம், தைந்நீராட்டம் என்று இருவகையாகவும் அந் நீராடலைக் கூறுவது பொருத்தமாகின்றது. அதனால், மார்கழியில் நிகழ்த்தப்பெறுவதாகத் தெளிவாய் அறியப் பெற்றதைத் 'தைந்நீராடல்' என்று சங்க இலக்கியங்கள் வழங்குவதற்கு இதுவே காரணமாகும். எனவே, மார்கழி நோன்பு முற்காலத்தில் பூர்ணிமாந்த முறைப்படி அநுட்டிக் கப்பட்டதாதல் வேண்டும் என்பதும், ஆயினும் சௌரமானப் படி தை மாதமும் அதனுடன் கலந்து வருதலால் 'தைந் நீராடல்' என்று அதற்குப் பெயர் வழங்கியிருத்தல் வேண்டு மென்பதும் பெறப்படுகின்றன.

"சான்று 3 : பெண்பாற் பிள்ளைப் பாட்டின் செய்தி கூறும் பிங்கலந்தைச் சூத்திரத்துள் (1369) வரும் 'பனிநீர் தோய்தலும் பாவை யாடலும்' என்ற அடி தைந்நீராடிப் பாவை நோன்பு நோற்பதைப்பற்றியதாகவே கொள்ளத்

---

17. கலி. 59; நற். 22,80; ஐங்குறு. 84.

தரும். இந்தப் பிங்கலந்தைக் கூற்றால் ஐந்து முதல் ஒன்பது வயது வரையுள்ள சிறு கன்னியரே தைந்நீராடி நோற்றற் குரியர் என்பது பழைய விதியாதல் பெறப்படும்: நல்லந்துவ னாரது பரிபாடலிலும் காமக்குறிப்பில்லாத கன்னியர் நடத்தும் நோன்பாகவே கூறப்பெற்றிருத்தல் காண்க. ஆயினும், சங்க காலத்துக்குப் பிற்பட்ட காலத்தில் கன்னிய ரெல்லாராலும் இந் நோன்பு கைக்கொள்ளப்பெற்று வழங்கி வருகின்றது.

வட இந்தியா வேதாந்தத்தின் பிறப்பிடம்; தென் இந்தியா அதனைக் கலையாக்கியும் உரைகண்டும் துணை புரிந்த வளர்ப்புப் பண்ணை. வேதாந்தத்தைக் கலைகளாக்கி யவர்கள் ஆழ்வார் பெருமக்கள். பல்லவர்கள் ஆண்டகாலத் தில் வட இந்தியாவின் நாகரிகமும் கலைகளும் தென் இந்தியா வின் நாகரிகத்தோடும் கலைகளோடும் ஒற்றுமைப்பட்டுக் கலந்த காலத்தில் தோன்றியவர்கள் இவர்கள். எனவே, இவர்கள் பாசுரங்களில் அக்காலச் சமுதாயக் கண்ணோட்டம் நிழலிடுவதைக் காண்கின்றோம். எனவே, மார்கழி நோன்பின் பண்டைய செய்திகள் திருப்பாவையில் காணப்படுகின்றன. கன்னியர் நிகழ்த்திவந்த பரமன் அடிபாடுதல், நாட்காலே நீராடுதல், மை எழுதுதல், மலரிடுதல் இவற்றை மேற்கொள் ளாதிருத்தல் ஆகிய செயல்கள் குறிப்பிடப்பெறுகின்றன. (2); பாஞ்ச சன்னியம், பெரும்பறை போன்ற இசைகருவி களின் முழக்கமும், பல்லாண்டு இசைத்தல், கோலவிளக்கு கொடி விதானம் போன்ற விருதுகள் கூறப்பெறுகின்றன (26); நோன்பு முடிந்ததும் மகளிர் மேற்கொள்ளும் கோலமும் விருந்தும் தெரிவிக்கப்பெறுகின்றன (27); இந் நோன்பால் விளையும் பயன் மழைபெய்து நாடு செழித்தலும் ஆனிரைச் செல்வம் பெருகுதலும் ஆம் என்பதைப் பாசுரம் (3) குறிப்பிடு கின்றது; இந் நோன்பைக் கன்னியர் நோற்பதையும் அவர் தம் குறிக்கோளையும் பாசுரத்தில் (29) காண்கின்றோம். மார்கழி முழுவதும் நீராட்டத்திற்கு உரியதாயினும், திருவாதிரை நாளே அதற்குச் சிறந்த நாளாகக் கொள்ள

பட்டதை பரிபாடலாலும் திருப்பாவை, திருவெம்பாவை களாலும் அறிகின்றோம்.

அகத்திணை மரபுகள் : உலகியல் வழக்காகவும் நாடக வழக்காகவும் சித்திரிக்கப் பெறும் சங்ககால' இலக்கிய அகத்திணைக் கூறுகள் ஆழ்வார் பாசுரங்களில் இடம் பெற்றுத் திகழ்கின்றன. அவை கூறும் மெய்விளக்கக் கருத்துகள் ஒரு புறம் இருக்க, ஏனையவை உலகியலை யொட்டிச் சமுதாய நடைமுறைகளைப் பின்பற்றி அமைக்கப் பெற்றுள்ளன. இங்ஙனம் ஆழ்வார்கள் அமைத்துப் பாடியுள்ள காதல் துறைகளுள் தூது, அறத்தொடு நிலை, கட்டுவிச்சி குறி பார்த்தல், வெறி விலக்கு, உடன் போக்கு முதலியவை அற்புதமாக அமைந்துள்ளன. இவற்றுள் எல்லாம் ஆழ்வார்களின் சமுதாயக் கண்ணோட்டத்தைக் காணலாம். அனைத்தையும் விளக்குவதற்கு காலம் இடந் தராததால் ஒன்றிரண்டைமட்டிலும் விளக்குவேன்.

முதலில் 'தூது' துறைபற்றிய பாசுரங்களை நோக்கு வோம். நம்மாழ்வார் தம்மைப் பிராட்டி நிலையில் ஏறிட்டுக் கொண்டு நாரை, அன்னம், கிளி, பூவை, வண்டினங்களைத் தூது விடுவதாக அமைந்துள்ள பாசுரங்கள் பக்திச் சுவையும் இலக்கிய நயமும் செறிந்தவை. இவ்வாறு பறவைகளைத் தூதாக அனுப்புதல் தமிழ் நாட்டுப் பழமையான வழக்கு. ''கேட்குநபோலவும், கிளக்குநபோலவும் இயற்றுநபோலவும், அஃறிணை மருங்கினும் அறையப் படுமே'' என்ற இலக்கணத் தைப் பின்பற்றி அஃறிணைப் பொருள்கள் இவ்வாறு முன்னிலைப் படுத்திப் பேசப்பெறுகின்றன.

அம்சிறைய மடநாராய்!
அளியத்தாய்! நீயும்நின்
அம்சிறைய சேவலுமாய்
ஆஆஎன்று எனக்குஅருளி
வெம்சிறைப்புள் உயர்த்தார்க்கு
என்விடுதூதாய் சென்றக்கால்

வன்சிறையில் அவன்வைக்கில்
வைப்புண்டால் என்செயுமோ?[18]

என்ற பாசுரத்தில் நம்மாழ்வார் நாரையைத் தூது விடுதலைக் காண்க. இங்ஙனம் பல பாசுரங்களைக் காட்டலாம்.

'அறத்தொடு நிலை' என்ற துறைபற்றிய ஆழ்வார் பாசுரங்களை நோக்குவோம். தோழியும் தலைமகளும் அறத்தொடு பொருந்தவே நடந்திருப்பதாகக் காட்டுவது 'அறத்தொடு நிலை' என்பது. குட்ட நாட்டுத் திருப்புலியூர் எம்பெருமான்மீது நம்மாழ்வார் அருளியுள்ள திருவாய்மொழி[19] இத்துறையில் அமைந்துள்ளது. பராங்குசநாயகி மங்கைப் பருவம் எய்துகின்றாள். கணவனை நாடி அடைய வேண்டிய பருவமல்லவா இது? திருப்புலியூர் எம்பெருமானுடன் இயற்கைப் புணர்ச்சியும் நடைபெற்று விடுகின்றது. தலைவியின் உயிர்த் தோழியானவள் தலைவியின் உருவ வேறுபாட்டாலும் சொற்களின் வேறுபாட்டாலும் புணர்ச்சி உண்டானமையை ஒருவாறு அறிகின்றாள். தம் மகளின் உண்மை நிலையை அறியாத தாய் தந்தையர் இவளுடைய திருமணத்தை உறுதி செய்து மணமுரசும் அறைவிக்கின்றனர். அப்படி நடைபெறுவதை எப்படியாயினும் தடுத்தேயாக வேண்டும் என்பதைச் சிந்திக்கின்றாள் தோழி. தலைவியின் பெற்றோரும் மற்றோரும் தலைவியின் வடிவ வேறுபாட்டிற்குக் காரணம் யாதாக இருக்குமோ என்று ஆராயும் நிலையைக் காண்கின்றாள். தானும் அவர்களுடன் ஆராய்வதாகச் சேர்ந்துகொண்டு இதனை எப்படியாவது விலக்க வேண்டுமென்று உறுதி செய்கின்றாள். இந்த முறையைக் கூறுவதாக அமைந்ததே இத் திருவாய்மொழி. இஃது 'அறத்தொடு நிலையில்' அமைந்துள்ளது.[20]

---

18. திருவாய்—1. 4:1.
19. ஷெ—8.9.
20. இதன் விளக்கத்தை 'மலை நாட்டுத் திருப்பதிகள்'—கட்டுரை 9 இல் கண்டு தெளிக.

'வெறி விலக்கு' என்ற துறையை மட்டிலும் விளக்கி இத்துடன் இப் பகுதியைத் தலைக்கட்டுவேன்.

சின்மொழி நோயோ கழிபெருந்
 தெய்வம்; இந் நோய் இனதுஎன்று
இன்மொழி கேட்கும் இளந்தெய்வம்
 அன்றிது; வேல; நில்நீ;
என்மொழி கேள்மின், என் அன்னைமீர்!
 உலகேழும் உண்டான்
சொன்மொழி, மாலைஅந் தண்ணந்
 துழாய்கொண்டு சூட்டுமினே.[20]

என்பது நம்மாழ்வாரின் திருவிருவித்தப் பாசுரம். பாசுரம் நாடகப் பாணியில் அமைந்துள்ளது. நடு வீட்டின் ஒரு பக்கம் வெறியாடு களன் அமைத்து வேலன் வெறியாட்டத்திற்கு ஆயத்தமாகின்றான். மற்றொரு பக்கம் வெறியாடலைக் காண்பதற்காக அன்னையரும் 'அரி நரைக் கூந்தல் செம்முதுச் செவிலியரும்' பிறரும் குழுமியுள்ளனர். தோழியும் தலைவி யும் வேறோர் அறையில் உள்ளனர். வெறியாடலால் அல ராகுமே எனத் தலைவி மனம் கவல்கின்றாள்.

தாயரின் செயலைத் தடுப்பதற்காக நடு வீட்டிற்கே வந்து விடுகின்றாள் தோழி; வேலனை நோக்கி இவ்வாறு பேசு கின்றாள் : ''இந்த நங்கைக்கு இப்போது நேர்ந்துள்ள நோய் சிறு தெய்வ வடிவமாக வந்ததன்று; 'கூராழி வெண்சங்கேந்தி வரும்' கழிபெருந் தெய்வத்தால் உண்டானது. இத் திரு மாளிகை தேவாதந்தரபரர் புகும் திருமாளிகையன்று காண். ஆகவே, உன் வெறியாடலையும் நிறுத்துக; கடையையும் கட்டுக'[22] என்கின்றாள். உள்ளே குழுமியிருக்கும் பெண்கள் பக்கம் திரும்பி இவ்வாறு பேசுகின்றாள் : "நீங்கள் அகவை யில் மூத்தவர்கள்; நான் அகவையில் சிறியவளே யாயினும் என் சொற்களைக் கேட்பீர்களாக. உலகேழும் உண்டானின்

---

21. திரு விருத்.—20.
22. திருவாய்.—4.6:5.

திருநாமத்தை நாவினால் நவிற்றிக்கொண்டு, அவனது அழகிய தண்ணந்துழாயைச் சூட்டுவீர்களாக'' என்கின்றாள். ''ஒருங்காகவே உலகேழும் விழுங்கி உமிழ்ந்திட்ட பெருந் தேவன் பேர் சொல்லகிற்கில், இவளைப் பெறுதிரே'' என்று திருவாய்மொழியிலும் பேசுவர் இவ்வாழ்வார். ''நோயாளி கட்கு உட்செலுத்துவதொரு மருந்தும் மேனியில் பூசுவதொரு மருந்தும் பயன் படுத்துவதுபோல் எம்பெருமானது திரு நாமங்களை அவள் செவிவழியே செல்லும்படி உச்சரித்து, மேனிக்கு அவன் அணிந்துகொண்ட திருத்துழாய் மாலை யைக் கொணர்ந்து சூட்டுங்கள்'' என்று பரிகாரம் கூறு கின்றாள் தோழி.

புலவர்கட்கு அறிவுரை : ஆழ்வார்கள் காலத்தில் 'கூலிக் குப் பாடும்' புலவர்கள் மலிந்திருந்தனர். கல்வி நிரம்பிய புலவர்கள் வறுமையால் வாடிச் செல்வர்களை நாடிச் சென்று அவர்களின் புகழைப் பாடி, அவர்கள் தந்த சிறு பொருளைப் பெற்று மகிழ்ந்தனர். தங்கள் அருமையான கவிதைத் திறமையை இப்படி அற்பப் பொருளுக்காக விற்று வந்தது நம்மாழ்வாரின் உள்ளத்தில் வெறுப்பை விளை வித்தது. கூலிக்குப் பாடும் முறை எங்கணும் பெரு வழக்காக இருந்தமைமைக் கண்டு வெறுத்துச் சொன்னால் செல்வர் கட்கு விரோதமாக இருந்தது. ஆனாலும் சொல்லும் கடமை என்று உணர்ந்து ஆழ்வார் அந்தப் புலவர்கட்கு அறிவுரை கூறினார்.

சொன்னால் விரோதம்இது ஆகிலும்
சொல்லுவன் கேண்மினோ[23]

என்று தம் அறிவுரையைத் தொடங்குகின்றார். ''என் நாவி லிருந்து பிறக்கும் இனிய கவிதையை வேறொருவருடைய புகழைப் பாடுவதாகக் கொடேன். திருவேங்கட மலையி லுள்ள என் அப்பன் எம்பெருமான் இருக்கும்போது அவன் புகழைப் பாடாமல் வேறு ஒருவர்க்கு என் கவிதைத் திறமை

23. திருவாய்—3,9:1.

யைப் பயன் படுத்தேன்.'' (1) ''தான் நிலையானவன் என் றெண்ணித் தன்னை ஒப்பற்றவனாகக் கருதிக்கொண்டு தன் செல்வத்தைப் பெரிய வளமாக மதிக்கின்ற இந்த மனிதப் பிறவியைப் பாடி என்ன பலன் பெறலாகும்?'' (2) '''கழிய மிக நல்ல வான்கவிகொண்டு' ஒரு மானிடப் பிறவியைப் பாடு வதால் உண்டாகும் பயன்தான் என்ன?'' (3) ''என்ன ஆகும்? எத்தனை நாளைக்கு அவன் உதவி போதும்?'' (4) ''கிடைக் கும் செல்வத்தைக் கொள்வதால் பயன் இல்லை. குப்பையைக் கிளறினாற்போல் குற்றம் குறைகளே தோன்றும்படியான செல்வமுடைய அற்பரைக் குறித்து 'வள்ளலே!' என்று கொண்டாடி உங்கள் உண்மையை இழந்து விடாதீர்கள்.'' (5) ''உங்கள் உடம்பை உழைக்கச் செய்து தொழில் செய்து பிழைக்கலாமே! இந்த உலகில் உங்கள் பாட்டுக்கு ஏற்ற செல்வர் இலர்; இதனை இப்போது ஆராய்ந்து அறிந்தோம். உங்கள் இனிய கவிகள் கொண்டு உங்கள் இட்டத் தெய்வத் தைப் புகழ்ந்து பாடுங்கள், (அந்தத் துதி மொழிகளில் கூறும் குணங்கள் அவர்களிடத்து இல்லாமையால்) அவை என் திருமாலுக்குச் சேர்த்து விடும்'' (6) ''மழை போன்ற கை, மலைபோன்ற தோள் என்று பயனற்ற மனிதரைப் பச்சைப் பொய்கள் சொல்லிப் போற்றவேண்டா'' (7), ''பாடத் தொடங்கின கவிதை நிறைவடைவதற்கு முன்பே முடியும் "என்னுடைய மனிதரை என்வாய் கொண்டு என்ன சொல்ல வல்லேன்?'' (8) ''வாயைக்கொண்டு மன்னர் மனிதரைப் பாட வந்த கவிஞன் அல்லன் நான்'' (9) ''எம்பெருமானு டைய கவிஞனாக அமைந்த எனக்கு இனி வேறொருவரைக் கவிபாடுதல் தகுமோ?'' (10) இவ்வாறு ஒரு திருவாய்மொழி முழுவதும் செல்வரைப் பொய்யாகப் புனைந்து புகழ்பாடும் பொய்மையை வெறுத்துக் கூறியுள்ளார் ஆழ்வார்.

**நாட்டு பாடல்களின் தாக்கம் :** பக்தி இயக்கக் காலத்தில் தோன்றிய ஆழ்வார்களின் பாசுரங்கள் யாவும் பொது விருப் பானவை. நாட்டு மக்கள் யாவரும் இந்த இயக்கத்தில் பங்கு கொண்டமையால் ஆழ்வார்களின் சமுதாயக் கண்

ணோட்டம் நாட்டுப் பாடல்களின் பாணியைப் பின்பற்றிப் பாசுரங்களை அமைக்கும் அளவுக்குப் போயுள்ளது. திருமங்கையாழ்வார் புலமை நிரம்பிய பெருந்தகை; 'நாலு கவிப் பெருமாள்' என்று வழங்கப்பெற்றவர். ஆகவே, இவர் நாட்டுப் பாடல் பாணியிலும் சில பாசுரங்களை அமைத்துள்ளார். சாழல் என்பது மகளிர் விளையாடும் விளையாட்டில் ஒன்று. எம்பெருமானின் எளிமைக் குணத்தையும் மேன்மைக் குணத்தையும், அநுபவிக்கும் பாங்கில் சாழல் விளையாட்டுப் பாசுரம் அமைந்துள்ளது. இரண்டு பிராட்டிமார் நிலையை அடைகின்றார் ஆழ்வார். ஏசிப் பேசுகின்ற ஒருத்தி வாயால் எளிமைக் குணத்தையும், ஏத்திப் பேசுகின்ற மற்றொருத்தி வாயால் மேன்மைக் குணத்தையும் ஒரே காலத்தில் அநுபவிக்கும் பாங்கில் பாசுரம் அமைகின்றது.

**தந்தை தளைகழலத்**
**தோன்றிப்போய் ஆய்ப்பாடி**
**நந்தன் குலமதலை**
**யாய்வளர்ந்தான் காண்,ஏடீ**
**நந்தன் குலமதலை**
**யாய்வளர்ந்தான் நான்முகற்குத்**
**தந்தைகாண் எந்தை**
**பெருமான்காண், சாழலே![24]**

என்ற பாசுரத்தில் இப் பாணியைக் காணலாம்.

தும்பியை அழைத்துப் பெண்கள் பாடுவது ஒருவகை நாட்டுப் பாடல். குயிலே கூவாய் என்று பாடுவது மற்றொரு வகை.

**கூவாய் பூங்குயிலே!**
**குளிர்மாரி தடுத்துகந்த**
**மாவாய் கீண்ட**
**மணிவண்ண னைவரக்**
**கூவாய் பூங்குயிலே![25]**

---

24. பெரி. திரு—11.5:2. 25. ஷை—10.10:3.
சில;—23

இது குயிலை அழைத்துப் பாடும் பாட்டுகளில் ஒன்று. வீட்டில் பல்லி ஒரு திசையில் ஒலித்தால் யாரோ விருந்தினர் வருவார் என்று நம்பும் பழைய நம்பிக்கை ஒன்றுண்டு. இதனை யொட்டி 'திருமால் வருமாறு ஒலி செய், பல்லியே!' என்று பாடுகின்றார் ஆழ்வார்.

> கொட்டாய் பல்லிக்குட்டி
> குடமாடி உலகளந்த
> மட்டார் பூங்குழல்
> மாதவ னைவரக்
> கொட்டாய் பல்லிக்குட்டி.[26]

என்பது பல்லிப் பாசுரம். இங்ஙனமே, செம்போத்து, காக்கைப்பிள்ளை, பைங்கிளி, கோழி என்று புள்ளினத்தை அழைத்துப் பாடும் பாசுரங்களும் உள்ளன.

குழந்தையைத் தொட்டிலில் இட்டுப் பாட்டுப் பாடித் தாலாட்டி உறங்க வைப்பது தாய்மாருக்கு இன்ப மயமான செயலாகும். அப்போது பாடும் தாலாட்டுப் பாட்டு தொன்று தொட்டுக் குடும்பங்களில் வீட்டுப் பெண்களின் கலையாக இருந்து வருகின்றது. தமிழ் இலக்கியத்தில் மிகப் பழைய தாலாட்டுப் பாட்டாக இப்போது கிடைப்பவை பெரியாழ் வாரின் 'மாணிக்கம் கட்டி' என்ற பெரியாழ்வார் திருமொழி பத்துப் பாசுரங்களும், குலசேகராழ்வாரின் 'மன்னு புகழ்' என்ற பெருமாள் திருமொழிப் பத்துப் பாசுரங்களும் ஆகும்.

> மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
> ஆணிப் பொன் னால்செய்த வண்ணச் சிறு தொட்டில்
> பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
> மாணிக் குறளனே! தாலேலோ!
> வையம் அளந்தானே! தாலேலோ![27]

---

26: ஷை—10.10:4.
27. பெரியாழ். திரு.—1.3:1.

என்பது பெரியாழ்வாரின் தாலாட்டுப் பாசுரம்; ஆழ்வார் யசோதை நிலையில் இருந்து பாடுவது. இத் தாலாட்டுப் பாணியில் கோசலை இராமனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுக் கூறும் பேற்றைக் கருதும் முகத்தால் குலசேக ராழ்வார் ஒரு திருமொழியை அருளிச் செய்துள்ளார். அதில் ஒரு பாசுரம்:

கொங்குமலி கருங்குழலாள்
கௌசலைதன் குலமதலாய்!
தங்குபெரும் புகழ்ச்சனகன்
திருமருகா! தாசரதீ!
கங்கையிலும் தீர்த்தமலி
கணபுரத்துஎன் கருமணியே!
எங்கள்குலத்து இன்னமுதே
இராகவனே! தாலேலோ![28]

இத் திருமொழிப் பாசுரங்கள் யாவும் திருக்கண்ணபுரத்து எம்பெருமான் மேல் செல்லுகின்றன.

இந்த இரு ஆழ்வார்களின் பாசுரங்களும் நீலாம்பரிப் பண்ணில் இசையோடு பாடப்பெறும் தாலாட்டுகளாகும்.

பழமொழிகள் : ஒரு நாட்டின் பண்பாட்டை உணர்தற்கு அந் நாட்டு மொழியுள் வழங்கும் பழமொழிகள் பெரிதும் பயன்படுவன. பழமொழிகளே அந் நாட்டு மக்கள்பால் அடிப்பட்டு வரும் மன இயல்புகளை எடுத்துக் காட்டுவன. பழமொழிகள் பயின்று வரச் செய்யுள் நூல் இயற்றும் தன்மை பேரறிஞர் நூல்களில் காணப்படும். நாட்டு மக்க ளிடம் பயின்று வரும் சில பழமொழிகளை ஆழ்வார் பாசுரங் களிலும் காணலாம். சிலவற்றைக் காண்போம்.

கார்ஆர் புரவிஏழ் பூண்ட தனிஆழி
தேர்ஆர் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா அமுதம் அங்குஎய்தி அதில்நின்றும்

---

28. பெரு. திரு.—8:3.

வாராது ஒழிவதுஒன்று உண்டே? அதுநிற்க
ஏர்ஆர் முயல்விட்டுக காக்கைப்பின் போவதோ[29]

என்ற பாசுரப் பகுதியில், 'முயலை விட்டுக் காக்கைப் பின் போவாருண்டோ?' என்ற பழமொழியைக் காணலாம். நிலத்தில் ஓடுவது முயல்; மரங்களின்மீது பறந்து திரிவது காக்கை. மாமிசம் வேண்டுவோன் கைப்பட்ட முயலை விட்டுக் கைப்பட அரியதும் கைப்பட்டாலும் பயன்படாதது மான காக்கையைப் பின்பற்றித் திரிதல் அறிவற்ற செயல். அப்படியே எளிதாயும் சுவைமிக்கதாயுமுள்ள அர்ச்சாவதார அநுபவத்தை விட்டுக் கிட்டுதற்கு அரிதாயும் சுவையற்றதாயு முள்ள மோட்ச அநுபவத்தைப் பெற விரும்புதலும் பேதைமையின் பணியாகும் என்று விளக்குவர் பரகாலர்.

இன்னொரு பழமொழியைக் காண்போம். 'தாய் இருக்க மணை நீராட்டுதல்' என்பது பழமொழி. முழு முதலாம் முதற்கடவுள் திருமால் இருக்க பிற தெய்வழிபாடு செய்யும் உலகினர் இயல்பை இப் பழமொழியால் விளக்குவர் திருமங்கை யாழ்வார்.

பேய்இருக்கும் நெடுவெள்ளம் பெருவிருப்பின்
மீதுஓடிப் பெருகு காலம்
தாய்இருக்கும் வண்ணமே உம்மைத்தன்
வயிற்றுஇருத்தி உய்யக் கொண்டான்
போய்இருக்க மற்றுஇங்கோர் புதுத்தெய்வம்
கொண்டாடும் தொண்டீர்! பெற்ற
தாய்இருக்க மணைவெந்நீர் ஆட்டுதிரோ
மாட்டாத தகவு அற்றீரே[30]

என்ற பாசுரத்தில் இவ்விளக்கத்தைக் காணலாம். ஈண்டு தாய் என்பது திருமாலுக்கும், மணை என்பது அசேதனப்

29. சிறிய திரு. கண்ணி—6.8.
30. பெரி. திரு.—11.6:6.

பொருள்கட்கும் உவமைகளாக வந்தன. மகளிர் கருவுயிர்த்த வுடன் தாயையும் சேயையும் நீராட்டுதல் மலை நாட்டு வழக்கமாக முற்காலத்தில் இருந்தது; கருவுயிர்த்தவுடன் தாயை நீராட்டுவது பலவித இடையூறுகட்குக் காரணமாவ தால் அத்தாய்க்குப் பதிலாக ஒரு மணைக் கட்டையை நீராட்டுவிப்பது இடைக்காலத்து வழக்கமாக இற்றைக்கும் இருந்து வருகின்றது. அதனைத் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்கின்றபடி இது. தேவதாந்தரத்தை வழிபாடுசெய் வதற்கும் மணை நீராட்டுவதற்கும் யாதொரு வேறுபாடும் இல்லை; இதுதான் அது, அதுதான் இது என்று இரண்டுக்கு முள்ள வேற்றுமையின்மையைக் காட்டினபடியாகும். நம்மாழ் வாரும் இதே கருத்தை தம் திருவாசிரியத்தில் "ஈன்றோளிருக்க மணை நீராட்டி"[31] என்று அருளிச் செய்துள்ளார். திருத் தாயார் பாசுரமாகச் செல்லும் ஒரு திருமொழி[32] யில் பாசுரந் தோறும் ஒவ்வொரு பழமொழியை எடுத்துப் பேசுகின்றார் பரகாலர். இத் திருமொழி இச்சிறப்பால் 'பழமொழியால் பணிந்துரைத்த பாட்டு' என்று வழங்கி வருகின்றது. வேறு பழமொழிகளும் உள்ளன. விரிவஞ்சி இத்துடன் நிறுத் தினேன்.

இறுவாய் : இதுகாறும் ஆழ்வார்களின் சமுதாயக் கண்ணோட்டத்தைக் கண்டோம். சங்க இலக்கியங்கட்குப் பிறகு இடையில் தோன்றிய நீதி இலக்கியங்களை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் சங்க இலக்கியம் பக்தி இலக்கியமாக மாறி வளர்ந்த வளர்ச்சியில் உள்ள சிறப்பை நன்கு உணரலாம். 'சுட்டி ஒருவர் பெயர் கூறப்பெறாத'தால் இன்னார் என்று உணரமுடியாத கற்பனை மாந்தர் இருவரின் காதலாக இருந்த பாடல்கள் மாறி, தெய்வத்தின்மீது கொண்ட காதலைப் பாடும் பாசுரங்களாக வளர்ந்து செழித்தன. மன்னர்களின் வீரச் செயல்களைப் பாடும் நிலை

31. திருவாசி.—6.
32. பெரி. திரு.—10.9,

மாறி இறைவனின் அற்புதத் திருவிளையாடல்களைப் பாடும் நிலை வளர்ந்தது. வள்ளல்களின் வளத்தையும் வள்ளண்மையையும் பாடும் பாடல்கட்கு ஈடாக இறைவனின் அற்புதச் செயல்ளைப் பாடும் பாசுரங்கள் தோன்றின. கற்பனைக் காதலுக்குப் பின்னணியாக அந்தந்த ஊர்களின் இயற்கைச் சூழல் வருணிக்கப் பெற்றிருந்தது மாறி, இறைவனிடம் செலுத்தும் பக்திக்குப் பின்னணியாக அந்தந்தத் திருக்கோயில் தலங்களைச் சூழ்ந்த இயற்கை எழில்களைப் பற்றிய வருணனைகள் அமைந்தன. ஆழ்வார்கள் பாசுரங்களில் சிறப்பாகத் திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இத்தகைய வருணனைகள் அமைந்து பாசுரங் கட்குப் பொலிவூட்டுவதைக் கண்டு மகிழலாம்.

கற்றவர்கட்கு உரியனவாகப் பாடப்பெற்ற சங்கப் பாடல்களின் யாப்பு முறையும் விரைப்பான நடைப்போக்கும் முற்றிலும் மாறிக் கற்றவர்களோடு மற்றவர்களும் கூடி களிப் புடன் பாடுவதற்கு ஏற்றவாறு சந்தக்கொழிப்பும் இசை ஏற்றமும் கொண்ட பாசுரங்கள் பெருகின; தமிழ் நடையிலும் நெகிழ்ச்சி அமைந்தது. பக்தர்கள் கூட்டம் கூட்டமாகப் பாடித் திருக்கோயில்களைச் சுற்றி வந்து வழபடும் முறைக்கு ஏற்றவாறு இசையினிமையும் நடை எளிமையும் கூடினமை யால் தமிழ் இலக்கியத்தில் ஒருவித புத்துணர்ச்சி பிறந்தது. சமுதாயத்தில் பெரும்பாலோர் இலக்கியத்தைத் துய்க்க முடிந்தது.

ஆழ்வார் பாசுரங்களில் துறவறம் பழிக்கப்பெறவில்லை; இல்லறம் வெறுக்கப்பெறவில்லை. நிலையாமை உணர்த்தப் பெறுகின்றது; கலைகள் போற்றப்பெறுகின்றன. உலக இன்பங்களை நுகர்ந்தவாறே இறைவனிடத்தில் பக்தி செலுத்தலாம் என்பதைப் பாசுரங்கள் தெளிவாக்குகின்றன. உலக வாழ்வைக் கண்டு அஞ்சும் நிலைமாறி மக்கள் கூட்ட மாகத் திரண்டு இறைவனை வழிபட்டு பக்தியுணர்ச்சியில் திளைக்கலாம் என்ற ஊக்கம் பிறக்க வழி அமைகின்றது.

'உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்' என்றும் அவன் அருளாலே பெறும் இன்பங்களே நிலையானவை என்றும் நம்மாழ்வார் கூறும் அறிவுரைக்குப் புதிய வேகம் அமைகின்றது. இவ்வாறே ஏனைய ஆழ்வார்களின் பாசுரங்களிலும் இறைவனை நினைந்து உருகும் பக்தியே மேலோங்கி நிற்க மற்ற விருப்பு வெறுப்புகளும் கொள்கைகளும் அச்சங்களும் பின்னிலை அடைந்து மறையத் தொடங்குகின்றன.

இறைவனுக்கு முன்னர் எல்லோரும் சமமானவர்கள், இறைவன் ஒருவனே மக்கள் தலைவன் என்ற கருத்தைப் பரப்பப் பாசுரங்கள் துணையாக நின்றன. மன்னர்களையும் செல்வர்களையும் போற்றிப் பாடுவதற்குப் பயன்பட்ட தமிழ், இறைவனைப் பாடுவதற்கு மட்டுமே பயன்படவேண்டும் என்ற கொள்கை பிறந்தது; வளர்ந்தது. அரசர் அரண்மனைகட்கு இருந்த சிறப்பெல்லாம் திருக்கோயில்கள் பக்கம் திரும்பின; உரியனவாயின. பக்திப் பாசுரங்கள் ஊட்டிய உணர்ச்சியின் விளைவாக அரண்மனைகளின் கட்டடங்களை விடத் திருக்கோயில்களின் கட்டடங்கள் சிறந்து உயர்ந்தன; விண்ணை முட்டும் கோபுரங்கள் கோயில்களின் வாயிலில் தோன்றத் தொடங்கின. அதிகாலையில் அரசன் துயிலெழுமாறு பாடிவந்த துயிலெடை நிலை திருப்பள்ளி எழுச்சியாக மாறியது. அரசனும் வைகறையில் எழுந்து மக்களுடன் சேர்ந்து திருப்பள்ளி யெழுச்சி வழிபாட்டில் கலந்து கொள்ளும் நிலைமை ஏற்பட்டது. அரண்மனை விழாக்கள் திருக்கோயில் விழாக்களாக மாறின. மனிதர்களுக்குள் இருந்து வந்த உயர்வு தாழ்வுகளும், சாதிவேறுபாடுகளும் ஒருவாறு நீங்குவதற்கு இந்த நிலைமைகள் பயன் பட்டன என்று கூறலாம்.

## 19. திருக்குறளும் வைணவ சமயத்து உறுதிப் பொருள்களும்*

திருக்குறள் ஒரு பொதுமறை. இந்நூல் நன்னூலென எல்லா நாட்டவரும், எல்லாச் சமயத்தினரும், எல்லாச் சாதியினரும் ஒருமுகமாக ஒப்புக்கொள்ளப்பெற்றது; தான் தோன்றிய காலத்திற்கு மட்டுமன்றிக் காலந்தோறும் தோன்றும் மக்கள் தேவைக்கேற்பப் புதுப்புதுப் பொருளை தோற்றுவிக்கக்கூடிய ஒரு சிறந்த நூல். இது கருதியே இறையனார் என்ற சங்கப்புலவரும் 'என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும், நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்'[1] இருப்பதாகக் கூறிப்போந்தார். இந்நூற் கருத்துகள் தமிழ் உரையாசிரியர்களே யன்றி மணிப்பிரவாள நடையில் எழுதிய நாலாயிரத்தின் உரையாசிரியர்களாலும் மேற்கோள்களாக எடுத்தாளப் பெற்றுள்ளன. இதன் பெருமை கருதியே உலகிலுள்ள பல்வேறு மொழிகளிலும் இது மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. இதனைப்போல் அதிகமான மொழிகளில் பெயர்க்கப்பெற்ற வேறு ஒரு நூல் உலகில் எம்மொழியிலும் இல்லையென்றே உறுதியாகக் கூறலாம். இந்தச் சிறந்த நூலை நம் தமிழகம் உலகிற்கு ஈந்து வான்புகழ் பெற்றது

---

மதுரை - காமராசர் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற திருக்குறள் கருத்தரங்கில் *(1978)* படிக்கபெற்றது.

* திருக்கோயில் - அக்டோபர் 79 இல் வெளி வந்தது.

*1.* திருவள்ளுவமாலை—*3*.

என்று நம் தேசிய கவி பாரதியாரும் புகழ்ந்துள்ளதை நாமறி வோம். இங்ஙனம் ஒப்புயர்வற்ற ஒரு பெருநூலில் வைணவ சமயத்து உறுதிப் பொருள்கள் இருக்குமாற்றை எடுத்துக் காட்டுவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**வைணவ தத்துவம் :** வைணவத்தின் உறுதிப் பொருள் களாகப் பேசப்பெறுபவை மூன்று. அவை: சித்து, அசித்து, ஈசுவரன் என்று வழங்கப்பெறுகின்றன. சித்து என்பது உயிர் களின் தொகுதி. அசித்து என்பது, மக்கள் விலங்கு முதலியன வற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற் றிற்கும் காரணமான பிரகிருதி. பிரகிருதியை மூலப்பகுதி என்பர். ஈசுவரன் என்பது இறைவன். இவை மூன்றும் "தத்துவத்திரயம்" (திரயம்-மூன்று) என்ற பெயரால் வழங்கி வருகின்றன. இவை மூன்றும் தனித்தனி இயல்புடைய வேறு வேறு பொருள்கள்; என்றும் அழிவில்லாதவை; ஆயினும், எக்காலத்தும் இவை மூன்றும் ஒன்றாக இணைந்தே இருக் கின்றன. இவற்றுள் இறைவன், சித்து அசித்து என்ற இரண்டனுள்ளும் அந்தர்யாமியாக உள்ளான். இதுவே இவற்றின் நுண்ணிய நிலை (சூக்கும நிலை). மூலப்பகுதி விரிவடைந்து மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு களாகவும், மற்றுமுள்ள பொருள்களாகவும் ஆகின்றது. உயிர் தன்னுடைய புண்ணிய பாவங்கட்கேற்ப ஒவ்வொரு உடம்பை அடைகின்றது. அதுவே உயிருக்குப் பிறப்பாகும். இறைவன் மூலப்பகுதியின் விகாரமாகிய எல்லாப் பொருள் களுள்ளும் எல்லா உயிர்களுள்ளும் அந்தர்யாமியாக மறைந் துள்ளான். இதுவே இவற்றின் பருநிலை (ஸ்தூல நிலை) இதனைத் தொல்காப்பியர்,

> **நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்**
> **கலந்த மயக்கம் உலகம் ஆதலின்**[2]

எனச் சுட்டுவர். இது, தத்துவங்கள் மூன்றும் ஒன்றோ டொன்று இயைந்த நிலையைக் காட்டுகின்றது. நம்மாழ் வாரும்,

---

2. தொல். பொருள். மரபு.—89.

திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய்அவை அவைதொறும்
உடல்மிசை உயிர்எனக் கரந்தெங்கும் பரந்துளன்[3]

என்று இதனை விளக்குவர். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஐந்து பூதங்களின் கூட்டுறவால் உண்டாவதை,

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவுஎனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுபாடு உற்ற வீக்கம்[4]

என்று கம்பநாடனும் விளக்குவன்; மேற்குறிப்பிட்ட ஆழ்வார் பாசுரத்தில் 'இவை மிசைப்படர் பொருள் முழுவதும் ஆய்' என்பதில் 'ஆக்கி' என்னாது 'ஆகி' என்றது 'இறைவனே எல்லாப் பொருள்களாகவும் விரிந்துள்ளான்' என்பதை வற்புறுத்தும் பொருட்டு. "அனைத்தும்நீ அனைத்துட் பொருளும்நீ"[5] என்ற பரிபாடலின் அடியும் இதனை உணர்த்தும். 'அவை அவை தொறும் கரந்து எங்கும் பரந்துளன்: அங்ஙனம் உண்டாக்கப்பெற்ற ஒவ்வொரு பொருளிலும் அந்தர்யாமியாக மறைந்து நின்றும், அவை எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி எங்கும் வியாபித்தும் உளன். இந்த இரு தன்மைகளையும் 'அந்தர்யாமித்துவம்', 'வியாபகத்துவம்' என்று மெய்ப்பொருள் நூலார் நுவல்வர். இந்த இரண்டையும் ஆழ்வார்,

அறிகிலேன்—தன்னுள் அனைத்துலகும் நிற்க
நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும்பிரான்[6]

என்று பிறிதோர் இடத்திலும் விளக்குவர். 'தன்னுள் அனைத்துக்கும் நிற்க' என்றது வியாபகத் தன்மையை;

---

3. திருவாய்—1.1:2
4. கம்ப. சுந்தர. காப்பு.
5. பரிபாடல் - 3, வரி—68.
6. திருவாய்.—9.6:4.

'தானும் அவற்றுள் நிற்கும் பிரான்' என்றது அந்தர்யாமிய நிலையை. இங்ஙனம் இறைவன் பொருள்களினுள் மறைந்து உறைவது எதுபோல எனின் 'உடல்மிசை உயிர் எனக் கரந் துளன்' - உடலினுள் உயிர் எவ்வாறு உளதோ அவ்வாறு அவ் வுயிர் உட்பட எல்லாப் பொருள்களினுள்ளும் இறைவன் உள்ளான். இதனை வைணவம் 'சரீர - சரீரி பாவனை' என்று உரைக்கும்.

இன்னோர் உண்மையும் ஈண்டு நினைவு கூர்தற்பாலது. மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பிற்கு வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய விகாரங்கள் உண்டு. அவ்வுடம்பினுள் இருக்கும் உயிருக்கு அத்தகைய விகாரம் ஒன்றுமில்லை. ஆயினும், தான் செய்த புண்ணிய பாவங்கட்கேற்ப உடம் பைப் பெற்றிருப்பதால் அவ்வுடம்பைப் பற்றிய இன்ப துன்ப உணர்ச்சிகள் உயிருக்கு உண்டு. இவ்வுடம்பினுள்ளும் உயிரி னுள்ளும் அந்தர்யாமியாக உள்ள இறைவன் உடம்பினுடைய விகாரங்களையும், உயிரினுடைய இன்ப துன்ப உணர்ச்சி களையும் அடைவதில்லை. இறைவன் வினை காரணமாக இல்லாமல் தன் விருப்பினால் இவ்விரண்டனுள்ளும் அமைந் திருத்தலால் அவ்விரண்டின் தன்மைகளையும் அவன் அடை வதில்லை. உயிர் மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பைத் தனக்கு உடம்பாகக் கொண்டிருத்தல் போல, இறைவன் உடம்பு, உயிர் ஆகிய இரண்டையும் தனக்கு உடம்பாகக் கொண்டிருக்கின்றான். இவ்வாறு இம்மூன்று தத்துவங்களும் ஒன்றை விட்டு ஒன்று பிரியாமல், எக்காலத்தும் தத்தம் இயல்பை விடாமல் ஒன்று சேர்ந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கையாகும். இக் கொள்கையை விளக்க வைணவ சமயத் துறவிகள் மூன்று கோல்களை ஒன்றாகப் பிணைத்துக் கையில் ஏந்தியுள்ளனர் என்பதும் சிந்திக்கத் தக்கது.

> நூலே கரகம் முக்கோல் மணையே
> ஆயுங் காலை அந்தணர்க் குரிய[7]

---

7. தொல். பொருள். மரபு.—71

எனத் தொல்காப்பியரும் அந்தணர்க்கு முக்கோல் கூறினர். மேற்கூறிய மூன்று உறுதிப் பொருள்களையும் வேறு இரண்டு பொருள்களையும் சேர்த்துக் கூறுகின்றது திருவாய் மொழித் தனியன்.

மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர் கோன்
யாழினிசை வேதத் தியல்

இங்கு இறைநிலை - இறைவன் சொரூபம்; மெய்யாம் உயிர் நிலை. இறைவனைப் போன்றே நித்தியமான ஆன்ம சொரூபம்; தக்கநெறி - இறைவனை அடையும் உபாயத்தின் சொரூபம் (சரணாகதி); தடை - இறைவனை அடையத் தடை யாக உள்ள விரோதி சொரூபம் (அதாவது முன்னைய வினைகள்): வாள்வினை - வாழ்வாகிய புருஷார்த்தம். இவை ஐந்தும் 'அர்த்த பஞ்சகம்' என வழங்கப்பெறும்.

திருக்குறளில் இக்கருத்துகள் : இங்குக் குறிப்பிட்ட வைணவ சமயத்தின் உறுதிப்பொருள்கள், திருக்குறளில் உள் ளனவா என்பதை ஆராய்வதே இந்தக் கட்டுரையின் நோக்க மாகும். திருக்குறட் பாக்களை எல்லாம் ஆழ்ந்து கற்கும் போது இறைவனைப் பற்றிஅதிகமாகவும், ஏனைய தத்து வங்கள் ஒரோவழியும் கூறப்பெற்றிருப்பதை அறியலாம்.

ஈசுவரன்: வைணவ தத்துவத்தில் ஒன்றாகிய 'ஈசுவரன்' என்ற உண்மைப்பொருள் திருக்குறளில் 'கடவுள் வாழ்த்து' என்ற பகுதியிலும் வேறு சில இடங்களிலும் தெளிவாகக் குறிப்பிடப்பெறுகின்றது. இதனைக் காண்போம்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு[8]

---

8. குறள்—1.

இந்தக் குறளில் 'ஆதிபகவன் - முதற்கடவுள்'. பரிமேலழகர் 'ஆதிபகவன்' என்னும் இருபெயரொட்டுப் பண்புத் தொகையை வடநூல் முடிவாக்குவர். ஆதி பகவன் என்பது வடமொழிப் புணர்ச்சியாதலால் வலி மிகவில்லை. பகவன் என்பது பகவாந் என்னும் வடமொழியின் விகாரம். பகவான் என்ற சொல் குறிப்பிடும் ஞானம் சக்தி பலம் ஐசுவரியம் வீரியம் தேஜஸ் என்ற ஆறு குணங்களுக்கும் 'பகம்' என்பது பெயர். ஆதலால் 'பகவான்' இந்த ஆறு குணங்களையும் உடையவன் என்பது பொருள். வைணவ சமயக் கருத்துப் படி ஈசுவரன் இந்த ஆறு குணங்களை உடையவன். பகவான் சொன்ன கீதை பகவத் கீதை, பகவான் புகழைக் கூறும் நூல் பாகவதம், பகவான் அடியார் பாகவதர் என வழங்குதலால், 'பகவான்' என்ற சொல் திருமாலையே குறிக்கும் என்பதை அறிதல் வேண்டும். நம்மாழ்வாரும் "அந்தமில் ஆதியம் பகவன்"[9] என்று கூறுதல் காண்க. அடுத்த குறளில் 'வாலறிலன்'[10] என்ற தொடருக்கு 'மெய்யறிவினை யுடையவன்' 'எல்லாப் பொருளையும் அறியும் தூய அறிவினையுடையவன்' என்பது பொருள். "அடலாழி கொண்ட அறிவன்" என்று அருளிச் செய்திருத்தலால் 'அறிவன்' என்பதற்குத் திருமால் என்று கொள்வதற்குத் தட்டில்லை. அடுத்த குறளில் 'மலர் மிசை ஏகினான்'[12] என்பதில் 'மலர்' என்பது தாமரையைக் குறிக்கும். எல்லா மலரினும் தாமரை சிறத்தல்பற்றி 'மலர்' எனப்பட்டது. 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' என்பது காண்க. ஈண்டுப் பொறி என்பது இலக்குமி. நம்மாழ்வாரும்,

> மனனகம் மலர்அற மலர்மிசை எழுதரும்
> மன்னுணர்வு அளவுஇலன்[13]

என்று அருளிச் செய்திருப்பது காண்க. இறைவனை "வேண்டுதல் வேண்டாமை இலான்"[14] என்று குறிப்பிடுவர்

---

9. திருவாய்.—1.3:5.
10. குறள்—2.
11. திருவாய்.
12. குறள்—3.
13. திருவாய்.—1.1:.2.
14. குறள்—4.

வள்ளுவப் பெருந்தகை. 'ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன்' என்பது இதன் பொருள். அப்படிப்பட்டவன் இறைவன். நம்மாழ்வார்,

> கொள்கை கொளாமை இலாதான்
> எள்கல் இராகம் இலாதான்[15]

என்று இறைவனைக் காட்டுவர். கொள்கை கொளாமை இலாதான் - குணம் பார்த்துக் கொள்ளுதலும், குணம் இல்லாமை பார்த்துத் தள்ளுதலும் இல்லாதவன்; எள்கல் இராகம் இலாதான் - கைவிடுகைக்குக் காரணமான வெறுப்பும், கைக்கொள்ளுகைக்குக் காரணமான விருப்பும் இல்லாதவன். எள்கல் - இகழ்தல்; இராகம் - ஆசை. இதனால் 'வேண்டுதல் வேண்டாமை இலான்' திருமால் என்று கொள்ளுதற்குத் தடை இல்லை. ஐந்தாவது குறள்:

> இருள்சேர் இருவினையும் சேரா; இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு[16]

என்பது. ஈண்டுக் கடவுளை 'இறைவன்' என்று சொல்லால் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். 'இறைவன்' என்பதற்கு எப்பொருளினும் தங்குகின்றவன் எனப் பொருள் கூறுவர் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார். இது 'இறு' என்னும் பகுதியின் அடியாகப் பிறந்த வினையாலணையும் பெயர். இறை என்பது உயர்திணை இயற்பெயர் என்றும், அஃது ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நின்று, வருமொழி வந்தபின்பு இறைவன் வந்தான், இறைவர் வந்தார் என நிற்கும் என்றும் கூறுவர் இலக்கணக்கொத்து நூலுடையார். இச்சொல் சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய பண்டைய இலக்கியங்களிலும் அவற்றின் உரைகளிலும் கடவுளர்க்கும் அரசர்க்கும் பெயராக வழங்கப்பட்டுள்ளது. பரிமேலழகரும் "இந்திரன் முதலிய இறையவர் பதங்களும்"

---

15. திருவாய்.—1.6:5.
16. குறள்—5.

எனத் திருக்குறள் உரைப்பாயிரத்தில் இந்திரன் முதலான தேவர்களனைவரையும் 'இறைவர்' என்ற சொல்லால் வழங்குவர். தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் 'இறைவன் யாவன்?' என்ற வினாவிற்கு விடையாக முறைசெய்து காப்பாற்றுகின்றவனே இறைவன் ஆவான் என்றும், அவ் விறைவன் அம்முறை செய்து காப்பாற்றுதலை அரசர்கள் மூலமாகவும் செய்கின்றானாதலின் அவ்வரசர்களும் தொழி லுரிமைபற்றி 'இறைவன்' என்ற பெயரால் வழங்கப்பெறுவர் என்றும் கூறுவர்.

> முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்[17]

என்ற திருக்குறளையும், "தான் முறைசெய்து பிறர் நலியா மல் காத்தலையும் செய்யும் அரசன் பிறப்பால் மகனேயாயி னும் செயலான் மக்கட்குக் கடவுள் என்று வேறு வைக்கப் படும்" என்ற பரிமேலழகர் உரையினையும் காண்க.

ஈண்டுத் திருவள்ளுவ நாயனார், முறைசெய்து காப்பாற்றுபவன் யாவன்? அவன் இறை என்று சொல்லப் படுவான் என்பார். அதனை விதிமுகத்தாற் கூறாது உடம்படு புணர்தல் என்னும் உத்திவகையால் 'முறை செய்து காப் பாற்றும் இறை' என்றும், முறை செய்து காப்பாற்றும் தொழில் உரிமையான் அம்மன்னனும் இறை என்று சொல்லப் படுவான் என்பார் 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன் இறை என்று வைக்கப்படும்' என்றும், மன்னனை 'இறை' என்று கூறிய அதனால், அவ்விறைவன் 'மூவேழுலகுக்கும் நாதன்' ஆதலைப் போன்று இம் மன்னனும் மூவேழுலகுக்கும் நாதன் ஆவனோ என்ற ஐயத்தை நீக்குதற்கு இவ்வுலகிலுள்ள மக்கட்கு மாத்திரமே நாதன் என்பார் 'மக்கட்கு இறை' என்றும், பாதுகாக்கும் தொழிலுரிமையான் இறையாவான் அன்றி இயற்கையில் இறையல்லன் என்பார் 'வைக்கப்படும்'

---

17. குறள்—388

என்றும் கூறினார். 'செயலான் மக்கட்குக் கடவுள் என்று வேறு வைக்கப்படும்' என்ற பரிமேலழகரின் உரைப் பகுதியும் ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

ஆயின், இறைவன் என்பதற்கு எல்லாப் பொருள்களினும் தங்குகின்றவன் என்ற பொருளை ஈண்டுத் திருவள்ளுவர் கூறிற்றிலரே எனின்: 'காப்பாற்றும்' என்ற சொல்லின் பொருளால் அதனையும் பெறவைத்தார் என்க. எவ்வா றெனின்: காப்பாற்றுதல் என்பது ஒவ்வோர் உயிர்க்கும் விருப்பில்லனவற்றை நீக்கி, விருப்புள்ளனவற்றைக் கொடுத் தல் என்பர் பெரியோர். ஒவ்வொருவரும் விரும்புகின்ற வற்றைக் கொடுக்க வேண்டுமாயின், அவ்வுயிர்களிடத்தில் தான் தங்கியிருந்தாலன்றி அவற்றின் விருப்பத்தை அறிதலும் அறிந்து கொடுத்தலும் முடியாவாம். ஆதலின் காப்பாற்றுத லாகிய காரியத்தினைக் கூறிய அளவில் அவ்வுயிர்தோறும் தங்கியிருத்தலாகிய காரணமும் தானே பெறப்படுதலின், அதனையும் கூறினாரேயாவர். 'யாண்டும், என்றும், காரணம் இன்றேல் காரியமும் இன்று' என்க. ஆக எல்லாப் பொருளினும் தங்கியிருக்கின்றவனே காத்தலாகிய தொழிலைச் செய்ய முடியும் என்பதும், காப்பாற்று கின்றவன் எல்லாப் பொருளிலும் தங்கியிருத்தல் வேண்டும் என்பதும் பெறப்படுதலின், இவ்விரண்டும் ஒன்றோடொன்று பிரிவின்றி ஒற்றுமைப்பட்டிருத்தல் காண்க.[18] இவற்றால் வைணவ தத்துவமாகிய 'அந்தர் யாமித்துவம்' பெறப்படு தலின் 'இறைவன்' என்பதற்குத் 'திருமால்' என்ற பொருளை உறுதியாகக்கொள்ளலாம்.

ஆறாவது குறளில் கடவுளைப் ''பொறிவாயில் ஐந்தவித் தான்''[19] என்று குறிப்பிடுவர் ஆசிரியர். ஐந்து அவித்தான் - ஐந்து அவாவினையும் அறுத்தவன். அவன் இறைவன், அவன் காட்டிய நெறி 'பொய்தீர் ஒழுக்க நெறி'; அதாவது மெய்

---

18. புருடோத்தமநாயுடு, பு. ரா: 'இறைவன்' என்ற [கட்டுரை காண்க.
19. குறள் —6.

யான நெறி. அதாவது அவனால் சொல்லப்பட்ட வேதம் முதலிய நூல்களில் நுவலப்பெற்ற நல்லொழுக்க முறைமை; அதாவது விதிப்படி அருச்சித்தல், பூசித்தல் முதலியவை யாகும். திருமாலுக்கு 'இருடிகேசன்'[20] என்ற ஒரு திருநாமம் உண்டு. இருடிகம் என்பது இந்திரியங்களுக்குப் பெயர். அவற்றுக்கு ஈசன், தலைவன். இதனால் ஐந்தவித்தானைத் திருமால் என்றும் கொள்ளலாம்.

ஏழாவது குறளில் கடவுளைத் "தனக்கு உவமை இல்லாதான்"[21] என்று குறிப்பிடுவர். சடகோபர் "ஒத்தார்களும் மிக்கார்களும் தனக்கு இன்றி நின்றானை"[22] என்றும், "ஒத்தார் மிக்காரை இலையாய மாமாய"[23] என்றும் "தன்னொப்பார் இல் அப்பன்"[24] என்றும் அருளிச் செய்துள்ளமையால் 'தனக்கு உவமை இல்லாதான்' திருமால் ஆகின்றான். ஒப்பில்லாதவன் என்பதால் உயர்வு இல்லாதவன் என்பதும் பெறப்படும். 'ஒப்பிலியப்பன்' என்ற திருவிண்ணகர் எம்பெருமானின் திருநாமமே 'தன்னொப்பார் இல் அப்பன்' என்ற ஆழ்வார் திருவாக்காக வெளிப்பட்டுளது. திருவாய்மொழி தோன்றுவதற்கு முன்பே இவ்வெம்பெருமானுக்கு 'ஒப்பிலியப்பன்' என்ற திருநாமம் இருந்ததா? அல்லது திருவாய்மொழியில் இங்ஙனம் அருளிச்செயப்பெற்றதால் 'ஒப்பிலியப்பன்' என்று பெருமாளுக்குத் திருநாமம் வழங்கிவந்தார்களா? என்று விமர்சித்தாலும் இரண்டு படியும் பொருந்தத் தக்கதேயாகும்.

எட்டாவது குறளில் "அறவாழி அந்தணன்"[25] என்று இறைவனைக் குறித்தார் ஆசிரியர். அறவாழி என்பது அறக்

---

20. திருவாய்.—2.7:9, 10.
21. குறள்—7.
22. திருவாய்.—4.5:7.
23. திருவாய்.—2.3:2.
24. திருவாய்.—6.3:9.
25. குறள்—8.
சில.—24

கடல். நீர் நிரம்பிய கடல்போல அறம் நிரம்பியவன் இறையவன். அந்தணன்-அழகாகிய தண்மையையுடையவன்; தண்மை-அருள். ஈண்டு 'ஆழி' கடலை உணர்த்தும்பொழுது ஆழ்ந்திருப்பது என்று பொருள்; இங்கு இ-என்பது வினை முதற் பொருள் விகுதி. 'ஆழி' சக்கரத்தை உணர்த்தும் பொழுது 'ஆழி-வட்டம்; அதனையுடையதென்று பண்பாகு பெயர்; (பகைவரை அழிப்பதென்றும் பொருளாம்). 'அறம்' என்பதை 'அரம்' என்பதன் திரிபாகக் கொண்டால் ஆயிரம் அரங்களையுடைய சுதர்சனம் என்னும் சக்கரத்தையுடைய திருமால் என்று பொருள்படும். "அறவனை ஆழிப் படை அந்தணனை"[26] என ஆழ்வார் அருளிச் செய்திருப்பதனால் தரும சொரூபியும் சக்கரபாணியுமான திருமால் என்று கொள்ளலாம்.

ஒன்பதாவது குறளில் இறைவன் "எண் குணத்தான்"[27] என்று பேசப்பெறுகின்றான். வைணவ நூல்கள் அபஹதபாப் மத்வம், விஜரத்வம், விம்ருத்யுத்வம், விசோகத்வம், விஜிகத் ஸத்வம், அபிபாஸத்வம், ஸத்தியகாமத்வம், ஸத்யஸங்கல் பத்வம் என்றும்; வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், சௌலப்யம், ஜ்ஞாநம், சக்தி, பிராப்தி, பூர்த்தி என்றும் எண்குணங்களை இருவகையாகப் பேசும். ஆகவே, எண்குணத் தான் திருமால் ஆகின்றான். பத்தாவது குறளில் கடவுளை "இறைவன்"[28] என்றே குறிப்பிடுகின்றார் ஆசிரியர். இறை வன்-எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாய்த் தங்கு கிறவன்; இறுதல்-தங்குதல். "எங்கு முளன் கண்ணன்"[29] என்றும், "உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்"[30] என்றும் ஆழ்வார் அருளிச் செய்திருத்தலால் இறைவனைத் திருமால் என்று கொள்வதில் தவறில்லை.

26. திருவாய்.—1.1:7.
27. குறள்—9.
28. குறள்—10.
29. திருவாய்.—2.8:9.
30. திருவாய். 1.1:7.

அரசன் தான் கருதியன செய்யுங்கால் சோம்புத லில்லாமை கூடாது என்று வற்புறுத்த வேண்டியவிடத்து,

> மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
> தாஅய எல்லாம் ஒருங்கு[31]

என்று கூறுவர் ஆசிரியர். சோம்பலில்லாத மன்னவன் நிலப்பரப்பு முழுவதையும் இடையீடின்றிப் பெறுவான் என்பதை இங்கு வலியுறுத்துகின்றார். ஈண்டு 'அடி அளந் தான்' என்பதால் எல்லா உலகையும் அளந்த திரிவிக்கிர மனைச் சுட்டுகின்றார் ஆசிரியர். இதனாலும் இறைவன் திருமால் ஆகின்றான். ஈசுவரன் என்ற தத்துவத்தைத்தான் மேலே குறிப்பிட்ட திருவாய்மொழித் தனியன் 'மிக்க இறை நிலை' எனச் சுட்டுகின்றது.

**சித்து :** ஞானத்திற்கிடமான ஆன்மாவின் தொகுதி சித்து எனப்படும். ஆன்மா அணு அளவினதாகச் சொல்லப்பெறும். இஃது என்றும் நிலை பெற்றிருப்பது. கண் முதலிய இந்திரியத் திற்குத் தோற்றாது. இஃது இறைவன் ஏவியபடி நடக்கும். அவனால் தரிக்கப்பெற்று அவனுக்கு அடிமையாக இருக்கும்.

> 'குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
> உடம்போடு உயிரிடை நட்பு''[32]

என்ற குறளில் உயிரும் உடம்பும் பேசப்பெறுகின்றன. "சேதனமாய் அருவாய் நித்தமாய உயிரும், அசேதனமாய் உருவாய் அநித்தமாய உடம்பும் தம்முள் மாறாகலின் வினை வயத்தாற் கூடியதல்லது நட்பில வென்பது அறிக'' என்ற பரிமேலழகரின் உரையும் சிந்திக்கத் தக்கது. நட்பு என்பது, ஈண்டுக் குறிப்புமொழியாய் நட்பின்றிப் போதலுணர்த்தி நின்றது; இஃது எதிர்மறை இலக்கணை. இந்தக் குறளினால் ஒவ்வொர் உயிர்க்கும் ஒவ்வோர் 'உயிர்' இருப்பதைக் குறிப் பாகப் புலப்படுத்தி ஆன்மாக்கள் பல என்ற வைணவக் கருத்தைத் தெளிவாக்கி ஏகான்மவாதத்தை மறுப்பதுபோல்

---

31. குறள்—610. 32. குறள்—339,

தோன்றுகிறது. ஏகான்மவாதம் உயிர்கள் பல என்பதை ஒப்புக் கொள்வதில்லை. இந்தச் 'சித்து' என்ற தத்துவத் தையே மேற்குறிப்பிட்ட திருவாய்மொழித் தனியன் 'மெய் யாம் உயிர்நிலை' என்று குறிப்பிடுகின்றது.

அசித்து : வீடுபேறு அடையும் வழிகட்குத் தடைகளாக இருக்கும் விரோதிகள் பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கமும் அழுக்குடம்பும் ஆகும். ஆன்மா இல்லாத இடத் தில் ஆன்மா என்னும் மயக்கமும், இப் பொய்யான மயக்கத் தினால், பிறர் பொருள் முதலியவற்றைக் கவர்தலாகிற கொடிய ஒழுக்கமும், இவற்றுக்கெல்லாம் காரியமும் அடிப் படையுமான கீழ்த்தரமான உடம்பும் ஆகியவற்றைப் போக் கினால்தான் வீடுபேற்றிற்குரிய வழிகள் தென்படும். உடலை 'ஆன்மா' எனக் கருதுவது ஒருவகை மயக்கம். இதைத் தான் பிள்ளை உலக ஆசிரியர் 'அவித்தை' (அவிச்சை) என்பர். அழுக்குடம்பு மான், அகங்காரம், பஞ்ச பூதங்கள் ஆகியவற்றால் உண்டானமையின், மட்பாத்திரம் தன்னுள் உள்ள உயர்ந்த பொருளை மறைப்பது போன்று இதுவும் ஆன்மாவையும் பரமான்மாவையும் மறைத்துக் கெடுக் கின்றது. திருவள்ளுவரும்,

> மற்றுந் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
> உற்றார்க்கு உடம்பும் மிகை[33]

என்று கூறுவர். பிறவி நோயைப் போக்குதலை மேற் கொண்டார்க்கு அதற்குக் கருவியாகிய உடம்பும் மிகுதி யாகும். அதாவது அவசியமானதன்று. இங்ஙனமிருக்கச் சம்பந்தமில்லாத சில பொருள்களும் விடாது தொடர்ந்து நிற்றல் தகுதியன்று என்பது அறியப்படும். உடம்பு என்ப தில் உருஉடம்பும் அருஉடம்பும் அடங்கும். இதனைத்தான் பிள்ளை உலக ஆசிரியர் 'பிரகிருதி சம்பந்தம்' என்று குறிப்பர்.

---

33. குறள்—345.

அகப்பற்றும் புறப்பற்றும் அசித்தினைச் சார்ந்தவை. இவையும் வீடுபேறு எய்துவதற்குத் தடைகளாக இருப்பவை திருவள்ளுவர்,

> யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
> குயர்ந்த உலகம் புகும்[34]

என்று இதனைக் கூறுவர். பரிமேலழகரும் "தேசிகர்பாற் பெற்ற உறுதி மொழிகளானும் யோகப் பயிற்சியானும் அவை யான் எனது அன்மை தெளிந்து அவற்றின்கண் பற்றை விடுதல்" என்று விளக்குவர். அதாவது உடம்பும் செல்வமும் முறையே யானும் எனதும் ஆகாமையை ஐயந்திரிபின்றி அறிந்து அவற்றிலுள்ள பற்றை விடுதல் ஆகும். வானோர்க் குயர்ந்த உலகம் என்பது தேவர்களும் அடைய முடியாத வீட்டுலகம். நம்மாழ்வாரும்,

> நீர்நும தென்றிவை வேர்முதல் மாய்த்துஇறை
> சேர்மின்; உயிர்க்கதன் நேர்நிறை யில்லே.[35]

என்று இதனை விளக்குவர்: "அகங்கார மமகாரங்களாகிய இவற்றை ருசி[36] வாசனை[37]களாகின்ற பக்க வேரோடே முதலறுத்து இறையை அடையுங்கள். ஆன்மாவுக்கு அதனோ டொத்த நிறைவு இல்லை" என்பது இதன் பொருள். இப் பாசுரத்தின் 'நீர் நுமது' என்பவை 'நாம் நமது' என்றிருக்க வேண்டும். அவற்றை வாயினாலும் சொல்லுவது தகாது

---

34. குறள்—346.
35. திருவாய்.—1.2:3.
36. ருசி—பாவச் செயலையோ புண்ணியச் செயலையோ அறிந்தே செய்தற்குக் காரணமாயுள்ள சுவை.
37. வாசனை—இஃது அவித்தியா வாசனை, கர்ம வாசனை என இருவகைப்படும். அவித்தியா வாசனை—அரவம் முதலியவற்றைக் காணுங்கால் அஞ்சுதல் முதலிய வற்றிற்குக் காரணமான அஞ்ஞான வாசனை. கர்ம வாசனை—துரும்பு முதலியவற்றைக் கிள்ளுதற்குக் காரணமாயுள்ள வாசனை.

என்ற கருத்தினால், அப்படிச் சொல்லாது மாற்றிச் சொன்னார் ஆழ்வார். "நான் எனது என்று தன் வாக்காலே சொல்ல மாட்டாரே, நாக்கு வேம் என்று" என்ற ஈட்டின் நயமும் ஈண்டு அநுபவிக்கத் தக்கது. வினைப் பயன்களைக் கூறுமிடத்து வள்ளுவர்,

வகுத்தான் வகுத்த வகைகயல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.[38]

என்பர். முயற்சி மாத்திரத்தால் செல்வம் சம்பாதித்தல் மாத்திரம் ஒருகால் கூடினும் கூடும்; அதனை அநுபவித்தலோ ஊழாலன்றிக் கூடாது என்பது கருத்து. ஒருயிர் செய்த வினைப் பயன் பிறிதோருயிரின்கண் செல்லாமல் அவ்வுயிர்க்கே வகுத்தலின் 'வகுத்தான்' என்றார். இஃது இறைவன் ஆணையாகும். நம்பிள்ளை இதனை 'வகுத்த சேஷி' என்று குறிப்பிடுவர்.

வள்ளுவர் கருத்தும் வைணவ தத்துவக் கருத்தும் ஒன்று போல் அமைந்துள்ளன. இந்தத் தடையினையே மேற்குறிப்பிட்ட திருவாய்மொழித் தனியன் 'ஊழ்வினை' என்று குறிப்பிடுகின்றது.

முத்தி நெறி: வைணவ தத்துவப்படி இறைவனை அடையக்கூடிய வழி பக்தி, பிரபத்தி (சரணாகதி) ஆகிய இரண்டாகும். ஆழ்வார் பெருமக்கள் சரணாகதி தத்துவத்தையே அதிகமாக வற்புறுத்துகின்றனர்.

நிகர்இல் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே[39]

---

38. குறள்—377.
39. திருவாய்—6.10:10.

என்ற பாசுரத்தில் திருவேங்கடத்தானின் திருவடியில் சரணம் அடைகின்றார் ஆழ்வார். சைவத்திலும் இறைவ னிடம் அடைக்கலம் புகுதல் என்ற சம்பிரதாயம் உண்டு. மாணிக்கவாசகரின் 'அடைக்கலப் பத்து'[40] இதனை வலி யுறுத்தும். எனினும், வைணவத்தில் இஃது இன்றியமையாத ஒன்று. இக் கருத்தினையே திருவள்ளுவர் 'கடவுள் வாழ்த்து' எனும் அதிகாரத்தில் 'நற்றாள் தொழுதல்'[41] 'மாணடி சேர்தல்'[42] 'அடிசேர்தல்' [43]'தாள்சேர்தல்'[44] 'தாளை வணங்குதல்'[45] என்பதனால் வீடுபேறு அடையும் வழி களாகக் கூறப்பெற்றிருத்தல் காண்க. இதனை முமுட்சுப்படி மிக அழகாகக் கூறுகின்றது,

> சேஷிபக்கல் சேஷ பூதனிழியுந்துறை,
> ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாப் போலே[46]
>
> [சேஷி - இறைவன்; சேஷ பூதன்-சேதநன்]

என்று. பாலுண்ணும் பச்சைக் குழவி எங்ஙனம் தாயினுடைய மற்ற அவயவங்கள் யாவையும் விட்டு, தான் உயிர் வாழ்தற் கிடனாய் உள்ள அவள் கொங்கையிலேயே வாய் வைக்கின் றதோ அங்ஙனமே சேஷியாகிய ஈசுவரனைப் பற்றப் புகும் சேஷபூதனும் எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டு, தான் உய்வதற்கு இடனாய் உள்ள அவன் திருவடி களையே பற்றுகின்றான். முந்திய செயல் எவ்வாறு குழந் தைக்கு இயற்கையோ, அவ்வாறே பிந்திய செயலும் சேதநன் சொரூபத்திற்கு இயல்பாய் அமைந்ததாகும். இங்ஙனம் இறைவனை அடையும் வழியினைத்தான் மேற்

40. திருவாசகம்—அடைக்கலப்பத்து.
41. குறள்—2.
42. குறள்—3.
43. குறள்—4,10.
44. குறள்—7,8.
45. குறள்—9.
46. முமுட்சுப்படி—157.

குறிப்பிட்ட திருவாய்மொழித் தனியன் 'தக்கநெறி' என்று சுட்டுகின்றது.

வீடுபேறு : வீடுபேறு என்பதுபற்றிச் சமய நூல்கள் பலவகையாகப் பகரும். வைணவ சமயக் கருத்தின்படி 'வீடு' என்பது ஒரு தனி உலகம் ஆகும். நம்மாழ்வார் இதனை "நலம் அந்த இல்லது ஓர் நாடு"[47] என்று குறிப்பிடுவர். நாடும் அழிவில்லாதது; அதனை அடைந்தார்க்கு உண்டாகும் இன்பமும் அழிவில்லாதது. 'அந்தமில் இன்பத்து அழிவில் வீடு' என்னும் பரிமேலழகரின் கருத்தும் ஈண்டு சிந்தித்தற் குரியது. மேலும் அவ் ஆழ்வார் வீட்டினை "வைகுந்தம்"[48] "இலங்குவான்"[49] "பொன் உலகு"[50] என்றும் குறிப் பிடுவது அறியப்பெறும். திருவள்ளுவர் இந்த உலகை,

> தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
> தாமரைக் கண்ணான் உலகு[51]
> [வீழ்வார்-விரும்பப்படுபவர்.]

என்ற குறளில், "தாமரைக் கண்ணான் உலகு" என்று குறிப் பிடுவர். பரிமேலழகரும் "ஐம்புல இன்பங்களையும் துறந்த தவயோகிகள் எய்தும் செங்கண்மால் உலகம்" என்று விளக்குவர். மேலும் அவர் "இந்திரன் உலகு என்பாருமுளர். தாமரைக் கண்ணான் என்பது அவருக்குப் பெயரன்மையின் அஃது உரையன்மை அறிக" என்று அறுதியிட்டும் உரைப்பர். 'நிரதிசய இன்பத்திற்குரிய நீ இச் சிற்றின்பத்திற்கு நின்னை உட்படுத்தல் தகாது' என்ற பாங்கற்குத் தலைவன் 'கழற் றெதிர் மறை'யாகக் கூறியதாகும் இது.

மேலும், தெய்வப் புலவராகிய திருவள்ளுவர்,

---

47. திருவாய்.—2.8:4.
48. திருவாய்.—1.2:11; 2.5:11,4.4:11,4.7:11,5.10:10.
49. திருவாய்.—3.8:11.
50. திருவாய்.—6.7:11.
51. குறள்—1103.

மலர்மிசை ஏகினான் மாண்அடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்[52]

என்ற குறளில், 'நிலமிசை' (மிசைநிலம்) என்பதால், 'எல்லா உலகிற்கும் மேலாகிய வீட்டுலகு' என்பதைப் பெறவைத்தார். ஈண்டு மோட்சத்தை நிலம் என்று கூறியது காண்க. இக் கருத்தினையே அப்பெருமான், "வரன் என்னும் வைப்பு"[53] - எல்லா உலகத்திலும் மேம்பட்ட வீட்டுலகம்; "வானோர்க்கு உயர்ந்த உலகம்"[54] —வானோர்க்கு எய்தற்கரிய வீட்டுலகம்; "வானம்"[55] —வீட்டுலகம் என்று மேலும் விளக்குவர். இறுதியில் கூறப்பெற்ற "வானம் தத்துவ ஞானம் எய்தப் பெற்றவர் அடையும் இடமாகக் கூறப்பெற்றமையால் இங்கு, 'வானம்' என்பது வீட்டுலகத் தைக் குறித்தது. தத்துவஞானம் பெற்றவர்கட்கு இவ் வுலகத்தைவிட, வீட்டுலகம் அண்மையில் இருப்பதாகத் தோன்றும் என்பதை இந்தக் குறளில் 'வையத்தின் வானம் நணிய துடைத்து' என்றார். நம்மாழ்வாரும், "பொன்னுலகு ஆளீரோ புவனி முழுதும் ஆளீரோ"[56] என்பதனால் இதே குறிப்பினை வெளியிட்டுள்ளமை காண்க. இந்த வீடு பேற்றைத்தான் - பரம புருஷார்த்தத்தைத்தான் - மேற்குறிப் பிட்ட திருவாய்மொழித் தனியன் 'வாழ் வினை' என்று குறிப்பிடுகின்றது.

இறுவாய் : இந்தக் கட்டுரையில் வைணவ சமயத்து உறுதிப் பொருள்களாகிய சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்று உறுதிப் பொருள்களும், அர்த்த பஞ்சகத்தில் கூறப் பெற்ற பொருள்களும், வீடுபேறுபற்றிய கருத்துகளும் பிறவும் திருக்குறளில் எவ்வாறு அமைந்து கிடக்கின்றன என்ற செய்திகள் ஒருவாறு விளக்கத்துடன் எடுத்துக்காட்டப் பெற்றன.

---

52. குறள்—3.
53. குறள்—24.
54. குறள்—346.
55. குறள்—353.
56. திருவாய்.—6;8;1.

# பின்னிணைப்பு—1

## பயன்பட்ட நூல்கள்

### (அ) தமிழ் நூல்கள்

அண்ணங்கராசாரிய சுவாமிகள், பி. ப : திவ்வியார்த்த தீபிகை, (கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்)

ஆழ்வார்கள் : நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் (திருவேங் கடத்தான் திருமன்றம், 19-B, பெருமாள் முதலித் தெரு, இராயப்பேட்டை, சென்னை—600 014) (1973)

இளங்கோவடிகள் : சிலப்பதிகாரம்— ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை (கழகவெளியீடு, சென்னை—600 001)

கம்பர் : சடகோபரந்தாதி

கிருஷ்ணவேணி அம்மையார், எஸ் : செம்பொருள் (முமுசுப்படி) (திருமலை—திருப்பதி தேவஸ்தான வெளியீடு, திருப்பதி—1)

கோபாலகிருஷ்ணமாச்சாரியார், வை. மு. : கம்பராமாயணம் —உரை, (தெளிசிங்கப் பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி—சென்னை—5)

கோபாலகிருஷ்ணமாச்சாரியார், வை. மு. : அஷ்டப்பிரபந்தம் —உரை (மேற்படி, சென்னை—600 005)

சஞ்சீவி, ந : (பதி.) தெய்வத்தமிழ் (சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு—1975)

சாமிநாத அய்யர், உ. வே ; பத்துப்பாட்டு—உரை

சாமிநாத அய்யர், உ. வே : புறப்பொருள் வெண்பா மாலை —உரை.

சாமிநாதய்யர், உ. வே : பரிபாடல்—உரை.

ஸ்ரீராமதேசிகாசாரியர் : தேசிகப் பிரபந்தம்—உரை (ஒப்பிலியப்பன் சந்நிதி, கும்பகோணம்)

சுந்தர ராமாநுஜ சுவாமிகள் : தத்துவத்திரய விளக்க உரை (வேலூர் வைணவ சித்தாந்த மகா சங்கம், வேலூர்)—(1951)

சுப்புரெட்டியார், ந : மலைநாட்டுத் திருப்பதிகள் (எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை, 6, பிலிப்ஸ் தெரு, சென்னை—600 001) (1971)

சுப்புரெட்டியார், ந: தொண்டைநாட்டுத் திருப்பதிகள் (ஷெ)—(1973)

சுப்புரெட்டியார், ந : பாண்டிநாட்டுத் திருப்பதிகள் (ஷெ) —(1977)

சுப்புரெட்டியார், ந : வடநாட்டுத் திருப்பதிகள்—1980, சோழநாட்டுத் திருப்பதிகள் பகுதி I —1981 சோழநாட்டுத் திருப்பதிகள்—பகுதி II—1981 (பாரி நிலையம், சென்னை—600001)

சுப்புரெட்டியார், ந : திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும் பாரி நிலையம், சென்னை—600001 (1974)

சுப்புரெட்டியார், ந : முத்தி நெறி (பாரி நிலையம், சென்னை—60001) (1982)

திருவள்ளுவர் : திருக்குறள்—பரிமேலழகர் உரை (கழக வெளியீடு)

சேக்கிழார் சுவாமிகள் : பெரிய புராணம் (காசி மடத்து வெளியீடு)

புருடோத்தம நாயுடு, பு. ரா : ஸ்ரீவசன பூஷணம் மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம் (தி. கி. நாராயணசாமி நாயுடு, 2, சீதா ராமநகர், கடலூர்—1)

புருடோத்தம நாயுடு, பு.ரா : ஆசாரிய ஹிருதயம் மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம் (2 தொகுதிகள்) சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு.

புருடோத்தம நாயுடு, பு. ரா : ஈட்டின் தமிழாக்கம் (10 தொகுதிகள்), சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு.

மதுரைக் கல்லூரி : அன்றும் இன்றும் (இளங்கலையியல், அறிவியல்) (1982)

முத்தமிழ்க்கவி வீரராகவ முதலியார் : திருவேங்கடக் கலம்பகம், (வை. மு. கோ. உரை)

வரதராசன், மு. : தமிழ் இலக்கிய வரலாறு (சாகித்திய அக்காதெமி, சென்னை-600 018. ஐந்தாம் பதிப்பு. 1983)

(ஆ) ஆங்கில நூல்கள்

Hudson, W. H. : *An Introduction to the Study of Literature.* (1946).

Subbu Reddiar, N. : *Religion and Philosophy of Nalayire* Divya *Prabandham with Special Referenceto Nammalvar.* (S.V. University, Tirupati-2)—(1977)

# பின்னிணைப்பு - 2

## பொருட்குறிப்பு அகராதி

## பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியாரின் நூல்கள்

### ஆசிரியம், கல்வி உளவியல்:

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல்
5. யுனெஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

### இலக்கியம் :

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. வேமனர்
14. சி. ஆர். ரெட்டி
15. திருக்குறள் கருத்தரங்கு மலர்-1974 (பதிப்பு)
16. கம்பனில் மக்கள் குரல்
17. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
18. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
19. மேகானி
20. குரஜாட

**சமயம், தத்துவம் :**

21. மலைநாட்டுத் திருப்பதிகள்
22. தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
23. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
24. வடநாட்டுத் திருப்பதிகள்
25. சோழ நாட்டுத் திருப்பதிகள்—முதல் பகுதி
26. சோழ நாட்டுத் திருப்பதிகள்—இரண்டாம் பகுதி
27. முத்தி நெறி
28. சில நோக்கில் நாலாயிரம்
29. வைணவமும் தமிழும்
30. சைவ சமயம் விளக்கு

**திறனாய்வு :**

31. கவிதையநுபவம்
32. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
33. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
34. அகத்திணைக் கொள்கைகள்
35. புதுக்கவிதை போக்கும் நோக்கும்
36. கண்ணன் பாட்டுத்திறன்
37. பாஞ்சாலி சபதம்—ஒரு நோக்கு
38. பாரதீயம்
39. குயில்பாட்டு—ஒருமதிப்பீடுவை

**அறிவியல் :**

40. மானிட உடல்
41. அணுவின் ஆக்கம்
42. இளைஞர் வானொலி
43. இளைஞர் தொலைக்காட்சி



44. அதிசய மின்னணு
45. நமது உடல்
46. இராக்கெட்டுகள்
47. அம்புலிப் பயணம்
48. தொலை உலகச் செலவு
49. அணுக்கரு பௌதிகம்
50. இல்லற நெறி
51. வாழையடி வாழை
52. அறிவியல் விருந்து
53. வானமண்டலக் காட்சி

**ஆராய்ச்சி :**

54. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி
55. *Religion and Philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar*
56. *Studies in Arts and Sciences (61 st Birth Day Commemoration Volume)*
57. *Collected Papers of prof N. Subbu Reddiar*

குறிப்பு : இவற்றைத் தவிர ஆங்கிலத்தில் ஐம்பதிற்கு மேற்பட்ட தமிழாய்வுக் கட்டுரைகளும், தமிழில் நாற்பதிற்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளும், முந்நூறுக்கு மேற்பட்ட பொதுக் கட்டுரைகளும் எழுதியுள்ளமை; அன்றியும், முதல் ஐந்து வகுப்புகட்குப் பாடநூல்கள் எழுதினமை; 8 முதல் 12 வகுப்புகட்குரிய உரைநடைப் பகுதிகட்குப் பல்வேறு துறை களில் குறிப்பாக அறிவியல் துறைகளில் கட்டுரைகள் வழங் கினமை.



66 அகவை நிரம்பிய இந் நூலாசிரியர் பி.எஸ்சி.எல்.டி., வித்துவான், பி.ஏ., எம்.ஏ. பிஎச் டி. பட்டங்கள் பெற்றவர். ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியராகவும் (*1941—50*), பத்து ஆண்டுகள் காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் (*1950—60*) பதினேழு ஆண்டுகள் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் பணியாற்றி ஓய்வு பெற்றவர். 1978இல் சென்னையில் குடியேறி பதினைந்து மாதங்கள் (*1978—பிப்ரவரி—1979* ஜூன்) கலைக் களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர். நாலாயிரத் திவ்விபப் பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டவர். தவிர ஆசிரியம் (5), இலக்கியம் (16), சமயம் (8), திலனாய்வு (9), அறிவியல் (14), ஆராய்ச்சி (4)—என்று 56 நூல்களின் ஆசிரியர். இவர்தம் அறிவியல் நூல்களில் இரண்டு தமிழக அரசுப் பரிசுகளும் ஒன்று சென்னைப் பல்கலைக் கழகப் பரிசும் பெற்றன. இனிமை, எளிமை, தெளிவு இவை இவர்தம் நூல்களின் தனிச் சிறப்பியல்புகளாகும்.

Wrapper Printed at Eskay Art Printers, Madras-600 005.